# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

### நான்காவது தொகுதி

ஆசிரியர்
ஜெகவீர பாண்டியன்.



மதுரை,
மதரூஸ், சி, வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.
1945

# முகவுரை.

கம்பன் கலைநிலை என்னும் இந்த அரிய ஆராய்ச்சி நூலில் இதன்முன் மூன்று தொகுதிகள் வெளிவந்துள்ளன. இது அதன் நான்காவது தொகுதி. இந்நூலின் இனிமைப்பண்புகள் தனிமையான புதிய நிலையின், காவியச்சுவைகள், இலக்கிய நிலைகள், கலைப்பண்புகள், தருமநீதிகள் முதலிய உயர்ந்த உணர்வு நலங்கள் இராமசரித்திரத்தைத் தழுவி இதில் விளைந்து வருகின்றன.

இராமநாதன் பரசுராமனை அடக்கியருளியது, சீதையுடன் இன்ப மயமான இனிய மனைவாழ்க்கை புரிந்தது, அரசு முடிசூட இசைந்தது, இடையே கைகேசி தடை செய்தது, மனைவியும் தம்பியும் உடன் தொடரக் கானகம் சென்றது, கங்கைக் கரையில் குகன் வந்து கண்டது, அன்பு பூண்டது, அந்த உரிமையாளனை அளவளாவி நிறுத்திவிட்டுச் சித்திரகூட மலையை அடைந்தது, அங்கே இலக்குவனால் அமைத்த பன்னகசாலையில் தங்கி யிருந்தது, பரதன் வந்தது, பரிந்து பதைத்தது, தந்தை இறந்ததை யறிந்து சிந்தை துடித்தது, வந்த தம்பியை ஆற்றித் தேற்றித் தன் பாதுகையைத் தந்து அனுப்பியது, அவன் சேனைகளுடன் திரும்பிச் சென்றது, அதன்பின் இவன் பத்தினி தம்பிகளுடன் அத்திரி முனிவரை அடைந்தது. விராதன் வந்து எதிர்ந்தது, அவனுக்குச் சாப விமோசனம் தந்தது, சரபங்கரிடம் வந்தது, இந்திரன் எதிர்கண்டு துதித்தது, என்னும் இவ் வரலாறுகள் இத் தொகுதியில் முறையே அமைந்திருக்கின்றன,

இந்த இனிய இராம சரிதத்துடன் கலந்து அரிய பல உறுதி நலங்கள் இதன்கண் மருவி யுள்ளன, பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து உரிமையுடன் சிந்தித்துவரின் ஆன்ற அறிவு நலங்களையும் அரிய உறுதிநிலைகளையும் பெரியகலைச்சுவைகளையும் இனிது அனுபவித்து வரலாம்,

இங்ஙனம்,

**ஜெகவீரபாண்டியன்.**

## நூல் நயம்

அன்று திருமால் அளித்த அமுதமரர்
தின்று புறமே செழித்துநின்றார் - இன்று வரு
கம்பன் கலைநிலையைக் கண்டார் கலைமதியாய்
உம்பரொளி கொண்டார் உயர்ந்து. (அமுதனார்)

புலவர் உலகமெனும் புத்தமுதுள் கம்பன்
கலைநிலையாம் இன்பக் கனியை - நலமாப்
படிப்பார் உருகிப் பரவசராய்க் கண்ணீர்
வடிப்பார் மனத்துள் மகிழ்ந்து. (சாமிநாதத் தம்பிரான்)

உறுவதை உணராமல் கலுழ்கின்றார். வரிசிலையை வாங்கி இவ் ஆண்டகை பூண்டு நிற்கும் வரிசையைக்காணவே அவர் நெஞ்சம் நிலை குலைந்து அஞ்சி நாணி அலமரலாயினார்.

துன்று இரும் சடையோன் என்றது அவரது தாபத வேடத்தின் தன்மையைக் காண வந்தது. துன்று=நெருங்கிய. இரும்=பெரிய. அடர்ந்ததாகத் திரண்டு செறிந்த நெடிய சடைமுடியுடையான் என வடிவு நிலை தெரிய வரினும், யுகமுடிவில் உலகங்களையெல்லாம் அழித்தொழிக்கும் உருத்திரமூர்த்திபோல் உருத்துவந்த அந்தக் கொடிய வீரநிலையையும் அது உணர்த்திநின்றது.

"பாழிப்புயம் உயர் திக்கினை அடையப் புடை படரும்
ஆழிச்சடை முடி மின்தொட அயல்வெண்மதி தோற்ற
ஆழிப்புனல் எரி கால்நிலம் ஆகாயமும் அழியும்
ஊழிக்கடை முடிவில் திரி உமைகேள்வனை ஒப்ப."
(பரசுராமப்படலம், 11)

பரசுராமனை உருத்திர மூர்த்தியோடு ஒப்பவைத்து முன்னம் வருணித்திருத்தலை கண்டு எண்ணிக்கொள்க. அவர் ஓடிவந்த ஆரவார நிலையைக் குறித்துள்ள இப்பாடலைப்பாடிப்பார்க்க.

செஞ்சடை மானவன்போல் வெஞ்சின மீறி வீறுகொண்டு விரைந்து புகுந்த அவர் அஞ்சின நெஞ்சினராய் அலமந்து நின்றார். அந்நிலையில் இக்குலமகன் கூறிய வஞ்சின மொழிவரிசை வளர்ந்து எழுந்தது. வீரநலம் கனிந்த அந்த வித்தக வசனங்கள் உய்த்துணர்வு வாய்ந்து சித்திர கதியில் விளைந்திருக்கின்றன.

பூதலத்து அரசை எல்லாம் போன்று வித்தனை !

இந்த வாக்கியத்தைக் கேட்டவுடனே பரசுராமர் நிலை பரிதாபமாயது. "இளங்குமரன் பழம்பகையை நினைந்துகொண்டான்; இனி நம்மை எளிதில் விடமாட்டான்; கொன்றே தீர்ப்பான்; இன்றே முடிந்தது நம் வாழ்வு" என்று மழுவாளன் மதிமருண்டான். உன்னைப் பழிக்குப் பழி வாங்கிவிடுவேன் என்னும் பகைமை உணர்ச்சி மொழிக்கு மொழி துளித்து நிற்றலால் எதிரி அழிவு நிலையில் பதறி அலமரலோடு விழிக்க நேர்ந்தது. வில் வாங்கியபோதே நேரே உயிரை வாங்கி விடுவதாக வீரன் சொல் ஓங்கி எழுந்தது. வில்வளைவினும் சொல்விளைவு சுடர்விட்டுள்ளது.

இந் நிலவுலகிலுள்ள அரசர் பலரையும் பலமுறையும் இரக்கமின்றிக் கொன்றிருத்தலால், "அரசை எல்லாம்" என அக் கொலைகளின் அளவு நிலைகளை உளவு தெரிந்து உளைந்துகொள்ளக் கிளர்ந்து குறித்தான். பொன்றல் = அழித்தல்.

கொன்றனை எனத் தன்வினையால் கூறாமல் பிறவினையால் குறித்தது, எரிமுன் துரும்புகள் போல் அவன் எதிரே மன்னர் பலரும் எளிதே மாண்டு மடிந்தமை கருதி. கொடிய மழுவாயுதத்தால் நேரே கொலைகள் மூண்டுள்ளமையால் ஏவுதல் கருத்தாவாய் வேறே பாவிக்க நேர்ந்தான்.

இங்ஙனம் முடித்தலைகள் பல படித்தலத்தில் உருட்டிய படுகொலையாளனை உன்னை அடு கொலைபுரியாமல் அயலே விடேன் என உரையில் தொனித்து உயிரைக் கலக்கியது.

தன் சொல்லைக் கேட்டு உள்ளம் கலங்கிய எதிரியின் நிலைமையைக் கண்டு சிறிது இரங்கி என்றலும் எனப் பின் தாங்கி மொழிந்தான்.

போன்று வித்தனை! என்பதில் உருத்து உறுமி இருத்தலையும், என்றலும் என்பதில் பொறுத்து அருளி யிருத்தலையும் நுனித்து நோக்குக. உரை ஒலிகளில் மனிதனது உள்ளக்கிடக்கையும் உருவ நிலைகளும் வெளிப்படுகின்றன. வாயில் வார்த்தைகள் எழுந்தபொழுது தேக முதலியவற்றில் விளைகின்ற முகச்சாயல்களை அகச்சாயலோடு தழுவிக் கவி எழுதி யருள்கின்றார்.

முதல் மொழியைக் கேட்டதும் உயிர் போயது என உறுதி கொண்டார்; அடுத்து வந்தது சிறிது ஆறுதல் தந்தது.

எடுத்த எடுப்பிலேயே அப்பைத் தொடுத்துவிடாமல் கழுத்தளவில் குறிவைத்துத் தன்காதளவில் கையை இழுத்துவைத்துக் கொண்டு பழிக்குப் பழி கொல்லும் பாவனையில் சொல்லிவரும் இதில் உள்ளமும் உணர்வும் துள்ளி வந்திருக்கின்றன.

"என்றலும்" என்றதனால் இனி நம்மைக் கொன்றுவிடான் எனச் சிறிது ஆறுதலோடு திகைத்து நிற்குங்கால் மேலே சொற்கள் விசைத்து எழுந்தன.

வேதவித்து ஆய மேலோன் மைந்தன் நீ

முன்னே ஆறுதலாகக் கூறிய வார்த்தைக்கு இது ஏதுவை விளக்கி வந்தது. வேதவித்து, மேலோன் என்பன தன்னைக் குறித்து வந்தனபோல் தோன்றி முடிவில் அயல் ஒதுங்கின. மேலோன் என்றது சமதக்கினி முனிவரை. அந்த மாதவருடைய மகன் என்ற அளவிலேதான் உனக்கு மதிப்பு; வேறு சொந்தமாக ஒன்றும் இல்லை என்பது குறிப்பு.

வில்லை வளைத்த உடனேயே கொல்லாமல் இவ்வாறு சொல்லாடியது, ஒரு நல்ல தவசியின் பிள்ளையே! என்று உள்ளம் கருதியதாலேயாம்; இல்லையானால் இதற்குமுன் வேலை முடிந்திருக்கும் எனத் தன் வேலைத் திறத்தை விளக்கிக், காலதாமதத்திற்குக் காரணம் காட்டிய படியிது.

மேலோன் மைந்தன் என்றதில் நீ மேலோன் அல்லை என்பது தொனியாய் நின்றது. மேலான மரபில் வந்தும் கீழான கொலை பாதகங்களைச் செய்துள்ளாய்! எனப் பிறப்புரிமைக்குத் தகாத கொடுமையைக் கடுமையாகச் சுட்டிக்காட்டினன்.

விரதம் பூண்டாய்! என்றது சடைமுடியும் காசாய உடையும் உடையனாய் அரிய தவ வேடத்தைத் தரித்திருக்கிறாய் என்றவாறு. தந்தையின் தகைமையும், உன் சொந்தமான இந்தத் தவக்கோலமுமே என்னை இந்த வண்ணம் தாமதமாக்கித் தயங்கச் செய்தன எனத் தனது கண்ணியநிலைமையைக் காட்டியருளினன்.

இவ்வளவு சொல்லியும் முடிவு என்னமோ? என மழுவோன் மயங்கி நின்றான். பூதலத்து அரசை எல்லாம் கொன்ற தனது கொலைத் தீமைகளைச் சுட்டிக் காட்டிப் பிதாவையும் தவவேடத்தையும் உத்தேசித்துப் பொறுத்திருப்பதாகக் குறிப்பு வந்ததேயன்றித் தெளிவாக ஒன்றும் வரவில்லையே என்று உள்ளம் ஊசலாடி நிற்குங்கால் இவ் வள்ளல் மெல்லப் பேசலாயினன்.

ஆதலின் கோல்லல் ஆகாது;

ஏதுக்களை எடுத்துக்காட்டி இன்ன காரணங்களால் உன்னை நான் கொல்லத்துணியவில்லை என்று இராமன் இங்ஙனம் சொல்லியருளவே பரசுராமர் உள்ளம் தெளிந்து அபாயம் தீர்ந்தது என்று உபாயங்களை உணர்ந்து உறுதி கொண்டார்.

அம்பு இது பிழைப்பது அன்றால்! என்ற இந்த வார்த்தையைக் கேட்டு மீண்டும் தத்தளித்தார். பிழைப்பது அன்று = தவறுபடுவது இல்லை. அம்புக்கூட்டிலிருந்து ஒரு பாணத்தை எடுத்து இராமன் வில்லில் பூட்டிவிடுவனாயின் பின்பு அதனைவீணே எடுக்க முடியாது; ஏதாவது ஒரு குறியை அழித்துத்தான் தீரும்.

அம்புகள் யாவும் அதிதேவதைகளையுடையனவாய் மந்திர முறைகளோடு மருவியுள்ளமையால் மானம் வீரம் முதலிய உயிர் உணர்ச்சிகளுடன் அவை ஒளி மிருந்துள்ளன.

நாணில் தொடுத்த பகழியை எதிரிமேல் விடுத்தே தீர வேண்டும்; இல்லையாயின், அது உள்ளம் கடுத்து நாணி உளைந்து வருந்தும். இராமன் நாவில் எழுகின்ற சொல் எங்கும் பொய் படாமல் பொருள் பயந்து வருதல்போல் அவன் நாணில் உறுகின்ற பாணமும் யாண்டும் பிழை படாமல் பேராண்மை விளைத்து வருகின்றமையால் இங்ஙனம் அதன் இயல்பையும் நிலையையும் விளக்கியருளினன். "இது" என்று சுட்டியது பகைவன் கண் எதிரே தன் கையில் பிடித்துக் காதளவும் ஈர்த்துக் கொலை நோக்குடன் கொதித்து நிற்கும் நிலை தெரியவந்தது.

"யாது இதற்கு இலக்கம் ஆவது? இயம்புதி! விரைவின்!"

நமது வீரநாயகன் நேர்ந்த பகையை நெடிது நோக்கி முடிவில் முடுக்கி இருக்கும் இத்தீர மொழிகளைக் கூர்ந்து நோக்குக.

நீ ஒரு தவசி மகன்; சந்நியாசி ஆதலால் உன்னைக் கொல்லாது மன்னித்தேன் போ என்று அவ்வளவில் விட்டு ஒழிக்காமல் எதிரியைக் கட்டுப்படுத்திக் கட்டாண்மை காட்டியுள்ளான்.

இதற்கு இலக்கம் யார்? எவன்? என்னாது யாது? என அஃறிணை ஒருமையில் குறித்தது ஏதாவது ஒன்றைச் சொல்லித் தொலை என அவனது ஆதரவையும் வீரக் கருணையையும் விளக்கி நின்றது. இலக்கம் = குறி.

"விரைவின் இயம்புதி" என்று துரிதப்படுத்தியதனால் தொடுத்த அம்பை மேலும் கையில் பிடித்திருக்க முடியாது என அதன் கடுப்பை உணர்த்திக் காரியத்தை விரைவில் முடிக்க முனைந்து மூண்டுள்ளமை புலனாயது.

நம் வீர மூர்த்தி இவ்வாறு கூறவே, பரசுராமர் நாணி மறுகி நயந்து துதித்து, ஆதி முதல் தாம் ஈட்டி வைத்திருந்த தவம் முழுவதும் நேரே நீட்டிய பகழிக்கு இரையாக நேர்ந்து குறித்தார். ஐயன் கையை நெகிழ்த்தான். உடனே அம்பு விரைந்து பாய்ந்து அருந்தவம் அனைத்தையும் வாரி விழுங்கி மாறிமீண்டது.

அவரது துதிமொழிகள் அதிசயமுடையன; இக்குல மகனது மூல நிலைமையை விளக்கி ஞாலம் புகழ வந்தன.

பரசுராமர் துதித்து நின்றது.

*நீதியாய் முனிந்திடேல் நீஇங்கு யாவர்க்கும்*
*ஆதியான் அறிந்தனென்; அலங்கல் நேமியாய்*
*வேதியா இறுவதே அன்றி வெண்மதிப்*
*பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ?* (1)

*பொன்னுடை வனைகழல் பொலங்கொள் தோளினாய்*
*மின்னுடை நேமியான் ஆதல் மெய்ம்மையால்*
*என்னுளது உலகினுக்கு இடுக்கண் யான்தந்த*
*உன்னுடை வில்லும்உன் உரத்துக்கு ஈடன்றால்,* (2)

தவம் அழிந்தது.

*எய்தஅம்பு இடைபழுது எய்திடாமல் என்*
*செய்தவம் யாவையும் சிதைக்க வேஎனக்*
*கையவண் நெகிழ்தலும் கணையும் சென்றவன்*
*மையறு தவமெலாம் வாரி மீண்டதே.* (3)

தொழுது போனது.

*எண்ணிய பொருளெலாம் இனிது முற்றுக;*
*மண்ணிய மணிநிற வண்ண! வண்டுழாய்க்*
*கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய*
*புண்ணிய! விடைஎனத் தொழுது போயினான்.* (4)

(பரசுராமப் படலம், 37-40)

இங்கே சிந்தனைகள் பல நிறைந்துள்ளன. இந்தப்பாடல்களைக் கண்ணூன்றிப் படித்துப் பொருள் நுணுக்கங்களை நுனித்து நோக்கி உறுதி நலங்களை உணர்ந்து கொள்ள வேண்டும்.

போராட மூண்டு ஓடிவந்த பரசுராமர் ஈண்டு முனைப்பெல்லாம் அடங்கிச் சாதுவாய் ஒடுங்கிப் பேசியிருக்கும் வார்த்தைகள்

அவருடைய உள்ளன்பையும் உணர்வு நிலையையும் விளக்கி நிற்கின்றன.

நீதியாய்! முனிந்திடேல்! என்று எதிரி பரிந்து வேண்டியிருத்தலால் இராமன் சிறிது சினந்திருந்துள்ளமை தெரியவந்தது.

அதிகமாய் யாதும் முனியவில்லை; இனிய முகத்தனாகவே நின்றான்; "அரசை எல்லாம் பொன்றுவித்தனை!" என்ற தொனியில் முனிவு கொஞ்சம் தலை நீட்டி நிற்றலால் "முனிந்திடேல்!" என அந்நிலையினை அஞ்சி அருள்புரிய வேண்டினார்.

வில்லை வளைத்தவுடனே அம்பு எய்து கொல்லாமல் அன்பு செய்து சொல்லாடியுள்ள அந்த அமைதியை நினைந்து நீதியாய்! என்றார்.

என் தாதையைச் சத்திரியன் ஒருவன் கொடுமையாய்க் கொன்று போனமையால், அக்கோபக் கொதிப்பால் அரசர் பலரையும் கொல்ல நேர்ந்தேன். இல்லையானால் யாதொரு அல்லலையும் யாருக்கும் நான் ஆற்றியிரேன்; முதலில் மூட்டிய அத்தீது மூலத்தை நோக்கி என்பால் நீதி பாலித்து அருள் என்றார். நீதி ஆய்! என்று பிரித்து ஆதிமுதல் நேர்ந்துள்ள நிலைகளை ஆராய்ந்து நியாயம் வழங்கியருள் ஐயனே! என வாதி வணங்கி வேண்டிய படியாய்ப் பொருள் கொள்ளவுமாம்.

நீ யாவர்க்கும் ஆதியான் என்றது சகல சீவ கோடிகளுக்கும் முதல்வன் என்றவாறு. இவ்வுலகில் நேர்ந்துள்ள தீது மூலங்களைத் தீர்த்து நீதி நலங்களை விளைக்க ஆதிமூலப் பொருளே இவ்வுருவில் வந்துள்ளது என்று நேரே இன்று நான் தெளிவாக உணர்ந்துகொண்டேன் என்பார் அறிந்தனென் என்றார்.

அலங்கல் நேமியாய்! என்றது முன்னம் அறிந்தேன் எனக் குறிப்பாகச் சொன்னதைச் சிறப்பாக விளக்கித் தெளிவுறுத்தினார். அலங்கல் = மாலை. நேமி = சக்கரம்.

சக்கரதரனை திருமாலே இராமன் என்று அவர் கருதியுள்ளமை இவ்வுரையால் அறிய வந்தது. வெண்மதிப்பாதியான் என்றது சிவபெருமானை. கலைகள் குறைந்த பிறைச்சந்திரனைத் தலையில் அணிந்துள்ளவன் என்பதாம்.

பிள்ளைமதி சூடிய அப்பெருமான் வில்லை மிதிலையில் இவ் வள்ளல் இறுத்ததைக் குறித்து முன்னம் அவர் உள்ளம் வியந் திருந்தார். அங்ஙனம் வியந்தது பிள்ளை மதியாம் எனத் தம் பிழையை இது பொழுது இங்ஙனம் வெளிப்படுத்தினர்.

2. தசரதன் மகனாய் நீ மனித வடிவில் மருவியிருந்தாலும் உன்னை இன்னார் என்று நான் இன்று நன்றாகத் தெரிந்துகொண் டேன்; இனி இந்த உலகம் உய்ந்தது; துயரங்கள் யாவும் தொலைந் தன; உயர் நலங்களை அடைந்து உயிரினங்கள் உயர்ந்தன.

[என் உளது உலகினுக்கு இடுக்கண்? என்றது துன்பம் யாதும் இலதாய் யாண்டும் இன்பநலங்களே உளவாம்என்றவாறு.] கொடிய அரக்கர்களால் நேர்ந்துள்ள படுதுயரங்களை எல்லாம் அடி யோடு நீக்கிப் படிபுரக்க வந்துள்ள பரமபதியே! எனப் பரவச ராய்ப்பாராட்டி வீர நிலையை வியந்து போற்றியிருக்கிறார்.

உன்னுடை வில்லும் உன் உரத்துக்கு ஈடு அன்று.

என்றது ஊன்றி உணரவந்தது. பரசுராமர் இது பொழுது இராமன் கையில் வளைக்கக் கொடுத்த வில்லைக் குறித்துப்பேசிய படியிது. "வல்லை ஆகில் வாங்கிடு இத்தனுவை" என்று அவர் ஆங்காரத்தோடு முன்னம் சொல்லியிருத்தலால், யாராலும் வாங்க முடியாத பேராற்றலுடையது என அதனைப் போற்றி வந்துள்ளமை புலனாய் நின்றது. அத்தகைய அற்புத வில்லை இராமன் முன்னிலையில் அற்பம் என இப்படிக் குறித்தார்.

[கரியமாலின் கார்முகம் என முதலில் அருமை பாராட்டிக் கூறினர்; அந்த மாலே இராமன் என்று ஈண்டு உறுதி பூண்ட மையால் "உன்னுடை வில்" என்றார்.] உண்மை அதன் உயர்வை உணர்த்தி நின்றது. [அந்த ஆதி நாராயணன் வலிதின் ஆண்டவில் அவனது அவதாரமான இந்த மூர்த்தி கையில் எளி தாயது ஆதலால், "உன் வில் உன் உரத்துக்கு ஈடு அன்று" என்றார். வில்லாளியின் வல்லாண்மையை வாழ்த்தி நின்றார்.]

பழைய நிலைமையோடு புதிய தலைமையை அளவு செய்து அதிசய வலிமையை உளவறிய உணர்த்தியபடியிது.

திருமால் சக்கரத்தில் தான் வல்லவன்; அதனால் ஆழியான் என அவன் மீளிமை கொண்டுள்ளான். இவன் வில்லுக்கே பிறந்

தவன்; சிலை வேதம் எல்லாம் தலை வணங்கி ஏவல் செய்ய இக் காவலன் நிலை ஓங்கியுள்ளான். வில்லில் இவனுக்கு உள்ள எல்லை யற்ற ஆற்றலை எவரும் எல்லைகாண முடியாது.

பாழுபதத்திலிருந்து மாலும் செய்ய முடியாத அரிய காரி யத்தை இனிது முடிக்க உறுதி பூண்டு வந்திருத்தலால் இவனு டைய உரத்தின் நிலை பரத்தினிலையினும் உயர்ந்தது என வியந்து கூறினர். உரம்=வன்மை, அறிவு.

3. ஆள் வலியை இங்ஙனம் உணர்ந்து புகழ்ந்தவர் முடிவில் தம் தவத்தை எல்லாம் பாணத்துக்கே தானமாகக் குறித்தார். குறிக்கவே இராமன் அம்பை விடுத்தான். அது பறந்து பாய்ந்து அனைத்தையும் பருகி மீண்டது.

"கைஅவண் நெகிழ்தலும் கணையும் சென்று அவன்
மையறு தவம்எலாம் வாரி மீண்டதே"

இராமபாணத்தின் திவ்விய ஆற்றலை இங்கே செவ்விதாகக் கண்டு மகிழ்கின்றோம். அவண்=அப்பொழுது. "என் செய் தவம் யாவையும் சிதைக்க," என அவர் கூறியவுடனே கூரிய பகழி வீரிய வேகமாய் மேலெழுந்து போயது.

வில்லிலிருந்து கணையை இழுத்துவிடவில்லை; பிடித்திருந்த கைவிரலைச் சிறிது நெகிழ்த்தான்; அவ்வளவிலேயே அது இவ் வளவு வேலையைச் செய்து முடித்தது. சென்ற பகழி அவ்வா றே சிதைந்து போகாமல் திரும்பி வந்து இராமன் அம்புக் கூட் டில் விரும்பிப் புகுந்தது ஆதலால் "மீண்டதே" என அதன் அதிசய மகிமையைத் துதிசெய்து கூறினர்.

மைஅறு என்றது தவத்தின் மாட்சியை விளக்கியது. மை=குற்றம். ஆதிமுதல் அவர் அருமையாகச் செய்து வைத் திருந்த நல்ல தவங்கள் எல்லாவற்றையும் இங்ஙனம் இழந்து நின்ருர். உயிராதாரங்கள் ஒழிந்துபோயின.

காட்சியில் உள்ள உருவப் பொருள்களையே அன்றி, கருத்து நிலையான அருவப்பொருள்களையும் இராமபாணம் அழித்து மீளும் என்பது இதனல் அறியலாகும்.

இவ்வாறு தவம் இழந்து தளர்ந்து நின்ற அவர் இவ்வெற்றி வீரனை உவந்து புகழ்ந்து உரிமையோடு உருகிப் போற்றினர்.

"மணிநிற வண்ண! துழாய்க் கண்ணிய! யாவர்க்கும் களை கண் ஆகிய புண்ணிய!" என உவந்து போற்றியிருத்தலால் இத் தலமகனை அவர் எண்ணியுள்ள நிலைமைகள் இனிது தெளிவாம்.

[யாவர்க்கும் என்றது உயிரினங்கள் எல்லாவற்றிற்கும் என்றவாறு.] களைகண் = ஆதரவு. [உலகு உயிர்கள் எல்லாவற்றையும் இனிது பாதுகாத்தருள வந்த தருமமூர்த்தியே! என்று பகையாய் நேர்ந்தவரும் உரிமை மீதூர்ந்து துதித்திருத்தலால், இந்த இராமமூர்த்தியின் அருமை பெருமைகளை நாம் உணர்ந்து மகிழ்ந்து உண்மை தெளிந்து உள்ளம் உருகுகின்றோம்.]

இவ்வண்ணம் துதிகள் பல கூறிய பாசுராமர் உழுவலன்புடையாய்த் தொழுது நின்று வழிமொழி பகர்ந்து வணங்கிப் போனார். அவரது போக்கு தத்துவ நோக்கித் தழைத்துள்ளது.

இது வரையும் இமயமலையில் இருந்தவர் இந்த இராம தரிசனத்திற்குப் பின்பு தென் திசை புகுந்து மகேந்திர மலையில் ஜிதேந்திரியராகி அரிய தவநிலையில் மருவியிருந்தார்.

### பரசுராமனும் தசரதராமனும்.

இங்கே வந்து பங்கம் அடைந்து போயுள்ள பரசுராமருக்கும் நமது இராமனுக்கும் உள்ள உறவுரிமையை ஈண்டு நாம் அறிந்து கொள்ளவேண்டும். அங்ஙனம் அறியின், இந்த இருவருடைய வரவு நிலையும் உறவு முறையும் உணர்வு சுரந்து உவகை புரிந்து மிளிரும். தகைமை கிளர்ந்து திகழும்.

### தசாவதாரம்.

காப்புத் தெய்வமாகிய திருமால் உலகு உயிர்களை நலமுறப் பாதுகாக்கும் பொருட்டுச் சில சமயங்களில் அரிய உருவங்களில் இங்கு வந்தருளுகின்றார். அவ்வரவுக்கு அவதாரம் என்று பெயர். அந்த அவதாரங்கள் பத்து ஆக வரையறுக்கப்பட்டுள்ளன. வடமொழியில் தசாவதாரம் என்று சிறப்பாக வழங்கப்படுகின்றன. தசம் = பத்து. ஆதியில் வேதங்களைப் பழித்துக் கடலில் போய் ஒளித்து ஏதங்கள் பலபுரிந்த சோமுகன் என்னும் அசுரனை அழிக்கும்பொருட்டு மீன் உருவாய் வந்தார். திருப்பாற் கடல் கடையும்பொழுது ஆமையாய் அமைந்தார். பூமியைத்

தாங்கி யருளப் பன்றியாய் எழுந்தருளினார். இரணியனை ஒழித்தற்கு நரசிங்கமாய்த் தோன்றினார். மாவலியை அடக்குதற்கு வாமனனாய் வந்தார். நீதிமுறை தவறிச் செல்வச் செருக்கால் கொழுத்துத் திரிந்த சத்திரிய அரசர்களைத் தொலைத்தற்குப் பரசு ராமனாய் நேர்ந்தார். கொடிய அரக்கரை அழித்தற்கு இராமனாய் அவதரித்தார். துரியோதனன் முதலிய துட்டர்களை ஒடுக்குதற்குக் கிருட்டினன், பலராமன் எனக் கிளைத்து எழுந்தார். கலியுக முடிவில் உலக அநீதியைத் தீர்க்கக் கல்கி என்னும் பேரால் குதிரை முகத்தோடு கூடி ஒரு விசித்திர வுருவில் வருவதாக உறுதி செய்துள்ளார். ஒன்பது நிகழ்ந்தன. ஒன்று நிலுவையாய் நின்றுள்ளது.

இந்த அவதாரங்களை நூலோரும் மேலோரும் பரவி வருகின்றனர். மச்சபுராணம், கூர்ம புராணம் முதலியன இவற்றின் வழியே வந்தன. பரந்தாமன் அருள்சுரந்து புரிந்தன ஆதலால் இவை நிரந்தரமாகப் போற்றப்பட்டு வருகின்றன.

மீன்ஆமை கோலநெடு நரசிங்கம் ஆகிநிலம்
  விரகால் அளந்த குறளாய்
ஆனது சீறுமழு வல்வில்லு வெல்லுமுனை
  அலமுற்ற செங்கை யவராய்
வானோர் வந்துதொழ மண்ணோர் யாவரையும்
  மடிவிக்க வந்த வடிவாய்
நானா விதங்கொள் பரி யாளாக நின்றருளும்
  நாராயணாய நமவே. (வில்லிபாரதம்)

பத்து அவதாரங்களையும் முறையே தொடுத்து வைத்துத் திருமாலை இதில் துதித்திருத்தல் அறிக. கோலம்=பன்றி. அலம்=கலப்பை. பரியாள்=குதிரை முகமும் மனித வடிவுமுடையது. கல்கி நிலையைக் குறித்த படியிது.

மழு, வில், அலம் உற்ற செங்கையவர் என்றது பரசுராமன், கோதண்டராமன், பலராமன் என்றவாறு. இராமன் என்னும் ஒரே பேரை மூவரும் மருவியுள்ளமையால் வேறுபாடு தெரிய அடைமொழிகள் புணர்ந்து நின்றன.

அதிமதுர கவிராயர் காளமேகப் புலவரோடு எதிர்வாதம் செய்த பொழுது திருமால் அவதாரம் பத்தையும் ஒருவெண்பா

வில் அடக்கிப் பாடுவீரா? என்று வீறு கூறினர். புலவர் புன்னகை புரிந்து, "என் முழுப்பாடலுக்கு இன்னும் பல அவதாரங்கள் எடுக்கவேண்டுமே! என்று மால் மாலாய் விழிப்பர் ஆதலால் அரைப்பாவிலேயே அடக்குகின்றேன் பார்!" என உடனே பாடினர். அடியில் வருவது பார்க்க.

"மெச்சுபுகழ் வேங்கடவா! வெண்பாவின் பாதியில்என்
இச்சையிலுன் சென்மம் எடுக்கவா—மச்சாகூர்
மாகோலா சிங்காவா மாராமா ராமாரா
மாகோபா லாமாவாவாய்." (காளமேகம்)

இந்தப் பாடலில் புலவர் விளையாடியிருக்கும் விசித்திரங்களை விழைந்து நோக்குக. உன் இச்சைப்படியே பலயுகங்களாகப் புரிந்து எடுத்த பத்து சென்மங்களையும் என் இச்சைப்படியே அரை நொடியில் எடுக்கின்றேன். "வேங்கடவா! எடுக்கவா?" என்றது வீறுகொண்ட வினவாகவும், எடுக்க வந்தருள் என்னும் வேண்டுகோளாகவும் நீண்டு நின்றது. இறுதி அவதாரம் இனிமேல் வரப்போவது ஆதலால் மா ஆவாய் என எதிர்கால வாய்பாட்டால் குறித்தார். மா=குதிரை. இந்தக் காலமாறுபாட்டில் அகப்பட்டுக்கொள்ளுவார் என்றுதான் கவிராயர் எதிர்பார்த்து நின்றார். இப்பாட்டைக் கேட்டதும் அவர் பாடழிந்து சென்றார்.

மாலின் அவதாரங்களைக் குறித்து இவ்வாறு புலவர் பலரும் விளையாடியுள்ளனர். இதுவரை கண்ட அவதார வரிசையில் பரசுராமர் திருமாலின் ஆறாவது அவதாரம்; நமது இராமன் ஏழாவது அவதாரம் என்பது தெளிவாயது. இங்ஙனம் ஒருகிளையான இவரது இகலும் எதிர்ப்பும் தோல்வியும் வெற்றியும் வியப்பும் விபரீதமுமாய் வெளிப்பட்டுள்ளன.

வீறுடன் விரைந்து வந்த ஆறு வீரக்கடலான ஏழுள் ஒடுங்கிப் போனது என எண்ணலங்காரமாய் இனிது மொழியினும் உள்ளே யுறைந்துள்ள உண்மையை உணர்ந்துகொள்ளவேண்டும்.

[அரசரது அநீதியை அடக்க தோன்றிய பரசுராமர், வந்த காரியம் முடிந்தமையால் இந்தவாறு சொந்தமான மூலமூர்த்தியிடம் காலம் பார்த்து வந்து முடிவு தந்து போனர்.]

[அவதாரங்களுள் இராமனுடைய அவதாரமே மிகவும் மேலானது. பரசுராமர் முதலிய மற்றவர்களிடம் திருமாலின்

அமிசம் ஓராளவே ஆவேசித்திருந்தது. இராமனிடம் மட்டும் பூரண கலைகள் பொலிந்து நின்றன. பிறவெல்லாம் ஆவேச அவதாரங்கள் எனவும், இவன் அமிசாவதாரம் எனவும் வேறுபாடு கொண்டு மேலோர் போற்றியுள்ளனர்.

தேவர் முதல் யாவரும் செய்யமுடியாத அரியபல காரியங்களை எளிதில் முடித்து, நீண்டகாலமாகச் செங்கோல் வேந்தனாய் இந்நிலவுலகில் நிலைத்திருந்து, ராமராச்சியம் என உலக ஆட்சியில் புதிய ஒரு திவ்வியமாட்சியைத் தன் பெயரால் என்றும் இன்புற விளைத்து யாண்டும் வெற்றி வீரனாய் விளங்கியுள்ள இந்த ஆண்டகையின் அதிசய மகிமை அளவிடலரியது.

தவமுழுவதையும் இழந்து பரசுராமர் இங்ஙனம் பரிசு குலைந்து போகவே, அங்கே மறுகி மயங்கிக்கிடந்த தசரதனை இராமன் அன்புடன் எழுப்பி உற்றதைஉரைத்து உள்ளம்தேற்றினன். தன் பிள்ளையின் வெற்றித் திறத்தை அறிந்ததும் உள்ளம் களித்து அவன் உயிர் பூரித்து உவகை மொழிகள் *பல கூறினன். தனது நாயகனுடைய அருந்திறலாண்மையைக் கண்டபொழுது சீதை கொண்ட உவகை அளவிடலரியதாய் நிலைமீறி நின்றது. உருவ அழகில் பரவசமாயிருந்தவள் இது பொழுது வீர நிலையில் உள்ளம் பறிபோய் உயிர் உருகிநின்றாள்.

## இராமன் வில்லை வருணனிடம் கொடுத்தது.

எதிரிகையிலிருந்து வாங்கிய வில்லைச் சேமித்து வைக்கும் பொருட்டு இராமன் வருணனைச் சிந்தித்தான். அவன் வந்தான். வெற்றிப் பரிசா உற்றவில்லை அவனிடம் தந்தான். பெற்று அவன் சென்றான். இங்கே கொடுத்த வில் பின்பு இராமனிடம் வந்து சேர்கின்றது. ஈண்டுத் தந்துள்ளதைச் சிந்தனை செய்து கொள்ளுங்கள்; மீண்டு அது வந்து சேரும் வகையை ஆரணிய காண்டத்தில் கண்டு காரணம் தெளியலாம். காரிய விளைவுக்கு வேண்டுவன எல்லாம் இனிய நிலையில் ஈண்டி வருகின்றன.

## அயோத்தி அடைந்தது.

இவ்வாறு ஆனபின் பேருவகையாளராய்ப் பெருகிநின்ற சேனை தளங்களுடன் எழுந்து தந்தை அருகே தேர் ஊர்ந்து

* இந்நூல் பக்கம், 413 வரி 31 பார்க்க.

இராமன் திருவயோத்தியை அடைந்தான். குடி சனங்கள் எல்லாரும் அடிதொழுது மகிழ்ந்தார். தேசமக்கள் யாவருக்கும் தசரதன் சிறந்த விருந்துகள் செய்து தேவபூசனைகள் ஆற்றித் தனது அருமை மக்கள் இனிய மனைவியர்களோடு இன்பம் நுகர்ந்து வாழும்படி அன்பு புரிந்து வைத்து யாண்டும் தருமம் தழைத்து ஓங்க அரசாண்டு வந்தான்.

பரதன் கேகய தேசம் சென்றது.

கைகேசியின் தந்தையாகிய அசுவபதி என்னும் அரசன் பரதனைப் பார்க்க விரும்பினமையால் நேரே அழைத்துவரும்படி தன் மகனை அனுப்பியிருந்தான். அவன் வந்து சொல்லவே தசரதன் இணங்கியருளினான்.

தந்தையின் கட்டளை பெற்றுப் பாட்டனைப் பார்க்க எழுந்த பரதன் அண்ணனிடம் வந்து அடிதொழுது விடைதர வேண்டினான். அந்தப் புண்ணிய உருவம் புகுந்து வணங்கி அண்ணனை எண்ணி எண்ணிக் கண்ணீர் சொரிந்து கரைந்துநின்று பிரிந்து சென்றது.

ஏவலும் இறைஞ்சிப் போய் இராமன் சேவடிப்
பூவினைச் சென்னியில் புனைந்து போயினன்
ஆவியங்கு அவனலது இல்லை ஆதலான்
ஓவில் உயிர் பிரிந்து உடல்சென் றென்னவே.

உளைவிரி புரவித்தேர் உதாசித்து என்னுமவ்
வளைமுரல் தானையான் மருங்கு போதப்போய்
இளையவன் தன்னொடும் எழு நாளிடை
நளிர்புனல் கேகய நாடு நண்ணினன்.

(பரசுராமப்படலம், 48, 49)

பரதனது உழுவலன்பினை உரைக்குந்தோறும் கவியினுடைய மொழிகள் உளம் உருகி வெளி வருகின்றன.

இராமன் சேவடியே பரதன் தலைக்குப் பூ என்னும் இதிலுள்ள பத்திப் பெருக்கையும் உருக்கத்தையும் உய்த்து உணர்க. சென்னியில் புனைந்து போயினன் என்றமையால் அண்ணனுடைய பாதங்களைப் பிடித்துக் கண்ணிலும் முகத்திலும் தலையிலும் ஒத்தி ஒத்தி உருகிப்போயிருக்கிறான் என்று தெரிகின்றது.

அவன் அலகு ஆவி இல்லை என்றது பரதனது உயிர்நிலைமை உணர்த்தி நின்றது. உயிரைப் பிரிந்து உடல் சென்றது போல் இராமனைப் பிரிந்து பரதன் போயினன் எனவே அவ்விரத நிலைனது வாழ்வு நிலை புலனும்.

இளையவன் என்றது சத்துருக்கனை. அண்ணனை அகன்று தம்பியை அழைத்துக்கொண்டு தாய் மாமனோடு பரதன் பாட்டனூருக்குப் போயுள்ளபடியைக் கவி இங்ஙனம் காட்டியருளினர்.

இது வரையும் ஒரு முகமாய் மருவியிருந்த சக்கரவர்த்தித் திருமக்கள் நால்வரை ஊழ் இங்கே இருவகையாகப் பிரித்து வைத்திருக்கிறது. இப்பிரிவு பல பிரிவுகளுக்கு ஏதுவாய் ஈண்டு இடம் பெற்றுள்ளது.

இளையவன் தன்னொடும் ஏழுநாள் இடை இவன் தளிர் புனல் நாடு நண்ணியது, இன்னொரு இளையவனோடு கூடி ஈர் ஏழு ஆண்டுகளாக முன்னவன் கொடிய காடு நண்ண மூண்டு நின்றது. வாழ்க்கையில் ஊடு புகுந்து ஊழ் உள்ளே ஊக்கிவிளையாடுகின்றது.

## இராமனது மனை வாழ்க்கை

தம்பியர் இருவரும் அகன்ற பின்னர் இந் நம்பி இலக்குவனோடு தங்கித் தந்தை தாயர் மகிழ அந்தப்புரத்தை அலங்கரித்து வந்தான். புது மண வாழ்க்கையில் இராமன் அதிமோகியாய் ஆழ்ந்திருந்தான். தனது அருமை மனைவியோடு அமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து இன்ப நிலையில் திளைத்துவந்தான். நாயகனைக் கண்ணினும் உயிரினும் கருதிப்பேணி அந்நாயகி களிப்பு மீக்கூர்ந்தாள். சீதையினுடைய உழுவலன்பும் உயர் காதலும் அளவிடலரியன. அவளது உள்ளமும் உணர்வும் எல்லாம் இராம மயமாகவே மருவி யிருந்தன. புனலொடு புனல் கலந்ததுபோல் இருவருடைய மனநிலைகளும் இனநிலை தெரியாதபடி இணைந்து பிணைந்தன. குணக்கடல் என உலகில் உயர்ந்திருந்த இராமன் இதுபொழுது சீதையின் அன்புக் கடலிலும் இன்பக்கடலிலும் மூழ்கிக் கரைகாணுமல் களித்துக் கிடந்தான். பருவங்கள் பல கழிந்தும் ஒரு கணம் எனவே இருவரும் மருவி அரிய சுவைகள் பருகி உரிமை மீதூர்ந்து உருகியிருந்தனர்.

"ஸ்வயம் பூரிவ பூதாநாம் பபூவ குணவத்ர :
ராமச்ச ஸீதயா ஸார்தம் விஜஹார பஹூந் ருதூந்"
(பாலகாண்டம், 77-25)

"தனது குணகணங்களால் உலகமெங்கும் ஒளி செய்து நின்ற இராமன் சீதையோடு கூடி ஐம்புல இன்பங்களையும் ஆர நுகர்ந்து உல்லாச விநோதனாய்ப் பல்லாண்டுகளாகச் சுகித்திருந்தான்" என வால்மீகி முனிவர் குறித்திருத்தலால் இராமனது மண வாழ்க்கை இனிய போக நலங்கள் சுரந்து பல வருடங்களைக் கவர்ந்துள்ளமை பெறப்பட்டது.

பஹூந் ருதூந் என்ற குறிப்பால் வசந்த முதலிய பருவ காலங்களுக்கு இசைந்தபடியான உயர்ந்த போகங்களை வகை வகையாக நுகர்ந்து வந்த நிலைகள் விளங்கி நின்றன.

கலியாணம்ஆகி வந்த பின் இராமனுடைய இன்ப வாழ்க்கை இங்ஙனம் இனிது நடந்துள்ளது. அன்புரிமையில் தலை சிறந்திருந்த சீதையின் இன்பச் செவ்வியில் இராமன் பரவசனாய்க் களித்துள்ள நிலைகள் காவியத்துள் பின்பு வெளிப்பட்டுள்ளன.

"கரை தெரிவரியதோர் களிப்பின் மூழ்கினான்" என்றமையால் இராமனது இன்ப நுகர்ச்சியின் இயல்பு புலனும். அழகும் அன்பும் அளவிலா நிலையில் அமைந்துள்ள சீதையும் தனது காதலன்பால் கரை காணாத காதலுடையளாய்க் களித்து வந்தாள்.

"My bounty is as boundless as the sea,
My love as deep; the more I give to thee,
The more I have, for both are infinite."
(Romeo and Juliet, 2-2)

"என் காதல்கொடை கடல்போல் எல்லை அற்றது; ஆழம் மிகவுடையது; உன்பால் அதனை ஈயும்தோறும் என்பால் அது பெருகி வருகின்றது" எனத் தன் காதலனை நோக்கி ஒரு காதலி கூறியுள்ள இது ஈண்டு அறியத்தக்கது. காதல் நிலையில் தலை சிறந்து சீதாராமர்கள் இவ்வாறு பேரின்பக்கடலில்திளைத்திருந்தனர்.

அன்பு நலங்கனிந்த இன்ப வாழ்வில் இராமன் இங்ஙனம் இனிது வாழ்ந்து வருங்கால் தசரதன் ஒருநாள் அரசபதவியிலிருந்து ஒதுங்கி ஆறுதலடைய விரும்பினான். அதனால் தனது தலைமைத்திருமகனுக்கு மணிமுடி சூட்டத் துணிந்தான்.

மந்திரிகளையும் அரசர்களையும் அழைத்து ஒரு பெரிய சபை கூட்டித் தன் கருத்தைத் தெரிவித்தான். எல்லாரும் உவந்து இசைந்தார். அன்று சபையில் சக்கரவர்த்தி பேசியுள்ள உணர்வுரைகள் உயர்சுவையுடையன. மனிதவாழ்க்கையில் புனிதமான இனிய தத்துவ உபதேசங்களாய்த் தழைத்து வந்திருக்கின்றன. நாளும் சிந்திக்கத்தக்கன. மன்னன் சரிதத்தில் முன்னமே குறிக்கப்பட்டுள்ளன. அவற்றை ஈண்டு எண்ணிக்கொள்க.

## இராமன் முடிசூட இசைந்தது.

உலக சம்மதம் தெரிந்த பின் இராமனிடம் மன்னன் தனது மனநிலையை உரைத்தான். அரச பதவி வருவதை நினைந்து யாதும் மகிழாமல் தந்தையிட்ட கட்டளை எதுவாயினும் அதைச் செய்வதே தன் கடமை என இம்மைந்தன் இசைந்தான். பேருவகையாளனான தசரதன் வசிட்டரை அழைத்துத் தனது அருமை மகனுக்கு அரச நீதிகளையும் ஆட்சிமுறைகளையும் போதிக்கும்படி செய்தான்.

## வசிட்டர் உபதேசித்தது.

முனிவர் மறுநாள் இராமன் மாளிகைக்கு வந்து உரிமையுடன் அருகமர்ந்து அரிய உறுதி நலங்களை அக்குல மகனுக்கு இனிது போதித்தார். போதனைகள் உயர்ந்த அதிபதி முன்னிலையில் எழுந்தன ஆதலால் சிறந்த மதிநலம் சுரந்து வந்துள்ளன. அவற்றின் கருத்தும் குறிக்கோளும் நுணுகி உணரத்தக்கன.

அரிய தவமுடைய முனிவர்களையும், ஞானிகளையும், யோகிகளையும், துறவிகளையும் யாண்டும் மதித்துப் போற்றவேண்டும் என முதலில் உரைத்தார். அவருடைய அறிவுரைகள் அடியில் வருவன.

கரிய மாலினும் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோர் ஐந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி உள்ளத்தால். (1)

அந்தணாளர் முனியவும் ஆங்கவர்
சிந்தையால் அருள் செய்யவும் தேவரில்
நொந்து ளாரையும் நொய்துயர்ந் தாரையும்
மைந்த! எண்ண வரம்பும்உண் டாங்கொலோ? (2)

அனையர் ஆதலின் ஐயஇவ் வெய்யதீ
வினையின் நீங்கிய மேலவர் தாளிணைப்
புனையும் சென்னியை யாய்ப்புகழ்ந்து ஏத்துதி
இனிய கூறுநின்று ஏயின செய்தியால். (3)

ஆவதற்கும் அழிவதற்கும் அவர்
ஏவ நிற்கும் விதியும்என் றாலினி
யாவ தெப்பொருள் இம்மையும் அம்மையும்
தேவ ரைப்பர வுந்துணை சீர்த்ததே.

(மந்தரை சூழ்ச்சிப்படலம், 7-10)

இந்தக் கவிகளில் பொதிந்துள்ள கருத்துக்கள் கருத்தூன்றி ஆராயத்தக்கன. பாடல்களை ஆர்வத்துடன் படித்துநோக்குங்கள்.

1. திருமால், சிவன், பிரமன் என்னும் மும்மூர்த்திகளினும் அந்தணர் பெரியவர்; நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என விரிந்துள்ள ஐந்து பூதங்களினும் சத்தியத்தினும் அவர் உயர்ந்தவர்.

## அந்தணர் நிலை.

அந்தணர்களின் பெருமை குறித்து வந்திருக்கும் இந்தத் துதிமொழிகள் அதிசயமுடையனவாய்த் தோன்றுகின்றன.

தற்காலத்தில் சிலர் இப்பகுதியில் மிகுதியாக வாதம்புரிகின்றனர். வெறுப்பும் மறுப்பும் விளைந்து நிற்கின்றன. "பிராமணர்களை வீணாக உயர்த்திவைத்திருக்கிறது; கம்பர் இப்படிப் பாடியிருக்கமாட்டார்; எவனோ ஒரு பார்ப்பான் பாடி வாய்ப்பாக இடையே சேர்த்துவிட்டான்" எனவும் வார்த்தைகள் வளர்ந்து வருகின்றன. சில வேதியரும், "இது கட்டாயம் இடைச்செருகல்தான்" என்று மற்றைச் சாதியாரோடு பரிவாய் மருவி உரிமைபுரியும் மன விரிவுடையவர் போல் நினைவுறும்படி பேசியதையும் நேரே கேட்டிருக்கிறேன். சாதிப் பூசலாலும் உள்ளப்பிணக்காலும் காலக்கொடுமையாலும் கலித்த வாதங்கள் ஆதலால் உண்மையான நீதி நிலங்களை உணரமுடியாமல் ஏதங்கள் பெருகியுள்ளன. பெயர் நிலையில் மயலுழந்து இயலழிந்து பலர் அயல் ஒழிகின்றனர். கல்வித்துறையில் சிறந்த செல்வாக்குடைய ஒரு சாதியார் மற்றைச் சாதிகளை எளிதாக எண்ணி அவமதிக்க நேர்ந்தமையால் இவ்வாறு வருமங்கள் மருமங்களாய்க் கிளைத்துக் கருமங்களாய் வெளிவரலாயின. வரினும் தரும நிலை தவறலா

காது. கலைநலங்களைக் கருதியுணர்ந்து முன்னோர் மொழிகளைப் பொன்னே போல் போற்றி உண்மைப் பொருள் கண்டு உயர்ந்த அருள் காணவேண்டும்.

இங்கே அந்தணர் என்றது அரிய தவமுடைய முனிவர்களை. ஆதியில் இது சாதிப்பெயராய் வழங்கப்படவில்லை. தன்மைப் பெயராய் விளங்கிநின்றது.

"அந்தணர் என்போர் அறவோர்; மற்றுஎவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்." (குறள், 30)

என்னும் தேவர் வாக்கால் அவர் தம் நீர்மையும் நிலைமையும் தெரியலாகும். எல்லார்க்கும் என்னமல் எவ்வுயிர்க்கும் என்றமையால் யாதொரு பிராணிகளுக்கும், ஓரறிவுடைய கொடி செடிகளுக்கும் கூட ஊறுபுரியாது அவர் உரிமைபுரிந்து ஒழுகுவர் என்பது வெளியாயது. இங்ஙனம் தண்ணளியும் தயையும் உடைய புண்ணிய சீலர்களையே இங்கே நம் கவி போற்றியிருக்கிறார். சர்வ சீவ தயாபரன் என்பது கடவுளுக்கு ஒரு பெயர். அத்தகைய சீவகருணை யுடைய மாதவர்கள் தேவரினும் சிறந்தவராயினர்.

உருவில் மனிதராயினும் உணர்வில் பரமநிலையில் ஒளி செய்துள்ளமையால் முனிவர்கணங்களாய் இவர் தனி எண்ணநின்றனர்.

"முனிவர் மாதவர் இலிங்கிகள் முனைவர்
படிவர் உறுவர் பண்ணவர் ஐயர்
அறவோர் தபோதனர் அறிஞர் அந்தணர்
துறவோர் கடிந்தோர் மோனியர் யோகியர்
கோபம் காய்ந்தோர் நீத்தோர் மெய்யர்
தாபதர் இருடிகள் தம்பெய ராகும்." (பிங்கலந்தை)

காரணப் பெயர்களாய்க் கனிந்து வந்துள்ள இவற்றால் இருடிகளுடைய இயல்பும் செயலும் பூரணமாக உணர்ந்துகொள்ளலாம்.

திரிமூர்த்திகளினும் இவரைப் பெரியர் என்றது இவருடைய அருமை பெருமைகளை உணர்ந்து உரிமையோடு உவந்துகொள்ள. இயல்பாகவே தேவதேவராய் அவர் உயர்ந்துள்ளனர்; என்றும் பெரியராக எல்லாராலும் புகழ்ந்து போற்றப் பெற்று உலகப் பிரசித்தராய் ஒளி மிகுந்துள்ள அவரை வரிசையாய்எதிர்நிறுத்தி இந்த அருந்தவர் மகிமையை இங்ஙனம் விளக்கியருளினர்.

ஐம்பொறிகளையும் வென்று உலகப்பற்றை முற்றும் துறந்து பரமாத்துவையே பற்றி நிற்கும் ஆன்மா மகாத்துமாவாய் அதி அற்புத மகிமையை அடைகின்றது; அடையவே படைத்தல் காத்தல் முதலிய கருமங்களை மருவியிருக்கும் அதிதேவதைகள் கருமநிலையமான அந்த மகானுடைய அருமையை வியந்து மகிழ்ந்து உரிமை கூர்ந்து புகழ்ந்து கொள்கின்றார்.

யாவன் இங்குமெய் யுணர்ந்தவன் அவனையே இமயப்
பாவை தன்னைஓர் பாகம்வைத் தவன் பரவுவதும்;
நாவின் மங்கையை நயந்தவன் நவில்வதும் அவனைப்;
பூவின் மங்கையைப் புணர்ந்தவன் புகழ்வதும் அவனை. (1)

ஞாலமுண்டவன் தலையினால்சுமப்பன் மெய்ஞ்ஞானிவேண்டியதென்றான்
ஆலமுண்டவன் அவன்பினே திரிகுவன் அவன்பதப்பொடிக்கு என்றான்
சீலம் ஒன்றையும் தெரிவருஞானிதன் சேவடி பணி செய்வான்
காலிரண்டும் என் தலையவே என்றனன் கமலநான் முகத்தோனும் (2)
(பிரமகீதை)

தேவதேவரும் ஞானிகளை விழைந்து மகிழ்ந்துள்ள நிலையை இன்னவாறு நூல்கள் பலவும் புகழ்ந்து கூறியுள்ளன.

பஞ்சபூத மயமாயுள்ள உலகத்தையும், அது இயங்கி வருகின்ற நிலையையும் இனிது தெளிந்து பரமான்ம நிலையில் தனி அமர்ந்திருத்தலால் பூதம் ஐந்தினும் மாதவர் பெரியர் என்றார். மெய்ப்பொருளைத் தெளிந்து யாண்டும் மெய்யராயுள்ளமையான் மெய்யினுக்கு ஓர் உயிராய் அவர் மேவியுள்ளனர் என்க.

இராமனுக்கு அரச நீதி போதிக்க வந்த முனிவர் முதலில் பெரியாரைப் பேணுக என்று தொடங்கி யிருக்கிறார்.

அரசன் உலகில் பெரியவன். எல்லாரும் தெய்வம் என்று கருதிப் போற்றத்தக்கவன்; இந்த அநுபவக்காட்சியால் மனித வருக்கத்தில் தனக்கு மேலாக எவரும் இல்லை என்னும் செருக்கு அவன் உள்ளத்தில் எளிதாக உண்டாகலாம் ஆதலால் அதனை ஒழித்தற்கு முதன்மையாக இது உணர்த்த நேர்ந்தது.

வயது பொருள் முதலியவற்றால் பெருகியுள்ளவரை ஈண்டுப் பெரியர் என்று கொள்ளவில்லை செயற்கரிய செய்வார் பெரியர் என்றபடி அரிய தவ ஒழுக்கமுடையவரே பெரியர் எனப் பெயர் சூட்டி உரிமை தோன்ற உரைத்து உறுதி நலனை வலியுறுத்தினர்.

அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப
பேணித் தமராக் கொளல். (குறள், 443)

பெரியாரைப் பேணது ஒழுகின், பெரியாரால்
பேரா இடும்பை தரும். (குறள், 892)

இந்த அருமைத் திருக்குறள்களை அடியொற்றி இக்கவி விளைந்து வந்துள்ளமையை அறிந்துகொள்ளலாம். பெரியர் என்று அங்கே பொதுவாய் நின்றது; இங்கே சிறப்பாக விரித்து விளக்கப்பட்டது.

பெரியர் பேணுதி என்ற மொழிகளை இனிது கவர்ந்து அரிய வேலைப்பாடுகள் செய்து, மூன்று மூர்த்திகளும் ஐந்து பூதங்களும் சத்தியமும் வியந்து நோக்கி உயர்ந்து நிற்க ஆன்ற பெரியார் உருவை அதிசய நிலையில் வெளியே தோன்ற வைத்திருக்கும் நம் கவியின் வித்தகத் திறன் உய்த்துணருந்தோறும் உவகை சுரந்து வருகின்றது.

உலகில் உள்ள அரிய பொருள்களெல்லாம் பிறவியிலேயே தனக்கு இயல் உரிமையாகப்பெற்றுக் கருவிலேயே திருவுடைய ஞய்ப் பெருகி வந்துள்ள அரசன் மிகவும் விழைந்து பெறுதற்குரிய அரியதொரு பேறு யாது? எனின், புனிதமான பெரியோர்களைத் தனக்கு இனிய துணைவராக வணங்கிப் போற்றிக்கொள்ளுதலேயாம் என்க.

தனது அரசு நெடிது நின்று நிலவவும், புகழும் புண்ணியமும் பெருகித் தான் உய்திபெறவும் பெரியார் துணைமை உறுதி செய்து வருதலால் அவரைப் பேணிக்கொள்ளுதல் அரசனுக்கு ஒரு பெரிய ஊதியமாயது.

அரசன் உலகில் எல்லாச் செல்வங்களையும் உடையவன்; துறவி ஒரு பொருளும் இல்லாதவன். ஒன்றும் இல்லாதவனை எல்லாம் உடையவன் பணிந்து பேணுவது வியப்பாகின்றது.

அழிந்து ஒழிந்து போகின்ற இழிந்த உலகப் பொருள்களை இவன் பெற்று நிற்கின்றான்; அவன் என்றும் அழியாத பரம் பொருளைப்பற்றியுள்ளான். அந்நிலையில் சகல ஐசுவரியங்களையுமுடைய ஈசனுகவே அவன் தேசு மிகுந்துள்ளமையால் உலக

வாசனுன இவன் அவனை உரிமையோடு பேணிக்கொள்ள வேண்டியதாயது.]

அருந்தவரது பெருமையை விளக்கி அவரைப் பெருந்தகவுடன் பேணுக என்றார்; அங்ஙனம் பேணுதுவிடின் பிழைகள் பல நேர்ந்துவிடும் என அடுத்து உரைத்தார்.

2. அவர் ஆன்மபலம் உடையவர்; பரமான்வாவின் அருள் மிகப் பெற்றவர். தாம் கருதியபடியெல்லாம் காரியங்கள் அவர்க்கு எளிதே முடிந்துவிடும். அவரது சாபத்தாலும் கோபத்தாலும் அழிந்து ஒழிந்த அமரர்கள் பலர். அவ்வாறே அவருடைய அருளினல் உயர்ந்தவர்களும் அளவிடலரியர்.

[“மைந்த! எண்ண வரம்பும் உண்டாம் கொலோ?” என்றது மாதவர்களுடைய சாபத்தால் மாண்டவர் பலகோடி; அருளினல் வாழ்ந்தவர்களும் கோடி என்றபடி.] [மைந்த! என்றது உரிமை கனிந்து வந்தது.]

முனிவை முதலில் கூறியது பெரும்பாலும் அவர் கோபத்தால் அழிந்தவர் தொகைதான் அதிகம் என அந்நிலைமை தெரிய. முனிவர் முனியாவகை இனிது பேணவேண்டும் என்பது குறிப்பு.

அரிய தவமும் பெரிய பொறுமையும் ஆருயிர்கள்பால் பேரருளுமுடைய உயர்ந்த குணசீலர்களே ஆயினும், பிழைகண்ட இடத்து அவர் உள்ளம் கொதித்துவிடும்; கொதிக்கவே பிழையாளர் யாதும் பிழையாமல் அடியோடு அழிந்து படுகின்றார்.

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. (குறள், 29)
குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. (குறள், 898)
வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்?
தகைமாண்ட தக்கார் செறின். (குறள், 897)

இந்த அருமைத்திருவாக்குகள் ஈண்டு அறிய உரியன. சொல்லில் தோய்ந்துள்ள வேகங்களையும் பொருட் குறிப்புக்களையும் ஊன்றி நோக்கின், எவருடைய உள்ளமும் வியந்து துள்ளித் தவருடைய தனி நிலையை ஈண்டு உணர்ந்து கொள்ளும்.

முனிவர் உள்ளம் திரியின் உலகம் திரியும்; வாழ்வும் வீழ்வும் அவர் சொல்லில் உள்ளன என ஆற்றலை எடுத்துக்காட்டியது அவரது ஏற்றம் தெரிந்து போற்றி உய்ய. நொந்துபட்டவர்களில் தேவரை சிறப்பாக முந்துறக்குறித்தது, யாவரினும் உயர்ந்தவராகத் தம்மை வியந்து தருக்கி நிற்பவராதலால் அவரது நிலையழிவு தலைமையாகக் குறிக்கப்பட்டது. தேவர்பாடே இவ்வாறாயின் மற்றவர்பாடு சொல்லவேண்டாதாயிற்று.

[மாதவரால் மறுகி நொந்த வானவருடைய சரிதங்கள் பல. தனித்தனி கூறப்புகின் மிகவும் விரியும்; சிறப்பான சில ஈண்டுக் குறிப்பாக நோக்கி மேலே போவோம். கோதமரால் இந்திரன் நொந்துபோனது நம் காவியத்தில் முந்துற வந்துள்ளது.]

## அருந்தவரின் ஆற்றல்.

துருவாசர் ஒருமுறை பொன்னுலகம் புகுந்தார். அது பொழுது இந்திரன் தனது பட்டத்து யானைமேல் அமர்ந்து பவனி வந்தான். முனிவர் அருகு நெருங்கிக் கையுறையாக ஒரு தாமரை மலரைக் கொடுத்தார். அது சிவலிங்கத்திற்கு அணிந்தது. பூசை புரிந்து வந்தமையால் பூவை ஆசையுடன் தந்தார். இந்திரன் அதனைத் தோட்டியால் வாங்கி யானை முதுகில் வைத்தான். அது துதிக்கையால் ஈர்த்துக் காலில் வீழ்த்தியது. அதனைக்கண்ட முனிவர் கடுங்கோபம் கொண்டார். கடுத்துச் சபித்தார். அன்று அவர் கொதித்து மொழிந்தன அடுத்து வருவன.

கண்டான் முனிகாமற் காய்ந்தான் நுதற்கண்போல்
விண்டார் அழல்சிதற நோக்கினன் வெங்கோபம்
கொண்டான் அமரர் ஒதுங்கக் கொதித்து ஆலம்
உண்டானென நின்று உருத்தான் உரைக்கின்றான். (1)

புள்ளிய தோல்ஆடை புனைந்தரவப் பூண் அணிந்த
வெள்ளிய செங்கண் விடையான் அடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையார் அருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினாய்! என் செய்தாய்? (2)

கதித்தார் முடிஅமரர் கையுறையே நன்கு
மதித்தாய் எம்மீசன் மதிமுடிமேல் சாத்தும்
பொதித்தா தவிழ்மலரைப் போற்றாது வாங்கி
மிதித்தானை சிந்த அதன்மேல்வைத்தாய் பேதாய்! (3)

சேட்டானை வானவநின் சென்னி செழியரில் ஓர்
வாட்டானை வீரன் வளையால் சிதறுகநின்
கோட்டான நாற்கோட்ட வெண்ணிறத்த குஞ்சரமும்
காட்டானை ஆக என இட்டான் கடுஞ்சாபம். (4)
(திருவிளையாடற் புராணம்)

முனிவர் சபித்தபடியே இந்திரன் நொந்து தவித்தான். மகவானை இகழ்ந்து மாதவர் பேசியிருக்கும் உரைகளில் உள்ள உணர்ச்சி வேகங்களை ஊன்றிப்பார்க்க. "என் போன்றார் அருவருத்துத் தள்ளியது உன் இந்திர பதவி" என்றதனால் அந்தணர் நிலைமை அறியலாகும்.

சந்திர குல வேந்தனாகிய நகுடன் அரிய வேள்விகள் பல செய்து இந்திர பதம் பெற்றான். புதிய பதவி எய்தியுள்ள அவ் வதிபதியைச் சிவிகையில் வைத்து விதிமுறைப்படி மாதவர் எழுவர் தாங்கி இந்திர சபைக்குக் கொண்டு வந்தார். அமரர் கோனாய் வருகின்ற அவன் இந்திராணியைக் காணவேண்டும் என்னும் ஆவலினால் முனிவரை விரைவு படுத்திச் சர்ப்ப என் றான். சர்ப்ப என்பதற்கு விரைந்து நட என்பது பொருள். அவனது அற்பத்தனத்தை நோக்கி அகத்திய முனிவர் சினந்தார். அந்த வார்த்தையையே திருப்பிச் சொல்லிச் சர்ப்பம் ஆகுக என்று சபித்தார். அவன் அவ்வாறே பாம்பாகி உருண்டான்.

மனிதரில் மகவான் ஆகி வருபவன் சிவிகை தாங்கும்
புனிதமா தவரை எண்ணான் புன்கணோய் விளைவும் பாரான்
கனிதரு காமம் துய்க்கும் காதலால் விரையச் செல்வான்
இனிதயி ராணி பாற்கொண்டு ஏகுமின் சர்ப்ப என்றான்.

சர்ப்பமா கெனமுற் கொம்பு தாங்கிமுன் நடக்கும் தென்றல்
வெற்பனும் முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்தலோடும்
பொற்பமா சுணமே யாகிப் போயினான்; அறிவிலாத
அற்பரா னவர்க்குச் செல்வம் அல்லது பகைவேறுண்டோ!
(திருவிளையாடல், இந்திரன் பழிதீர்த்த படலம்)

அகத்தியர் முனிவால் இந்திரன் இழிந்துபட்டமை இதனால் அறிய நின்றது. வாதாபி வில்வலன் முதலிய மாயாவிகள் பல ரும் இவர் வாயால் அழிந்துபோயினர்.

பிரமதேவனும் இவரது அரிய தவ வலியைக் கண்டு அஞ்சியிருக்கிறார். பிருகு முனிவர் சாபத்தால் திருமாலே மனுவி

இருத்தலால் அருந்தவரது ஆற்றலைக் குறித்து மேலும் விரித்து உரைத்தல் மிகையாம்.

"மூவர் அகண்ட மூர்த்திஎன்று ஏத்தும்
தேவர கண்ட! தெய்வ நாயக!
நின்னடித் தொழும்பின் நிலைமையின் றேனுநின்
தன்னடித் தொழும்பர் சார்புபெற் றுய்தலின்
சிறியஎன் விழுமம் தீர்ப்பது கடன்என
அறியாய் அல்லை; அறிந்துவைத் திருந்தும்.
தீரா வஞ்சத் தீப்பிறப்பு அலைப்பச்
சோரா நின்றஎன் துயர்ஒழித்து அருள்கிலை;
புறக் கணித்திருந்ததை அன்றே குறித்திடின்,
கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந் துழலும்அக் கடவுளர்க்கு அல்லதை
பிறவியின் துயர்நினக்கு அறிவரிது ஆகலின்,
அருளாது ஒழிந்தனை போலும்
கருணையிற் பொலிந்த கண்ணுத லோயே!"

(திருவாரூர் நான்மணிமாலை)

இது, குமரகுருபர சுவாமிகள் பாடியது. கவியின் பொருளைக் கொஞ்சம் கருதிப் பாருங்கள். "சிவபரம் பொருளே! என் பிறவியைத் தீர்த்தருளும்படி பலமுறையும் உன்னை நான் பரிந்து வேண்டினேன். சிறிதும் இறங்கவில்லை; பரமகருணாநிதியாகிய நீ இங்ஙனம் பராமுகமாயிருத்தற்குக் காரணம் என்ன? என்று கருதி ஆராய்ந்தேன்; இன்று விவரம் தெரிந்தது: முனிவர் சாபத்தால் பிரமனும் மாலும் பல பிறவிகளை அடைந்து வருந்தியுள்ளதுபோல் நீ அடையவில்லை; பிறவியில் உள்ள துயரங்களை நீ அனுபவித்து அறியாமையால் என் துன்ப நிலைமைக்கு இரங்கி அருளவில்லை போலும்? கண்ணுதற் கடவுளே!" என்று அடிகள் வினவியிருக்கும் அழகைப் பார்க்க. கடவுட் பத்தி கலைஞானங்களோடு கலந்து கனிந்துள்ள இவரது கவிதா இரசனை உணர்விற்கு உயர்ந்த விருந்தாய் மிளிர்ந்து உயிர்க்குச் சிறந்த மருந்தாய்ச் சுரந்திருக்கிறது.

அருந்தவர் முனிவால் கடவுளரும் நிலை குலைந்துள்ளமை இதனால் அறியவந்தது. இது வரை நோந்துளாரை அறிந்தோம்.

இனி நோய்து உயர்ந்தாரையும் காணவேண்டும். நொய்து=விரைவு

சுனச்சேபன், திரிசங்கு முதலாயினோர் விசுவாமித்திரரது அருளால் உடனே திவ்விய மகிமைகள் அடைந்து உயர்ந்துள்ளமை உலகம் அறிந்துள்ளது.

கங்கைநதி பாவம் சசிதாகம் கற்பகம்தான்
மங்கல் உறும்வறுமை மாற்றுமே—துங்கமிகும்
இக்குணம்ஓர் மூன்றும் பெரியோர் இடம்சேரின்
அக்கணமே போமென் றறி. (நீதிவெண்பா)

கங்கை பாவத்தை நீக்கும்; சந்திரன் தாபத்தைப் போக்கும்; கற்பகம் வறுமையைத் தீர்க்கும். பெரியாரோ, அல்லல் அனைத்தையும் ஒல்லையில் மாற்றி எல்லா இன்ப நலங்களையும் ஒருங்கே புரிந்தருளுவர் என இஃதுணர்த்தியுள்ளமை காண்க.

## பெரியார் உறவு பெரு மகிமை தரும்

இங்ஙனம் அற்புத ஆற்றலும் அதிசய மகிமையும் அமைந்திருத்தலால் பெரியாரை அரசர் பேணிக் கொள்ளவேண்டும் என உரிமையான தகுதியோடு உறுதி நலம் உணர்த்தப்பட்டது.

அறக்குறைவை நிறைவாக்கும்; சம்பத்தாக்கும் அபக்கைச்;
சுபம் ஆக்கும் அசுபம் தன்னை;
சிறக்கும் உயர்ந்தவர் கூட்டம் என்னும் கங்கைச்
சீதநீர் ஆடினர்க்குச் செந்தீ வேள்வி
இறக்கரிய தவம்தானம் தீர்த்தம் வேண்டா
இடர்பந்தம் அறுத்தெவர்க்கும் இனியோராகிப்
பிறப்பெனும் வேலைப் புணையாம் உணர்வு சான்ற
பெரியோரை எவ்வகையும் பேணவேண்டும். (ஞானவாசிட்டம்)

சிறிய ராயினும் சார்பினை விழையன்மின்
திறல்கெழு பெரியோராம்
அறிஞ ராயினும் சார்பினை விழைமினோ
அலரிதழ் விரிகொன்றை
வெறி நறுந்தொடை எம்பிரான் சார்பினை
விழைதலால் உரகங்கள்
மறுவில் ஆற்றல்சால் கலுழனை விஞயின
வாழ்ந்தனை யோஎன்ன. (காஞ்சிப்புராணம்)

நுண்மை அறனுமிகத் தெளிந்து நூலின்
இயல்பும் உலகியல்பும்
வண்மை யுறத் தேற்றிடும் ஆற்றல்
வல்லராகி வளர்சீலம்
திண்மை அறிவா யுளின் முதிர்ந்தோர்
சேரநன்கு மதித்திடுக
எண்மை புரியாது உயர்ந்திடுக இயம்பும்
வழியே நின்றிடுக. (விநாயக புராணம்)

அளிசெயும் மனத்தராகி ஐம்புலன் அடக்கி என்றும்
ஒளிகொடு புனித மேன்மை உவப்பரும் சமனுற்றுள்ளம்
தெளிவுறு பெரியோர் தம்மைச் சேரின் நல்லன்பு கூரும்
களிதரும் அன்புகூரிற் கலக்கு நல்லறிவு தானே. (பாகவதம்)

பெரியாரைப் பேணிக்கொள்வார்க்கு உளவாம் உறுதி நலங்கள் இவ்வாறு நூல்களில் விரிவாகக் குறிக்கப்பட்டுள்ளன.

உலகப் பாதுகாப்பைத் தனி உரிமையாகத் தலைமேற்கொண்டுள்ள அரசன் உயர்ந்த உத்தமர்களோடு கூடியிருந்தபோது தான் அந்த அரசு சிறந்த நிலையில் விளங்கிவரும் ஆதலால் முன்னதாகத் துணை நலத்தை இன்ன வண்ணம் குறித்தருளினர்.

"நீயோர் ஆகலின் நின்ஒன்று மொழிவல்
அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயம் கொள்பவரொடு ஒன்ருது ; காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே." (புறம், 5)

இது, ஒரு சேர மன்னனை நோக்கி நரி வெரூஉத்தலையார் என்னும் புலவர் கூறியது. அருளும் அன்பும் இன்றி நரக நிலைக்கே ஏதுவான சிறிய மக்களோடு யாதும் சேராமல் என்றும் பெரியாரையே மருவிப் பிள்ளையைத் தாய் பேணுவதுபோல் அரசை நீ பேணவேண்டும் என அவர் உரைத்திருக்கும் அருமையை ஊன்றி நோக்குக.

3. எல்லா உயிர்களிடத்தும் பரந்த கருணையும் விரிந்த நோக்கமும் உடையவர் ; புண்ணிய கருமங்களையன்றி யாண்டும் வேறு எண்ணி அறியாதவர் என்பார், வெய்ய தீவினையின் நீங்கிய மேலவர் என்ருர். இங்ஙனம் மேலானவரைச் சார்ந்து நின்று காலம் இடம் கருதிச் சீலம் புரிந்து ஞாலம் பேணுக என்பதாம்.

4. அருந்தவர் அமரரினும் சிறந்தவர். விதியும் அவர் சொல்வழி நடக்கும். அந்நல்வினையாளரைப் பல்வகையிலும் உரிமை செய்து கொள்க. பெரியாரைத் துணைக் கோடல், பெரியாரைப் பிழையாமை எனத் திருக்குறளில் வகுக்கப்பட்டுள்ள இரண்டு அதிகாரங்களின் சாரமாக இந்த நான்கு பாடல்களும் வந்துள்ளன. நல்லினம் தழுவுதலை இங்ஙனம் தலைமையாகச் சொல்லி மேலும் பல உறுதி நலங்களை உரிமையுடன் உரைத்தார்.

உரைகள் செங்கோல் மன்னனை நோக்கி எழுந்தனவாயினும் உலகம் எல்லாம் பொதுவாக உணர்ந்து உய்யும்படி அரிய பொருள் நலங்கள் நிறைந்து அவை இனிமை சுரந்துள்ளன.

உருளு நேமியும் ஒண்கவர் எஃகமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்
தெருளு நல்லறமும்மனச் செம்மையும்
அருளும் நீத்தபின் ஆவதுண் டாகுமோ? (1)

சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்
நீதி மைந்த நினக்கிலை ஆயினும்
ஏதம் என்பன யாவையும் எய்துதற்கு
ஓது மூலம் அதுவென ஓர்தியே. (2)

யாரொடும் பகை கொள்ளிலன் என்றபின்
போரொடுங்கும் புகழ் ஒடுங் காதுதன்
தாரொடுங்கல் செல் லாதது தந்தபின்
வேரொடுங் கெடல் வேண் டல் உண் டாகுமோ? (3)

கோளும் ஐம்பொறி யுங்குறையப்பொருள்
நாளும் கண்டு நடுக்குறு நோன்மையின்
ஆளும் அவ்வர சேயரசு அன்னது
வாளின் மேல்வரு மாதவ மன்னனே. (4)

உமைக்கு நாதற்கும் ஓங்குபுள் ஊர்திக்கும்
இமைப்பில் நாட்டம்ஓர் எட்டுடை யானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கின ராயினும்
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே. (5)

என்பு தோலுடை யார்க்கும் இலார்க்கும்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்?
முன்பு பின்பின்றி மூவுல கத்தினும்
அன்பின் அல்லதோர் ஆக்கம் உண்டாகுமோ? (6)

வையம் மன்னுயி ராகவும் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்கு
ஐய மின்றி அறங்கட வாதருள்
மெய்யின் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ? (7)

இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்
வினையன் தூயன் விழுமியன் வென்றியன்
நினையு நீதி நெறிகட வான்எனில்
அனைய மன்னற்கு அழிவும் உண்டாங்கொலோ? (8)

சீல மல்லன நீக்கிச்செம் பொற்றுலைத்
தாலம் அன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ? (9)

ஓர்வின் நல்வினை யூற்றத்தி னுருரை
பேர்வில் தொல்விதி பெற்றுளது என்பரோ
தீர்வில் அன்பு செலுத்தலிற் செவ்வியோர்
ஆர்வம் அன்னவற்கு ஆயுதம் ஆவதே. (10)

தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வரும்
காமம் இல்லை எனில்கடுங் கேடெனும்
நாமம் இல்லை நரகமும் இல்லையே. (11)

ஏனை நீதி இனியன வையகப்
போனகற்கு விளம்பிப் புலன் கொளீஇ
ஆன வன்னெடும் ஆயிரம் மௌலியான்
தானம் நண்ணினன் தத்துவம் நண்ணினன். (12)

மந்தரை சூழ்ச்சிப் படலம், 11-22)

அரசன் அறிந்து ஒழுக வேண்டிய நெறிமுறைகளும், நீதி நலங்களும் மாதவர் வாய்மொழியாய் இவ்வாறு வெளிவந்திருக்கின்றன. கவிகளில் மருவியுள்ள பொருள் நிலைகள் கருத்தூன்றி உணர உரியன. தாம் கருதிய எண்ணங்களைச் சாதாரணமாக எல்லாரும் வசனங்களில் சொல்லிவிடுகின்றனர். கவிஞர் கவிகளில் இசைத்து அருளுகின்றார். அந்த அமைப்பில் ஓர் அதிசய ஆற்றலும் அறிவின் நுட்பமும் இனிமையும் சுரந்திருத்தலால் எல்லார்க்கும் உறுதியுண்மைகளை உணர்த்தி என்றும் நிலையாய் அவை நின்று நிலவுகின்றன.

1. தருமமும், நடுவுநிலைமையும், தயையும் அரசனுக்கு உறுதியாய் அமைந்திருக்கவேண்டும்; அவை பொருந்தியுள்ள அளவே அவன் சிறந்தவனாய் உயர்ந்து விளங்குகின்றான். இவ்வுண்மையை மூன்றுற நன்னயமாக உணர்த்தியிருக்கிறார்.

கருத்தை வலியுறுத்தற்குக் கையாண்டிருக்கும் வித்தகம் வியனிலையில் விளைந்து வந்துள்ளது.

உருளும் நேமி=வட்ட வடிவமான சக்கரம். எங்கும் தடையின்றி உருண்டு தன் ஆணையை ஆற்றவல்லது என்க. ஒண்கவர் எஃகம் என்றது சூலாயுதத்தை. வாணி=வாக்குத்தேவி.

நேமியால் திருமாலும், சூலத்தால் சிவனும், வேதவாக்கால் பிரமனும் உலகத்தை யெல்லாம் ஒருங்கே காக்கவும் அழிக்கவும் படைக்கவும் வல்லவர் ஆதலால் அந்த முத்தொழிலாளரின் அற்புத ஆற்றலை உய்த்துணர வுரைத்தார்.

நேமியும், எஃகமும், வாணியும் வல்லவர் மூவர் என்றது மும்மூர்த்திகளும் இன்ன வகையான ஆயுத சின்னங்களோடு மன்னியுள்ளனர் என அவர்தம் நிலைமையும் தலைமையும் நீர்மையும் நேரே விளக்கியவாறும்.

போராற்றலுடைய இத்தகைய தலைமைத் தேவரும் தரும சீலங்களாலே தான் நிலைபெற்று வருகின்றனர். அறமும், மனச் செம்மையும், அருளும் அரி அரன் அயன் என்னும் மூவருக்கும் முறையே உயிர்க்குணங்களாய் மருவி உரிமை செய்துள்ளன.

"சீலமும் தருமமும் சிதைவில் செய்கையும்
சூலமும் திகிரியும் சொல்லும் தாங்கிய"

(கிளைகண்டு நீங்கு படலம், 73)

என மூவருடைய மூல நிலைகளைப் பின்னும் குறித்துள்ளதை ஈண்டு இணைத்து எண்ணிக்கொள்க. சீலமும் சூலமும் அரனுக்கும், தருமமும் திகிரியும் அரிக்கும், கருணையும் சொல்லும் அயனுக்கும் உறவுரிமைகளாயின. இங்கே வந்துள்ள உருளு நேமியும் என்ற பாட்டுக்கு அங்கே பொருள் செய்துள்ள அழகைக்காண்க.

அகத்தே சீலம் முதலியனவும். புறத்தே சூலம் முதலியனவும் சூழ்ந்துநிற்றலால் அவர் ஞாலம்துதிக்க வாழ்ந்துவருகின்றார்.

கடவுளராயினும் அறத்தைக் கைவிடுவரேல் அவர் நிலைகுலைந்து அழிவர் என்பதை ஈண்டு நிலைபெற உணர்த்தியிருக்கிறார்.

அறமும் செம்மையும் அருளும் நீத்தபின் ஆவது உண்டாகுமோ?

இந்த வினவில் உள்ள வேகம் காண்க. இந்த மூன்று குணங்களையும் தழுவி நின்றே தேவதேவரான மூவரும் காரியங்களை நடத்தி வருகின்றனர்; வழுவின் யாதும் ஆற்றமாட்டாராய் அவமுற நேர்வர் என்பதாம்.

இராமா! நீ கருணை முதலிய குண நலங்களையுடையனாய் ஒழுகவேண்டும் என உரைக்கவந்தவர், திரிமூர்த்திகளை எதிர் எடுத்துக் காட்டி இவ்வாறு உணர்த்தியிருக்கிறார்.

பரம நிலையில் சிறந்துள்ள தெய்வங்களே தருமநிலை தவறின் தாழ்ந்துபட நேர்வர் என்றதனால் அதனை எவ்வளவு உரிமையோடு அரசன்பாதுகாத்து ஒழுகவேண்டும் என்பது இனிதுஉணரலாம்.

எல்லாரும் அறம் முதலிய நல்லியல்புகளினாலேயே உயர்ந்த செல்வாக்குடன் சிறந்து நிலைத்திருக்கின்றனர்; அவ்வுறுதி நலங்களை யாண்டும் மறவாமல் நீ உரிமையாக்கிக்கொள்ளவேண்டும் என்பதாம்.

"All things real are so by so much virtue as they contain"

"தம்தம் தருமத்தைத் தாங்கியிருக்கும் அளவே எல்லாப் பொருள்களும் ஓங்கி நிற்கின்றன" என எமர்சன் என்னும் பெரியார் கூறியுள்ளதும் ஈண்டு அறியத்தக்கது.

தருமகுண சீலங்களின் அருமை பெருமைகளைக் குறித்துக் காட்டினார்; அதனை அடுத்துச் சூதாட்டத்தின் சிறுமையை உரைத்தார்.

2. சூது தீது; அதனை யாதும் அணுகாதே; என்று சொல்லத் துணிந்த மாதவர் உடனே உள்ளம் நாணினார்.

"சூது முந்துறச் சொல்லிய மாத்துயர்
நீதிமைந்த! நினக்கு இலை; ஆயினும்,"

சூதின் தீமையைக் குறித்து இராமனுக்குப் போதனை செய்வதில் வசிட்டர் மனம் கூசியிருத்தலை இதில் கூர்ந்து பார்க்க.

மதியூகியான இப்புண்ணிய புருடனிடத்து அதிபாதகமான சூதைப்பற்றிச் சொல்லவேண்டுமா? என்று முனிவர் அகத்தே ஐயுறவு கொண்டார்; கொண்டும், பெரும்பாலும் அரசர் விரும்பி விளையாடும் களியாட்டம் ஆதலால் அதனை ஒருவாறு விழிகாட்டி விலகியிருக்கிறார்.

"சூது சதுரங்கம் சொக்கட்டான் இம்மூன்றும், துன்பமற்றான் செய்யும் தொழில்" எனச் சுகபோகிகள் மிகவுரிமையாகப் பாராட்டி வருகிற களி வகைகளுள் சூது முதன்மையாயுள்ளமையால் அதன் காதலும் கவர்ச்சியும் காணலாகும்.

அரசர் செல்வச் செருக்கில் திமிர்ந்துள்ளவர் ஆதலால் பொழுது போக்காகச் சூதை எளிதே பழக நேர்கின்றார்; அந்தப் பழக்கம் பின்பு வழக்கமாய்ப்படிந்து குடிகேடு செய்து அடியோடு கெடுக்க மூண்டு அழிவை விளைத்து வருகின்றது.

"ஏதம் என்பன யாவையும் எய்துதற்கு, ஓதுமூலம் அது" என்றதனால் எல்லாத் தீமைகளுக்கும் சூது மூல காரணமாயுள்ளமை தெளிவாம். ஏதம் = கேடு, துன்பம். சூதாடலில் புகுந்த மனம் வேறு காரியங்களில் திரும்பாது; ஆகவே கருமங்கள் பலவும் கெடுகின்றன; காலம் முழுவதும் பாழாகின்றது. அதனால் பொருள் அழிவு முதலிய பல இழவுகள் விளைந்துவிடுகின்றன.

*சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்*
*வறுமை தருவதொன் றில்.* (குறள், 934)

மனிதனைச் சிறுமைப்படுத்திச் சீரழித்துப் பேரிழவுகள் பலவற்றையும் சூது தரும் என்றமையான் அதன் தீது மூலங்கள் அறியலாம். மன்னனைச் சின்னவனாக்கி இன்னல் பல புரியும் என்பதாம்.

ஒரு தனிமனிதன் சூதாடலில் புகின் தீது அவன் குடியளவில் முடியும்; உலகம் காக்கும் அரசன் புகின் அரசு பாழாய் நாடு முழுவதும் கெடும் ஆதலால் நீதி நூல்வல்லார் எவரும் சூது தீது என்று அரசனுக்கு முதன்மையாக ஓதியிருக்கின்றனர். நளன் தருமன் முதலிய நீதிமன்னரும் சூதில் அழிந்துள தம் பல உழந்து இடர்பட்டுள்ளமை ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

சீலநற் றருமமெய் சிதைக்கும் தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்
மாலுறுத் திடுங்கவ றுடல் மன்னகேள்
கோலிழுக் கரசர்தம் கொள்கைத் தென்பவே. (1)

ஐய நீ ஆடுதற்கு அமைந்த சூதுமற்று
எய்துநல் குரவினுக்கு இயைந்த தூது; வெம்
பொய்யினுக் கருந்துணை; புன்மைக்கு ஈன்றதாய்;
மெய்யினுக் குறுபகை என்பர் மேலையோர். (2) (நைடதம்)

அடியும் ஆண்மையும்வலிமையும் சேனையும் அழகும் வென்றியும் தத்தம்
குடியும் மானமும் செல்வமும் பெருமையும் குலமும் இன்பமும் தேசும்
படியுமாமறை ஒழுக்கமும் புகழுமுன் பயின்ற கல்வியும் சேர
மடியுமால் மதியுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ மனம் வையார்.
(பாரதம்)

அறத்தைவேர் கல்லும் அருநரகில் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தம் செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றார் தெரிந்து. (1)
உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானம் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. (நளவெண்பா)

ஓதலும் ஓதி உணர்தலும் சான்றோரால்
மேதை எனப்படு மேன்மையும்—சூது
பொரும்என்னும் சொல்லினால் புல்லப் படுமேல்
இருளாம் ஒருங்கே இவை. (அறநெறிச்சாரம்)

பாரதத் துள்ளும் பணையம்தம் தாயமா
ஈரைம் பதின்மரும் போர்எதிர்ந்து ஐவரொடு
ஏதில ராகி இடைவிண்டார் ஆதலால்
காதலரொடு ஆடார் கவறு. (பழமொழி)

சூதர் கழகம் அரவம் அறாக்களம்;
பேதைகள் அல்லார் புகாஅர்; புகுபவேல்
ஏதம் பலவும் தரும். (ஆசாரக்கோவை)

சூதின் தீமையைக் குறித்து இவ்வாறு நூல்கள் பலகூறியுள்ளன. சரிதச் சான்றுகள் அரசினங்களையே சார்ந்திருக்கின்றன.

உயர்ந்த திருவினர் இழிந்த வழிகளில் இழியலாகாது என்ப தாம். வறுமை பழி முதலிய கேடுகளுக்கு எல்லாம் சூது அடி மூலம் ஆதலால் அதன் கொடுமையை இவ்வாறு நினைவுறுத்தினார். 'சூதும் வாதும் வேதனை செய்யும்'' என்றார் ஔவையாரும். சூதின் தீதை முதலில் குறித்து அடுத்து வாதை உரைக்கின்றார்.

3. மாறுபாடு மண்டி யாரோடும் பகைமை கொள்ளலாகாது. எல்லாரிடமும் நண்பு பாராட்டி வருக; அதனால் பண்பும் பயனும் பெருகும்; பல நலங்களும் வளரும்.

போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது.

பகையை வளர்க்காத அரசனுக்கு உளவாகும் உறுதி நலங்களை இங்ஙனம் உணர்த்தி யிருக்கிறார். இகலை யாண்டும் மேற்கொள்ளலாமல் எவரிடமும் இனிய பண்பினனாய் மன்னன் அமைந்து ஒழுகவேண்டும் என்பதாம். அவ்வாறு ஒழுகின் எல்லாரும் உரிமை யுடையராய் உறவாடி நிற்பர். சண்டை நிகழாது; எங்கும் அமைதியே நிலவும்; படை பொருள் முதலியன யாவும் யாதொரு குறைவுமின்றி மேலும் மேலும் பெருகி வியனிலையில் விளங்கி வரும். தார் என்றது சேனைகளை.

எப்பொழுதும் மனச்சினமுடையனாய் மாறுபட்டு நின்றால் பல வகைகளிலும் கேடுகள் உளவாம் ஆதலால் இகல் ஒழிந்து நகவுடையனாய் வாழுதல் நலம் என்றபடியிது.

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம்; அதனை
மிகலூக்கின் ஊக்குமாம் கேடு. (குறள், 858)

இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு. (குறள் 859)

இகலானாம் இன்னாத எல்லாம்; நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு. (குறள் 860)

இந்த அருமைத் திருவாக்குகள் ஈண்டு எண்ணத்தக்கன.

நோய்க்கு இடம் கொடேல் என்றபடி பகைக்கு இடம் கொடாமல் பாதுகாத்துக் கொள்க.

தன் தகையை வளர்த்துப் பகையை ஒழித்து எங்கும் இன்ப நலங்கள் பொங்கி மிளிர அரசன் செங்கோல் செலுத்தவேண்டும்.

4. ஏக போகமாய் எல்லாச் செல்வங்களும் நிறைந்திருந்தாலும் தேக போகங்களை அதிகம் விரும்பலாகாது. புலன்களை அடக்கி யாண்டும் நாட்டுக்குரிய நலன்களையே நாடி வரவேண்டும். திறைகளை முறையாகத் தொகுத்துப் பொருள் வளங்களைப் பெருக்கி அருள்புரிந்து காக்கும் அரசனே உண்மையான காவலன் ஆவன்.

"ஆளும் அவ் அரசே அரசு" என்றதனால் அங்ஙனம் ஆளாதவன் அரசன் ஆகான் என்பது பெறப்பட்டது. தனது போக நுகர்ச்சிகளைச் சுருக்கித் தேசத்தின் யோகக்ஷேமங்களைப்பெருக்கி எவ்வழியும் தரும பரிபாலனாய்த் தழைத்திருக்க வேண்டும். கவனம் எல்லாம் காப்பில் இருத்துக என்பது கருத்து.

பொறி அடக்கமுடையனாய் இவ்வாறு அறிவமைந்து அரசு புரியின், அவன் அரிய தெய்வத் தன்மையை யடைந்து இருமையும் பெருமை மிகப் பெறுகின்றான்.

"வாளின் மேல்வரும் மாதவம்" என்றது ஆளும் அரசின் அருமை கருதி வந்தது. தன்னலம் கருதாமல் பிறர் நலமே பேணி மன்னன் மாநிலம் காத்துவரின் அவன் ஒரு புண்ணிய மாதவனாய்ப் பொலிந்து விளங்குகின்றான்.

5. அரசன் எவ்வளவு மகிமையுடையனாயினும் அமைச்சர்களுடைய ஆலோசனைகளை நாளும் தழுவி ஒழுகவேண்டும்.

புள் ஊர்தி = திருமால். பறவைகளுக்கு அரசனாகிய கருடன் இங்கே புள் என வந்தது. நாட்டம் எட்டுடையான் = பிரமன். நான்கு முகங்களை யுடையன் ஆதலால் எட்டுக்கண்களை இங்ஙனம் சுட்டியருளினார். உமைக்கு நாதன் = சிவன்.

அரன் அரி அயன் என உயர்ந்த பேராற்றல்களை அடைந்திருந்தாலும் மன்னன் மந்திரி வாய்மொழிகளை மதித்துப்போற்ற வேண்டும் என்றது அந்தச் சொல்லாட்சியில் பல்வகை மாட்சிகளும் படிந்துள்ளமை கருதி.

அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே

எல்லா ஆற்றல்களுமுடைய அரசனுக்குத் தனியே உரிய ஒரு ஆற்றலை இவ்வாறு இனிமையாக உணர்த்தியிருக்கிறார்.

மந்திரிகளுடைய வாய்மொழியை மதித்து நடப்பதே மன்னவனுக்குச் சிறந்த வண்மை என்றதனால் அந்தச் சொல்லின் தன்மையும் நன்மையும் நன்கு புலனாயின.]

உடலுக்குக் கண்போல் அரசுக்கு அமைச்சு. கண் செல்வழி உயிர் இயங்குதல் போல் அமைச்சர் சொல்வழி அரசன் இயங்க வேண்டும். அவ்வாறு செல்லின் யாதொரு இடையூறு மின்றி அரசு இனிது நடைபெறும் என்பதாம்.

அரசன் பெருந்திருவில் இருமாந்து தனித் தலைமையில் நிலைத்துள்ளமையான் அரச காரியங்கள் எல்லாவற்றையும் தான் ஒருவனே நுணுகி அறிய முடியாது; அதனால் ஆலோசனையாளர்கள் பலர் சூழமியுள்ளனர். மதியூகிகளாய் மருவியுள்ள அந்த மந்திரிகளுடைய மொழிவழியே மன்னன் தொழில் புரிவது வழி முறை யாயது.

ஆற்றுதல்=செய்தல். அமைச்சரது அறிவுரையை அனுசரித்து முறைபுரியின் அரசனுக்கு உறுதி நலங்கள் பல உளவாகும் ஆதலால் அங்ஙனம் ஆற்றுதலை ஆற்றல் என்றார்.

ஆற்றல் என்று ஓதப்பட்ட அரசர்கட்கு அவற்றின் மிக்க
ஆற்றல்தான் சூழ்ச்சி என்பது; ஆதலால் அதனை ஆயும்
ஆற்றலார் அமைச்சர்ஆக, அமைச்சரோடு அமர்ந்துசெல்லும்
ஆற்றலான் அரசன்ஆகின் அரியதொன்று இல்லை அன்றே. (1)

வால்வளை பரவி மேயும் வளர்திரை வளாகம் எல்லாம்
கோல்வளை வுறுமல் காக்கும் கொற்றவன் நெடியன்ஏனும்
மேல்வினை பறியும் வெய்ய வினைகளும் விலக்கி நின்றார்
நூல்வினை புலவர் அன்றே? நுணங்குபோ தணங்கு தாரீர்!(2)

சுற்றி நின்று எரியும் செம்பொன் மணிமுடி சுடரச் சூட்டி
வெற்றிவெண் குடையின் நீழல் வேந்தன் வீற்றிருக்கும் ஏனும்
மற்றவன் மனமும் கண்ணும் வாழ்க்கையும் வலியும் சால்பும்
அற்றமில் அரசும் கோலும் ஆபவர் அமைச்சர் அன்றே. (3)

வீங்குநீர் உலகம் காக்கும் விழுநுகம் ஒருவ னாலே
தாங்கலாம் தன்மைத் தன்று; தளையவிழ் தயங்கு தாரீர்
பாங்கலார் பணியச் சூழ நுலவர் பாக மாகப்
பூங்குலாம் அலங்கல் மாலைப் புரவலன் பொறுக்குமன்றே. (4)

வாள்வலித் தடக்கை மன்னர் வையகம் வணக்கும் வாயில்
தோள்வலி சூழ்ச்சி என்றாங்கு இருவகைத் தொகையிற்றாகும்;
ஆள்வலித் தானையார்கட்கு ஆதியது அழகிது ஏனும்
கோள்வலிச் சீயம் ஒப்பீர் சூழ்ச்சியே குணமதென்றான். (5)

(சூளாமணி, மந்திரசாலைச் சருக்கம்)

உமைக்கு நாதன் ஆதியர் எனச் சமைத்த தோள்வலி தாங்கினராயினும் அமைச்சர் சொல்வழி ஆற்றுதலே அரசர்க்கு ஏற்றமாம் என்றது இப்பகுதியிலிருந்து தோற்றியிருக்கிறது.

புவி காக்கும் மன்னன் மந்திரிகளுடைய உணர்வுரைக்குச் செவி சாய்க்கவேண்டும் என்பதாம்.

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. (குறள், 389)

அமைச்சர் சொல் அரசன் செவியில்தங்கின், உலகம் அவன் குடைக் கீழ்த் தங்கும் என்ற இது இங்கே சிந்திக்கத் தக்கது.

6. அன்பு மிகவும் சிறந்தது. எல்லா உயிர்களிடத்தும் இரக்கமுடையவன் உயர்ந்த தெய்வத் தன்மையை அடைகின்றான். கருணையே இறைவனுக்கு உருவமாம்.

என்புதோல் உடையார் என்றது முனிவரை. பட்டினி கிடந்து ஊனை உருக்கி உயிரைப் பெருக்கி அருந்தவம் புரிதலால் அவரது வடிவ நிலை இங்ஙனம் குறிக்க நேர்ந்தது

"உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்,
என்பு எழுந்து இயங்கும் யாக்கையர்."

(திருமுருகாற்றுப்படை)

என வந்திருத்தல் காண்க. இலார் என்றது இல்லறவாசிகளை. துறவிகளும் இல்வாழ்வோரும் தம் புலன்களை அடக்கி அருந்தவம் புரிவதினும் ஆருயிர்கள்பால் அன்பு புரிந்து வருவது நலம். தோல் உடையார், இலார் என்றது முறையே மானுடரையும் தேவரையும் குறித்ததாகக் கொள்ளினுமாம்.

அன்பின் அல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ?

உயிர்களிடம் அன்பு செய்யின் அறம் வளரும்; அதனால் அரிய பொருள்கள் பலவும் பெருகிவரும். வரவே இருமையும் இன்பமாம் ஆதலால் அன்பே ஆக்கம் என்றார்.

்வன் பகைப் புலன் மாய்த்து உடம்பைத் தேய்த்து அரிய தவம் புரிவதினும் உளம் உருகி அன்பு புரிவதே இனிதாம் என்க.

என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலில் பொரிய வறுப்பினும்
அன்போடு உருகி அகம் குழைவார்க்கு அன்றி
என்போன் மணியினை எய்த ஒண்ணாதே. (திருமந்திரம்)

அருந்தவத்தினும் அன்பே பேரின்ப நலனை இனிது நல்கும் என இது உணர்த்தி நிற்றல் அறிக.

துறவறம் மனையறஞ்சீர் தூய்மை நற்கல்வி நல்லோர்
உறவொடு மகங்கள் தானம் ஒண் தவம் விரதம்பூசை
அறிவிவை அனைத்தும்இல்லை ஆதரவு இல்லையாயின்
பெறுவன மெய்வருத்தம் பெரும்பொருள் அழிவு மாதோ.

ஆதரவுடையான் செய்யும் அல்லவும் நல்லவாகும்;
ஆதரவிலாதான் செய்யும் நல்லவும் அல்லவாகும்;
ஆதர வதனால் ஆவிக்கு அருந்துணை இன்பமுத்தி
ஆதர வலாது வேறொன்று அளித்திடக் கண்டதுண்டோ?
(பிரபுலிங்கலீலை)

அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. (குறள், 80)

அன்பின் பெருமையை நூல்கள் இங்ஙனம் பலபடியாகப் பாராட்டி யிருக்கின்றன. அன்புடைய மனிதப் பிறப்பே உயிர் அமைந்ததாய் உயர்ந்து விளங்குகின்றது; அது இல்லையாயின் நடைப் பிணம்போல் இழிந்துபடுகின்றது என்னும் தேவாது இந்த அமுத மொழியை இது அடியொற்றி வந்துள்ளது.

இராமநாதா! அன்பினால் எல்லா இன்பநலங்களும் ஒருங்கே உளவாகும்; அதனை யாண்டும் நீ ஆற்றி வரவேண்டும்.

7. உலகிற்கு அரசன் உயிர் எனப்பழைய நூல்கள் கிழமை குறித்துள்ளன. நம் கவி அவற்றினும் நயனுற வியன் உரைத்துள்ளார். "வையம் உயிர்; அவ்வுயிர் உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னன்" என்னும் இது எண்ணி ஆராய வுரியது.

உயிரைப் பலவகையிலும் நலமுறப் பாதுகாத்து உடல் அதற்கு இனிய ஆதரவாயிருத்தல் போல் மன்னன் எவ்வழியும் வையம் உய்யச் செய்ய வேண்டும் என்பதாம்.

உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினன்

எனத் தசரதனை முன்னம் * குறித்துள்ளதும் ஈண்டுக் கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

தேக போகங்களை ஏகமாய்த் துய்த்து இன்பக் களிப்பில் இறுமாந்திராமல் ஆருயிர்கள்பால் அன்பு பாராட்டி அருள் புரிந்து தருமகுண சீலனாய்த் தழைத்து உரிய அரசை உறுதி பெற ஓம்பி யாண்டும் சத்தியவானாய் உத்தம நிலையில் உயர்ந்திருக்கவேண்டும். மன்னன் வையத்தின் மெய் என்றமையால் உயிரினங்களோடு அவனுக்குள்ள உறவுரிமை புலனாம்.

வையம் இன்புறின், மன்னன் இன்புறும்;
வெய்யது ஒன்றுறில், தானும் வெய்துறும்;
செய்ய கோலினாய்! செப்பலாவது அன்று
ஐய தாரினான் அருளின் வண்ணமே. (1)

வீவி லங்குநீர் வேலி வாழ்பவர்க்கு
ஆவி யாபவர் அரசர் ஆதலால்
காவல் ஓவும்கொல்? என்று கண்படான்
மாவல் தானை அம் மன்னர் மன்னனே. (சூளாமணி)

இவை ஈண்டு எண்ண உரியன. அரசு நிலை குறித்து நம் முன்னோர் கருதி வைத்துள்ள உரிமைகள் இந்நாட்டின்பண்டைக் கால ஆட்சி முறைகளை நினைவூட்டி இனிய காட்சிகளைக் காட்டி அரிய பல மாட்சிகளை விளக்கி ஆர்வம் விளைத்து வருகின்றன.

8. இன்சொல் ஈகை இரக்கம் வினையாண்மை தூய்மை மேன்மை வெற்றி நீதி முறை முதலியன அரசனுக்குரிய இனிய இயல்புகளாம். அத்தன்மைகளுடைய மன்னன் என்றும் மன்னிய கீர்த்தியாளனாய் மாண்புற்று வாழ்வன்.

"இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு." (குறள், 387)

என்னும் குறளை அடியொற்றி இக்கவி வந்துள்ளது.

9. நல்ல சீலமும் நடுவு நிலைமையும் பல்வகைப்பண்புகளும் படிந்து காலம் கருதி இடம் அறிந்து வலிநிலை தெரிந்து வருவன உணர்ந்து நெறிமுறை தவறாமல் வினைபுரிதல் இனிது.

* இந்நூல் பக்கம் 227, வரி 31 பார்க்க.

காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ?

என்றது பருவம் அறிந்து கருமம் புரிக எனப் பொழுதின் உரிமை உணர வந்தது. காலத்தைக் கண் என்று குறித்தமை யால் அதன் அருமையும் அமைதியும் அறியலாகும்.

ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின். (குறள், 484)

என்னும் இந்த அருமை வாசகம் ஈண்டு அறிய உரியது. ஒரு காணி நிலமும் கூடக் கருதியபடி கிடையாமல் மறுகியுழலும் மானுடங்களுக்கு ஞாலமுழுவதும் கிடைக்கும் மந்திரத்தைத் தேவர் இதில் உபதேசித்திருக்கிறார். அந்த வள்ளலது உள்ளத்தையும் உணர்வையும் உறுதி நிலையையும் ஊடுருவி உணர்ந்து கொள்ளவேண்டும்.

10. மனம் மொழி மெய்கள் புனித முடையராய் யாண்டும் நல்வினைகளையே நயந்து புரியும் தருமகுணசீலரைத் தமராகத் தழுவிக் கொள்க. அந்தப் புண்ணிய சீலரது ஆர்வமே அரசுக்குப் பேரரணாய் நின்று பெருந்துணை செய்யும். வாள்வலி ஆள்வலி தோள்வலி நாள்வலி முதலிய பலவகை உறுதிகளினும் நல்லவர்களின் கேள்வலியே சிறந்தது. எவ்வழியும் நல்லினம் திவ்விய மகிமைகளை விளைத்தருளும். அதன் செவ்வி தெரிந்து பேணி ஆட்சியை யாண்டும் மாட்சிமை பெறச் செய்க.

அரசுக்குரிய இனிய உறுதி நலங்களை இவ்வாறு உரிமையுடன் உரைத்துவந்த முனிவர் இறுதியில் கடிது விலக்கத்தக்க கொடியது என ஒன்றை நெடிது காட்டித் தமது போதனையை முடித்திருக்கிறார்.

11. காமம் தீமையுடையது; வழுவாக வளரவிடின் மனித வாழ்வை அது பாழ்படுத்திவிடும் என இதில் அறிவுறுத்தியுள்ளார்.

வாமம் = அழகு. மேகலை = மகளிர் இடையில் அணியும் ஒருவகை ஆபரணம். மங்கையரால் வரும் காமம் என்றது இங்கே இனம் விளக்கி நின்றது.

பருவ நலம் கனிந்த உருவநிலையும் அணியமைதியும் காம விளைவுக்கு ஏமம் ஆதலால் அவை அடைகளாய் இடைமிடைந்தன.

இக்காமம் உயிரை எவ்வழியும் உய்யவிடாமல் தன்பால் பிணித்துத் தாழ்த்திவருதலால் மெய்யுணர்வுடையார் இதனைக் கொடிய கேடு என்று குறித்தருளினர்.

" காமம் இல்லையெனில் கடுங்கேடு எனும்
நாமம் இல்லை ; நரகமும் இல்லையே. ".

என்றமையால் காமமே கொடிய தீமைகளுக்கெல்லாம் அடிமூலம் என்பது அறியலாகும். கேடு, இவ்வுலகில் அனுபவிக்கின்ற பழி துயரங்கள். நரகம், இறந்தபின் அழுந்தி உழல்வது.

இம்மையிலும் அம்மையிலும் வெம்மை மிக விளைத்து உயிர்க்குப் பெருந் துன்பங்களை வளர்த்து வருதலின் காமம் நீசம் என நிந்திக்க நேர்ந்தது.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். (குறள், 360)

இந்தக் குறளை மருவி நம் கனி வந்துள்ளமை உணரலாகும். காமம் இருக்கும் வரையும் பிறவித் துன்பம் நீங்காது. கேடும் நரகமும் கூடவே கொதித்து நிற்கும்.

காமம் களைந்த போதுதான் சேமம் விளைந்துவரும்.

காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து
ஏமம் பிடித்திருந் தேனுக்கு எறிமணி
ஓமெனும் ஓசையின் உள்ளே உறைவதோர்
தாமம் அதனைத் தலைப்பட்ட வாறே. (திருமந்திரம்)

" முடிபொருள் உணர்ந்தோர் முதுநீர் உலகில்
கடியப்பட்டன ஐந்துள ; அவற்றில்
கள்ளும் பொய்யும் களவும் கொலையும்
தள்ளா தாகும் காமம் தம்பால்
ஆங்கது கடிந்தோர் அல்லவை கடிந்தோரென
நீங்கினர் அன்றே நிறைதவ மாக்கள்
நீங்கார் அன்றே நீணில வேந்தே
தாங்கா நரகம் தன்னிடை யுழப்போர். " (மணிமேகலை)

ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையும்
காட்டியது இணையதோர் காமம் ஆதலின்
வாட்டமில் புந்தியான் மற்றந் நோயினை
வீட்டின ரல்லரோ வீடு சேர்ந்துளார், (கந்தபுராணம்)

நிதியான நிறைநீருக்கு உடைகுளம் ;
மிக்கானகுல நெறிக்கோர் தீனம் ;
மதியான மதிவிழுங்கும் கோளரவு ;
பவத்தூறு வளர்க்கும் கானம் ;
கொதியான நரகிழுக்கும் கொடும்பாசம் ;
உயிர்உருக்கிக் குடிக்கும் கூளி ;
கதியான வழியடைக்கும் கற்பெருங்
கபாடம் அன்றோ கடிய காமம். (1)

சுகுடம் சேர் பரிமகநூறியற்றி வானரசு
கன்னற் சுவைபோல் பெற்றான்
சகுடம் போல் அவன்மனத்தில் சசிகாமம்
பிடித்தலைப்பத் தலைகீழாக
மகுடம்போய், வானகம்போய், வையகம் போய்,
அரசுபோய், மலைப்பாம்பாக
நகுடன்போய் வீழ்ந்தகதை அறியாயோ
சிறியாயோ நளினத்தாரோய்! (குற்றாலத்தலபுராணம்)

காமத்தின் கடுங்கேட்டைக் குறித்து இவ்வாறு பல நூல்களும் பரிந்து உரைத்திருக்கின்றன.

காமம்.

காமம் உயிர்களுக்கு இயல்பானது ; மனித வாழ்க்கையில் அது இனிது மருவி யுள்ளது. அஃது இல்லையாயின் உலகம் இல்லை. தேவதேவரும் மங்கையரை மருவியே மகிழ்ந்திருக்கின்றனர். அங்ஙனம் இருக்கக் காமம் தீயது; மனிதன் அதனை ஒழித்து ஒழுகவேண்டும் என்றது என்னை? எனின், அதன் உண்மை நிலையை ஓர்ந்து உறுதிநலம் தெளிந்து உரிமை புரிக.

தீ மிகவும்கொடியது ; ஆயினும் அதனைப் பண்பாகப் பயன்படுத்தின் உண்டி முதலியன விளைத்து, ஒளி மிகப்பரப்பி உதவி புரிந்துவருகின்றது. அதுபோல் காமமும் உரிய மனைவியை மருவி முறை வழுவாமல் நிறைபுரிந்துவரின் இருமையும்இதமாம்; அயல் மனை முதலியன விழைந்து இயல் வழுவின் வீடு பற்றிய தீப்போல் அழிதுயர் பெருகி இழிநரகமாகும்.

ஊழிமுதல் ஊழ்முறையாய் உயிரைத் தொடர்ந்துவருகின்ற காமத்திற்கு ஓரளவு வரம்பமைத்துப் பாரளவில் இவ்வண்ணம் பகுத்து வைத்ததேயன்றி, உண்மையில் அதனை முற்ற ஒழித்த

வரே உத்தமமான முத்தராய் உயர்ந்து விளங்குகின்றார். அவரே பிறவி தீர்ந்து பேரின்பம் பெறுகின்றார்.

பிறவிக்கு ஏதுவான காமத்திற்கு இனிய நிலைக்களமாயிருத்தலால் மங்கையரைத் துறவிகள் வெறுக்க நேர்ந்தனர். வெறுப்பெல்லாம் அரிவையபாது அரிய இன்பக் கவர்ச்சியையும், அந்த ஆசைச் சுழலில் மீளமுடியாமல் அழுந்தி யுழலும் ஆடவாது அவல நிலைகளையும் விளக்கி நிற்கின்றன.

பனிமதி யின்கதிர் பருகும் ஆம்பல்போல்
முனிமதி முகத்தியர் முறுவல் நம்பினார்,
துனிவளர் கதிகளுள் தோன்றி நாடகம்
கனியநின் றாடுவர் கடையில் காலமே. (1)

நிழல்நிமிர் நெடுமதி நிகரில் தீங்கதிர்ப்
பழனவெண் டாமரை பனிக்கு மாறுபோல்
குழல்நிமிர் கிளவியார் கோலம் அஞ்சினார்
தொழநிமிர்ந் தமரராய்த் துறக்கம் ஆள்வரே. (2)
(சீவக சிந்தாமணி, 1554, 1555.)

மங்கையர் காமம் மருவினார் பிறவித் துயரில் மறுகி யுழலுவர்; ஒருவினார் அமரராய் உயர்ந்து அரிய பேரின்ப நிலையில் பெருகி மகிழ்வர் என இவை உணர்த்தி யுள்ளன.

காமனை முனிந்து நெடுஞ்சடை முடித்துக்
கவின்றகல் லாடை மேற்புனைந்து
யாம்எலாம் வழுத்தும் துறவிஎன் றிருந்தும்
ஒருத்திதன் இளமுலைச் சுவடு
தோமுறக் கொண்டார் எனச் சிறை யிடல்போல்
சுடர்மனக் குகையுள் ஏகம்பத்து
ஓமொழிப் பொருளை அடக்கி ஆனந்தம்
உறுநர்வாழ் இடம் பல உளவால். (காஞ்சிப்புராணம்)

காமத்தை அறவே துறந்து சந்நியாசிகளாய் இருக்கின்ற நாம் நாளும் திசை நோக்கித் தொழுகின்ற பரமபதியா யிருந்தும், உமை என ஒருத்தியை மருவி யிருக்கிறாரே; இந்தக் குற்றவாளியைச் சும்மா விடலாகாது; சிறையில் இடவேண்டும் என்று தமது இதயக் குகையுள்ளே சிவனை அடைத்து வைத்துள்ளனர் என யோகிகளை இது குறித்திருக்கும் அழகைப் பார்க்க.

காமம் இல்லையானால் மனிதன் தெய்வத்தினும் சிறந்தவனாய்த் திவ்விய மகிமையை அடைகின்றான் என்பது தெரிகின்றது.

இராமனும் அதிசயித்து நோக்கும்படி அனுமானிடம் நிறைந்திருந்த பெருமைகள் எல்லாம் காமம் கடிந்து அரிய பிரமசாரியாயுள்ள ஒன்றினாலேயே கவிந்து வந்தன என்க.

யாரும் எளிதில் நீக்கமுடியாத ஆற்றலுடையது ஆதலால் அதன் ஏற்றம் தெரிய ஈற்றில் நிறுத்தி இதமுற வுணர்த்தினார்.

காமத்தின் கடுங்கேட்டை விளக்குதற்கு உடன்கூட்டி வைத்திருக்கும் உவமை ஊன்றி நோக்க நின்றது.

## தூமகேது

தூமகேது என்பது ஒரு தீக்கோள். விண்ணில் உறைந்துள்ளது. வால்போல் சிறிது நீண்டு ஒளி அமைந்திருத்தலால் இதனை வால் நட்சத்திரம் என்பர். வட்டம், சிலை, நுட்பம், தூமம் என நான்கு கோள்கள் உள்ளன மற்ற உடுக்கள்போல் இவை வெளியே தோன்றா. என்றும் மறைந்து இருத்தலால் கரந்துறை கோட்கள் என வழங்கப்படும். மழை பெயலின்றி உலகிற்குக் கெடுகாலம் நேரின் இவை வெளிவர நேரும். இக் கெடு கோட்கள் காணப்படின் பூமிக்கு ஏதோ ஓர் பெருங்கேடு வருகின்றது எனக் கணித நூலோர் கலங்கிச் சொல்லுவர்.

> "கரியவன் புகையினும், புகைக்கொடி தோன்றினும்,
> விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்."
> (சிலப்பதிகாரம், 10)

> "மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்
> தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்" (புறம். 117)

என முன்னோர் உள்ளி ஓர்ந்திருத்தலால் வானநூலில் அவர் தேர்ந்துள்ள ஞான நிலை நன்கு புலனாகும்.

மழை இன்றி உலகம் துயருறும் என்பதற்கு உற்பாதங்களாக இவை இங்ஙனம் உரைக்கப்பட்டுள்ளன.

இங்கே வந்துள்ள புகைக்கொடிதான் தூமகேது என அழகிய பெயராய் நம் கவியுள் நுழைந்துள்ளது. புகை=தூமம். கொடி =கேது. தூமகேது என்னும் இப்பெயர் பழைய நூல்களில் யாண்டும் பயிலவில்லை. அழகிய ஒரு புதிய மொழி இனிது விளைந்து புலமை யுலகம் மகிழ இங்கு இதமாய் வந்தது.

காமத்திற்கு ஈண்டு அது உவமையாய் அமைந்துள்ளது.

காமம் மனிதன் அகத்தில் உறைந்திருக்கிறது. முறை தவறி அது முனைந்து எழுமாயின், அவனுக்குக் கேடு ஆகின்றது.

விண்ணில் மறைந்துள்ள தூமகேது வெளிப்படின் உலகிற்குக் கேடாம்; அதுபோல் அயலான் பெண்ணின்மேல் எழும் காமமும் மனிதனுக்குக் கேடாம்.

நண்டு சிப்பி வேய் கதலி நாசம் உறுங் காலத்துத் தம் உள்ளே கருக்கொள்ளுதல்போல், அறிவு பொருள் பெருமை கல்வி முதலிய உறுதி நலங்களுக்கு அழிவு வரும்பொழுது அயல் மாதர் மேல் மனிதன் மயல்கொள்ளுகிறான் என ஒளவையார் அருளியுள்ளதும் ஈண்டு அறிய உரியது.

பெண்ணின் காமம் எவரையும் மயக்கவல்லது; மண்ணாளும் மன்னன் அந்தக் கண்ணியில் விழாமல் புண்ணிய சீலனாய்ப் பொருந்தி யிருக்கவேண்டும் என்பது குறிப்பு.

ஒரு காமக் கேட்டை உணர்த்தற்குப் பூமிக்கெல்லாம் பெருங்கேடான தூமகேதுவை எடுத்துக்காட்டியது, உலக முழுவதும் தனி ஆளும் தலைமையாளன் ஆதலால் அதன் நிலைமையை இங்ஙனம் நேர் காட்ட நேர்ந்தது.

மன்னன் காமியாய்க் கெடின் மாநில முழுவதுக்குங்கேடாம்; ஆதலின் பெருங்கேட்டின் அறிகுறியான உற்பாதக் கோள் ஒப்புற வந்தது. வால் வெள்ளி தோன்றின் பெரும்பாலும் அரசர்க்கே அழிவாம் ஆகையால் அவ்வுறவும் உணர உற்றது.

ஆங்கிலப் பெருங் கவிஞராகிய ஷேக்கிஸ்பியரும் தூமகேதுவைக் குறித்துத் தம் நூலில் கூறியிருக்கிறார்.

"When beggars die, there are no comets seen;
The heavens themselves blaze forth the death of princes.
(Julius Caesar, 2-2)

"தூமகேதுக்கள் எளிதில் வெளிப்படா; அரசர்க்கு அழிவு நேர்ந்தபொழுதுதான் அவை விண்ணில் விளங்கித் தோன்றும்" என்னும் இது ஈண்டு எண்ண உரியது

மக்கள் குற்றங்களில் பழகாதபடி பாதுகாத்து நீதி செலுத்தும் அரசன் முன்னதாகத் தான் குற்றம் அற்றவனா யிருக்க

வேண்டும்; ஆகவே குணநலங்களெல்லாம் அவனுக்கு இனநலங்களாக இசைந் தருளினர்.

இவ்வாறு அரச நீதிகள் போதிக்க பெற்றன.

வால்மீகத்தில் தசரதனே இராமனுக்கு ஆட்சிமுறைகளைக் குறித்துச் சொன்னதாகவுள்ளது. இங்கே வசிட்டரை நியமித்துக்கொண்டு அரசனுக்குரிய தரும நீதிகளைக் கவி இவ்வண்ணம் சுவையாக விரித்து விளக்கி யிருக்கிறார்.

இறைமாட்சி முதலாகத் திருக்குறளில் வந்துள்ள பொருள் நலங்கள் பல மறுவுருவங்களில் இனிமை சுரந்து இங்கே மருவி மிளிர்கின்றன. உறுதி உண்மைகள் உணர்ந்து ஒழுக உரியன.

இங்ஙனம் போதித்த பின்பு வசிட்டர் தெய்வ வழிபாடுகள் செய்து, தசரதனை அணுகி மேல் ஆகவேண்டியதை அறிவுறுத்தி மந்திரிகளுடன் கலந்து விழாவுக்கு உரியன விரைந்து புரிந்தார்.

தேசம் எங்கும் பெருமகிழ்ச்சிகள் பரவி யிருந்தன. பூச நட்சத்திரத்தில் முடிசூட்டவேண்டுமென்று கணிதம் வல்லார் கணித்திருந்தனர். அந்த நல்ல ஓரையில் தன் செல்ல மகனுக்கு மகுடம் புனைவதை அரச முறைப்படி எல்லார்க்கும் அறிவிக்குமாறு வள்ளுவரை ஏவி மன்னர் பிரான் உள்ளுவந்து உரிமைச் சுற்றங்களுடன் அளவளாவி உறுவதை விழைந்திருந்தான்.

மங்கல முரசங்களை முழக்கி வினையாளர் எங்கும் அறிவித்தனர். அந்த முரசு ஒலிகள் அகில மன்பதைக்கும் இன்ப நிலையங்களாய் இனிது எழுந்தன. தேவர் முதல் யாவரும் ஆவலுடையராய் அவாவி நிறைந்தனர்.

ஏவின வள்ளுவர் இராமன் நாளையே
பூமகள் கொழுநனாய்ப் புனையும் மௌலி, இக்
கோநகர் அணிகெனக் கொட்டும் பேரி அத்
தேவரும் களிகொளத் திரிந்து சாற்றினார். (1)

கவியமை கீர்த்திஅக் காளை நாளையே
புவியமை மணிமுடி புனையும் என்ற சொல்
செவியமை நுகர்ச்சிய எனினும் தேவர்தம்
அவியமுது அன்னஅந் நகரு ளார்க்கெலாம். (2)

ஆர்த்தனர்; களித்தனர்; ஆடிப் பாடினர்;
வேர்த்தனர்; தடித்தனர்; சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தனர்; மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்;
தூர்த்தனர் நீள்நிதி சொல்லினர்க்கெலாம். (3)

திணிசுடர் இரவியைத் திருத்துமாறும், அப்
பணியிடைப் பள்ளியான் பரந்த மார்பிடை
மணியினை வேகடம் வருக்கு மாறும்போல்
அணிநகர் அணிந்தனர் அருத்தி மாக்களே. (4)

(மந்தரை சூழ்ச்சிப் படலம், 25-28)

இராமனுடைய முடிசூட்டு நலனை அறிந்த பொழுது மக்கள் அடைந்த ஆனந்த நிலைகளை இங்கே நாம் கண்டு மகிழ்கின்றோம்.

தேவரும் களிகொள என்றதனால் இந்த இனிய மங்கல விழா வானும் வையமும் உய்ய வந்துள்ளமை உய்த்துணர வந்தது.

கவி அமை கீர்த்தி அக் காளை

என இராமனை இங்கே காட்டியிருக்கும் அழகு காண்க.

இவ் வேளையே அவனது பெரும்புகழ் விளைவுக்கு வித்திடும் நாளாம். பிறருடைய கீர்த்திகள் எல்லாம் பெரும்பாலும் பேச்சளவில் நின்றுபோம் இவனுடையது பாவிலும் நாவிலும் படிந்து பெரிய ஒரு காவியமாக விளைந்து பூவுலகெங்கணும் பொலிந்து தேவியல்போடு சிறந்து விளங்குகின்றது.

நாட்டு மக்களது வாயளவில் நின்று மாய்ந்து போகாமல் பாட்டு மக்கள் வாய்ப்பட்டு என்றும் தேயாமல் எழில் சுரந்து எங்கும் ஓங்கி நாளும் நவமாய் இக் காளையின் புகழ் வளர்ந்து வருதலை உயிரினங்கள் ஊழியும் தொடர்ந்து உணர்ந்து வருகின்றது. அவ்வுணர்ச்சிகள் உயர்வு நலங்களை உதவி வருகின்றன.

புலவர் பாடும் புகழ் மிகவும் தலைமையுடையது ஆதலால் அந் நிலைமையை உணர்த்திக் கீர்த்திமானை விளக்கிக் காட்டினர்.

வால்மீகி போதாயனர் கம்பர் துளசிதாசர் முதலிய உத்தமக் கவிகள் எல்லாரும் விழைந்து புகுந்து உவந்து பாடிய உயர் புகழ் ஆதலின் அவ்வியல்பெல்லாம் கவி அமை என்னும் அவ்வமைதியில் சுவையாக அமைந்துள்ளன.

மகா கவியாகிய அனுமான் ஆர்த்தியோடு அமைந்து துதித்த அற்புதக்கீர்த்தியை இந்நனம்விற்பனம் கனிய விளக்கியருளினர்.

தம் கனி அளியினும் இனிதாய்ச் சுவை மிகுந்து என்றும் குன்றாமல் நின்று நிலவ நன்று அமைந்துள்ள நயன் கருதி நன்றி யறிவுடன் உவந்து துதித்தபடி யிது.

இராமனது அவதார ஆடல்கள் எவ்வழியும் சுவை சுரந்திருத்தலால் அந்தத் திவ்விய மகிமைகளை விழைந்து செவ்விய கவிகள் பல திரண்டு எழுந்துள்ளன.

செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்கு ஆகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவாள் ஏந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றி கொண்டு
வேல் வேந்தர் பகைதடிந்த வீரன் தன்னை
தெவ்வரஞ்சு நெடும்புரிசை உயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்
எவ்வரிவெஞ் சிலைத்தடக்கை இராமன்தன்னை
இறைஞ்சுவார் இணையடியே இறைஞ்சினேனே.

(பெருமாள் திருமொழி)

இது குலசேகர மன்னன் பாடியது. இவ்வாறே ஆழ்வார்களும் பிறரும் ஆர்த்தி மீதூர்ந்து பாடியிருத்தலால் கவியமை கீர்த்தியாய் இராமன் புகழ் புவிமகிழ நின்றது. கீர்த்தி கவியை அமைத்தது; முடி புவியை அமைத்தது; கவிக்கு அவன் கீர்த்தியும், புவிக்கு முடியும் உயிருதவி ஒளிசெய்துள்ளன.

காளை என்றது பருவநலம் கனிந்த அருமை வாசகம் ஆயினும் இங்கே தகுதியான உரிமை புணர வந்தது. அரச பாரத்தை நெடுங்காலமாகத் தாங்கி எருது போல் உழைத்து முதிர்ந்து போனேன்; இனி என்னால் இயலாது; இளவரசான நீ இதனை ஏற்றருள் என்று இராமனை நோக்கித் தசரதன் முன்னம் சொன்னதற்கு ஏற்பக் காளை இங்கே அவ்வேலை செய்ய நேர்ந்தது.

இதுவரை தொழிலில் பூட்டாதது; உரிய துணையோடு இனிய போகங்களை அனுபவித்துக்கொண்டு உல்லாசமாய் உலாவியிருந்தது; அந்த இளங் காளை பெரிய உலக பாரத்தைத் தாங்க மூண்டது என அதன் புதுமை தோன்ற வந்தது.

அக்காளை நாளையே நெடுமுடி புனையும் என ஊரறியப் பேரிகைகள் ஒலித்தன. அவ் ஒலிகள் எங்கும் உவகை நிலையங்களாய் ஓங்கி உம்பரும் இம்பரும் மகிழ உயர்ந்து எழுந்தன.

"செவி அமை நுகர்ச்சிய எனினும், தேவர்தம்
அவி அமுதுஅன்ன அந்நகருளார்க் கெலாம்"

நாளை இராமனுக்கு மகுடதாரணம் என்னும் இச்சொல் செவியில் விழவே உயிர் இனங்கள் அடைந்த உவகை நிலைகளை இவ்வாறு உவமையால் விளக்கி யிருக்கிறார்.

முரசு அறைந்த வள்ளுவர் வாய்மொழி காதில்படத் தெள்ளிய தேவாமிர்தம் நாவில் புகுந்ததுபோல் நகர மாந்தர் யாவரும் பேரானந்தமுடையராய் ஆர்வமீதூர்ந்தனர் என்பதாம். ஆகவே அவரது உழுவலன்பும் கெழுதகைமையும் தெளிய வந்தன.

இராமன் அரசபதவிக்கு வரவே மனிதர் அமரர் பதவியை மருவினர். அந்தத் தரும மூர்த்தியின் ஆட்சியில் மக்கள் தெய்வ மாட்சியுடையராய்ச் செழித்து விளங்குவர் என்னும் காட்சியை முன்னுற இங்ஙனம் காட்டி யருளினர்.

புனையும் என்ற சொல் அமுது ஆன என்றமையால் புனைந்து செய்யும் செயலினிமைக்கு உவமானம் இல்லை என்பதாயிற்று. புண்ணிய மூர்த்தியைப் புவிநிறைந்துள்ளமைசுவைசுரந்துவந்தது.

அமுதை அருந்தும்படியான உயர்ந்த தகுதியை மனிதர் அடைந்த பொழுதுதான் அவன் முடிபுனைந்து அரியணை அமர்ந்து அகிலமும் ஆளுவன்; அதுவரையும் அமுத வுண்டியரான அமரர்களுக்கே அவனது ஆதரவு உரிமையாய் அமைந்திருக்கும் என்பது தொனிக் குறிப்பாய் நுனித்துணர வுள்ளது.

ஆர்த்தனர் களித்தனர் முதலாகக் குறித்த மெய்ப்பாடுகளெல்லாம் உலகத்தவரது உளநிலைகளை வெளியறிய விளக்கின.

## அயோத்தியின் அலங்காரங்கள்.

இயல்பாகவே ஒளி மிகுந்து உயர்நிலையிலுள்ள அயோத்தி நகரத்தை மேலும் புதுமையாக அலங்காரங்கள் செய்தனர்.

சோதி நிலையமான சூரியனை ஒளி செய்தது எனவும், திருமால் மார்பில் அணிந்துள்ள திவ்விய கவுத்துப மணிக்கு எழில் செய்ததுபோலவும் நகர மாக்கள் அங்கே தொழில் செய்ய நேர்ந்தனர். குறித்த உவமைநலங்கள் கூர்ந்து நோக்கத்தக்கன.

"மாயோன் மார்பின் நன்மணிகள் வைத்த பொற்பெட்டியோ"? என அயோத்தி நகரைக் குறித்து முதலில் வருணித்துள்ளதும் ஈண்டு எண்ணிக்கொள்ள உரியது.

திருமால் அணிகள்போல் பெருமித நிலையில் மணிமாளிகைகள் யாவும் ஒளி வீசி யிருந்தும் முடிசூட்டு விழாவிற்காக மீளவும் கொடி நாட்டி ஆசையால் புதுக்கி அழகு படுத்தினர்.

இவ்வாறு யாவரும் பேருவகை யாளராய் ஆவல் மீதூர்ந்து ஆவன புரிந்தார். எங்கணும் மங்கள மயமான குதூகலங்கள் பொங்கி மிளிர்ந்தன. அரசினங்கள் முதல் அனைவரும் அயலிடங்களிலிருந்து வரிசை வரிசையாய் வந்து நிறைந்தனர்.

மாலையில் இராசவீதிகள் எல்லாம் மகர தோரணங்களாலும் பூமாலைகளாலும் வாழை கமுகு கரும்பு தென்னம்பாளை முதலிய அலங்கார வகைகளாலும் பூரண கும்பங்களாலும் ஆரண முழக்கங்களாலும் பொலிந்து விளங்கின.

இந்திர பவனம்போல் நகரம் சுந்தரச் சோதியாய்த் துலங்கி யிருந்தது. இந்தச் சமயம் மதிநலங்களையெல்லாம் கடந்து அதிசய நிலையில் விதி புகுந்து விளையாடத் தொடங்கியது.

## கூனி தோன்றினள்.

வானும் நிலனும் ஒரு முகமாய் உவகையில் உயர்ந்து நின்றன. அந்நிலையில் இன்னல் ஒன்று இடையே எழுந்தது.

கைகேசியினுடைய அரண்மனை எழுநிலை மாடங்களை யுடையது. அதிசய அமைதிகளுடன் விழுமிய நிலையில் விளங்கியுள்ள அதன் இரண்டாவது மேல்மாடத்தின் நிலாமுற்றத்தில் மாலையில் இயல்பாக உலாவ வந்த மந்தரை அயலே இராசவீதிகளை எட்டிப் பார்த்தாள். அலங்கார கோலங்களைக் கண்டு ஆச்சரியம் அடைந்தாள். என்ன விசேடம் என அருகே நின்ற தோழியிடம் ஆவலுடன் வினவினள். அவள் உள்ளதைச் சொன்னாள். சொல்லவே அந்தப் பொல்லாத கூனி உள்ளம் கொதித்தாள்; உருத்து இறங்கினள். அந்தப்புரத்துள் விரைந்து புகுந்தாள். அது பொழுது கைகேசி பஞ்சணையில் படுத்திருந்தாள். அவளை எழுப்பி இழவு கூட்டத் துணிந்தாள். அக் கிழவியை நம் கவி

இங்கே காட்டியிருக்கும் விசித்திரம் வித்தகக் காட்சியாய் விளங்கி நிற்கின்றது. அந்நிலையை நெஞ்சு ஊன்றி நேரே காணுங்கள்.

அந்நகர் அணிவுறும் அமலை வானவர்
பொன்னகர் இயல்பெனப் பொலியும் எல்லையில்
இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினள். (1)

தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினள் ;
ஊன்றிய வெகுளியாள் ; உலைக்கும் உள்ளத்தாள் ;
கான்றெரி நயனத்தாள் ; கதிக்கும் சொல்லினள் ;
மூன்றுலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள். (2)

தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில்மேல்
மண்டினள் வெகுளியின் மடித்த வாயினள் ;
பண்டைநாள் இராகவன் பாணி வில்லுமிழ்
உண்டையுண்டதனைத்தன் உள்ளத்து உள்ளுவாள். (3)

நாற்கடற் படுமணி நளினம் பூத்தது ஓர்
பாற்கடற் படுதிரைப் பவள வல்லியே
போற் கடைக் கண்ணளி பொழியப் பொங்கணை
மேற்கிடந் தாள்தனை விரைவின் எய்தினள். (4)

எய்திஅக் கேகயன் மடந்தை ஏடவிழ்
நொய்தலர் தாமரை நோற்ற நோன்பினால்
செய்தபேர் உவமைசால் செம்பொற் சீறடி
கைகளில் தீண்டினள் காலக் கோளனாள். (5)

(மந்தரை சூழ்ச்சிப் படலம், 39-43)

இந்தப் பாடல்களை ஆழ்ந்து படித்து ஆய்ந்து பாருங்கள்.

சரித நிகழ்ச்சியின் வகைமையும், அதனைக் கவி இசைத்தருளும் தகைமையும் கருதும் தோறும் பெரிதும் வியப்பாய் உரிமை மீதூர்ந்து வருகின்றன. யாவும் அறிவின் சுவையாய்ப் பெருகி விதிமுறைகளை விளக்கி நெறி புரிந்து மிளிர்கின்றன.

கூனியின் தோற்றத்திற்குக் கொடுத்திருக்கும் உவமை கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து கொள்ளத் தக்கது.

''இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை போல்கூனி தோன்றினாள்'' என்னும் இது அதிசய அமைதியாய் ஆராயவந்தது.

பொன் நகரம் எனப் பொலிந்து எங்கும் மங்கல நலங்கள் மலிந்து இன்ப நிலையமாய் விளங்கியுள்ள அயோத்தியை அலங்கரிக்கும் பொழுது இடையே எழுந்த ஒரு கொடிய துன்பத்தீமை இங்கே வருணிக்கப்பட்டுள்ளது. எல்லை = சமயம், பொழுது.

[அயோத்தியில் கைகேசியின் அரண்மனை உபரிகையில் தோன்றிய கூனிக்கு இலங்கையில் வீற்றிருக்கும் அரக்கர் குலதிலகனான இராவணனது தீமை உவமையாய் வந்தது. எவ்வளவு தூரம்! எப்படிப் பொருந்தும்? ஒப்புமை எத்துணை நுட்பமாய் உய்த்துணரவுற்றது.

காவிய விளைவுக்கு ஓர் சீவிய வித்தைக் கவி இங்கே ஊன்றியிருக்கும் வித்தகம் வியப்பினை விளைத்து நிற்கின்றது. அதிசய விசைப் பூட்டை இசைப்பூட்டி வைத்திருக்கிறார்.]

[இன்னல் செய் என்றது முன்னம் இனியன செய்து அரிய பேறுகளைப் பெற்று மன்னர் மன்னவனைய் மன்னியுள்ளமையைக் குறிப்பால் உணர்த்தி அவன் இது பொழுது பிழைபட்டு அழிதுயர்செய்துவரும் பழி நிலையை விளக்கியது.] இன்னல் = துன்பம்.

[செய் என்று நிகழ் காலத்தால் கூறியது நாளும் புரிந்து வருகின்ற துன்பப் பெருக்குகளின் வளர்நிலை தெளிய வந்தது.]

[நல்லோர் பல்லோர்க்கும் அல்லல் புரிகின்ற அப் பொல்லா நிலையினன் பண்டு தொட்டு ஆற்றி வந்த அதிபாதகங்களெல்லாம் ஒரு கிழவி வடிவில் திரண்டு எழுந்தபடியாய்க் கூனி மேல் மாடத்தில் தோன்றி நின்றாள்.]

மூன்று உலகங்களுக்கும் அதிபதியாய்த் தோன்றியுள்ள அவனது தோற்றம் அடியோடு தோன்றாமல் தொலைவதற்கு ஒரு கொடிய கெடுகுறியாகக் கூனியின் தோற்றம் ஓங்கி நின்றது.

அவள் வீதியை எட்டிப் பார்க்கும்பொழுது இராவணனது மனைவியான மண்டோதரியின் கழுத்தில் கட்டியிருந்த தாலி படபட என்று துடித்தது என்ப.

இக் கொடியவள் இனி இராமனை முடி சூட்டாமல் விலக்கிக் காட்டுக்கு ஓட்டுகின்றாள். சானகியுடன் அவன் கானகம் போகின்றான். வனத்தில் இருக்குங்கால் அக்கற்புத் தெய்வத்தை இராவணன் கவர்ந்து செல்கின்றான். மனைவியை நாடித் துணை

யோடு இராமன் தொடர்ந்து புகுந்து இலங்கையை வளைகின்றான். பெரும்போர் மூள்கின்றது; அதனால் இராவணன் குடி முழுதும் இழந்து அடியோடு மடிகின்றான். அந்தப் [பேரிழவுக்கெல்லாம் மூலகாரணமாய்க் கூனி ஈண்டு மூண்டு தோன்றினமையால் அவனது தீமை என நேர்ந்தாள்.

எழுபது வயதினள்; நரைத்த தலையினள்; முதுகு கொஞ்சம் வளைந்தவள்; அதிசாதுரியமுடையவள்; பேசுவதில் வல்லவள்; கொடுஞ் சூழ்ச்சியும் கபடமும் காரிய சாதனையும் உள்ளவள்; யாதும் அஞ்சாத தீதான நெஞ்சினள் என இன்னவாறு அவளது இயல்பினைத் தெளிவாக உரையாமல் ஒளி மறைவாக் குறித்தது, உளநிலைகள் யாவும் ஒருங்கே உணர்ந்து மேல் விளைவனவற்றையெல்லாம் விழைந்து காண வந்தது.

அயோத்தியில் இவள் எழவே ஆயிரத்து எழுநூறு மைலுக்கு அப்பாலுள்ள இலங்கை வேந்தன் இழவும் கவியின் கண்முன் எழுந்து தோன்றியது.

[இராவணனது தீவினை பலன் கொடுக்க மூண்டு அதன் நிழல் போல் ஈண்டுக் கூனி வடிவில் நீண்டு நின்றது என்க.

* தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று. (குறள், 208)

இந்த அருமைத் திருக்குறள் இங்கே சிந்திக்கத்தக்கது.

எவ்வளவு பெரியவனாயினும் தீவினை செய்யின் அது கொடிய துயரங்களை விளைத்து அவனுக்குக் குடிகேடு செய்யும் என வினை விளைவை இங்ஙனம் நினைவுறுத்தினார்.

[தருமமூர்த்தியான எங்கள் இராமமூர்த்தியின் மகுடாபிடேகத்தைக் கெடுக்கும் உற்பாதமாக இக்கிழட்டுக் கூனி கிளர்ந்தாளே! என்று இந்த அளவில்தான் இந்த இடத்தில் வேறு கவிகளால் கூறமுடியும்; அற்புதக் கலைஞராகிய நம் கவிஞர்பிரான்

* ஒருவனது நிழல் காலைவேளையில் நெடுந்தூரம் நீண்டு நின்றாலும் அவன் போகும் இடம் எல்லாம் விடாது தொடர்ந்து உச்சிப்போதில் அவனது காலடியில் வந்து புகுந்து நிற்கும்; அதுபோல் மனிதனது தீவினை காலம் வரும் வரையும் அகன்று நின்று அது வந்தபோது அவனை விரைந்து பற்றி வெந்துயர் விளைக்கும் என்பதாம்

அறிஞர் எல்லாரும் அதிசயிக்கும்படியாய் உணர்வொளி வீசி உயர்சுவை பெருக இப்படி உரையாடியிருக்கிறார்.

கலைப் பண்பு கருணைக்காட்சி கரும பரிசோதனை காவியச் சுவை யாவும் இங்கே சீரிய நிலையமாய்த் திகழ்ந்து நிற்கின்றன.

இராமன் முடிதுறந்து காடு புகுந்தது, இராவணன் படி துறந்து வீடு புக முடிந்தது என முடிந்த முடிவை மொழிந்தபடி யிது. அதிசய முடிவுக்கு விதிசெய்த வகையாய்க் கூனி எழுந்தாள்.

மனக்கூனி என்றது இதுவரை உடலில் கூனியாயிருந்தாள் இது பொழுது உள்ளமும் கூனியானாள் என்பதாம்.

கொடிய மனக்கோட்ட முடையளாய்க் குடிகேடு செய்ய மூண்டு நிற்கும் அந்த நீச நெஞ்சின் நிலைமை தெரியவந்தது.

துன் அரும் கொடு மனம் என்றது யாராலும் ஆழம் காண முடியாத அதிபாதாளமான தீதுடைமை கருதி.

துன்னல் = அணுகல், நெருங்கல்.

வசிட்டர் ஆதிய மகாதவசிகளும், சுமந்திரன் முதலிய மதி மந்திரிகளும், உக்கிரவீரனை சக்கரவர்த்தியும், பக்கமுள்ள அரச ரனைவரும், நாடு முழுவதும் ஒருங்கே கூடி உவந்து ஆய்ந்து ஊக்கி நின்ற முடி சூட்டு விழாவைத் தன் சூழ்ச்சியால் அடியோடு கெடுக்க எழுந்துள்ளமையால் இக் குடிகேடியின் கொடிய மன நிலையை இங்ஙனம் குறித்துக் காட்டினார்.

இராமன் முடிபுனைவதைக் கேட்டவர் எல்லாரும் "தத்தம் உச்சிமேல் வைத்தது ஒத்தது அத்தட மகுடம்" என உளம் மிக மகிழ்ந்து உயிர் பூரித்து நிற்ப இக் கூனி மட்டும் இப்படிக் கொதிக்கலாயினள்.

துடிக்கும் நெஞ்சினள்; ஊன்றிய வெகுளியள்; உளைக்கும் உள்ளத்தள்; கான்று எரி நயனத்தள்; கதிக்கும் சொல்லினள் என்றமையால் முடிக்குக் கேடாக அவள் துடித்து நின்ற நிலைமை யும் கடுத்து மூண்ட வகைமையும் காணலாகும்.

மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்

இவள் மூண்டு நிற்கும் காரியத்தின் முடிவைக் கூறிய படி யிது.

மூவுலகங்களில் உள்ள சீவகோடிகள் யாவும் இராமன் பால் பேரன்புடையன; அப்பேராளனுக்குப் பேர் இடர் செய்ய இவள் நேர்கின்றாள் ஆதலால் அக்கொடிய அல்லலின் எல்லை நிலைகளை இங்ஙனம் சொல்லியருளினார், பேர் யாதும் விரித்துக்கூறாமல் " ஓர் இடுக்கண் " என்றதில் உள்ள நயத்தை ஊன்றி நோக்குக.

தனது ஒரு செயலால் உலகங்கள் எல்லாம் குலை நடுங்கும் படியான கொடுமையை இத்தீவினையாட்டி தனி நின்று ஆற்றும் ஆற்றல் காட்டிய படியிது. கிழவி வைக்கப் போகும் தீ வானும் வையமும் பற்றி எரியப் போகின்றது என்க.

யாவரும் பேரன்பாளராய் இராமன்பால் ஆர்வ மீதூர்ந்திருக்க இக்கூனி மட்டும் இவ்வாறு மாறுபட்டுச் சீறி நின்றது என்னே? எனின், அதற்கு நேரான காரணத்தை அயலே காட்டாலாயினார்.

" பண்டைநாள் இராகவன் பாணி வில் உமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள். "

கூனி முன்னே மனந்திரிந்து சினந்து முடித்தமைக்கு இனமான ஏதுவை விளக்கியபடி யிது.

பண்டை நாள் என்றது இராமனது இளமைக் காலத்தை.

விளையாட்டு வினையானது.

பிள்ளைப் பருவத்தில் ஒரு நாள் இராமன் கைகேசி அரண்மனையின் அயலே அழகிய பூம்பொழிலில் இளையவனோடு உல்லாசமாய் உலாவிக் கொண்டிருந்தான். மாலை வேளை. அங்கே உள்ள இனிய தடாகத்தில் தாதியர் வந்து குடங்களில் நீர் மொண்டு கொண்டிருந்தார். இடையே கூனி நின்றாள். அப்பொழுது அவளுக்கு நாற்பத்தைந்து வயது. நல்ல அழகி. கம்பீரமான தோற்றமுடையவள். முதுகில் சிறிது வளைவிருந்தது. அந்தக் கூனல் இராமனது இளங்கண்களுக்கு அன்று மிகவும் விநோதமாய்த் தோன்றியது. தோன்றவே தன் கையில் வைத்திருந்த மண்உருண்டையை வில்லில் கோத்துக் கூனைநோக்கி மெல்ல எய்தான். அது குறி தவறாமல் போய் அக்கூனில் மெது வாய்ப்பட்டது. கூனி திரும்பிப் பார்த்தாள். இராமன் தம்பியைப் பார்த்துச் சிரித்தான். அவளுக்குக் கோபம் பொங்கி

எழுந்தது. அயலே நின்ற மங்கையர் ஒருவரும் இதனைக் கவனிக்கவில்லை. சினந்த கூனி இளவரசிடம் யாதும் செய்யமுடியாமையால் மனந் தணிந்து போனாள்.

அன்று உள்ளே புதைந்து கிடந்த பகைமை இன்று வெளிக் கிளம்பியது. வேலை செய்யத் தொடங்கியது.

இராவணன் இழைத்த தீமைபோல் கூனி வெளியே தோன்றுதற்கு இராமன் இழைத்ததும் உள்ளே ஓர் ஊன்றுகோலாய் நின்றது. பிள்ளைமையில் புரிந்தது பெரிதாய் நிமிர்ந்தது.

பிறர்க்கு இடரான செயல் எவ்வளவாயினும் யார் செய்தாலும் அவ்வினைப் பயனை எவரும் அனுபவித்தே தீரவேண்டும் என்னும் கரும நியதி இங்கே அருமையாக வெளிப்பட்டுள்ளது. கருத்துக்களின் குறிப்புக்கள் கருத்தூன்றிச் சிந்திக்கற்பாலன.

சிறு பொழுது தான் செய்த இச் சிறுபிழையை இராமன் பெரிதும் நினைந்து பின்பு வருந்தியிருக்கிறான். அந்தப் புண்ணிய மூர்த்தி இதனை ஒரு பாவமாக எண்ணி நெஞ்சம் புண்ணாய் நொந்துள்ளமை வாய்மொழிகளால் வெளிவந்துள்ளது.

கிட்கிந்தையில் சுக்கிரீவனுக்கு இராமன் அரசநீதி போதிக்குங்கால் இதனை எடுத்துக்காட்டியிருக்கிறான்.

"அருமைத் துணைவ! அரச பதவி அரிய நிலையது. தலைமையான அந்நிலைமையில் இருந்து தனது மன நிலைமையைப் புனிதமாகப் பாதுகாத்து வருபவனே இறைவனாய் இனிது விளங்குகின்றான். உலகிற்கு அதிபதியாய் இருக்கின்றோம் என்று தருக்கி எவரையும் எளிமையாக எண்ணாதே. சக்கரவர்த்தித் திருமகன் என்னும் திமிரால் இளமையில் எனது சிறிய தாயின் வேலைக்காரியான கூனியை இகழ்ந்து ஒரு சிறு தவறு செய்தேன். அதனால் மணி முடி துறந்தேன்; அரசுரிமையை இழந்தேன்; காடு புகுந்தேன்; கடுந்துயர் உழந்தேன்; முடிவில் எனது அருமை மனைவியையும் பிரிந்து கரைகாண முடியாத துன்பக்கடலில் விழுந்து துடித்து உழல்கின்றேன்." என்று இரங்கி உரைத்திருத்தலால் இளமையில் விளையாட்டாகப் புரிந்தது பின்பு அவ் வள்ளல் உள்ளத்தை எவ்வளவு வாட்டி வந்துள்ளது என்பது உணரலாகும். பெரிய இதயம் பிழை நினைந்து இரங்கியது.

வீரக்குலத்தன் ஆதலால் இளமையிலேயே வில்லும் கையுமாய்த் திரிந்தான்; குழந்தைப் பருவத்திலும் குறிதவருமல் எய்தான்; மனித இயல்பின்படி கொஞ்சம் குட்டிச் சேட்டையும் இருந்தது; உறுப்புக்குறைவிஞலேதான் தன்னை அவமதித்ததாகக் கூனிக்கு அவ்வளவு கோபம் வந்தது என்னும் இவை இயற்கை நியதிகளாய் ஈண்டு எண்ண நின்றன.

தான் கையில் எடுத்த வில் வானும் வையமும் வெல்ல வல்லது என்னும் வெற்றி நிலையை விளக்குதற்குக் கூனி முதுகில் முதலில் ஓர் உருண்டையை எய்துவைத்தான் என இராமனது வித்தக விநோதம் உய்த்துணர வந்தது. பாணி=கை. பாணி வில் உமிழ் உண்டை என்றது எவ்வழியும் பிழை செய்யாத கை இவ்வழி வெவ்வினை விளைய ஓர் வழி செய்துகொண்டது என்க.

கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகூன்
உண்டை கொண்டு அரங்க ஒட்டி உள்மகிழ்ந்த நாதன்ஊர்
நண்டை உண்டு நாரைபேர வாளைபாய நீலமே
அண்டை கொண்டு கெண்டைமேயும் அந்தணீர் அரங்கமே (1)

வானகம்மும் மண்ணகம்மும் வெற்பும் ஏழ் கடல்களும்
போனகம் செய்து ஆலிலைத் துயின்ற புண்டரீகனே!
தேனகம்செய் தண்ணறும் மலர்த்துழாய்நன் மாலையாய்!
கூனகம் புகத்தெறித்த கொற்றவில்லி யல்லையே? (2)

(திருச்சந்த விருத்தம்)

கூனி முதுகில் உண்டை எய்த கதையைத் திருமழிசையாழ்வார் இவ்வாறு கூறியிருக்கிருர். கோதை=மலர்மாலை

கூனில் எய்த இந்த வரலாறு வால்மீகத்தில் இல்லை. வேறு சரிதச் சான்றுகள் கொண்டு நம் கவி சரியான இடத்தில் சுவையாக இதனை இசைத்திருக்கிருர். காவியத்துள் பின்னும் குறிக்கப்பட்டுள்ளது. கூனிகூன் உண்டை என்னும் பிரயோகங்கள் ஆழ்வார் பாசுரங்களை அடியொற்றி வந்துள்ளன.

இங்ஙனம் இளமையில் நிகழ்ந்த பழையதை நினைந்து கிழவி நம் அழகனுக்குக் கேடு சூழ விரைந்தாள்.

தொண்டைவாய்க் கேகயன் தோகை என்றது கைகேசியை. தொண்டை=கொவ்வைக்கனி. சிவந்த வாயை விதந்து குறித்தது அவளது இயல்பான எழில் உருவங்களை உணர்ந்துகொள்ள

செய்ய வாயவளைக் கொடியவளாக்க வெய்யதீயவள் விரைந்து புகுந்தாள்.

அதுபொழுது அவள் பஞ்சணையில் படுத்திருந்தாள். உயர்ந்த வெண்மையான விதானங்களுடன் அமைந்த சிறந்த அமளியில் அரசி கண்ணயர்ந்து கிடந்த நிலையைக் கவிப் படத்தில் சுவையாக எழுதி வெளிப்படுத்தி யிருக்கிறார்.

உருவ அழகும், அவயவங்களின் பொலிவும், அணிகளின் அமைதியும், படுக்கையின் பான்மையும், படுத்துள்ள மேன்மையும், ஒயில் மயில்போல் அயர்ந்து துயிலும் பொழுதும் இனிமை கனிந்த உயர்ந்த நீர்மையும் எவரையும் வியந்து நோக்கச்செய்கின்றன.

4. நால்கடல் படு மணி என்றது நான்கு கடல்களினும் உண்டான முத்து பவளம் மரகதம் மாணிக்கம் கோமேதகம் முதலிய மணிகளை. அவை இங்கே அணிகளாய் அமைந்துள்ளன. அந்த மணியணிகள் ஒளிவீச, முகம் கண் கை கால்கள் செந்தாமரை மலர்போல் சிறந்து திகழ, ஒரு அருமையான பவளக்கொடி பால்கடலிடையே படர்ந்து கிடந்தது போல் அடுக்கிய மெல்லிய பஞ்சணையில் கைகேசி படுத்திருந்தாள் என்க.

பாற்கடல் என்றது உயர்ந்த பளிங்கு மாளிகையில் பரந்து விரிந்து மிகவும் வெண்மையான மேற்கட்டிகளுடன் விழுமிய நிலையில் விளங்கியிருந்த பஞ்சணையை.

கடைக்கண் அளி பொழிய அணைமேல் கிடந்தாள்.

கைகேசியின் உருவநலனை உருவ நிலையில் முன்னே குறித்தார்; இதில் அவளது உண்மையான உள்ளப் பண்பை விளக்கி யிருக்கிறார். பதங்களில் பதிந்துள்ள பொருள் நலங்களையும், உயிரியல்புகளையும் ஊன்றி உணர்ந்துகொள்ள வேண்டும்.

கண் அளி பொழிய என்னும் மொழிகளில் சீவகளைகள் செறிந்து மிளிர்கின்றன. எவ்வளவு கருணை உள்ளத்தில் நிறைந்திருந்தால் வெளியில் அளி இங்ஙனம் பொங்கி வரும்!

ஏரியில் பெருகி யிருக்கும் நீர் மதகு வழியே சிறிது ஒழுகி இயல்பாக வெளிவருதல் போல் அகத்தே நிரம்பியுள்ள அருள் புறத்தே கண் வழியே இனிது வழிய நேர்ந்தது.

கைகேசியின் அருள் நீர்மையை இங்கே நமக்குக்காட்டியது, பின்னே உருளப் போகும் கொடிய மருள் நீர்மையை நினைந்து நாம் மறுகியுளேய.

அரிய அழகும் பெரிய அருளும் மருவியுள்ள அருமை அரசியை உரிமையாக ஈண்டு உவந்து நோக்கி உள்ளம் களிக்கின்றோம். இந்த மேனி அழகு கூனியால் குலைய நேர்கின்றதே!

உருவத்தையும் உள்ளத்தையும் பாட்டில் வரைந்து காட்டியிருக்கும் நயம் பாராட்டத்தக்கது. அரிய அரசி ஆதலின் இனிய இரசனை ததும்பக் கவி கனிந்து வந்துள்ளது.

பாற்கடல் படு பவளவல்லி என்றதனால் அவள் பிறந்த குலத்தின் சிறந்த நிலையும் செவ்வியும் தெரிய வந்தன.

"பாற்கடல் முளைத்ததுஓர் பவளப் பூங்கொடி
போற்சுடர்ந் திலங்கொளிப் பொன்செய் கோதையை
நாட்கடி மயிர்வினை நன்பொற் றாமரைப்
பூக்கடி கோயிலாள் புலம்ப ஆக்கினார்."

(சீவகசிந்தாமணி 2413)

இந்தப்பாடல் இங்கே சிந்திக்கத்தக்கது. இதில் வந்துள்ள மொழிகளை முழுதும் கவர்ந்து எடுத்து நம் கவி புனைந்துள்ளமை காணப்படினும், அதன் விழுமிய எழிலும் வித்தக ஒளியும் உய்த்துணர் வமைதியும் உயர்கலைச் சுவையும் உயிர்ப் பண்பும் உயர்ந்து திகழ்கின்றன. உவமைக் காட்சி உவகை சுரந்துள்ளது.

அணி பொழிய அமளி மிசை இங்ஙனம் விழிதுயின்று கிடந்த அரசியைக் கூனி அணுகினாள். உள்ளம் துடித்து ஒன்று சொல்ல ஓடி வந்த அவள் உரியவள் உறங்குவதைக்கண்டு சிறிது ஏங்கி நின்றாள்.

எழுகின்ற வரையும் பொறுத்திருக்க முடியாமல் எழுப்பத் தொடங்கினாள். அவள் எழுப்பியுள்ள சாகசம் அரசிகளோடு நெடுநாள் பழகிய பழக்கத்தை விளக்கியுள்ளது.

செந்தாமரை மலர் ஒரு தாளில் நின்று நெடுநாள் தவம் செய்து கைகேசியினுடைய பாதத்திற்கு ஒப்பாகும் படியான அரிய பேற்றைப் பெற்றுள்ளது எனக் காப்பியக் கவிகள் வியந்து கூறுகின்ற சிறந்த அடியை அவள் மெல்ல வருடினாள்.

அந்த அழகிய பாதத்தை இரண்டு கைகளாலும் இந்தக் கிழவி தீண்டியது இழவு தீண்டியபடி ஆயது.

கைகளில் தீண்டினாள் காலக் கோளனாள்

கோள்கூற வந்த கூனியைத் தீக்கோள் எனக் குறித்திருக்கும் நுட்பம் கூர்ந்து நோக்கி உட்கருத்தை ஓர்ந்து கொள்க.

பின் வருகின்ற கேட்டை முன் அறிவிக்கின்ற உற்பாதக் கோள் என இப்பாதகத்தி எய்தினாளே! என்று வைதிருக்கிறார்.

ஞாலம் எல்லாம் துடித்து வருந்தும்படியான கொடிய துன்பம் அடுத்து வருமாறு இந் நீசக் கிழவி கடுத்து வந்திருத்தலால் நாசக் கோள் என நேர்ந்தாள்.

தீண்டினாள் என்ற ஒலிக் குறிப்பால் கொடிய பாம்பு பல்லால் தீண்டியபடி இக் கெடு காலி கையால் மூண்டு பிடித்தாள் என்க. மேலே விளையும் அழிவு நிலைகளின் உளவறிய வந்தது.

அரக்கர் குலத்திற்கும் அயல் நாட்டுக்கும் அழிவை விளைப்பதுடன் உள்நாட்டுக்கும் உற்றவர்க்கும் இழவுகூட்ட வந்துள்ளமையால் “இராவணன் தீமை” என்றதோடு அமையாமல் காலக் கோள் எனவும் கவி அவளைச் சுட்டிக்காட்டினார்.

கைகேசியின் காலை இவள் தொட்டபொழுது அவள் கழுத்தில் கட்டியிருந்த தாலி கட்டவிழ்ந்தது என்க.

இங்ஙனம் காலைத் தீண்டவே கண்ணயர்ந்து உறங்கிய அரசி மெல்ல விழித்தாள். முழுதும் துயில் நீங்காமையால் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை.

தீண்டலும் உணர்ந்தஅத் தெய்வக் கற்பினாள்
நீண்டகண் அனந்தரும் நீங்கு கிற்றிலள்
மூண்டெழு பெரும்பழி முடிக்கும் வெவ்வினை
தூண்டிடக் கட்டுரை சொல்லல் மேயினாள். (1)

அணங்குவாள் விடவரா அனுங்கும் எல்லையும்
குணங்கெடாது ஒளிவிரி குளிர்வெண் திங்கள்போல்
பிணங்குவான் பேரிடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவாய் அல்லைநீ உறங்கு வாய்என்றாள். (2)

(மந்தரை சூழ்ச்சி 44, 54.)

நன்றாக விழிக்க முடியாமல் அரைக் கண் தூக்கமாய் அமளியிசை அரசி அயர்ந்துள்ளதையும், அந்நிலையில் கூனி கொடுஞ்

சூழ்ச்சியுடன் பேசியிருத்தலையும், அந்த வாசகத்தின் குறிப்பையும் இங்கே நாம் கூர்ந்து பார்க்கின்றோம்.

தெய்வக் கற்பினாள் எனக் கைகேசியைக் கவி ஈண்டு மனங் கனிந்து புகழ்ந்திருக்கிறார்.

அருள் நலங் கனிந்த புனிதமான இத்தகைய உத்தமபத்தினி பின்பு கொடுமை மண்டிச் சித்தம் மாறுபடுவது வித்தகமும் விதி வசமுமாம் என உய்த்துணர வந்தது.

[தான் எத்துணைப் பழி துயரங்களை அடைந்தாலும் தனது நாயகனைச் சத்திய சீலனாக்கித் தூய்மை துலக்கித் தேவர்களுக்கு இதமாய் நின்றமையால் தெய்வக் கற்பினள் ஆயினாள்]

யாதும் கள்ளம் அறியாத உள்ளமுடைய இத்தூயவள் எதிரே நின்று அத்தீயவள் மிகவும் சாதுரியமாகப் பேசலாயினாள்.

"கொடிய பாம்பு வந்து கவ்வித் தன்னை முழுதும் விழுங்கும் வரையும் ஒளிவீசி நிற்கும் குளிர்மதி போலப் பெரிய துன்பம் உன்னைப் பிணிக்க நேர்ந்தும் ஒரு சிறிதும் உணராமல் அந்தோ! வறிதே உறங்குகின்றாயே!" என்று இரங்கி மொழிந்தாள். காலக் கோள்போல் வந்து தீண்டினவள் மேலான நல்ல ஒரு உத்தமக் கோளை ஒப்புரைக்க நேர்ந்தாள். திங்களை அரவு அணுகியது எனக் கைகேசியைக் கூனி நெருங்கினாள்; அங்ஙனம் உற்ற நிலை அவள் உரைவழியே உள்ளுறத் தொனித்திருத்தலை நுணித்தறிக.

பூரண சந்திரன் போல் பொலிந்து விளங்குகின்ற அரசியின் திருமுக எழில் அவளது உள்ளத்தைக் கவர்ந்துள்ளமை சொல்லால் விளங்கி நின்றது. [மதியைத் தீண்டிய பாம்பு போலக் கைகேசியைத் தீண்டி மதியைக் கெடுக்க வந்தவளுக்கு இப்படி ஒரு மதி உவமை வந்தது.

மாறுபாடான பெரிய ஒரு கொடிய துன்பம் என்பாள் "பிணங்கு வான் பேர் இடர்" என்றாள்.] எதை நினைந்து கொண்டு புதைபொருளாக இங்ஙனம் கூனி குறித்துமொழிந்தாள்?

உணங்குதல் = உள்ளம் கவன்று வருந்துதல்.

ஐயோ! என்ன துயரம் நேர்ந்தது! என்று கண்ணுறக்கம் இன்றி எண்ணி வருந்தி ஏங்கித் துடிக்க வேண்டிய நீ யாதொரு

கவலையுமின்றித் தூங்கிக் கிடக்கின்றாயே! எனத் துடித்துசொன்னாள்.

துன்பத் தொடர்பே தெரியாமல் இன்பமயமாயுள்ள அரசிக்கு என்றும் தீராத இடர் மூட்டத் தொடர்ந்தவள் இதம் ஊட்ட வந்தவள்போல் இப்படிப் பதமூட்டிப் பகர்ந்தாள்.

அச்சொல் காதில் விழவும் யாதும் பதறாமல் படுக்கையில் இருந்துகொண்டே கைகேசி சிறிது திகைத்து நகைத்தாள். புன்னகை பூத்த அந்நன்னைய வாயிலிருந்து அதுபொழுது வெளி வந்துள்ள வசனங்கள் அதிரசமுடையன. மதிநலங்கனிந்த அப் புனிதமொழிகள் ஒவ்வொருவரும் உரிமையுடன் உணர்ந்து மகிழ வுரியன.

வெவ்விடம் அனையவள் விளம்ப, வேற்கணாள்
தெவ்வடு சிலைக்கைஎன் சிறுவர் செவ்வியர்:
அவ்வவர் துறைதொறும் அறம் திறம்பலர்;
எவ்விடர் எனக்குவந்து அடுப்பது ஈண்டு? என்றாள். (1)

பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்
உராவரும் துயரைவிட்டு உறுதி காண்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேதமே அன
இராமனைப் பயந்தஎற்கு இடர்உண்டோ? என்றாள். (2)
(மந்தரை சூழ்ச்சி, 46, 47)

இந்த இனிய மொழிகள் கைகேசியின் புனித உளத்தை எவ்வளவு தெளிவாக விளக்கி நிற்கின்றன.

"எனது அருமைக்குழந்தைகள் மிகவும் நல்லவர்; நாயகன் தருமகுணசீலன்; நாட்டிலுள்ள குடிகள் எல்லாரும் யாண்டும் இனியராய் ஒழுகி வருகின்றனர்; பொதுமுறையான இவை கிடக்க; வேதமே என்னும்படி நீதி நிலையமான இராமனைப் பிள்ளையாக பெற்றுள்ள பெரிய பாக்கியசாலியாகிய எனக்கும் ஒரு இடர் உண்டோ?" என்று அரசி இவ்வாறு பேசியிருக்கிறாள்.

உரைகளில் அவளுடைய உத்தம நிலைகளும் சித்த விருத்தி களும் ஒளிவிட்டு நிற்கின்றன.

'தெவ் அடு சிலைக்கை என் சிறுவர்' என்றது பகைவரை வெல்ல வல்ல வில்லுகளைக் கைகளில் தாங்கியிருக்கின்ற என்னுடைய பிள்ளைகள் என்றவாறு. தெவ் = பகைவர்.

உத்தமமான சத்திரிய சாதியில் பிறந்தவள் ஆதலால் வீரத் திறலை இப்படி விழைந்து பாராட்டினுள்.

அழகு கல்வி அறிவு ஈகை அமைதி முதலிய குண நலங்கள் யாவும் குழந்தைகளிடம் ஒருங்கே நிறைந்துள்ளன. இருந்தும் அவற்றையெல்லாம் விடுத்து வீரத்தையே உவந்துகொண்டாள்.

கொடிய அசுர வீரனுகிய சம்பரனேடு தசரதன் அமராடிய பொழுது உடன் அமர்ந்து தன் நாயகனுக்கு இவள் உதவி புரிந்தது உலகப் பிரசித்தமாயுள்ளது.

என் சிறுவர் என நால்வரையும் ஒருமையாக உரிமை செய்திருத்தலால் இவளது பெருந் தன்மையான பிரியநிலை தெரிய வந்தது. மாற்ருள் பிள்ளைகள் என்னும் வேற்றுமை யாதும் காணும். தூய்மையான தாய்மை அன்பே துலங்கி மிளிர்கின்றது.

செவ்வியர் என்றது உள்ளும் புறமும் யாதொரு கள்ளமும் கபடும் இல்லாமல் உள்ளம் புனிதரா யுள்ளமை கருதி.

திண்ணிய வீரமும் புண்ணிய நீர்மையும் உடையர் எனப் பிள்ளைகளைக் குறித்துத் தாய் இவ்வாறு எண்ணி இருக்கிருள்.

அவ் அவர் என்றது ஒவ்வொருவரும் என்றபடி.

அரசன் முதலாக தேசத்தில் உள்ள மக்கள் எல்லாரும தத தமக்கு உரிய நெறிமுறைகளில் யாதும் வழுவாமல் தரும குண சரிதராய் ஒழுகி வருகின்றனர் என்பாள் "துறைதொறும் அறம் திறம் பலர்" என்ருள்.

உரிமைப் பிள்ளைகளும் உற்ற நாயகனும் உலகக்குடிகளும் தலைமையான புண்ணியசாலிகளாய்த் தழைத்து வருகின்றனர்; இங்ஙனம் வருங்கால், எங்ஙனம் எனக்குத் துயர் வரும்? எந்த விதி இடர் இழைக்க வல்லது? எனச் சிந்தனை செய்திருக்கிருள்.

என்டு வந்து எவ் இடர் எனக்கு அடுப்பது? என்றமையால் யாண்டும் எவ்வழியும் யாதொரு இடரும் தனக்கு உண்டாகாது என இவள் உறுதி பூண்டுள்ளமை உணரலாகும்.

இடர் உருமைக்கு ஏதுக்களை எண்ணி யுள்ளதில் இவளது கண்ணிய நிலைமை காணப்படுகின்றது.

தான் நல்லவள் அதனால் தனக்கு இடர்வராது என்று தன் முனைப்போடு எண்ணவில்லை; தன் பிள்ளைகள் நல்லவர்; கணவன் நீதிமான்; குடிகள் இனியர் அதனால் இடர் அணுகாது எனக் கருதியிருக்கிறாள். இவளது மன நிலையும் மதிநலனும் அதி நய முடையனவாய் நெறிமுறை தழுவியுள்ளமை தெளிவுறுகின்றது.]

முதலில் பொதுவாக இங்ஙனம் சொன்னவள் பின்பு சிறப்பாகத் தன் உள்ளத்தை வெளிப்படுத்தி யுள்ளாள்.

"பராவரும் புவிக்கெலாம் வேதமே அன
இராமனைப் பயந்தஎற்கு இடர் உண்டோ?"

என்ற இந்த வார்த்தையின் கனத்தையும் கருத்தையும் கருதி நோக்கவேண்டும். இராமனைக் கைகேசி தன் உள்ளத்தே எவ்வாறு எண்ணி வைத்துள்ளாள்? என்பதை இங்கே கண் எதிரே காண்கின்றோம். உயிர் பூரித்து உள்ளம் உருகி உரிமை கனிந்து உயர் சுவை சுரந்து உரைகள் வெளிவந்துள்ளன.

சாதாரணமாகக் கொஞ்சம் நல்ல பிள்ளைகளைப் பெற்றவர்களே இருமையிலும் பாக்கியசாலிகளாயப் பெருமை மிகப் பெறுவது தரும நியதியாயுள்ளது. அங்ஙனம் இருக்க இத்தகைய அற்புதமான உயர்ந்த உத்தம புத்திரனைப் பெற்றுள்ள எனது மகிமையை எவர் அளவிட வல்லார்? எனத் தனது மகப்பேற்றை நினைந்து நினைந்து மனம்பூரித்துள்ளமை தெரியநின்றது.

பராவரும் புதல்வர் என்றது பரவிப் பாராட்டுதற்கு உரிய மக்கள் என்றபடி.] "புதல்வரைப் பயக்க, யாவரும் துயர்விட்டு உறுதிகாண்பர்" என்றமையால் மக்கட் பேற்றின் நலம் குறித்து இவள் கருதியுள்ள உறுதிநிலை உணரலாகும்.

இராமனுக்கு இங்கே வேதத்தை ஒப்பு உரைத்துள்ளாள்.

அரிய விதி நியமங்களையுடையதாய், இனிய நீதி நலங்களை விளக்கி, உயிரினங்களுக் கெல்லாம் உறுதி யுண்மைகளையுணர்த்தித் தனி உரிமையாய் வேதம் தழைத்து நிற்றல்போல், இராமனும் தனது குண சீலங்களால் உலகம் எல்லாம் உயர்ந்த நலங்களை உணர்ந்து உய்திபெறும்படி உதித்திருக்கின்றான் என்பதாம்.

[சீதை நாயகனாய் வந்துள்ளவன் வேதநாயகனே என காதை நாயகனைக் கைகேசி இங்ஙனம் காட்டியிருக்கின்றாள்.]

இராமனுடைய பழக்கம் வழக்கம் ஒழுக்கம் உரைமுதலியன யாவும் வேத வாக்கியங்களாய் உலகிற்கு ஒளி செய்துள்ளன என்பது உய்த்துணர வந்தது.

தம் பிள்ளை என்ற அளவில்லை பிரியம் இருந்தாலும் எவர்க்கும் அதன்பால் கொஞ்சம் எளிமை தோன்றும்; அங்ஙனம் யாதும் எண்ணுமல் வேதமே என வியந்து கொண்டாடியுள்ளாள்.

"இராமனைப் பயந்தற்கு" என்றது நயந்து காணத் தக்கது. இராமனைப் பத்துமாதம் தன் வயிற்றில் சுமந்து பெற்றவள் கோசலையே. உலகப் பிரசித்தமான அந்த உண்மைக்கு மாறாய்த் தான் பெற்றதாகக் கைகேசி இங்கே தனியுரிமை கொண்டாடுகின்றாள். இது எங்ஙனம் பொருந்தும்? அப்பிள்ளை மீது வைத்துள்ள உள்ளப் பாசத்தால் ஆசைமீதூர்ந்து தன்னை மறந்து இப்படிப் பரவசமாய்ப் பேசியிருக்கிறாள். எனினும், உரையுள் உண்மையும் ஓரளவு நுண்மையாக உறைந்துள்ளது.

கைகேசி பரதனைப் பெற்றிருக்கிறாள். அவ்விபத சீலனுக்கு "ஆவி அவன் அலது" இல்லை என்றபடி இராமனே உயிராயுள்ளான். ஆகவே பரதனைப்பெற்ற தாய் இராமனைப் பெற்றதாகத் தெய்வநியதியாய் இங்ஙனம் வையம் அறிய உரைத்தாள் என்க.

இராமன்பால் கைகேசி வைத்திருக்கும் பேரன்பு எவ்வளவு வேரூன்றியுள்ளது என்பதை ஈண்டு யாரும் காணலாகும்.

ஒரு மனிதனது இயல்பான அந்தரங்க நிலைமையை உண்மையாக அளந்து அறிதற்கு உரிய சமயங்கள் சில உள. வறுமை துன்பம் பசி முதலியன எதிர்மறையான சோதனைக் கருவிகள். செல்வம் அதிகாரங்கள் உடன்பாட்டிலுள்ளன. அவற்றுள் துயின்று எழுகின்ற சமயமும் ஒன்று.

இங்கே உறங்கி விழித்த கைகேசி உரையில் தன் உள்ளத்து உள்ளது உள்ளபடியே தெளிவாக ஒளிவீசி வெளிவந்துள்ளது.

பிள்ளைப் பாசம் பெருகிப் புனிதமும் இனிமையும் மருவிக் கள்ளம் யாதும் படியாத கைகேசியின் உள்ளத்தைப் பார்த்து ஈண்டு நாம் வியந்து நின்று உவந்து கொள்ளுகின்றோம்.

இத்தகைய தூய உள்ளம் தீயகள்ளியால் மாய நேர்கின்றதே! முடியை விலக்கிக் குடி கேடு செய்யச் சதியாலோசனையோடு துடியாய்த் துடித்துவந்த கூனக்கிழவிக்கு இக்கோமகள் சொன்னது கொதிப்பை விளைத்தது.

யாருக்குத் துரோகம் கருதி வந்திருக்கிறாளோ, அந்தப் பேராளனை அரசி பேரார்வத்தோடு பாராட்டிப் பேசியது எதிர் பாராத ஏமாற்றமாய் அவளை எதிர்த்துத் தள்ளியது. ஆயினும் அவள் பின்வாங்கவில்லை. முன் ஓங்கி நின்று முனைந்து சொன்னாள். சொன்னது என்ன? பின்னே காண்க.

ஆழ்ந்தபேர் அன்பினாள் அனைய கூறலும்
சூழ்ந்ததீ வினைநிகர் கூனி சொல்லுவாள் :
வீழ்ந்தன நின்நலம் ; திருவும் வீய்ந்தது ;
வாழ்ந்தனள் கோசலை மதியினால் என்றாள்.

(மந்தரைசூழ்ச்சி, 48)

கிழவியின் கிளவியை உளவறிந்து பாருங்கள். சொல்லில் உள்ள வேகத்தால் அவளது உள்ளமும் உறுதியும் உறவுரிமையும் உணர வந்தன.

## கைகேசியும் கூனியும்

இந்த இரண்டு பாத்திரங்களை முழுவதும் ஈண்டுத் தொடர்ந்து பார்க்க நேர்ந்துள்ளோம். நமது தலைமைப் பாத்திரத்தின் நிலைமையைக் கலவையான இவரது நிலைமை நிலையாக விளக்கியுள்ளமையால் இவரைத் தெளிவாக நெடிது கண்டு மேலே செல்வோம்.

## கைகேசி.

இவள் அசுவபதி என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அவன் கேகய தேசத்து மன்னன். நல்ல சுத்த வீரன். அந்நாடு பல நலங்களாலும் தலை சிறந்து மலைவளங்களால் மிகவும் மகிமை யடைந்திருந்தது. மயிலினங்கள் அங்கே பெருகியிருந்தமையால் அது கேகயம் என வந்தது. கேகயம்=மயில். அழகிய கலாப மயில்கள் வளமுறவுள்ள அந்நாட்டை ஆளுகின்ற மன்னனும் கேகயன் என நின்றான். கேகய தேசத்து அரசன் மகள் என்னும் ஏதுவால் கைகேசி என்னும் பெயர் இவளுக்கு வழங்க நேர்ந்தது. மைதிலி, சானகி எனச் சீதையை அழைத்து வரு

தல போல் இவளையும் உலகம் அழைத்து வருகின்றது. பெற்றோர்கள் இட்ட பெயர் மானவி என்பர். குலப்பெயர் மறைந்தது; நிலப்பெயர் பரவி நிலைத்து நின்றது.

இவள் பேரழகுடையவள். இவளது எழில் நலனை அறிந்து தசரதன் இவளை மணந்து கொள்ள விழைந்து மந்திரியைக் கேகயனிடம் அனுப்பினன். அவன் வந்து சொன்னன். அசுவபதி சிந்தனை செய்தான்: "உங்கள் மன்னர் பிரானுக்கு முன்னரே இரு மனைவியர் உளர்; மூத்தவள் வயிற்றுப் பிள்ளைக்கே முடி உரிமையாகும். ஆகவே என் மகள் வயிற்று மகன் அவன் கீழ் அடங்கி இருக்க நேரும். அவ்வாறு நேர யான் இசையேன். எனது பேரனுக்குத் தனியே ஓர் அரசினை உரிமையுடன் தருவதாகச் சக்கரவர்த்தி சம்மதித்தால் என் அருமை மகளை மணம் புரிந்து தருகின்றேன்" என்று அவன் மனந் துணிந்து மொழிந்தான். மன்னன் அதற்கு இசைந்தான். கலியாணம் பெருமித நிலையில இனிது நடந்தது. அரசர்பிரான் கைகேசியை மணந்துகொண்டபொழுது கேகயன் அருமையான பல வரிசை [illegible] உரிமை மீதூர்ந்து உவந்து செய்தான். தன் மகளுக்கு அந்தப்புரத்தில் அருகு இருந்து ஊழியங்கள் புரியச் சுந்தர மங்கையர் சிலரை அனுப்பினன். அவருள் மந்தரையும் ஒருத்தியாய் வந்து சேர்ந்தாள்.

## மந்தரை

இவள் இளமையில் கேகய மன்னனுடைய மனைவியிடம் இருந்தவள். வினையம் மிக வாய்ந்தவள். பேசுவதில் பெருஞ் சமர்த்தி. அரசி முதல் அந்தப்புரத்தில் உள்ள அனைவரும் இவளுடைய நளின வார்த்தைகளைக் கேட்டு உளம் மகிழ்ந்து கொள்வர். மந்திரிகளும் வியந்துகொள்ளும்படியான சூழ்ச்சித் திறங்களையுடைமையால மந்தரை என்னும் பெயர் உனக்குச் சொந்தமாக அமைந்தது என அரசனும் இவள் எதிரே விந்தையாகப் பேசுவான். அங்க அமைப்பும் உருவப் பொலிவும் நன்கு வாய்ந்தவள் ஆயினும் முதுகு சிறிது வளைந்திருந்தது; அதனல் இவளைக் கூனி எனமூற அரசி உல்லாசமாய் அழைத்து வந்தாள். கூன் = வளைவு. கூனை உடையவள் ஆதலால் பெண்பாலுக்கு உரிய இகர விகுதி ஏற்றுக் கூனி என வந்தது. ஆண்பால் ஆயின்

கூனன் என வரும். செல்லப் பேராக அரசி வழங்கிவந்த நாமமே உலகம் அறிய நின்றது. தான் பிறந்த இடத்திலிருந்து சிறந்த உரிமையோடு வந்தவள் ஆதலால் கைகேசி இவளிடம் மிகுந்த அன்பு வைத்திருந்தாள். இவளும் ஒரு செவிலித் தாய்போல் உறவுறுதிபூண்டு உவளகத்தில் அவளுக்கு உதவிபுரிந்து வந்தாள்.

அந்த உரிமையினாலே தான் அரசியிடம் இந்தவாறு துணிந்து வந்து துயில் எழுப்பிக் கூனி பேச நேர்ந்தாள்.

தான் கூறத் தொடங்கிய கோளுக்கு மாறாக அரசிவாயிலிருந்து இராமபாசம் கனிந்து வரவே இவள் சினந்து சீறி இகழ்ந்து பேசினாள்.

"வீழ்ந்தன நின் நலம்; திருவும் வீய்ந்தது" என்றது உன்னுடைய நலங்கள் எல்லாம் ஒருங்கே தொலைந்தன; பட்டத்து அரசி எனச் சிறந்திருந்த உனது மதிப்பும் மாண்பும் அருமையும் பெருமையும் யாவும் ஒழிந்தன என்றவாறு.

நலமும் திருவும் வீழ்ந்து வீய்ந்தன என்று அவள் சூழ்ந்து மொழிந்துள்ள தொனிகளை ஆழ்ந்து ஆய்ந்துகொள்ளவேண்டும்.

வாழ்ந்தனள் கோசலை மதியினால் என்றதுதான் அவளது சதியினை அதிகமாக விளக்கி நின்றது.

தன் தாழ்வை மட்டும் தனித்துக் கூறினால் அரசிபொருட் படுத்தாள் என்று கருதிச் சக்களத்தியின் வாழ்வை உயர்த்திப் பேசினாள். இந்த வார்த்தை கைகேசி நெஞ்சில் கொஞ்சம் உறைத்திருக்கிறது. அவ்வுறைப்பு உரையில் ஒளிர்கின்றது.

"அன்னவள் அவ்வுரை கூற, ஆயிழை
மன்னவர் மன்னனேல் கணவன்; மைந்தனேல்
பன்னரும் பெரும்புகழ்ப் பரதன்; பார்தனில்
என்னிதன் மேலவட்கு எய்தும் வாழ்வு? என்றாள்."

சக்களத்தி மகனான இராமனை என் பிள்ளை என்று நீ வீண் பெருமை கொண்டாடுகிறாய்! இது மிகவும் பேதைமை. "நான் பெற்ற பிள்ளையைத் தானே விடாமல் கொஞ்சி மகிழ்கின்றாள்" என்று உன்னை அவள் இகழ்ந்து பேசுதற்கு இது ஒன்றே போதும். நீ உலகம் தெரியாத பேதை; அவள் பெரிய மேதை; தனது அறிவினாலேயே அதிசாதுரியமாக மதிப்பில் உயர்ந்திருக்கிறாள். இனிமேலும் வையம் எல்லாம் துதித்துப்போற்றும்படி

சூழ்ச்சிபுரிந்து உயர்ந்து உன்னைத் தாழ்ச்சியாகத் தள்ளப் பார்க்கின்றாள். நீ ஒன்றையும் உணர்ந்து கொள்ளவில்லையே! என்று கூனி உருப்புனைந்து கூற அரசி அதற்கு மறுப்புரைத்தபடியிது.

“என் கணவனோ, அரசர் எல்லாரும் அடி தொழுகின்ற சக்கரவர்த்தி; நான் பெற்ற பிள்ளையோ, சொல்லுதற்கு அரிய பெரிய புகழுடைய பரதன்; இருவகை நிலையிலும் இங்ஙனம் பெரும் பாக்கியசாலியாகிய என் வாழ்வைக் காட்டிலும் கோசலை வாழ்வு எதில் உயர்ந்தது? யோசனையின்றி உளறுகின்றாயே!” என்று கைகேசி கூனியை இடித்துக் கூறினாள்.

கைகேசியின் நெஞ்சம் கொஞ்சம் இங்கே வெளியே தெரிகின்றது. இராமன்பால் உயிரும் உள்ளமும் உருகியிருந்தாலும், கோசலைமீது சிறிது பொறாமையும் கடுப்பும் உடையளாய் இருந்துள்ளமையை வாய்ச்சொல் வெளிப்படுத்தியுள்ளது.

இந்த உள்ளப் பான்மையை உள்ளறிந்துள்ளமையினாலேதான் கோசலை வாழ்வை உயர்க்கிப்பேசி மாசில்லாத மனக்கைக் கூனி அசைக்க நேர்ந்தாள்.

எவ்வழியும் யாதும் அசையாமல் இராமன்மீது பேரன்பு மண்டிப் பெருநசை கொண்டுள்ள தூய்மையான தாய்மை உள்ளத்தை மெல்ல அசைத்து வைத்து மேலே இசைக்க மூண்டாள். மூட்டியுள்ள முறையைப் பாட்டில் பார்க்க.

ஆடவர் நகையுற, ஆண்மை மாசுறத்,
தாடகை எனும்பெயர்த் தையலாள்படக்,
கோடிய வரிசிலை இராமன் கோமுடி
சூடுவன் நாளை வாழ் விதெனச் சொல்லினாள்.
(மந்தரை சூழ்ச்சி, 50)

கூனி கண்ணுக்கு இராமன் எப்படித் தோன்றியிருக்கின்றான்! அரிய போர் வீரனைக் கிழவி இவ்வாறு இழிவாக எண்ணி அதனை வெளியிலேயும் துணிந்து சொல்லிவிட்டாள்.

தேவரும் புகழ யாவரும் மகிழ அமிர்த வடிவனாய் அவதரித்துள்ள இனிய இராமன் கூனிக்கு மட்டும் தனியே சுவைமாறி வேறுவகையாய்த் தழைத்து நிற்கின்றான். அந்நிலை தன் பழமையான தன்மையின் தகுதியை நலமுற விளைத்து வருகின்றது.

வேறொன்றையும் விதந்து குறியாமல் கோடிய சிலை எனத் தேடிப் பிடித்துக் குறிக்கோளோடு நாடி யுரைத்திருக்கும் நயம் நயந்து சிந்திக்கத் தக்கது. கோடிய என்றதில் வளைந்தது என்னும் பொருளோடு நீதிமுறை பிறழ்ந்தது என்பதும் அமைந்து கிடக்கின்றது. கொற்ற வில்லுக்குக் குற்றம் புனைந்தாள்.

முன்னம் தன் முதுகில் உண்டை தெரித்ததை நினைந்து உள்ளத்தே கொடுமை மண்டி யிருந்தமையால் அது இவ்வடிவில் வெளி வந்தது. வில்லியை இகழ வில்லை இழுத்தாள்.

தன் போன்ற ஒரு பெண் என்ற எண்ணத்தால் தாடகையை எடுத்துக்காட்டினாள். தையலாள் என அவளை உவந்து கூறியது இன உரிமையை உணர்த்தி நின்றது. தீமை தீமையை விழைந்து சிந்தை களிக்கின்றது.

பெண்கள் மிகவும் அபலைகள்; அவர்களிடம் யாவரும் இரங்கி யருளுவர். அத் தகைய மெல்லிய லார்பால் யாதொரு இரக்கமும் இன்றி அமையம் வாய்த்தபோது இப்பொல்லாத இராமன் அவரைக் கொல்லவும் செய்கின்றான்! பெண் கொலையாளனை இவனைக் கண்களாலும் காணலாகுமா? என்று கண்ணீர் வடித்திருக்கிறாள்.

"ஆடவர் நகையுற, ஆண்மை மாசு உற" என்றது இராமனது செய்கையைக் குறித்து உலகம் எல்லாம் இகழ்ந்து சிரிக்கின்றது என்றபடி. "இருந்து இருந்து தசரதனுக்குப் பிள்ளை பிறந்ததே! மூளைக்கு முன்னமே பெண் கொலைபுரிந்து வன் பழி வளர்க்கின்றது" என எங்கும் ஏச்சாயுள்ளது என்று தன் பேச்சால் காட்டினாள்.

ஆண் பிள்ளை வில் எடுத்தால் எதிர்த்த பகைவரை வெல்ல வேண்டும்; அங்ஙனமின்றி, எளிய மாதரைக் கொல்லுகின்றான் என்னும் இழிவே யாண்டும் விளைந்து வருகின்றது எனக் கிழவி ஈண்டு படு நீலம் பற்ற வைத்தாள்.

நகை உற, மாசு உற என்று வகையாக வனைந்து கூறிய தன் வார்த்தையைக் கேட்டால் ஆண் பெண் அடங்கலும் தன்னை நகைத்து இகழுமே எனக் கூனி யாதும் அன்று எண்ணி யிருக்க மாட்டாள். ஈன மனம் ஊனமே காண்கின்றது.

தாடகை பட்ட பொழுது, பூ மழை பொழிந்து வாழ்த்தி வானவர் புகழ்ந்து போற்றிய வெற்றிக் குரிசிலை இந்தக் கூனக் கிழவி இப்படிக் குற்றம் கொழித்து இகழ்ந்து தூற்றியிருக்கிறாள்.

பெண் இனங்களுக்கெல்லாம் பெரும் பிழையா யுள்ளவன்; இவனை அரும்பவிடலாகாது எனத் தன் இனம் தழுவியபடியாய் அரசியின் உள்ளத்தைப் பேதிக்கத் துணிந்து இவ்வாறு வாதிக்கலானாள். மானிட மருமம் இதனுள் மருவி மிளிர்கின்றது.

தன்னை இளமையில் எய்ததை யாதும் வெளியிடாமல், தாடகையை இழுத்துப் பிடித்துக் கிழமை கொண்டாடி விநயமாக வளமை கொழிக்கின்றாள்.

கையில் அதிகாரம் இல்லாமல் சும்மா திரியும்போதே பெண் குலத்திற்கு இவ்வண்ணம் பெருங்கேடு செய்தவன் இனி அரசனாகி அரியணை ஏறினால் அம்மா! நம்முடைய இனத்துக்கு என்னதான் செய்வானோ? தெரியவில்லையே! என்று விம்மி வெதும்பியிருக்கிறாள்.

பெண்ணரசியாகிய நீங்கள் இந்த அபாயத்தை முன்னதாக எண்ணி [illegible]து உய்தற்குரிய உபாயத்தை ஓர்ந்துகொள்ள வேண்டும்; இல்லையேல் முதலில் உங்களுக்குத் தான் பழி வந்துசேரும்.

அப்பழிகாரன் வெளிவந்த பின் செய்வது ஒரு புறம் இருக்கட்டும்; அவன் தலையில் முடி ஏறியவுடனே அவனைப் பெற்ற தாய் என்ன செருக்குக் கொள்ளுவாள் தெரியுமா? சக்கரவர்த்திக்குத் தாய் என்னும் தருக்கு மீதூர்ந்து எங்கும் பெருமித நிலையில் பெருமை கொண்டாடுவாள்; அங்ஙனம் அவள் வாழ்வடைந்து மகிழ நீ அவள் முன் தாழ்வடைந்து தளர்வாய் என்பாள், வாழ்வு இது! எனக் குத்திக் காட்டினாள். கிழவி இடித்துக் காட்டியிருக்கும் தொனியை நுனித்து நோக்கவேண்டும்.

என் வாழ்வை விடக் கோசலை வாழ்வு எதில் உயர்ந்தது? என முன்னம் கைகேசி சொன்னதற்குக் காரண காரியங்களைத் தெளிவுறுத்தி இவ்வாறு பதில் உரைத்தாள்.

பிள்ளையோ உலகத்தாரால் எள்ளப்படுகின்றான்; தாயோ உனக்குக் குல விரோதி; இவர்களைத் தலை எடுக்க விடலாமா!

தலை எடுத்தால் உன் நிலை என்னும்? கொஞ்சம் நினைந்து பார்! என்பது குறிப்பு.

இவ்வாறு புனைந்து சுருட்டி நெஞ்சைப் பேதிக்க வஞ்சக் கூனி வனைந்து சொல்லிய பொழுது, கைகேசி பதில் என்ன சொன்னாள்? என்பதை ஆவலோடு நாம் அறியவிரும்புகின்றோம். அந்த அரசிநிலை அயல் வருகின்ற கவிகளில் சுவையுற எழுதப் பட்டுள்ளது.

மாற்றம்அஃ துரைசெய மங்கை உள்ளமும்
ஆற்றல்சால் கோசலை அறிவும் ஒத்தவால்
வேற்றுமை யுற்றிலள்; வீரன் தாதைபுக்கு
ஏற்றவள் இருதயத் திருக்க வேகொலாம். (1)

ஆயபேர் அன்பெனும் அளக்கர் ஆர்த்தெழத்
தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத்
தூயவள் உவகை போய் மிகச் சுடர்க்கெலாம்
நாயகம் அனையதோர் மாலை நல்கினாள். (2)

(மந்தரை சூழ்ச்சி, 51, 52)

கைகேசியினுடைய புனித மன நிலை இங்கே அதிசய நிலையில் வெளியாகி யுள்ளது.

இராமன் அரசுரிமை பெறுவதைக் கேட்டபொழுது பெற்ற தாயின் உள்ளமும் உணர்வும் எப்படியிருக்குமோ, அப்படியே கைகேசியின் அந்தக் கரணங்கள் யாவும் உவந்து களித்தன என்பார், "கோசலை உள்ளமும் உணர்வும் ஒத்த" என்றார்.

உள்ளம், நினைப்பது; உணர்வு, பகுத்தறிந்து தெளிவது. ஆன்ம ஒளியாய் அணுகியிருப்பது ஆதலின் உணர்வை இறுதியில் குறித்தார். உள்ளமும் உணர்வும் களித்தன என்றது தெள்ளத் தெளிந்த அவளது பிள்ளைப் பாசத்தின் பெருமையை விளக்கி நின்றது.

கைகேசி நெஞ்சில் தசரதன் என்றும் குடிபுகுந்துள்ளமையினாலேதான் அவ்வஞ்சக் கிழவி மாயமொழிகளை வாய்மொழிந்து பேதித்தும், அந்தத்தூய உள்ளம் யாதும் மாறுபடாமல் ஆர்வ மீதூர்ந்திருந்தது எனக் கவி இங்கே வியந்து நிற்கிறார்.

"வீரன் தாதை புக்கு அவள் இருதயத்து இருக்கவே கொலாம் வேற்றுமை யுற்றிலள்?" என்றதனால் ஈண்டு அவள் வேற்றுமை யுற வேண்டிய இடம் என்பது வெளிப்பட்டது.

ராமன் முடி சூட வருகின்றான் என்பதை அறிந்தபோது கைகேசி மனம் எப்படி இருந்தது? என்பதை உலகம் அறிய விரும்பும். அதனை உணர்த்த வந்த கவி இப்படி விளக்கிக் காட்டி யிருக்கிறார். காட்சி கருதி உணர வுரியது.

தாய் அன்பும், தந்தை உரிமையும் ஒருங்கு சேர்ந்து அந்த உள்ளத்திலிருந்து உவந்து கூத்தாடியிருக்கின்றன. அந்த நிலைமையை இந்தவாறு இனிமை கனிய விநயமாக விளக்கியுள்ளார்.

உள்ளத்தில் எழுந்த உவகை நிலையின் எல்லைதெரிய முதலில் தாயை ஒப்புக்காட்டினார்; அங்ஙனம் நேர்ந்த நிலைமைக்குப் பூரணமான காரணம் காணத் தந்தையைத் தந்தருளினார்.

உணர்ச்சி நிலைகளைத் தெளிவாக விளக்கியருளுவதில், கவியினது கலாவினோதம் தலைசிறந்து மிளிர்கின்றது.

தன் கணவனை எப்பொழுதும் நினைவில் வைத்திருக்கும் உத்தம பத்தினி எனக் கைகேசியை இங்கே வெளிப்படுத்தி யிருக்கும் நுட்பம் நுனித்து உணரத்தக்கது.

அந்த இதயம் முழுவதும் தந்தை மயமாயிருந்தமையினாலே தான் நிந்தை புனைந்து சொல்லியும் மைந்தன்மீது சிந்தை மாற வில்லை என அந்த நெஞ்சக் காட்சியை நேரே காட்டியருளினார்.

தீயகூனி தீமையாகக் கோள் உரைத்தும், அத்தூய மனம் யாதும் வேறுபடாமல் அன்புமீறி இன்பமீதூர்ந்தது என உள்ள நிலைமையை உரைத்துப் பின்பு அரசி புரிந்த செய்கையைக் குறித் தார்.

அன்பு எனும் அளக்கர் ஆர்த்து எழ; முகமதி விளங்கித் தேசுற

என்றது கைகேசியினது அகமும் முகமும் அது பொழுது நிலவியிருந்த தகைமை தெரிய வந்தது.

இவ்வாறு அன்பு மீதூர்ந்து ஆனந்த பரவசமான அரசி அருமையான ஒரு வயிரமணி மாலையை விரைந்து எடுத்துக் கூனிக்கு விழைந்து கொடுத்தாள். அருமை மகன் முடிசூடும் மங்கலச் செய்தியை வந்து சொன்னமையால் பொங்கிய களிப்புடன் இங்ஙனம் அளித்தாள். சோபனம் சொல்லிவரும் வினையாளர்கட்கு உரிய உறவினர் இந்நாட்டில் பரிசு தரும்வழக்கத்தை இது விளக்கி யுள்ளது.

"சுடர்க்கு எல்லாம் நாயகம் அனையது ஓர் மாலை" என்ற தனால் அதன் மாட்சி புலனும். விலை மதிக்க முடியாத இப் பொருட்கொடை எல்லை காண முடியாத அவளது மகிழ்ச்சி நிலையை வெளியே தெளிவாகக் காட்டி நின்றது.

இராமனைக் குறித்து இனிவாகப் பல மொழிகளைக் கூனி இசைத்துக் கூறியிருக்கிறாள்; இருந்தும், அவை யாதொன்றும் கைகேசி காதில் ஏறவில்லை. நாளை முடி சூடுவேன் என்ற இந்த ஒரு வார்த்தை மட்டும் உள்ளத்தை ஊடுருவிப் பேரின்ப வெள்ள மாய் உவகை விளைத்துள்ளது.

இது மிகவும் அதிசய மாகின்றது. மனத்தின் தத்துவ நுட் பங்கள் இங்கே உய்த்துணர நேர்கின்றன.

உண்மையான அன்பும் உரிமையும் ஒரு பொருளின்மீது பதிந்திருக்குமாயின் அதன் நன்மையையே எவ்வழியும் மனம் நாடி நிற்கும். மாறாக வேறு யாதும் காண மாட்டாது.

இராமன் உத்தம குணசீலன். எவரையும் தன் வசப்படுத் தும் தகைமையன். அவன்பால் பெற்ற தாய் வைத்துள்ள பாசம் பேச அரியது. அந்நிலையில் கைகேசியின் தூய அன்பு நிலை துலங்கி நிற்கின்றது.

புனிதமான அந்த நல்ல உள்ளத்தைப் பொல்லாதவள் புகுந்து கலைத்தும் யாதும் கலங்காமல் ஆர்வம் சுரந்து அதிசய நிலையில் தலை சிறந்துள்ளது.

தீய நினைவோடு கேடு சூழ்ந்து கொடுமொழி புகன்ற அக் கொடிய கூனிக்கு இனிய மணிமாலையை உரிமையுடன் நல்கினாள்.

இழவு கருதி வந்த அந்தக் கிழவிக்கு இந்த அழகிய ஆரம் எப்படி இருக்கும்? "மணமாலை அருமையைப் புனைபவர்களே அறிவர்; மட்டிக் குரங்கு அறியுமோ?" என்றபடி சிறுமையே செய்து சீறி எழுந்தாள்.

கூனி சினந்தது.

தான் உரிமையாக வந்து சொல்லியும் தன் கருத்தை உணர் ந்துகொள்ள வில்லையே என்று கடுத்துக் குதித்தாள். கையில் கொடுத்த மாலையைச் சுழற்றி வீசித் தரையில் எறிந்தாள். அவ்

**வெய்யவள் அன்று நடித்த கபட நாடகங்களும், தொடுத்து மொழிந்த உரைகளும் அடுத்து வருவன.**

தெழித்தனள் ; உரப்பினள் ; சிறுக்கண் தீயுக
விழித்தனள் ; வைதனள் ; வெய்துயிர்த்தனள் ;
அழித்தனள் ; அழுதனள் ; அம்பொன் மாலையால்
குழித்தனள் நிலத்தைஅக் கொடிய கூனியே. (1)

வேதனைக் கூனிபின் வெகுண்டு நோக்கி, அப்
பேதையைப் பித்திநிற் பிறந்த சேயொடும்
நீதுயர் படுகநான் நெடிதுன் மாற்றவள்
தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன் என்றாள். (2)

சிவந்தவாய்ச் சீதையும், கரிய செம்மலும்
நிவந்த ஆசனத்தினி திருப்ப, நின்மகன்
அவந்தனாய் வெறுநிலத் திருக்க லானபோது
உவந்தவாறு என் ? இதற்கு உறுதி யாது ? என்றாள். (3)

மறந்திலள் கோசலை உறுதி ; மைந்தனும்,
சிறந்தநற் றிருவினின் திருவும் எய்தினான் ;
இறந்திலன் இருந்தனன் என்செய் தாற்றுவான்
பிறந்திலன் பரதன் நீ பெற்ற தால்என்றாள். (4)

சரதம்இப் புவியெலாம் தம்பியோடும் அவ்
வரதனே காக்குமேல் வரம்பில் காலமும்
பரதனும் இளவலும் பதியின் நீங்கிப்போய்
விரதமா தவம்செய விடுதல் நன்று என்றாள். (5)

பண்ணுறு கடகரிப் பரதன் பார்மகள்
கண்ணுறு கவினரா யினிது காத்தஅம்
மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்
எண்ணுறப் பிறந்திலன் இறத்தல் நன்று என்றாள். (6)

பாக்கியம் புரிந்திலாப் பரதன் தன்னைப்பண்டு
ஆக்கிய பொலன்கழல் அரசன் ஆணையால்
தேக்குயர் கல்லதர் கடிது சேணிடைப்
போக்கிய பொருள் எனக்கு இன்று போந்ததால். (7)

மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள்
அந்தரம் தீர்ந்துல களிக்கும் நீரினால்
தந்தையும் கொடியன் ; நற்றாயும் தீயளால்
எந்தையே ! பரதனே ! என் செய்வாய் ? என்றாள். (8)

அரசரிற் பிறந்துபின் அரசர் இல்வளர்ந்து
அரசரிற் புகுந்துபேர் அரசி யான நீ
கரைசெயற் கருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய்
உரைசெயக் கேட்கிலை உணர்தியோ என்றாள். (9)

கல்வியும் இளமையும் கணக்கில் ஆற்றலும்
வில்வினை யுரிமையும் அழகும் வீரமும்
எல்லையில் குணங்களும் பரதற்கு ஏயது
புல்லிடை உகுத்தமு தேயும் போல் என்றாள். (10)

(மந்தரை சூழ்ச்சிப் படலம், 53, 62)

ஓவிய உருவங்களாய் வந்துள்ள இக்கவிகளைக் கண்ணூன்றி நோக்குங்கள். கூனியினுடைய நெஞ்சத்துணிவையும், வஞ்ச மொழிகளையும், சாதுரிய சாகசங்களையும், நீலித்தனத்தையும் இங்கே நேரே காண்கின்றோம்.

தெழித்தனள் முதலாக வந்துள்ள குறிப்புகள் எல்லாம் அவளது ஆங்காரத்தையும் அடத்தையும் துடுக்கையும் விளக்கி நிற்கின்றன. தெழித்தல்=சீறி ஒலித்தல். உரப்பல்=அதட்டுதல். குழித்தனள் என்றது நிலம் குழிய எறிந்ததை.

'வேதனைக்கூனி' என்றது தீது அனைத்தையும் தன்னுட்கொண்டு உலகிற்கு வேதனை செய்ய வந்திருத்தல் கருதி. அவளுடைய சாதனையும் சதியும் போதனையும் பெருங் கேடுடையனவாய்ப் பெருகி யிருக்கின்றன.

பெரிய அரசி என்பதை மதியாமலும் வரிசை யுணராமலும் மித மீறிய துணிவுடன் அவள் சீறிப் பேசியிருக்கிறாள்.

"பிழைக்கத் தெரியாத பெரும் பைத்தியகாரியான நீ உன் பிள்ளையோடு மாற்றவளுக்கு அடிமையாய் மறுகி இரு; நான் இங்கே இனி ஒரு கணமும் இரேன்; செவ்வாய்ச் சீதையும் கரு மேனி இராமனும் அரியணையில் அமர்ந்து குலாவ உன் மகன் வெறுந் தரையிலிருந்து வருந்தி யுழல்வதால் நீ வாரி எடுத்த பலன் என்ன? யோசனைக்காரியான கோசலை வாழ்ந்தாள்; முழு மூடமான நீ தாழ்ந்தாய்; அவள் மகன் அரசனாய் உயர்ந்தான்; உன் மகன் அடிமையாய் இழிந்தான். அந்தோ! அருமைக் குழந்தையான பரதன் உன் வயிற்றில் பிறந்ததனாலல்லவா இப் படிச் சிறுமைப்பட நேர்ந்தான். சக்களத்தி பிள்ளைகள் இருவரும் பெருமை அடைந்தார்; உன் பிள்ளையை நீயே கெடுத்தாய்.

அரசர் மரபில் பிறவாதவனாய் பரதன் அவமே அகன்றான். அவன் இருப்பதிலும் இறப்பது நல்லது. பரதனை முன்னமே கேகய தேசத்துக்கு வஞ்சகமாக அரசன் அனுப்பியுள்ளதற்குப்பொருள் இன்று தான் எனக்குத் தெரிந்தது. தம் பிள்ளைக்கு முடிசூட்ட வேண்டும் என்னும் கள்ளத் தனத்தை உள்ளத்தில் ஒளித்து வைத்து, அரசனும் கோசலையும் கூடிப் பேசி முன் யோசனையோடு உன் பிள்ளையை அப்படி ஓடிப் போகச் செய்திருக்கிறார். இந்த உளவை நீ உணரவில்லையே! உன் அந்தப்புரத்தில் வந்து இராசா கொஞ்சிப் பேசுவன எல்லாம் உன்னை வஞ்சிக்கப் புரிந்தனவே. அந்த வஞ்சச்சூழ்ச்சிகளைக்கொஞ்சமும் தெரிந்துகொள்ளவில்லையே! உன்னை நொந்துகொள்ளுவதில் யாதும் பயன் இல்லை. படுமூடமான உன்னோடு கூடவந்து பழகி இருக்கும்படி நேர்ந்த எனது பழவினையை நோக வேண்டும். உயர்ந்த அரச குடியில் பிறந்து வளர்ந்து சிறந்த அரசியாய் அமைந்திருந்தும் சீரழிந்து போக நேர்ந்துள்ளாயே! நீ எப்படிப் போனால் என்ன? அருமைக் குழந்தையின் நிலைமையை நினைந்துதான் என் நெஞ்சம் வருந்தித் துடிக்கின்றது. அழகு இளமை அறிவு வீரம் முதலிய உயர் நலங்கள் எல்லாம் ஒருங்கு நிறைந்த குணசீலனான பரதன் வறிதே இழிவுற அழிதுயர் வந்ததே!'' என இவ்வாறு முதலைக் கண்ணீர் வடித்துக் கூனி மொழிந்திருக்கிறாள்.

தந்தையும் கொடியன்; தாயும் தீயள்; எந்தையே! பரதனே! என் செய்வாய்? என்னும் இந்த நீலியின் ஓலம் காலம் பல கடந்தும் இன்றும் ஞாலம் முழுதும் கேட்க ஒலித்துக்கொண்டிருக்கின்றது.

இதம் செய்ய உரிய இருவரும் உன்னை அதம் செய்கிறார்களே! என் அப்பனே பரதா! உன் கதி இப்படியாயதே! நான் எப்படிச் சகிப்பேன்? உன் நிலைமையை எண்ணுந்தோறும் என் நெஞ்சம் எரிகின்றதே என்று பரிவு மீதூர்ந்தவள்போல் விரகுரையாடி வெளிப்பகட்டாய்ப் பரிதபித்து நின்றாள்.

பரதனை இவ்வண்ணம் அண்டைகொண்டு அரண் செய்து கொண்டால்தான் தான் கருதியபடி இராமன் முடிக்குக் கேடு செய்ய முடியும் என்று உறுதியாகத் தெரிந்துகொண்டாள் ஆதலால் உரியவனைப்பிரியமாகப் பெரிதும்பாராட்டிப்பேசலாயினாள்.

பெற்ற தாயினும் தனக்கு ஓர் பெரிய உரிமை பரதனிடம் உண்டு என்று உலகம் அறியக் காட்டிக் கூனி கலகம் செய்திருக்கிறாள். அவளுடைய கரவும் விரகும் கருதும்தோறும் வியப்பை விளைத்து வருகின்றன.

"அரசர் இற் பிறந்து; அரசர் இல் வளர்ந்து" என்றது கைகேசிக்கு வாய்த்துள்ள பெரும் பேறுகளை உணர்த்திய வாறும்.

சில மங்கையர் அரச குமரியாய்ப் பிறந்திருப்பர்; வளர்ப்பில் அருமை குன்றித் தளர்ந்திருக்கவும் நேர்வர்; பிறப்பியல் போடு வளர்ப்புயர்வும் வாய்ந்தாலும் தகுந்த அரசனை மணந்து கொள்ளாமல் குறைந்த இடத்தில் புகுந்துறையவும் அமைவர்; ஒரு வேளை உயர்ந்த அரசனையே மணந்தாலும் நாயகன் காதலை நலமுறப் பெறாமல் ஒப்புக்கு மனைவியாய் உவளகத்தில் ஒதுங்கியிருக்கவும் கூடும். அங்ஙனம் பலபடிகளையும் தப்பி ஒப்பற்ற தலைவியாய் உயர்ந்திருத்தலைக் கிளர்ந்து உரைத்தாள்.

நல்ல அரசனது அருமைத் திருமகளாய்ப் பிறந்து, செல்லமாக வளர்ந்து, உயர்ந்த சக்கரவர்த்திக்கு ஆசை மனைவியாய் அமர்ந்து, எல்லாப் பாக்கியங்களிலும் சிறந்து எங்கும் நன்கு மதிப்போடு விளங்கியுள்ள நீ உன் நிலைமைகள் பங்கப்பட நேர்ந்ததைப் பாராமல் இருப்பது தீராத்துயரமாம் என்று சீறியிருக்கிறாள்.

மனைவியர் மூவருள் இளையவளாயிருந்தும் பேர் அரசியான நீ என்றது என்னை? எனின், மன்னர்பிரான் இவள்பால் கொண்டுள்ள அன்புரிமையையும், அதனால் இவளுக்கு வாய்த்துள்ள நன்கு மதிப்பையும் நோக்கி என்க.

தலை சிறந்த சக்கரவர்த்தினியாய் நிலை உயர்ந்திருக்கின்ற பெருமித நிலைமையை இங்ஙனம் நினைவுறுத்தியது தன் கருமம் கைகூடுதற்கு ஓர் மருமமாகக் கருதி மருவியபடியாம்.

பலவகை நிலைகளிலும் பெருமைகளை விளக்கி யாதும் சிறுமையுறாவண்ணம் அருமையாகப் பாதுகாப்பவள் போல் உரிமை பாராட்டி உள்ளங் கரையக் கள்ளம் கரந்து அதி சாதுரியமாகக் கூனி இவ்வாறு உரைத்து நின்றாள்.

இவ்வுரைகளில் தன்வசமாய் அரசி சார்ந்துவிடுவாள் என்று கிழவி மிகவும் உறுதியாய் எதிர்பார்த்தாள். மாறுபாடான பலன் மீறி எழுந்தது.

## கைகேசி கடிந்து மொழிந்தது.

கூனியினுடைய உள்ளக் கிடக்கை இப்பொழுதுதான் கைகேசிக்குத் தெளிவாகத் தெரியவந்தது. இராமனுக்கு இடையூறாக ஏதேதோ தீதாகப் பேசுகின்றாள் என்று உணர்ந்துகொண்டாள். கொள்ளவே உள்ளம் கொதித்தது; கண்கள் சிவந்தன. அடுத்து நிற்கும் கூனியைக் கடுத்துநோக்கினாள். "என் பிள்ளைக்கா இப்படிப் பிழை பேச நேர்ந்தாய்! படுபாவி!" என்று கொடிதாய் இகழ்ந்து கொதித்துப் பேசினாள்.

கைகேசி அன்று உள்ளம் கனன்று உரையாடியுள்ளவற்றுள் அவளது உணர்வு நலன்களும் உள்ளப்பான்மையும் ஒளிவீசியுள்ளன.

வாய்கயப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்
காய்கனற்றலை நெய்சொரிந் தெனக்கதம் கனற்ற
கேகயர்க்கிறை திருமகள் கிளரிள வரிகள்
தோய்கயற்கண்கள் சிவப்புற நோக்கினள் சொல்லும்: (1)

வெயில்முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர்முதற்பொருள் திறம்பினும் உரைதிறம் பாதோர்
மயில்முறைக்குலத் துரிமையை மனுமுதல் மரபைச்
செயிருறப்புலச் சிந்தையால் என்சொனாய் தீயோய்! (2)

எனக்கு நல்லையும் அல்லைநீ; என்மகன் பரதன்
தனக்கு நல்லையும் அல்லை; அத்தருமமே நோக்கின்,
உனக்கு நல்லையும் அல்லைவந் தூழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினாய் மதியிலா மனத்தோய் (3)

பிறந்திறந்துபோய்ப் பெறுவதும் இழப்பதும் புகழேல்
நிறந்திறம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்
திறந்திறம்பினும் செய்தவம் திறம்பினும் செயிர்தீர்
மறந்திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ? (4)

போதி என்னெதிர் நின்றுநின் புன்பொறி நாவைச்
சேதியாதிது பொறுத்தனென் ; புறம்சிலர் அறியின்
நீதி யல்லவும் நெறிமுறை அல்லவும் நினைந்தாய்
ஆதி ; ஆதலின் அறிவிலி அடங்குதி என்றாள். (5)

(மந்தரை சூழ்ச்சிப் படலம், 63-67)

கூனியை வெகுண்டு நோக்கிக் கைகேசி இவ்வாறு வெறுத்து உரைத்திருக்கிறாள். வார்த்தைகள் கோபத்தில் எழுந்துள்ளன. ஆத்திரம் பொங்கி வேகமும் விவேகமும் வீறுகொண்டு நிற்கின்றன. குலமானமும் குடிப்பிறப்பும் நெறிமுறையுடன் அரசமாட்சியும் மொழிகள்தோறும் துடித்து மிளிர்கின்றன.

உயிர் திறம்பினும் உரை திறம்பாதோர் எனச் சூரிய குலத்து மன்னர் நிலைமையை இன்னவாறு வியந்து குறித்திருக்கிறாள். தான் புகுந்த இடத்தின் பெருமையையும் அருமையையும் இவள் கருதி மகிழ்ந்திருக்கும் உரிமை இதனால் அறியலாகும். பிறந்த இடத்தை அறவே மறந்து புகுந்த இடமே தாயகமாக இத்தூயவள் துணிவுகொண்டுள்ளமை இனிது தெளியவந்தது.

"மயில்முறைக் குலத்து உரிமையை; மனுமுதல் மரபை." என்றது அக்குலத்தவரது நெறி நியமங்களையும், ஆதி மனுமுதல் நீதி நிலை மாறாமல் வழி வழியே விழுமிய நிலையில் நிலைத்துவரும் நிலைமையையும் நீர்மையும் சீர்மையையும் ஆர்வ மீதூர்ந்து எண்ணி அவற்றை நேரே எடுத்துக் காட்டியபடியிது.

ஒரு மயிலுக்குப் பல குஞ்சுகள் இருந்தாலும் முதலில் பிறந்த ஆண் குஞ்சுக்கே தலையில் உயர்ந்த கொண்டையும், வாலில் சிறந்த தோகையும் தழைத்து விளங்கும். அதுபோல் ஓர் அரச குடியில் பிறந்த மூத்த மகனுக்கே முடியும் கோலும் உரிமையாம் என்பாள் மயில் முறையைக் குறித்துக் காட்டினாள்.

வெயிலவன் குலத்து உரிமை மயிலின் முறைமையைத் தழுவியுள்ளது என்பதாம்.

"பலாவம் பொழிலின் ஒருதாய் உயிர்த்த பலமயிற்கும்
கலாவம் புனைந்த களிமயில் மூத்தது எனக்கருதச்
சுலாவம் பரிமிர் வெற்பின்எம் மாதுக்குத் தோன்றல்முன்னம்
இலாவம்பு வாய்ப்ப முதுக்குறைந்தாள்என எண்ணம் உண்டே"
(தணிகைப்புராணம், களவுப்படலம், 244)

மூத்த மயிலுக்குக் கலாபம் பூத்ததுபோல் ஒருமங்கைக்குக் காமம் பூத்தது என இஃது உரைத்துள்ளது. இந்த மயில் இயல்பு உலக வழக்கிலும் அருமையாகப் பயிலப்படுகின்றது. மரபு முறை திரியாமல் வருவதை மயில்முறை எனப் பழமொழியாக வழங்கி வருகின்றனர். உயர்குலக்கிழமை உணரவுற்றது.

மாபுநிலை மாறாமல் என்றும் வழிமுறையே ஒழுங்கு வருகின்ற உத்தம குலத்தின் சத்தியமான நித்திய உரிமையை ஒரு சிறிதும் உணராமல் அதனைப் பழுதுபடுத்த நினைந்து பாழ்வாய் திறந்தாயே பழிகாரி! என்று கிழவியை இழிவாக எறிந்து பேசினாள்.

செயிர் உறப் புலைச் சிந்தையால் என் சொனாய் தீயோய்!

அரசியின் மனக்கொதிப்பு இதில் எப்படி வெளிப்பட்டுள்ளது! செயிர் = குற்றம். புலைச்சிந்தை என்றது நீச நெஞ்சு என்றபடி. கூனியின் வார்த்தைகளைக் கேட்டு அருவருத்து வெறுத்த கைகேசி அவளது நெஞ்சு நிலையை இகழ்ந்து இவ்வாறு ஏசியிருக்கிறாள்.

தீயோய்! என்று இளித்து விளித்தது தூயமரபின் தொன்மையைக் கெடுக்கப் புன்மை கூறிய அப்பொல்லாங்கை நினைந்து. நெஞ்சு நீசமாய்ப் பாழ்பட்டிருந்தால் ஒழிய இப்படிப்பட்ட நீச வார்த்தைகளை வெளியே துணிந்து பேசமுடியாது என்று கருதிப் பேச்சுக்கு மூலமான உள்ளத்தீமையை உருத்துப் பழித்தாள்.

"நீ எனக்கு நல்லையும் அல்லை; என் மகன் பரதன் தனக்கும் நல்லையும் அல்லை;" என்றது தனக்கும் தன் மகனுக்கும் ஏதோ நன்மை செய்ய வந்தவள் போல் உரிமை பாராட்டி உரையாடினாள் ஆதலால் அச் சிறுமையைக் குறித்துக் காட்டி இவ்வாறு மறுத்துக் கூறினாள். நல்லை = நல்லதைச் செய்பவள். நன்மைசெய்யும் தன்மையள் அல்லள் எனவே அவளது புன்மை புலனாயது.

நல்லை அல்லை என்றமையால் தீயவளாய் எங்களுக்குத் தீங்கு செய்ய வந்துள்ளாய் என்பது குறிப்பாயிற்று.

உனக்கு நல்லையும் அல்லை என்றது எனக்கும் என் பிள்ளைக்கும் மாத்திரம் அன்று, இந்த ஈன எண்ணத்தால் உனக்கும் பெருங்கேடாம் என்றவாறு.

உன்னையும் கெடுத்து என்னையும் கெடுத்து என் மகனையும் கெடுத்து உலகத்திற்கு எல்லாம் பெருந்தீமையான கொடிய கலகத்தை மூட்ட வந்திருக்கின்றாயே புலையான நீச மகளே! என்று நெஞ்சு எரிந்து பேசிய படியிது.

"ஊழ்வினை தூண்ட மனக்கு நல்லன சொல்லினாய் மதியிலா மனத்தோய்!" என்னும் இது ஓர்ந்து சிந்திக்கத்தக்கது.

இங்கே ஊழ்வினை என்றது யாருடைய பழவினையை? கைகேசி உடையதா? கூனி உடையதா? அரக்கர் செய்த தீ

வினையா? அமராத நல்வினையா? யாதொரு சார்பும் தெரியாமல் ஊழ்வினை வந்து உள்ளே இங்கே மெல்ல இடங்கொண்டுள்ளது.

தன் எதிரே கூனி இது வரையும் இன்னவாறு பேசியதில்லை. தான் உவந்து கொடுத்த மணிமாலையை அவமதித்துக் கீழே எறிந்துவிட்டு யாதொரு மரியாதையுமின்றி மிகவும் வரம்பு மீறிப் பேசியிருக்கிறாள். என்றும் அஞ்சி ஒடுங்கி அடங்கி இருந்தவள் இன்று இப்படி மிஞ்சி நிற்கின்றாள். ஒரு நாளும் காணாத திமிரும், செருக்கும், வாய்த்துடுக்கும் இன்று புதிதாகக் கண்டமையால் ஏதோ ஒரு கெட்ட காலம்தான் நேர்ந்திருக்கின்றது என நினைந்து ஊழ்வினை தூண்டியதாக வருந்தி யுரைத்தாள்.

மனக்கு நல்லன என்றது இகழ்ச்சிக் குறிப்பு. தீயளான உன் மனத்துக்கு அன்றி வேறு எவர் மனத்துக்கும் அவை கொடுந்தீமையான கடுங் கசப்பாம் என்றவாறு.

நினைத்தாலும் நெஞ்சு துடிக்கும்படியான நஞ்சங்களை அஞ்சாது என்முன் வந்து பேசினையே படுபாவி என்று பரிதபித்திருக்கிறாள். பரிதாபம் உரிமை மீதூர்ந்து வந்தது.

மதிஇலா மனத்தோய்! என்றது அறிவுகெட்ட கழிமூடமே என்றபடி. மனமும் தீது; மதியும் கேடு ஆதலால் நீசமான வார்த்தைகளைக் கூசாமல் பேச நேர்ந்தனை என்று ஏசலாயினள்.

சிறந்த மனிதப் பிறப்பை அடைந்ததற்குப் பயன் உயர்ந்த புகழைப் பெறுதலே யாம். அப்பேறு நெறிமுறையான ஒழுக்கத்தாலே உண்டாம். முறை கேடான உன்பேச்சு புகழை அடியோடு அழித்துப் பழியும் பாவமும் விளைத்து என்னைப் பாழ் படுத்திவிடும். என் வழிக்கு இழிவு செய்யாதே; வெளியே போ என்று வெருட்டினள்.

பிறந்தும் இறந்தும் பெறுவது புகழே என்றது மனிதப் பிறப்பு இன்ன குறிக்கோளைத் தனியுரிமையாக உடையது என்பதை உணர்த்தி நின்றது. புகழ்பெறத் தோன்றாத தோற்றம் புலைத்தோற்றமே என்றபடி. புகழின்பால் கைகேசி வைத்திருக்கும் கருத்தும் கவனமும் இங்கே திருத்தமாய்த் தெரிகின்றன.

நிறம் முதலிய எது திறம்பினும் வரன்முறை திறம்பலாகாது என்றமையால் பாரம்பரை வழக்கத்தில் அரசி உள்ளம்

உரம் பெற்றுள்ளமை உணரலாகும். இங்ஙனம் தன் உள்ளக் கிடக்கையை உணர்த்தி முடிவில் கடுத்து வெறுத்து மூடுக்கினாள்.

என் எதிரே நில்லாதே; வெளியே போ என்று துரத்தினாள். "நின் புன்பொறி நாவைச் சேதியாது இது பொறுத்தனன்" என்றதில் கோபத்தின் எல்லை தெரிகின்றது. சேதித்தல் = அறுத்தல், வெட்டுதல்.

தருமமூர்த்தியான இராமனுக்குத் துரோகமாக நீசவார்த்தைகள் பேசிய உனது ஈன நாவை இதற்குள் அறுத்து எறிந்திருப்பேன்; நெடுநாள் பழகிய கிழவி என்று பொறுத்திருக்கிறேன்.

அந்த உத்தம சீலனுக்கு விரோதமாக எவர் எழினும் அவர் அனைவரும் அழிவுக்கு உரியவரே; பழி பாதகி! என் அன்புருவுக்குத் துன்பம் கருதி என்பால் வந்து வழி வகை தெரியாமல் இழி மொழி பகர்ந்தாய்! பழிபட்ட உன் பாழ்வாயைக் கிழித்து, நாக்கை அடியோடு அறுத்து ஒழியாமல் பொறுத்துவிட்டேன் போய்த்தொலை; உன் இழி நிலையை வெளியே யாராவது தெரிந்தால் உன்னை வெறிநாயை அடிப்பதுபோல் கொன்று தொலைப்பர்; இங்கே நின்று என்னைத் துயரப்படுத்தாதே! உன் தீய வாயை மூடிக்கொண்டு அயலே போய் ஒடுங்கியிரு என்று கடுங்கோபத்துடன் கைகேசி உரைத்து முடித்தாள். உரைகளில் இராணித்தனம் சொலித்து நிற்கின்றது.

இவளது மனத்துணிவு, பெருமிதம், நெறி திறம்பாமை, இராமன்பால் கொண்டுள்ள பேரன்பு, குலமானம் முதலிய பல வகை நிலைகளை ஈண்டு நாம் கண்டு வியந்து களித்து நிற்கின்றோம்.

இராமனுக்கு இடையூறாகக் கூனி பேசியவற்றைக் குறிப்பால் உணர்ந்து இவ்வளவு வெறுப்போடு மறுப்புரைத்தாள்.

## கூனி மீண்டும் மூண்டது.

அரசி இப்படிச் சினந்து பேசியதைக் கேட்டுக் கூனி பயந்து போயிருப்பாள் என்று பெரும்பாலும் நினைந்துகொள்ளநேர்வர். அப்படி அவள் யாதும் அஞ்சி அகலவில்லை. அரசியின் நெஞ்சத் துணிவை நன்கு தெரிந்துகொண்டமையால் மிஞ்சிப் பேசாமல்

அடங்கினள். படங் குறைந்த பாம்புபோல் அடங்கினவள் கொஞ்சம் பொறுத்து மீண்டும் வேலை செய்யத் தொடங்கினள்.

கைகேசியைக் கைவசம் செய்யும் வகையில் காலில் விழுந்து உரிமையுடன்தொழுது பரிவுடையவள்போல் அருகில்அமர்ந்தாள்.

ஆதி முதல் பழகிய என் உள்ளப் பாசம் பிள்ளைப் பாசத்தினும் பெரிதாயுள்ளது. இரவும் பகலும் உன் நன்மையைத் தவிர வேறு யாதும் யான் கருதியது இல்லை. பிறந்த இடத்தின் பெருமையை மறந்து இழிந்துபட நேர்ந்துள்ளதை நினைந்து என் நெஞ்சம் பரிந்து பதைக்கின்றது. என்னை நீ அடித்தாலும் மிதித்தாலும் கொன்றே தொலைத்தாலும் உனக்கு வேண்டிய உறுதி நலனைச் சொல்லாமல் நான் ஒதுங்கி நில்லேன். உன் தந்தையும் தாயும் உன்னை என் பொறுப்பில் தந்துவிடுத்துள்ளார். நீ உலகம் தெரியாதவள்; நான் சொல்வதைக் கொஞ்சம் செவி சாய்த்துக் கேட்க வேண்டும்.

மூத்தவன் இருக்கும்பொழுது இளையவனுக்கு அரசுரிமை கிடையாது என்று நீ எண்ணியுள்ளது மிகவும் தவறு. கண் எதிரே காரியங்கள் நிகழ்வதைக் கண்டும் நீ கருத்தழிந்து இருக்கிறாய். உன் நாயகன் பெரிதும் மூத்தவர்; அவருக்கு எவ்வளவோ இளையவனான இராமன் அரசு முடிசூட ஆவலோடு இசைந்திருக்கிறான். இது நியாயமா? இது சரியானல், ஒருநாள் மட்டும் பின் பிறந்த பரதனை இளையவன் என்று கழித்துவிடலாமா? சக்களத்தியின் சூழ்ச்சியால் மன்னர்பிரான் மாறுபட்டுக் காரியம் நடக்கிறது. அந்த வஞ்சனைகளைக் கொஞ்சம் சிந்தனை செய்து பார்.

“மூத்த வற்குரித்து அரசுஎனு முறைமையில் உலகம்
காத்த மன்னனில் இளையன் அன்றோகடல் வண்ணன்
ஏத்து நீள்முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால்
மீத்த ருஞ்செல்வம் பரதனை விலக்குமாறு எவனோ?

இது கூனியின் எதிர்வாதம். அவளுடைய கூனப்புத்தி எப்படியெல்லாம் வேலை செய்கின்றது! இப்படிக் கொஞ்சம் தப்பாக முதலில் வழி செய்து கொண்டு மேலே தொடர்ந்து பேசலானள். கைகேசியின் உள்ளத்தை அடியோடு பேதிக்க அவள் அடிகோலியிருக்கும் திறம் அதிவியப்பாயுள்ளது. அயலே நோக்குக.

## கூனியின் போதனை.

அறம் நிரம்பிய அருளுடை அருந்தவர்க் கேனும்
பெறலருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்;
மறம் நினைந்துமை வலிகில ராயினும் மனத்தால்
இறலுறும்படி இயற்றுவர் இடையறா இன்னல். (1)

புரியும் தன்மகன் அரசெனின் பூதலம் எல்லாம்
விரியும் சிந்தனைக் கோசலைக்கு உடைமையாம்; என்றால்,
பரியும் நின்குலப் புதல்வற்கும் உனக்கும்இப் பார்மேல்
உரியதுஎன்? அவள் உதவிய ஒருபொருள் அல்லால். (2)

தூண்டும் இன்னலும் வறுமையும் தொடர்தரத் துயரால்
ஈண்டு வந்துனை இரந்தவர்க்கு இருநிதி அவளை
வேண்டி ஈதியோ? வெள்குதியோ? விம்மல் நோயால்
மாண்டு போதியோ? மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி?

சிந்தை செய்கையில் திகைத்தனை இனிச்சில நாளில்
தந்தம்இன்மையும் எளிமையும் நிற்கொண்டு தவிர்க்க
உந்தை உன்னையுன் கிளைஞர்மற் றுன்குலத் துள்ளோர்
வந்து காண்பதுன் மாற்றவள் செல்வமோ மதியாய்! (4)

காதல் உன்பெரும் கணவனை அஞ்சிஅக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் தாதையைத் தெறுகிலன்; இராமன்
மாதுலன்அவன்; உந்தைக்கு வாழ்வினி உண்டோ?
பேதை உன்துணை யாருளர் பழிபடப் பிறந்தார்? (5)

மற்று நுந்தைக்கு வான்பகை பெரிதுள மறத்தார்
செற்ற போதிவர் சென்றுத வாரெனில் செருவில்
கொற்றம் என்பதொன்று எவ்வழி உண்டது கூறாய்!
சுற்றமும் கெடச் சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய். (6)

கெடுத்தொழிந்தனை உனக்கரும் புதல்வனைக் கிளர்நீர்
உடுத்த பாரகம் உடையவன் ஒருமகற்கு எனவே
கொடுத்த பேரரசு அவன்குலக் கோமைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்கும் ஆம்;பிறர்க்கு ஆகுமோ? என்றாள், (7)

தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி
தூய சிந்தையும் திரிந்தது சூழ்ச்சியின் இமையோர்
மாயையும் அவர் பெற்றுள வரமுண்மை யாலும்
ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத் தாலும்; (8)

அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூய்மொழி மடமான்
இரக்கம் இன்மையன்றோ இன்றிவ் வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே (9)

(மந்தரை சூழ்ச்சி 69-78)

இப்பகுதியைக் கருத்தூன்றிக் கவனிக்க வேண்டும். பேரன்பு நிறைந்து நேர்மை நீர்மைகளில் சிறந்து நெறிமுறைகளில் நிலைத்திருந்த கைகேசியின் தூய மனம் தீயதாகும்படி கூனிசெய்துள்ள மித்திர பேதங்கள் விசித்திர கதியில் விளைந்திருக்கின்றன.

இளையவனுக்கும் அரசுரிமை உண்டு என்று ஒரு போலிக் காரணத்தைக் காட்டிவிட்டுப் பின்பு மூத்தவனைச் சுட்டிப் பேசலானாள்.

1. இராமனை நீ நல்லவன் என்று எண்ணி இருக்கிறாய். அந்த எண்ணம் பிழைபாடுடையது. உன்னை வஞ்சித்து ஏமாற்றுதற்காக அஞ்சனவண்ணன் பலவகையிலும் நெஞ்சம் களிக்க நடித்து வருகிறான். அவனுடைய வரவும் செலவும் காவுமிக உடையன. உண்மை நிலை இப்பொழுது உனக்குத் தெரியாது. நாளை மணிமுடி அவன் தலையில் ஏறட்டும் அப்பொழுது எல்லாம் தெரியும். தன் பொல்லாத் தனங்கள் எல்லாவற்றையும் உள்ளத்தில் ஒடுக்கி வைத்துக்கொண்டு காரிய சாதனையில் கண்ணூன்றிக் கள்ளம்புரிந்து வருதலைக் கருதியுணராமல் பிள்ளை என்று பேதை மதியால் நீ பிழைபட்டிருப்பது பெரிதும் தீதாம்.

இயற்கையிலேயே பொல்லாதவனாயுள்ளவனுக்குப் பெரிய அரச செல்வமும் சேர்ந்தால் அவன் செய்யும் அல்லல்களுக்கு ஓர் எல்லை உண்டா? எவ்வளவு நல்லவர்களாய் இருந்தாலும் செல்வம் கைவந்தால் சிந்தை திரிந்து செருக்கு மீக்கூர்ந்து பெரியோர்களை மதியாமல் பிழைகள் செய்ய நேர்வரே!

"அறம் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும்,
பெறலரும் திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்,"

இந்த வாசகம் பெரிதும் சிந்தனைக்கு உரியது. கூனி வாயிலிருந்து எவ்வளவு பெரிய ஞான வாசகம் உதயமாகி யுள்ளது! பொல்லாத இடத்திலிருந்து ஒரோவழி அதிசயமான விளைவு கிளைத்தெழுதல் போல் கொடியவளிடமிருந்து இனிய நீதி எழுந்தது.

பழமொழிபோல் இத்தொடரைப் பலரும் பாடம் செய்திருக்கின்றனர். உலக அனுபவமான உண்மை மனிதருக்குத் தனி உரிமையாய் இனிமை சுரந்து உறுதி புரிந்து வருகின்றது.

தனக்கு வேண்டிய வகையில் வஞ்சனையோடு சொல்லியிருப்பினும் கிழவி உரை பழமறைபோல் ஒளிசெய்து உலகம் உணர நின்றது.

## செல்வக் களிப்பு

இராமன் மிகவும் நல்லவன்; உத்தமகுணக்குரிசில்; நீதிமான்; தருமவான் எனக் கைகேசி கருதி இருக்கும் உறுதி நிலையைக் குலைக்க இவ்வாறு சுருதி முறையை உரைத்திருக்கிறாள்.

ஆளை இன்று நிதானியாதே; நாளை முதல் காணலாம் என்று காட்டியபடியிது. தரும குண சீலன், கருணையாளன், அரிய தவசி, பெரிய ஞானி எனப்பெயர் பெற்றிருந்தவர்களும் செல்வம் பெற்றவுடன் உள்ளம் கெட்டு ஊனம் அடைந்துள்ளனர்.

அறமும் அருளும் அரியதவமும் உடைய பெரியவர்களையே சிந்தனையைக் கெடுத்துக் கொடிய நிந்தனைகளைச் செய்யும்படி செல்வம் செய்துவிடும் என்றால் இந்தச் சிறிய பையனை அது என்னதான் செய்யாது? என்பது குறிப்பு.

அருந்தவர்க்கும் சிந்தனை பிறிதாம் என்றதில் உம்மை அவரது உயர்வை உணர்த்தி நின்றது. உலகப்பொருள்களின் நிலையாமையை நன்கு தெளிந்து,என்றும் நிலையான பரம்பொருளையே பற்றி அருந்தவம் புரிந்து நிற்பவர்களும் பெரும்பொருள் கைவரின் உள்ளம் பிறிதாய் எள்ளலுறும் வழிகளில் இழிந்து படுவர் என்பதாம். எனவே செல்வத்தின் தன்மையும் வன்மையும் தெரிய வந்தன.

அரும்பெறற் செல்வம்வந் தடைந்த காலையில்
திருந்திய நல்லறம் செய்து நாள்தோறும்
விரிந்தநற் புகழினை விளைத்தல் வீறுசால்
புரந்தரற் காயினும் பூரிய லாகுமோ? (1)

தனித்தனி முச்சுடர் இயற்றித் தங்கிய
அனைத்துல கிருளையும் அகற்று நான்முகன்
நினைப்பரும் செல்வம்வந் தெய்தின் நீடிய
மனச்செருக்கு எனும்இருள் அகற்ற வல்லனோ? (2)

ஏர்பெறும் இருநிதிச் செருக்கை எய்திடின்
தேர்செவி யுடையரும் செவிடர் ஆகுவர் ;
ஓர்தரும் உரைவலோர் ஊமர் ஆகுவர்;
கூர்விழி யுடையரும் குருடர் ஆவரே. (3) (காசி காண்டம்.)

அண்ணலந் திருவிடை அழுந்தி யாரையும்
எண்ணலன் ; செங்நெறி இயற்ற ஓர்கலன் ;
கண்ணிலன் மதியிலன் களிப்பின் ஓர்மகன்
மண்ணிடை விரைவொடு வழிக்கொண்டாலென.
(கந்தபுராணம்)

செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமும் சிறிதுபேணார் ;
சொல்வன அறிந்து சொல்லார் ; சுற்றமும் துணையும்நோக்கார் :
வெல்வதே நினைவது அல்லால், வெம்பகைவலிதென்று எண்ணார்:
வல்வினை விளைவும் ஓரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்.
(வில்லிபாரதம்)

சிறியரே மதிக்கும் இந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூகர் ஆவர் ;
பறியணி செவியுளாரும் பயில்தரு செவிடர் ஆவர் ;
குறிபெறு கண்ணு ளாரும் குருடராய் முடிவர் அன்றே,
(குசேலோபாக்கியானம்)

வாலிபம் பெருநிலக் கிழமை மாண்பொருள்
மேலறி விலாமையில் ஒன்று மேவினும்
சீலமும் குடிமையும் சிதையுமால் இவை
நாலும் உள்ளவர்செயல் நவில வேண்டுமோ (1)

விழிதெரிந் திருக்கவும் குருடு மேவுவர்
மொழிதெரிந் திருக்கவும் மூகர் ஆகுவர்
பொழிமது வன்றியும் மயக்கம் பூணுவர்
அழிதரு காலமாம் அரசர் வண்ணமே. (2)
(செவ்வந்திப்புராணம்)

செல்வம் பெற்றவுடன் மக்கள் மதிமயங்கி மாறுபட்டுச் சீரழிந்துபடுவர் என்னும் நிலைமையை நூல்கள் இங்ஙனம் கூறியிருக்கின்றன. கூறியுள்ள குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்துகொள்ள வேண்டும். மனித இயல்புகள் நுணுகி உணர வுரியன.

உடல் வாழ்க்கைக்கு இனிய சாதனமாய்ப் பொருள் உறுதி பயந்துள்ளது. அது ஒருவனிடம் அதிகம் பெருகவே, உலகம்

அவன் அருகு பணிகின்றது. அம்மதிப்பையும் போகங்களின் பெருக்கையும் காண்கின்ருன். காணவே, தான் கருதிய யாவும் எளிது கைகூடும் என்று களிப்புறுகின்ருன். அவ்வுள்ளக்களிப் பால் உணர்வு பாழாகின்றது. ஆகவே எல்லாத் தீமைகளிலும் துணிந்தேறி இழிந்து படுகின்ருன். மது மயக்கம் போல் திரு மதியைக் கெடுத்தலால் செல்வக்கள் என அது சொல்லநேர்ந்தது.

" கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டு அயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ?" (மணிமேகலை, 6)

செல்வமானது மக்களை இவ்வாறு அல்வழியில் தள்ளி அல் லற்படுத்தலால் நல்வழியை நாடிய முத்தி நிலை யாளர் அதனை அறவே துறந்து யாண்டும் கையினலும் தீண்டலாகாது என்று கடுத்துப் போகின்ருர்.

" செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும் " (திருவாசகம்)

எனத் தாம் தப்பி உய்ந்த ... களைச் சொல்லி வருங்கால் செல் வத்தைச் சுட்டி மாணிக்க வாசக.. இப்படிச் சொல்லியிருக்கிருர்.

" உள்ளந் திருந்தி உயர்ந்தான் திருவுடையின்
உள்ளந் திரிந்திங் குழலுமே—கள்ளைக்
குடித்தான் களித்தாடும் கூத்தேபோல் செல்வம்
பிடித்தான்பே யாட்டம் பெரிது."

என்றபடி பெரியதிரு மனிதனை வறியனுக்கி விடுதலால் அவ் வுடைமையால் நேரும் மடமையும் கொடுமையும் கண்டு அறியவந் தன. பொருளின் மருளை அருளிய வாறிது.

புகழ் புண்ணியங்களை விளைத்தற்குரிய நல்ல பொருள், பெரும்பாலும் புல்லியர்பால் புகுந்து பொல்லாக் களிப்பையூட்டி அல்லல் வளர்த்து வருதலால் இவ்வாறு செல்லலுடையது என இளித்துச் சொல்லவந்தது.

பெரும்பான்மையாக உலக நிலையில் காணப்படுகின்ற செல் வத்தின் பொல்லாக் காட்சியைத் தன் கலக நிலைக்கு உறுதியாகக் கூனி இங்கே கைசெய்து கொண்டு கால் ஊன்றி நின்ருள்.

செல்வர்களுடைய செருக்கையும் திமிரையும் மனக்களிப்பை யும் மதிமயக்கத்தையும் பலபடியாகக் கண்டு வந்துள்ள நம் கவி

அந்நிலைமையைக் கிழவியின் வாயிலாக உலகறிய வெளியிட்டிருக்கும் அழகும் அருமையும் வியய மிக வுடையன.

இந்தப் பாத்திரம் இவ்வளவு பெரிய உண்மையைச்சொல்ல நேர்ந்தது இடம் காலங்களின் இசைவினாலேயாம்.

பெறல் அரும் திரு என்றது அரச செல்வத்தை. கருவிலேயே திருவுடையார்க்கு அன்றி வேறு எவரும் முயன்று பெற முடியாது ஆதலால் அப்பெற்றி தெளிய வந்தது.

அம்மா கைகேசி! இராமனை இனியன் என்று இப்பொழுது எண்ணியிருக்கிறாய்! நாளை அரசன் ஆனால் அவன் அரியனாய் நின்று ஆற்றும் இன்னல்களை நீ அறியலாகும்.

2. மகனைக் குறித்து முதலில் இப்படிப்பேசினாள்; பின்பு தாயை எடுத்துக்கொண்டாள். தன் மகன் அரசுக்கு வந்தால் உன் சக்களத்தியான கோசலையின் பெருமித நிலைகளை எவர் அளந்து சொல்லவல்லார்? உலகம் முழுவதும் அவளுடைய உடைமையேயாம். சக்கரவர்த்தியின் தாய் என்று அரசரும் அவளை மதித்துத் தொழுவர். குடிகள் அனைவரும் அவளது அடிகளையே வணங்குவர்.

உனக்கும் உன் மகனுக்கும் இங்கு என்ன உரிமை? உன்னை யார் மதிப்பார்? உண்ணும் சோறும் உடுக்கும் உடையும் அவள் கொடுத்தால் அன்றி உனக்கு ஒன்றும் இல்லையே? இதை நினைக்கும்போதெல்லாம் என் நெஞ்சம் எரிகின்றதே! எங்கள் கேகய தேசத்து மன்னன் மகளுக்கா இந்த இளிவும் பழியும் எய்தவேண்டும்? தெய்வமே என்று கொஞ்சம் தேம்பி அழுதாள்.

3. வறுமையால் வாடி உன்னிடம் வந்து ஏதாவதுவேண்டி யாசித்தவர்களுக்கு நீ என்ன செய்வாய்? கோசலையிடம் போய்த் தான் இழிந்து நின்று யாசித்து வாங்கிக் கொடுக்கவேண்டும். உறுகின்ற இளிவுகளையும் துயரங்களையும் அவமானங்களையும் யோசித்துப் பார்!

"அவளை வேண்டி ஈதியோ? வெள்குதியோ? விம்மல் நோயால், மாண்டு போதியோ? மறுத்தியோ? எங்ஙனம் வாழ்தி?" என்றது கொடுக்க முடியாமல் தவிக்க நேர்கின்ற அல்லற்பாடுகளை குறித்துக் காட்டியபடியிது.

கைகேசி தாராள சிந்தை யுடையவள்; யாருக்கும் இல்லை என்னுமல் அள்ளிக்கொடுக்கும் வள்ளற் குணம் வாய்ந்தவள். ஆதலால் அந்தக் கொடைக்குப் பங்கம் விளைய நேர்ந்துள்ளதை வகையாக எடுத்துக்காட்டினள்.

ஈதல் இயையா வழி, சாதல் இனிது என்று கொடையாளி உள்ளம் உடையும் ஆகையால் செத்துப் போவாயோ? அல்லது என் கையில் ஒன்றும் இல்லை என்று துணிந்து சொல்லி வந்தவர் களை வெளியே தள்ளி விடுவாயோ? என உள்ளி உணர உரைத் தாள். உரிமை இழந்து பெருமை அழிந்தாய்! என்பதாம்.

சக்களத்தியிடம் பிச்சை வாங்கித்தான் நீ இனி உன் வயிற்றை வளர்க்கவேண்டும் என்று வயிற்றெரிச்சலைக் கிளப்பி யிருக்கிருள்.

கேகய தேசத்திலிருந்து உன் தந்தை தாயரோ, பந்துக்களோ இங்கே வந்து பார்த்தால் நீ மற்றவளுக்கு அடிமையாய் மறுகிக் கிடப்பதைக் கண்டு மனம் உடைந்து போவரே.

உயர்ந்த அரச குடியில் பிறந்தும் உணர்வின்மையால் இழிந்துபட நேர்ந்தாயே! இழிவு உன்னளவில் நிற்கவில்லையே!

5. உன் அருமைத் தந்தைக்கும் மிதிலை அரசுக்கும் எப் பொழுதும் பகை. உனது நாயகனது உதவி யுண்மையை நினைந்தே எதிரிபடை எடாமல்பயந்துஒதுங்கி இருக்கிறுன். நாளை இராமன் முடி சூடுவான் ஆயின் தன் மருமகன் கையில் அரசு வந்துவிட்டது என்னும் தைரியத்தினல் சனகமன்னன் உடனே கேகய தேசத்தின்மீது படை எடுப்பன். உன் தந்தை கதி என்னும்? இதனைக் கொஞ்சமும் சிந்தனை செய்யவில்லையே! உன து மடமையினுல் பெற்ரேரும் மாண்டு, பிறந்தகுடியும்அடியோடு அழிந்த படியாம். இதைவிடப் பழி வேறு உண்டோ? விழி இருந்தும் குருடாய்க் குழியில் வீழ்ந்ததுபோல் நான் அருகி ருந்து உறுதிகூறியும் தெளியாமல் பழியுள் வீழ்கின்றுயே!

"காதல் உன்பெரும் கணவனை அஞ்சிஅக் கனிவாய்ச்
சீதை தந்தை உன் தாதையைத் தெறுகிலன்."

என்றமையால் அசுவபதிக்கும் சனகனுக்கும் நெடிய பகை உண்டு என்றும், கைகேசியைத் தசரதன் கலியாணம் செய்து

கொண்டதிலிருந்து கேகயனுக்கு வாய்த்துள்ள ஆதரவை உணர்ந்து மிதிலை மன்னன் அடங்கியிருக்கிறான் என்றும் தெரிகின்றன.

தேறுகிலன் என்றதனால் கேகய தேசத்து மன்னனை எளிதாக வெல்லவல்ல வீறுடைமை மிதிலை வேந்திடம் அமைந்துள்ளமை விளங்கி நின்றது. தெறுதல்=அழித்தல்.

அத்தகைய பகைவனுக்கு அருமை மருமகனாயுள்ள இராமன் பட்டத்துக்கு வந்தால் அந்த எதிரிக்கு எவ்வளவு உறுதியும் ஊக்கமும் உளவாம்! உன் தந்தை அதோ கதியாய் அழிந்தே போவான் என்பது தெளிந்த முடிபாம்.

"அவன், இராமன் மாதுலன்; உந்தைக்கு வாழ்வு இனி உண்டோ?" என்றது மருமகனது தலைமையையும், மாமனது நிலைமையையும் இணைத்து உணர்த்திய படியாம். அவன் என்றது சனகனை. மாதுலன்=மாமன். பெண்ணைக் கொடுத்தவனாய் இருப்பினும் தாயுடன் பிறந்தவனைப்போல் நேயம் மீதூர்ந்துள்ளமையால் மாதுலன் என நேர்ந்தான்.

எதிரிக்கு ஏற்றம் கொடுத்து உன் குடியைக் கெடுக்க நேர்ந்தாயே! குடி கேடு என்று அடிமூலம்காட்டிப் படுநிலம் பாடினாள்.

"பேதை உன்துணை யார் உளர் பழிபடப் பிறந்தார்?"

பிறந்த குடியைத் தடம் தெரியாமல் துடைத் தொழிக்கத் தொடங்கிய உன்னைப்போல மடமையும் பழியுமுடைய பெண் இந்த உலகில் எங்கேயாவது பிறந்தது உண்டா? இருந்தால் சொல் அம்மா!

6. மேலும் உன் தந்தைக்குப் பகைவர் பலர் உளர். இந்த அயோத்தி வேந்தரது ஆதரவினாலேயே யாதொரு அல்லலு மின்றிச் சுகமே இருந்து வருகிறார். பேராதரவுடைய பெரியவரிடமிருந்து அரசு நழுவின் அன்றே உங்களுக்கு அழிவாம்.

அழிவு நிலையை உணராமலும் வழிவகை தெரியாமலும் பழியுறப்புகுந்தாய். படு பழியும் அடு துயரும் அளவிடலரியன.

"சுற்றமும் கெடச் சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய்!" என்றது கேட்டின் நிலைகளை விளக்கிக் காட்டியவாறும்.

7. இராமன் அரசு அடையின், அவன் பிள்ளைக்கும் அவனது மகனுக்குமாய் வழிவழியே அரசுரிமை தொடர்ந்து போம்.

போகவே, உன் அருமை மகன் பரதன் அரசகுல வாசனையே இல்லாமல் அவமே அழிந்தான்.

இச்சமயம் அரசை நழுவ விடின், பின்பு என்றும் உங்களுக்கு உய்தியில்லை. எவ்வழியும் இழிவேயாம்.

இவ்வாறு கூனி கூறிமுடித்தாள்.

காரண காரியங்களை உருப்படுத்தித் தருக்கமுறையில் இவள் பேசியிருக்கும் உரைகள் முறையே ஓர்ந்து நோக்கத்தக்கன.

கேகய தேசத்தில் இருந்தவள் ஆதலால் அந்த மன்னனுக்கு நேர்ந்திருந்த இன்னல் நிலைகளையும் பகைவகைகளையும் தொகையாகத் துலக்கினாள்.

பிறந்த குடியிடமும் தந்தையின்மீதும் கைகேசி மிகுந்த அன்புடையவள் ஆதலின் அதன் கெடுநிலைகளையும் அவன் அடையும் அவமானங்களையும் தொடர்ந்து குறித்தாள். உரைகள் தோறும் தன் உள்ளக்கருத்தை உள்ளே உறுத்தியுள்ளாள். ஒரு பெரிய நியாயவாதிபோல் தன் போதனைக்குப் பல சாதனங்களை ஆதாரமாகச் சாதித்துச் சாதுரியமாகப் பேசியிருக்கிறாள்.

இராமன்பால் அரசி பேரபிமான முடையவள் என்று தெரிந்துகொண்டமையால் அவனைக் குறித்துப் பின்பு குறையாக ஒன்றும் கூறவில்லை. அவன் முடி சூடினால் மாற்றவள் அடையும் ஏற்றங்களையும், தான் பிறந்த இடத்துக்கு நேரும் பிழைபாடுகளையுமேபெருக்கி எடுத்து உருக்கமுடன் உரைத்தாள்.

## கைகேசி மனம் மாறியது.

கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்ற பழமொழிப்படி கூனி உரையால் கைகேசி உள்ளம் திரிந்தது. தலைமையான அன்புடன் பண்பு நிறைந்து யாண்டும் நிலை திரியாமல் நிலைத்திருந்த நல்ல நெஞ்சும் நஞ்சு தோய்ந்த பால்போல் தீயதாகித் தீங்கு ஊக்கி நின்றது.

தேவி தூய சிந்தையும் திரிந்தது

தீய கூனியின் வாயால் கைகேசியின் உள்ளம் திரிந்த நிலையைக் குறித்துக் கவி இங்ஙனம் இரங்கி இருக்கிறார். உம்பை அந்த உள்ளத்தின் உறுதியையும் உயர்வையும் உணர்த்திநின்றது

அத்தகைய உத்தம சித்தம் கிழவியின் சூழ்வினையாலும், பழைய ஊழ்வினையினாலும் ஊனம் அடைய நேர்ந்தது.

"இமையோர் மாயையும், அவர் பெற்றுள வரம் உண்மையாலும், அந்தணர் அருந்தவத்தாலும்" சிந்தை திரிந்தது என்றமையால் கூனி மட்டும் அன்று வேறு சில சூழ்வுகளும் கூடி இங்கே வேலை செய்துள்ளன என்று தெரிகின்றது.

மாறாத சிந்தை மாறியதற்கு நேரான காரணங்களை நினைவுறுத்திய படியிது. கூனியின் மூலமாகவே வானவர் தங்கள் காரியத்தைச் சாதித்திருக்கின்றனர். அந்தக் கிழவி மனம் இவ்வளவு மூண்டு வேலை செய்ததற்கு மூல காரணம் இமையவர் மூட்டிய மாய மந்திரங்களேயாம். சிறந்த மாயாவிகள் ஆதலால் தம் செயல் வெளியே தெரியாதபடி கிழவியை ஏவிவிட்டுள்ளனர்.

அவர் பெற்றுள வரம் என்றது முன்னம் தேவர்கள் திருமாலிடம் சென்று இராவணன் முதலிய அரக்கர்கள் புரியும் தீமைகளைக்குறித்து முறையிட, அதற்கு அப்பெருமாள் தானே வந்து அவதரித்து உபகரித்து அருளுவதாக உரைத்துள்ள வரத்தை.

அந்த வானவர் பெருமானே "தசரதன் மதலையாய் வருதும் தாரணி" என்று முன்னம் சொன்னபடியே இராமனாய் ஈண்டு வந்துள்ளான். அவன் கருதி வந்தவாறே கானகம் போகக் காரியம் மூண்டுள்ளது.

அமரர் வரமும் அந்தணர் தவமும் அந்தரங்கமாய் வேலை செய்யக் கூனி வெளியே பகிரங்கமாய்த் தொழில் புரிந்துள்ளாள்.

வினை விளைவை விளக்கியிருக்கும் விநயம் நோக்குக.

"அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்,
துரக்க நல்அருள் துறந்தனள் தூய்மொழி மடமான்."

அமரர் வரமும், முனிவர் தவமும் முன்னம் குறிக்கப்பட்டன; இதில் பின்னும சில எண்ண வந்தன. அல்லவர் என்றது தேவர்களை. பாவமும் அறமும் பலன் விளைத்துள்ளன என்க.

தூய்மொழி மடமான் எனக் கைகேசியை இங்கே குறித்தது அவளது இயல்பான இனிய நிலைமை கருதி. அந்தத்தூய்மொழி தீய்மொழியாய்த் திரிந்து நோய் விளைக்க நேர்ந்தது. இளமை

மென்மைகளைக் குறித்துவரும் மடம் என்னும் சொல் இளிவுக் குறிப்பில் தொனித்தது.

தேவர்கள் செய்த புண்ணியமும், அரக்கர்கள் புரிந்த பாபமும் ஒருங்கே திரண்டு உள்ளம் புகுந்து ஊக்கித் தள்ளினமையால் கைகேசி தனது நல்ல கருணையை இழந்தாள்; எனவே அவள் நெஞ்சம் திரிந்த நிலைமை தெரிந்தது. நல் அருள் என்றது எல்லார்க்கும் இனிய நீர்மையாய்த் தருமசீலங்களை வளர்த்து இருமையும் இதம்புரிந்து வரும் தகைமை கருதி.

அந்த நல்ல தயை போயது என்றமையால் பொல்லாத கொடுமை புகுந்து நின்ற நிலைமை புலனாயது. நெஞ்சம் கொடியளாய் நெடுந் தீமை புரிய அரசி அடியிட்டுள்ளமை அறியவந்தது.

கைகேசியின் உள்ளத்தில் நிறைந்திருந்த அருள் இன்னவாறு நீங்கியது என்று குறித்து அதன் பின் அந்நீக்கத்தின் நிலைமையையும் பலனையும் விளக்கி யிருக்கிறார்.

"இரக்கம் இன்மையன்றோ இன்று இவ்வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே."

கைகேசி அருள் துறந்து இரக்கம் இன்றி வன்னெஞ்சளாய் அன்று நின்றமையால் அன்றோ இவ்வுலகங்கள் எல்லாம் இராம சரிதமாகிய அமுதத்தை இன்று பருகி வருகின்றது! என்னும் இது அமிர்த வசனமாய்ப் பெருகி வந்துள்ளது.

பொல்லாத நிலையிலிருந்து எல்லா உயிர்களுக்கும் ஒருபெரிய இன்ப நலன் விளைந்திருக்கின்றது எனக் கவி இங்கேநினைவுறுத்தியிருக்கும் அழகு உணருந்தோறும் உவகை சுரந்து வருகின்றது.

கைகேசி அருளுடையளாய் இரங்கி இருப்பின், இராமன் கானகம் போகாமல் அயோத்தியில் அமர்ந்தே அரசுபுரிந்திருப்பன்; அவ்வாருயின் அவனுடைய வீரப் பிரதாபங்கள் யாவும் வெளிப்பட்டிரா. இரக்கமின்றிக் கொடிய நெஞ்சளாய் அவள் மாறியதனுலேதான் இராமன் முடிதுறந்து வனம் புகுந்தான்; அதனல் அவன் புகழ் வானும் வையமும் வளமுற வளர்ந்தது. அவனது சரிதம் ஒரு பெரிய இராமாயணம் ஆய்ப் பெருகி எழுந்தது. உயிரினங்களெல்லாம் அதனைப் பருகி மகிழ்ந்து வழி வழியே தொடர்ந்து விழுமிய நிலையில் உயர்ந்து வருகின்றன.

உலகங்கள் என்று பன்மையில் குறித்தது, இராம சரிதம் பலமொழிகளிலும் பரவிப் பல்வேறு வகைப்பட்ட நாட்டு மக்கள் பலரையும் பரவசப்படுத்தி வருதல் கருதி.

உயிர்களுக்கு உவகை சுரந்து உறுதிநலங்களை உணர்த்தி இம்மையும் மறுமையும் இன்பம் பயந்து வருதலால் இராமன் புகழ் அமுதம் என விளைந்தது.

அமிர்தம் இருந்த இடத்திலேயே இருந்து தன்னை வந்து உண்டவர்க்கு உடல் விருந்தாய் ஓரளவு இன்பம் தரும்; இராமசரிதம் எங்கும் பரந்து விரிந்து எல்லா வுயிர்கட்கும் அதிமதுரமான அறிவு விருந்தாய்ப் பெரிதும் சுவை பயந்துள்ளது.

நாளும் நாளும் நவ நவமாய்ப் பரவி உவகை நிலையமாய் ஓங்கி வருதலால் பரக்கும் தோல் புகழ் என வந்தது.

இந்த அமிர்த வாரிதி பெருகி எழுதற்குக் கைகேசியின் இரக்கம் இன்மை இனமாயிருந்தமையால் அதனை உவந்து போற்றினர்.

இராம சரிததனதைப பூரணமாகத் தான் பாடி மகிழ்தற்கு அவள் இரக்கம் இன்மை காரணமாயுள்ளமையைக்கருதி மகிழ்ந்து கவி அதற்கு இவ்வாறு வணக்கம் கூறியிருக்கிறார்.

“எங்கள் இனிய இராமனைக் கொடிய படுபாவி காட்டுக்கு ஓட்டினளே” என்று நாட்டு மக்கள் கொதித்துத் திட்டாதபடி குணப்படுத்தி நிறுத்திக் கொடுமையை மணப்படுத்தி யருளினர்.

கவியின் மதிநலம் அதிமகிமையாய் அறிவுலகிற்கு யாண்டும் இனிய சுவை நுகர்வுகளைத் தனி யுதவி வருகின்றன. ஒருத்தியின் இரக்கமின்மை இரக்கம் இல்லாத அரக்கர் வருக்கம் அனைத்தும் அழிதற்கு ஏதுவாய் நின்றது.

தன் உள்ளம் திரிந்து இங்ஙனம் ஊனமான கைகேசி கூனியை உவந்து தழுவி, “அம்மா! நீ சொல்லியன எல்லாம் உண்மையே; நான் இது வரையும் மடமையால் மதிமயங்கி இருந்துள்ளேன்; இனி மயங்கேன்; உன்னால் உணர்வு வந்தது; உறுதி தெளிந்தேன். எனது அருமை மகனுக்கு அரசு முடி சூடும் உபாயத்தை அறிவிக்கவேண்டும்” என்று விழைந்து கேட்டாள்.

இந்த உரைகளைக் கேட்டதும் கிழவிக்கு உளவாய உவகைக்கு அளவே இல்லை. "கேகயன் பாக்கியமே! நீ பெருமகிமை அடைந்தாய்; உலகம் முழுவதுக்கும் பரதன் அரசனாய்த் தனியுரிமை பெற்றான். முன்னம் சம்பரன் போரில் மன்னன் உனக்குத் தருவதாக வாக்களித்துள்ள வரங்கள் இரண்டையும் விநயமாக வாங்கிக்கொள்; கொண்டபின், ஒன்றால் பரதனுக்கு முடி சூட்டுக; மற்றதால் இராமனைக் காட்டுக்கு ஓட்டி விடுக. பின்பு எல்லாம் நமக்கு நன்மையாம்" என்று அப்பொல்லாக் கிழவி போதித்து விட்டாள்.

கைகேசி உள்ளம் களித்தாள்; கூனியை உவந்து போற்றினாள். சொல்லியபடியே செய்து முடிக்கத் துணிவுமீக் கொண்டாள். அவளது மனவுறுதியையும், மகிழ்ச்சியையும் அயலே வரும் கவிகளில் காண்க.

உரைத்த கூனியை உவந்தனள் உயிருறத் தழுவி
நிரைத்த மாமணி ஆரமும் நிதியமும் நீட்டி
இரைத்த வேலைசூழ் உலகம்என் ஒருமகற்கு ஈந்தாய்!
தரைக்கு நாயகன் தாய்இனி நீஎனத் தணியா; (1)

நன்று சொல்லினை நம்பியை நளிர்முடி சூட்டல்;
துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்; இவ்விரண்டும்
அன்ற தாமெனில் அரசன்முன் ஆருயிர் துறந்து
பொன்றி நீங்குதல் புரிவென்யான் போதிநீ என்றாள். (2)
(மந்தரை சூழ்ச்சி, 83, 84)

உள்ளம் திரிந்த கைகேசி வாயிலிருந்து பொல்லாத வார்த்தைகள் இப்படிப் புறம் போந்துள்ளன.

அவளுடைய ஆங்காரமும் கொடுமையும் இங்கே நெடிது ஓங்கி நிற்கின்றன. என் மகனை முடி சூட்டி வைத்துச் சக்களத்தி மகனைக் காட்டுக்கு ஓட்டியே தீருவேன். இது முடியேனேல், என் உயிரை மன்னன் முன்னிலையில் வன்பழியாக மாய்த்தே விடுவன் என்னும் இதில் அவளது வன்கண்மையும் மனப்புன்மையும் நீலித்தனமும் நிலை தெரியலாகும்.

கோடாத கைகேசி கோடினளே! கூனியுடன்
கூடியதால் என்னே குமரேசா? —கூடும்
நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும்; மாந்தர்க்கு
இனத்தியல்பதாகும் அறிவு. (திருக்குறட்குமரேசவெண்பா, 452)

என்னும் பொது மறைப் பொருளை இவள் புவி அறியவைத்தாள்.

நெஞ்சம் கொடியளாய் நிலைமாறியவள் தனது தலைமையான அரசியின் கோலத்தைக் கலைத்து அவலக் கோலம் பூண்டாள்.

உயர்ந்த மணியணிகளை அவிழ்த்து எறிந்தாள். திலகத்தைத் துடைத்தாள்; சின்னத்துணியை உடுத்திக் கொண்டாள்; மலர் மாலையைப் பிச்சி வீசித் தலையை விரித்துத் தரையில் கிடந்தாள்.

சக்கரவர்த்தி இரவு தன் படுக்கைக்கு வருவார்; அப்பொழுது தன் கருத்தை முடித்துக் கொள்ளலாம் என்னும் துணிவால் கபட நாடகமான இந்தச் சாகசங்கள் நிகழ்ந்தன.

நடு நிசியில் கைகேசியின் அந்தப்புரத்திற்குத் தசரதன் வந்தது; நிலைமையைக் கண்டது; நெஞ்சம் மயங்கியது; வாய் வழுவி வரம் கொடுத்தது; நோயுழந்து நொந்து முடிந்தது முதலிய வரலாறுகள் எல்லாம் முன்னரே*குறிக்கப் பட்டுள்ளன. அவற்றை ஈண்டு இணைத்து நோக்கிக் கொள்ளுக.

உள்ளம் திரிந்து இவ்வாறு கள்ளம் புரிந்து கிடந்த கைகேசி நள்ளிரவில் வந்த தன் நாயகனிடம் தான் கருதியபடியே வரங்கள் இரண்டையும் பெற்றுக் கொண்டாள். இவள் வஞ்சித்ததை அறிந்து மன்னன் மறுகி விழுந்தான். இரவு கழிந்தது. பொழுது விடியவும் முடிசூட்டு மண்டபத்தில் மங்கல ஆயத்தங்கள் யாவும் நிறைந்திருந்தன.

## இராமனது மகுடதாரண வைபவம்.

அரச குழாங்களும் அந்தணர் திரள்களும் தேசமக்களும் ஆசை மீதூர்ந்து எங்கணும் நிரம்பினர். ஆண் பெண் அடங்கலும் இராமன்பால் பேரன்புடையராய்ப் பெருகி நிமிர்ந்தனர்.

"மாதர்கள் கற்பின் மிக்கார், கோசலை மனத்தை ஒத்தார்;
வேதியர் வதிட்டன் ஒத்தார்; வேறுள மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார்; அன்னாள் திருவினை ஒத்தாள்; அவ்வூர்ச்
சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன் தன்னை ஒத்தார்."

கோசலை தசரதன் சீதை வசிட்டன் என்னும் இந்நால்வரும் போலவே நானிலத்திலுள்ள மக்கள் யாவரும் இராமனிடம் உள்ளம் உருகி உரிமை கூர்ந்திருந்தனர் என்பதை இவ்வாறு உணர்த்தியிருக்கிறார்.

*இந்நூல் பக்கம் 543 முதல் தொடர்ந்து படித்துக் கொள்க.

**இங்ஙனம் பேரார்வமுடைய மாந்தர் அனைவரும் விழாவினைக் கண்டு மகிழ விரைந்து புகுந்தார். வேந்தர் முதலான குழுக்கள் வரம்பு காண முடியாதபடி வந்து குவிந்தன.**

வேந்தரே பெரிது என்பாரும், வீரரே பெரிது என்பாரும்,
மாந்தரே பெரிது என்பாரும், மகளிரே பெரிது என்பாரும்,
போந்ததே பெரிது என்பாரும், புகுந்ததே பெரிது என்பாரும்.
தேர்ந்ததே தேரின் அல்லால் யாவரே தெரியக் கண்டார்? (1)

நலங்கிளர் பூமி என்னும் நங்கையை நறுந்துழாயின்
அலங்கலான் புணரும் செல்வம் காணவந் தடைந்திலாதார்
இலங்கையி னிருதரே இவ் ஏழுலகத்து வாழும்
விலங்கலும், ஆசை நின்ற விடாமத விலங்க லேயால், (2)

சந்திரர் கோடி என்னத் தரள வெண் கவிகை ஓங்க
அந்தரத் தன்னம் எல்லாம் ஆர்ந்தெனக் கவரி துன்ன
இந்திரர்க் குவமை சாலும் இருநிலக் கிழவர் எல்லாம்
வந்தனர் மௌலி சூட்டு மண்டபம் மரபிற் புக்கார். (3)

முற்பயந் தெடுத்த காதற் புதல்வனை முறையி னோடும்
இற்பயன் சிறப்பிப்பாரின் ஈண்டிய உவகை தூண்ட
அற்புதன் திருவைச் சேரும் அருமணம் காணப் புக்கார்
நற்பயன் தவத்தின் உய்க்கும் நான்மறைக் கிழவர் எல்லாம்.(4)

விண்ணவர் விசும்பு தூர்த்தார்; விரிதிரை உடுத்த கோல
மண்ணவர் திசைகள் தூர்த்தார்; மங்கல மிசைக்கும் சங்கம்
கண்ணகன் முரசின் ஓதை கண்டவர் செவிகள் தூர்த்த;
எண்ணருங் கனக மாரி எழுதிரைக் கடல்கள் தூர்த்த. (5)

விளக்கொளி மறைத்த மன்னர் மின்னொளி மகுடகோடி,
துளக்கொளி விசும்பி னூரும் சுடரையும் மறைத்த; சூழ்ந்த
அளக்கர்வாய் முத்த மூரல் முறுவலார் அணியின் சோதி
வளைக்கலாம் என்றவ் வானோர் கண்ணையும் மறைத்த அன்றே.

ஆயதோர் அமைதியின்கண் ஐயனை மகுடம் சூட்டற்கு
ஏயுமங் கலங்க ளான யாவையும் இயையக் கொண்டு
தூயநான் மறைகள் வேத பாரகர் சொல்லத் தொல்லை
வாயல்கள் நெருக்கம் நீங்க மாதவக் கிழவன் வந்தான். (7)

கங்கையே முதல வாய கன்னியீ றான தீர்த்த
மங்கலப் புனலும் நாலு வாரியின் நீரும் பூரித்து
அங்கியின் வினையிற் கேற்ற யாவையும் அமைத்து வீரச்
சிங்க ஆதனமும் வைத்துச் செய்வன பிறவும் செய்தான். (8)

கணிதநூல் உணர்ந்த மாந்தர் காலம்வந் தடுத்த தென்னப்
பிணியற நோற்று நின்ற பெரியவன் விரைவின் ஏகி
மணிமுடி வேந்தன் தன்னை வல்லையிற் கொணர்தி என்னப்
பணிதலை நின்ற காதற் சுமந்திரன் பரிவிற் சென்றான். (9)

(கைகேசி சூழ்வினைப் படலம், 69-78)

முடிசூட்டு விழாவில் நிகழ்ந்துள்ள பெருமித நிலைகளையும், அரசர் திரள்களையும், அருமைப்பாடுகளையும், ஆர்வ விளைவுகளையும், சீர்மைச்சிறப்புகளையும், மங்கலக் காட்சிகளையும்கூட்டத்தின் மாட்சிகளையும் இங்கே கண்டுமகிழ்கின்றோம். நிகழ்ச்சிகளை விளக்கியிருக்கும் நிலைகள் நினைந்து இன்புறற் பாலன.

இலங்கை அரக்கர், அட்டகுல பருவதங்கள், திக்குயானைகள் என்னும் இந்த மூன்று இனம் தவிர உலகிலுள்ள மற்ற எல்லாரும் இந்த மகுட தாரண வைபவத்திற்கு வந்திருந்தனர் என்றதனால் வரவு நிலையும் உறவு முறையும் உணரலாகும். விலங்கல் = மலை. ஆசை = திக்கு. வாராத இனம் மூன்று என்று சுட்டி வந்த வரவை விளக்கியிருக்கும் அழகு பார்க்க.

தங்களுடைய அருமையான தலைமைப் புதல்வனுக்குத் திருமணம் நடத்துவதில் தாயும் தந்தையும் எவ்வாறு உளங்களித்திருப்பரோ, அவ்வாறே உலக மாந்தர் யாவரும் இராமனிடம் உரிமை மீதூர்ந்து உவந்து நிறைந்தனர்.

விண்ணவரும் மண்ணவரும் கண் பெற்ற பயனை இன்று காணப்பெற்றோம் என்னும் களிப்புடன் அங்கும் இங்கும் எங்கும் நெருங்கி இன்பக் காட்சியை எதிர்பார்த்து நின்றனர்.

அரச குழாங்களின் மகுடகோடிகள் நீண்ட ஒளி வீசி யாண்டும் நிலாவி நிமிர்ந்தன. ஞானசீலரான அருந்தவர்கள் புடைசூழ வசிட்டமுனிவர் வந்து கலியாண மண்டபம் புகுந்தார்.

கங்கை முதலிய மங்கலதீர்த்தங்களும் பூரண கும்பங்களும் விழாவிற்குரிய உபகரணங்கள் யாவும் நிறைந்திருந்தன. முகூர்த்த காலம் நெருங்கியது. சக்கரவர்த்தியை அழைத்து வரும்படி வசிட்டர் முதல்மந்திரியை நோக்கினார். சுமந்திரன் விரைந்து சென்றான். அரண்மனையில் தசரதனைக் காணாமையால் கைகேசி மாளிகையை அணுகித் தனது வரவைத் தாதியர்களிடம் கூறி

ளுன். தோழியர் உள்ளே போய்ச் சொல்லினர். சொல்லவே இராமனை அங்கே அழைத்துவரும்படி அரசி சொல்லிவிட்டாள்.

விண்தொட நிவந்த கோயில் வேந்தர்தம் வேந்தன் தன்னைக்
கண்டிலன் ; வினவக் கேட்டான்; கைகயன் கோயில் நண்ணித்
தொண்டைவாய் மடந்தை மாரில் சொல்ல,மற்றவரும்சொல்லப்
பெண்டிரில் கூற்றம் அன்னாள் பிள்ளையைக்கொணர்கஎன்றாள்.

(கைகேசி சூழ்வினை, 79)

தசரதனைத் தேடிச் சுமந்திரன் வந்ததும், அந்தப்புரத்தை அடைந்ததும், தோழியரிடம் சொன்னதும், கைகேசி உடனே பதில் உரைத்ததுமாகிய காட்சிகளை இக்கவிப் படத்தில் நேரே காண்கின்றோம். அரச மாட்சிகளை அறிந்து வியக்கின்றோம்.

செவிப் புலனுன எழுத்து ஒலிகள் நடந்த நிகழ்ச்சிகளை விழி எதிரே தெளிவாக விளக்கியருளும் விசித்திரம் அதிவினோதமாயுள்ளது. சொல் ஓவியங்களில் உள்ளுயிர்கள் ஒளிர்கின்றன.

மந்திரி மாளிகை அயல் நிற்கவே, அரசி உள்ளிருந்தபடியே "அரசர் பிரான் மகுட விழாவை எண்ணி இரவு முழுவதும் கண்விழித்திருந்தமையால் இப்பொழுது அயர்ந்திருக்கிறார் ; இராமனை ஈண்டு அழைத்து வருக" என்று விதி இழைத்தபடியாய்ச் சதி இழைத்துச் சதுருடன் விளம்பி விட்டாள்.

பெண்டிரில் கூற்றம் அன்னாள் பிள்ளையைக் கொணர்க என்றாள்.

இராமனை இங்கே கொண்டுவருக என வெளியே இனிமையாக வாய்திறந்து சொல்லியவளது உள்ள நிலைமையை இவ்வாறு உணர்த்தியிருக்கிறார்.

பெண்டிரில் கூற்றம் என்றது பெண் உருவில் மருவியுள்ள எமன் என்றபடி. இனிய பெண்குலத்துள்ளே கொடிய கூற்றம் புதிதாய்க் குடிபுகுந்தது என இப்படு பாவி தோன்றினளே ! என்று அவள் தோற்றம் இப்படித் தூற்றத் தலைப்பட்டது.

கொண்ட கணவனைக் கொல்ல நேர்ந்துள்ளமையால் கூற்றம் என்றார். கொடிய கொலை பாதகி இனிமையான அருமைப் பிள்ளையைத் தன் எதிரே அழைத்துவரச் சொன்னளே ! என்ன நேருமோ? என்று இன்னலுடன் நெஞ்சம் அஞ்சி யிருக்கிறார்.

அடுத்து நிகழும் அவலக்கேடுகளை எல்லாம் பெயர்க் குறிப்பால் முன்னுறக் குறித்தருளினர்.

பிள்ளை என்ற சொல் உள்ளம் உருக வந்தது.

மந்திரி ஐயுருதபடி இந்த அன்பு வாசகத்தை இன்புற இசைத்து விரைந்து கொண்டுவரும்படி விரகுடன் விடுத்தாள்.

இவ்வுரையைக் கேட்ட சுமந்திரன் உண்மையை உணராமல் உள்ளம் களித்து இராமனிடம் விரைந்து சென்று உற்றதை உரைத்தான்.

சுமந்திரன் சொன்னது.

கொற்றவர் முனிவர் மற்றும் குவலயத் துள்ளார் உன்னைப்
பெற்றவன் தன்னைப் போலப் பெரும்பரிவு இயற்றி நின்ருர்;
சிற்றவை தானும் ஆங்கே கொணர்கெனச் செப்பினள் அப்
பொற்றட மகுடம் சூடப் போதுதி விரைவின் என்ருன். (1)

இராமன் எழுந்தது.

ஐயனும் அச்சொற் கேளா ஆயிர மௌலி யானைக்
கைதொழுது அரசவெள்ளம் கடலெனத் தொடர்ந்து சுற்றத்
தெய்வ கீதங்கள் பாடத் தேவரும் மகிழ்ந்து வாழ்த்தத்
தையலார் இரைத்து நோக்கத் தாரணி தேரில் சென்ருன். (2)

வீதியில் நிகழ்ந்தது.

திருமணி மகுடம் சூடச் சேவகன் செல்கின் ருன்என்று
ஒருவரின் ஒருவர் முந்திக் காதலோ டுவகை யுந்த
இருகையும்இரைத்துமொய்த்தார் இன்னுயிர்யார்க்கும்ஒன்ருய்ப்
பொருவருந் தேரிற் செல்லப் புறத்திடைக் கண்டார்போல்வார்.

துண்ணெனும் சொல்லாள் சொல்லச் சுடர்முடி துறந்து தூய
மண்எனும் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம் வள்ளல்
பண்எனும் சொல்லினர் தம் தோள்எனும் பணைத்த வேயும்
கண்எனும் கால வேலும் மிடைநெடுங் கானம் புக்கான். (4)

சுண்ணமும் மலரும் சாந்தும் கனகமும் தூவ வந்து
வண்ணமே கலையும் நாணும் வளைகளும் சிந்துவாரும்
புண்ணுற அனங்கன் வாளி புழைத்ததம் புணர்மென் கொங்கை
கண்ணுறப் பொழிந்த காம வெம்புனல் கழுவு வாரும். (5)

அங்கணன் அவனிகாத்தற் காமிவன் என்ன லாமோ
நங்கண் அன்பிலன்என் றுள்ளம் தள்ளுற நடுங்கி நைவார்
செங்கணும் கரிய கோல மேனியும் தேரு மாகி
எங்கணும் தோன்றுகின்றார் எனைவரோ இராமன் என்பார்.
(கைகேசி சூழ்வினை. 80-86)

சுமந்திரன் வந்து சொன்ன உடனே இராமன் தேர்மேல் எழுந்தருளிக் கைகேசி மாளிகையை நோக்கி வந்தான்; வருங்கால் வீதிகளில் பலவகையான மங்கலப் பொருள்களை வாரித் தூவி ஆர்வ மீதூர்ந்து கண்டு யாவரும் இவ்வாறு ஆனந்தக் காட்சியராய் நின்றார். அந்தக் காட்சி நிலைகள் அவனது திவ்விய சவுந்தரிய மாட்சிகளைக் காட்டி இடங்கள் தோறும் நமக்கு மகிழ்ச்சியூட்டி வருகின்றன.

"கொற்றவர் முனிவர் மற்றும் குவலயத்துள்ளார் உன்னைப்
பெற்றவன் தன்னைப் போலப் பெரும் பரிவு இயற்றி நின்றார்"

என்றது தான் முடி சூடுவதில் உலகம் கொண்டிருக்கும் உவகை நிலையை இளவரசுக்கு உளமகிழ உணர்த்திய வாறும்.

தங்கள் தந்தையாரைப் போலவே உலகத்தில் உள்ள எல்லாரும் உங்கள்பால் பேரன்பாளராய்ப் பெருகி நிற்கின்றார் என இராமனிடம் சுமந்திரன் உரைத்திருக்கும் இந்த உரை அவனது உள்ளன்பையும் வெளிப்படுத்தியுள்ளது.

கொற்றவர் என்றது அரசர்களை. மன்னரை முன்னுறக் குறித்தது அவர் அன்புறுதல் அருமை ஆதலால் அதிசய நிலையில் அமைந்துள்ள அவரது உள்ளக்காதலை முதன்மையாகக் குறித்துக் காட்டி உவகையும் ஊக்கமும் ஒருங்கே ஊட்டினன்.

உலகப் பற்று அற்ற மாதவரும் உன்பால் பெரும் பற்று உடையராய்ப் பெருகி யுள்ளனர் என்பதை முனிவர் என்ற இனிய மொழியால் விளக்கினன்.

குவலயத்து உள்ளார் என்றது பூமியில் உள்ள அனைவரும் என்றவாறு. குவலயம்=பூமி. குடிசனங்கள் முதலாக உலகம் அடங்கலும் ஒருமுகமாகவே உரிமை மீதூர்ந்து எதிர் நோக்கி உள்ளமையை உணர்த்தியபடியிது. பரிவு=உள்ளம்உருகிய அன்பு.

உங்கள் சிறிய தாயாரும் அவ்வாறே உருகிய நெஞ்சராய் உங்களைத் தம்பால் அழைத்துவரச் சொல்லினர் என்பான்,

"சிற்றவைதானும் கொணர்க எனச் செப்பினள்" என்றான். கைகேசியின் உள்ளக் கள்ளம் ஒரு சிறிதும் உணராமையால் வந்த மந்திரி இந்தவாறு சிந்தை குளிர்ந்து பேசினன்.

சிறியதாய் அழைப்பைக் கேட்டவுடனே இராமன் உள்ளம் உவந்து விரைந்து எழுந்து தெய்வ சிந்தனையுடன் தேர் மேல் ஏறினன். "அரச வெள்ளம் கடல் எனச்சுற்ற, தெய்வ கீதங்கள் பாட, தேவரும் வாழ்த்த தையலார் இரைத்து நோக்கத் தேரில் சென்றான்." என்றதனால் இவனது திருவின் காட்சியும் தெய்வப் பெற்றியும் தெரிய வந்தன.

இங்ஙனம் அழகிய இரதத்தில் ஏறிக் கைகேசி மாளிகையை நோக்கி இராமன் செல்லுங்கால் வீதிகள் எங்கும் மாதரும் மைந்தரும் திரண்டு ஆதர மீதூர்ந்து பார்த்து ஆனந்த பரவசராயினர்.

"திருமணி மகுடம் சூடச் சேவகன் செல்கின்றான்" என்றமையால் முகூர்த்தகாலம் வந்தது; அரசைமுடிசூட்டஅழைத்துச் செல்கின்றார் என்று பொதுமக்கள் பேராவலோடு உவந்து பேசி விரைந்து தொடர்ந்துள்ளமை விளங்கி நின்றது.

இராச வீதியின் இரு வரிசைகளிலும் பெருந்திரளான சனங்கள் ஒருங்கு நெருங்கி உயிர்க்காதலுடன் உவந்து நோக்கி வியந்து பேசி விழைந்து நெளிந்தார் ஆதலால் "ஒருவரின் ஒருவர் முந்தி இருகையும் இரைத்து மொய்த்தார்" என்றார்.

"இன் உயிர் யார்க்கும் ஒன்றாய்ப், பொருவருந் தேரில் செல்லப் புறத்திடைக்கண்டார் போல்வார்" என்னும் இது கனிவு மிகவுடையது. நுணுகி உணர உரியது.

தேரில் சென்ற இராமனை மிதிலை வாசிகள் அங்கே கண்டு மகிழ்ந்த காட்சியை இங்கே நாம் கண்டு தெளியக் கவி இவ்வாறு காட்டியிருக்கிறார்.

எல்லாருடைய உயிர்களும் ஒருங்கு திரண்டு அதிசய அழகுடன் பசிய வண்ணமாய்த் தேரில் செல்வதை நேரில் பார்த்தது போல் இராமனை யாவரும் ஆவலுடன் தரிசித்து மகிழ்ந்தார் என்றமையால் அவரது மேன்மையான ஆன்ம உருக்கம் அறியலாகும். பரமான்ம தரிசனம் பகர்ந்த படியிது.

தங்கள்உயிரைப் புறத்தில் கண்டவராய் அகத்தில்களித்தார். களிப்புமீதூர்ந்து இங்ஙனம் காட்சியின்பம் துய்க்க இரதம் இனிது நடந்தது. பெண்கள் திரள்கள் எங்கும் பெருகின. இளவரசைக் கண்டு கண்டு கழிபேருவகை கொண்டார்.

"செங்கணும் கரிய கோல மேனியும் தேரும் ஆகி
எங்கணும் தோன்றுகின்றார் எனைவரோ இராமன்?"

என அனைவரும் அன்று வினவி வியந்து விழைந்து திளைத்தார்.

கண்ட கண்கள் எல்லாம் அவனையன்றி வேறொன்றையும் காணாமையால் அதிசய பரவசராய் இங்ஙனம் துதி செய்யலானார்.

இவ்வண்ணம் எவ்வழியும் அன்பு வெள்ளம் பெருக இன்ப வடிவமான அவ்வள்ளல் இனிது நடந்து வந்தான்.

வருகின்ற வழியில் நகரமாந்தர் பெருகி உருகி நோக்கி உவந்து போற்றினர். அனையவன் மேனி கண்டார் அன்பினுக்கு எல்லை காணார் என்றபடி உள்ளம்உருகிநின்ற அவர் தம்முள் அன்று உரையாடிய மொழிகள் அவருடைய உழுவலன்பினையும் உணர்வு நலங்களையும் விளக்கி யுள்ளன.

உய்ந்ததிவ் உலகம் என்பார்; ஊழி காண் கிற்பாய் என்பார்;
மைந்த நீ கோடி எங்கள் வாழ்க்கைகள் யாவும் என்பார்;
ஐந்தவித்து அரிதில் செய்த தவம் உனக்கு ஆக என்பார்;
பைந்துழாய்த் தெரிய லார்க்கே நல்வினை பயக்க என்பார். (1)

உயரருள் ஒண்கண் ஒக்கும்; தாமரை நிறத்தை ஒக்கும்;
புயல்மொழி மேகம் என்ன புண்ணியம் செய்தது என்பார்;
செயலருந் தவங்கள் செய்து இச் செம்மலைத் தந்த செல்வத்
தயரதற் கென்ன கைம்மா றுடையம் யாம் தக்க தென்பார். (2)

வாரணம் அரற்ற வந்து கரா உயிர் மாற்று நேமி
நாரணன் ஒக்கும் இந்த நம்பிதன் கருணை என்பார்;
ஆரணம் அறிதல் தேற்றா ஐயனை அணுகி நோக்கிக்
காரணம் இன்றி யேயும் கண்கள்நீர் கலுழ நிற்பார், (3)

நீலமா முகிலனான்றன் நிறைவினோடு அறிவு நிற்க;
சீலமார்க் குண்டு கெட்டேம் தேவரின் அடங்கு வானோ
காலமாக் கணிக்கு நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற
மூலமாய் முடிவி லாத மூர்த்தியிம் மூர்த்தி என்பார். (4)

ஆர்கலி அகழ்ந்தோர் கங்கை அவனியில் கொணர்ந்தோர் முந்தைப்
போர்கெழு புலவர்க்காகி அசுரரைப் பொருது வென்றோர்
பேர்கெழு சிறப்பின் வந்த பெரும்புகழ் நிற்பது ஐயன்
தார்கெழு திரள்தோள் தந்த புகழினைத் தழுவி என்பார். (5)

மின் பொருவு தேரின் மிசை வீரன் வருபோழ்தில்
தன்பொருவில் கன்றுதனி தாவிவரல் கண்டாங்கு
அன்புருகு சிந்தையொடும் ஆவுருகு மாபோல்
என்புருகி நெஞ்சுருகி நஞ்சுருகி நிற்பார். (6)

சத்திரம் நிழற்றநிமிர் தானையொடு நானு
அத்திரம் நிழற்றஅரு ளோடவனி ஆள்வார்
புத்திரர் இனிப்பெறுதல் புல்லிதென நல்லோர்
சித்திரம் எனத்தனி திகைத்துருகி நிற்பார். (7)

கார்மினொ டுலாயதென நூல்களுனு மார்பன்
தேர்மிசைநம் வாயில்கடி தேகுநல்செய் வானே
கூர்கனக ராசியொடு கோடிமணி யாலும்
தூர்மின் நெடு வீதியினை என்றுசொரி வாரும். (8)

தாய்கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தைகிளர் ஞாலமிவன் ஆள
ஈகையில் உவந்தனள் இயற்கையிது என்றால்
தோகையவள் பேருவகை சொல்லல்அரி தென்பார். (9)

பாவமும் அருந்துயரும் வேர்பறியும் என்பார்;
பூவலயம் இன்றுதனி யன்றுபொது என்பார்;
தேவர்பகை யுள்ளனஇவ் வள்ளல்தெறும் என்பார்;
ஏவல்செயு மன்னர்தவம் யாவதுகொல் என்பார். (10)

ஆண்டினைய ராயினைய கூறஅடல் வீரன்
தூண்டுபுர விப்பொருவில் சுந்தர மணித்தேர்
நீண்டகொடி மாடநிரை வீதிநிறையப் போய்ப்
பூண்டபுகழ் மன்னன்உறை கோயில்புகலோடும். (11)

(கைகேசி சூழ்வினை, 88-99)

இராமன் வீதிவழியே வருங்கால் நகர மாந்தர் கண்டு ஆனந்த பரவசராய் இவ்வாறு பேசியிருக்கிறார். அவருடைய உள்ளன்பும் உவகை நிலையும் உயிருருக்கமும் உரைகள் தோறும் இனிது நிறைந்து உணர்வு சுரந்துள்ளன. நிகழ்ச்சிகளும் உணர்ச்சி நலன்களும் எண் ணுன்றி நோக்கி இன்புறற்பாலன.

"ஆரணம் அறிதல் தேற்ரு ஐயனை அணுகி நோக்கிக்
காரணம் இன்றி ஏயும் கண்கள்நீர் கலுழ நிற்பார்?"

என்பதிலுள்ள ஆன்ம நேயமும் ஆதிமூலத் தொடர்பும் தத்துவ முடிவின் நித்திய நிலையும் உய்த்துணர வுரியன.

புனிதமான வேதங்களும் அறிந்துகொள்ளமுடியாத ஐயனை மனிதர் அருகு நெருங்கி நோக்கி உள்ளம் களித்து உருகிநின்ற நிலை இவ்வாறு உணர்த்தப்பட்டுள்ளது. ஆரணம் = வேதம்.

ஏதாவது காரணம் இருந்தால் ஒழிய மனிதன் கண்களிலிருந்து நீர் வெளியே வராது. கவலை துன்பம் பிரிவு முதலியன பெரும்பாலும் அழுகைக்குக் காரணங்களாம். அது அவலக்கண்ணீர் எனப்படும். அன்பு, இன்பம், ஞானங்களாலும் விழிநீர்பெருகும். இது ஆனந்தக் கண்ணீராம். இந்தப் பிந்திய வகையைச் சேர்ந்ததே இங்கு நிகழ்ந்த கண்ணீர். இளவரசைக் கண்டவுடன் தம்மை மறந்து அனைவரும் பரவசமா யுருகி யுள்ளனர்.

"அன்புருகு சிந்தையொடும் ஆ உருகுமாபோல்
என்பு உருகி நெஞ்சு உருகி நஞ்சுருகி நிற்பார்"

என்றமையால் மாந்தர் உருகியுள்ள நிலைமைகள் உணரலாகும். நஞ்சு = நைந்து. மனம் கரைந்து என்றபடி.

"நினைந்து உருகும் அடியாரை நையவைத்தார்; நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்." என அப்பரடிகள் கடவுளைநோக்கிக் கரைந்துள்ளதுபோல் இங்கே பரவசமான அன்புப் பெருக்கில் சனங்கள் இன்பக் கண்ணீர் வடித்திருக்கின்றனர்.

இராமன்பால் மக்கள் கொண்டிருக்கின்ற அன்பும் ஆர்வமும் அவர்தம் கண்கள் நீரினால் கண்டு நாம் கருதி உருகுகின்றோம். அவருடைய மனநிலையும் மதிப்பும் வியமும் ஆர்த்தி மீதூர்ந்து வார்த்தைகளில் மிளிர்கின்றன.

அவனி ஆள்வார், புத்திரர் இனிப் பெறுதல் புல்லிது;

என்றது உலகத்தை ஆளும் அரசர் இனிமேல் பிள்ளைகளைப் பெறுவது பேதைமையாம் என்றவாறு. கண்டவர்களுடைய உள்ளத்தையும் உயிரையும் கொள்ளைகொண்டுள்ள இந்தப் பிள்ளை எதிரே வேறு பிள்ளைகள் சூரியன் முன்னிலையில் மின்மினிப் பூச்சிகள்போல் மாழுய்ச் சீரழிந்து நிற்கும் என்பதாம்.

இக்குல மகனைப்போல் உலகத்தில் இனி என்றும் எங்கும் நல்ல தோன்றல்கள் தோன்றுதல் அரிது; ஒருவாறு ஓரளவு தோன்றினும் இப்பேரழகன் எதிரே அவர் பேரிலதாய் முடிவர்.

விண்ணில் பலகோடி உடுக்கள் தோன்றினும் ஒருதண்ணிய சந்திரனைப்போல் உலகம் இன்புற ஒளிசெய்து நில்லா; அது போல் மண்ணில் பிள்ளைகள் எண்ணில பிறப்பினும் இராமச்சந்திரனைப்போல் புண்ணிய நீர்மை பொலிந்து புகழ் மிகப்பெறா.

தசரதன் பெற்றதே பேறு; மற்றவர் பேறு வேறாம் என்றபடி.

எந்த மன்னன் எவ்வகைப் பிள்ளையைப் பெற்றாலும் இந்த மன்னனை எண்ணும் பொழுது அவன் பிள்ளைப் பேறு புல்லி தாய் இழிந்து பொலி விழந்து போகின்றது.

"மைந்தரைப் பெற்று வானுயர் தோற்றத்து மலர்ந்தார் எவரும் என் துணைத் தாளின் பைந்துகள்களும் ஒக்கிலராம் எனப்படைத்தாய்!" என இராமனைத் தழுவித் தசரதன் உருகியுள்ளதும் ஈண்டு உணர வுரியது.

இந்த அற்புத அழகனைப் பார்த்துப் பார்த்து ஆற்றாமை மீதூர்ந்தார். தேர் விரைந்து செல்லாதபடி விழைந்து புரிந்தார். தங்கள் மாளிகைமுன் கொஞ்சம் நின்று போவதை ஒவ்வொருவரும் கோடி தவமாகக் கருதி உறுதி நாடி ஓடி மகிழ்ந்தார்.

இவன் தாய் கையில் வளர்ந்திலன்; வளர்ந்தது கைகேசி கையில் ஆதலால் இவன் அரசுமுடி சூடுவதில் அவளது உவகை அளவிடலரிதாம் என உளம் மிக மகிழ்ந்து உரையாடி நின்றார்.

தோகையவள் பேர் உவகை சொல்லல் அரிது எனப் பொது சனங்கள் இவ்வாறு சொல்லியது, இளமையிலிருந்தே இராமனைக் கைகேசி கொண்டாடிவந்துள்ள அன்புரிமையை நன்கு அறிவித்து நின்றது. சிறிய தாயின் பெரிய ஆர்வம் பேசிய படியிது.

அந்தத் தாயுள்ளம் இப்பொழுது பேயுள்ளமா யுள்ளமையை உணராமையால் உலகம் இங்ஙனம் பழமை நினைந்து கிழமை பகர்ந்தது. ஈன்ற மாதாவினும் ஆன்ற அன்புரிமை இத்தோன்றல் பால் ஊன்றியிருந்த அவ்வூற்றம் மாறி ஊனமாய் ஈனம் விளைக்க நேர்ந்துள்ளதை ஞானிகளும் அறியாமல் நயந்து நின்றார். முடிசூடு

முன் படிகூடிய இந்த முடிவு பின் விளையும் பரிதாபத்திற்கு நேரா
தாக அடி கோலி நின்றது.

உள் விளைவு தெரியாது வெளி வரவில் உலகம் களி மிகுந்து
வந்தது. சிறிய தாயின் அன்புரிமையில் இங்ஙனம் பெரிய பேச்சு
கள் நிகழ்ந்தபின் அருமைமகனது ஆட்சிநலங்கள் பேசப்பட்டன.

பாவமும் அரும் துயரும் வேர் பறியும் என்றது இந்தப் புண்
ணிய மூர்த்தி அரசாள வந்துள்ளமையால் இனி இந்த உலகம்
உய்ந்தது; எங்கும் உயர் நலங்கள் பொங்கி மிளிரும் என்றவாறு.
தீய செயல்களும் துன்பங்களும் சன சமுதாயத்தில் அடியோடு
தொலைந்தன என்பார் வேர் பறியும் என்றார். மனிதன் அடையும்
துயரங்களுக்குத் தீவினையான பாவம் காரணம் ஆதலால் அந் நிலை
மை தெரிய அது முதலில் வந்தது.

நல்வினையான தருமங்களும் அவற்றின் பயனான இன்ப
நலங்களுமே மன்பதைகளிடம் இனி மருவி வளரும் என்பதாம்.

"பூவலயம் இன்று தனி அன்று; பொது"

என்றது தருமமூர்த்தியான இராமன் செங்கோல் தாங்கின் எல்
லாரும் சம உரிமையாளராய் நாட்டில் இன்பவாழ்க்கையை நடத்
துவர் என்பதாம்.

உலகம் எல்லாம் தனக்கே தனிவுரிமை என்று இறுமாந்து
கொண்டு குடிகளை அடிமைகளாக நடத்தும் அநியாய ஆட்சியை
மனித சமுதாயம் வெறுத்து வருதலால் இப் புனித மூர்த்தியின்
அரசுரிமையை மனம் உருகிப் புகழ்ந்து போற்ற நேர்ந்தது.

அருமைத் தந்தையும் உரிமை மகனும் போல் அரசும் குடியும்
உள்ளங்கலந்து ஒருமையுடன் உவந்து வாழுமாயின் அந்த நாடு
சுவர்க்கம்போல் திருவும் அறிவும் வலியும் பெருகி எங்கும் இன்பம்
வெள்ளம் பொங்கி நிற்கும் என்க.

அரசு தனி உடைமையாகக் கருதித் தருக்கின், அது நெடிது
நிலை பெறாது; பொது உடைமையாக இனிது ஒழுகின் ஊழியும்
தேயாமல் உள்ளுரம் பெற்று ஓங்கி வளர்ந்து ஒளி மிகுந்து
விளங்கும். மனித இனமும் மாண்பமைந்து துலங்கும்.

எல்லாச் சீவ கோடிகளுக்கும் இதமே கருதும் வள்ளல்
அரசுக்கு வருவதை விழைந்து உலகம் இங்ஙனம் உள்ளம் உவந்து

நின்றது. தேவர் பகை உள்ளன இவ்வள்ளல் தேறும் என்றது ஞான யோகிகளுடைய மோன மொழியாய் வந்தது.

தேரில் வருகின்ற இவ் வீர மூர்த்தியால் மனித உலகம் மாத்திரம் அன்று; தேவருலகமும் அல்லல் நீங்கி ஆனந்த அடையும் என்பதாம்.

பாவம் ஒழிந்தது; துயரம் தொலைந்தது; மனிதர் யாவரும் சமமாய் இன்பவாழ் வெய்தினர்; தேவரும் உயர்ந்தனர்; இவனுக்கு உரிமையாளராய் அருகு அமர்ந்து ஏவல் செய்யும் மன்னவர் என்ன தவம் செய்தனரோ? என எண்ணி வியந்தனர்.

இன்னவாறு பொது மக்கள் பெருமகிழ்ச்சியுடன் பேசி நிற்க இராமன் தந்தையை நாடி அரண்மனையுள்ளே சென்றான். அங்கே காணுமையால் அதன் பின் கைகேசி மாளிகையுள் புகுந்தான்.

தந்தையாரோடு சிறிய தாயாரையும் ஒருங்கே கண்டு வணங்கலாம் என்னும் காதலுடன் உள்ளே நுழைந்து உவந்து வந்தான். இரண்டாவது வாசலைக் கடந்து வருமுன் கைகேசி விரைந்து எதிரே சென்றாள். மன்னன் உள்ளே மறுகிக் கிடக்கும் நிலையை மகன் காணுதபடி இவ்வண்ணம் நன்னயமாக முன்னுற வந்தாள்.

பேரன்புடன் இக்குலமகன் வந்ததும், ஓரன்பும் இல்லாமல் அக்கொடியவள் எதிர்ந்ததும், இவன் படியில் விழுந்து வணங்கியதும், படுமொழி நிகழ்ந்ததும் அடியில் வருவன காண்க.

ஆயன நிகழும் வேலை அண்ணலும் அயர்ந்து தேருத்
தூயவன் இருந்த சூழல் துருவினன் வருதல் நோக்கி
நாயகன் உரையான் வாயால் நானிது பகர்வென் என்னுத்
தாயென நினைவான் முன்னே கூற்றுஎனத் தமியள் வந்தாள். (1)

வந்தவள் தன்னைச் சென்னி மண்ணுற வணங்கி வாய்த்த
சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையால் புதைத்து மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்முன்
அந்திவந் தடைந்த தாயைக் கண்டஆன் கன்றின் அன்னான். (2)

நின்றவன் தன்னை நோக்கி இரும்பினுன் இயன்ற நெஞ்சிற்
கொன்றுழல் கூற்றம் என்னும் பெயரினுல் கொடுமை பூண்டாள்
இன்றுனக்கு உணர்த்த லாவது ஏயதே என்னி லாகும்
ஒன்றுனக்கு உந்தை மைந்த! உரைப்பதோர் உரையுண்டென்றாள். (3)

எந்தையே ஏவ நீரே உரைசெய இயைவது உண்டேல்
உய்ந்தனன் அடியேன் என்னிற் பிறந்தவர் உளரோ வாழி
வந்ததென் தவத்தி ஞய வருபயன் மற்ருென் றுண்டோ
தந்தையும் தாயும் நீரே தலைநின்றேன் பணிமின் என்ருன். (4)
(கைகேசி சூழ்வினை, 103-106)

ஓவிய உருவங்களாய் வந்துள்ள இந்தப் பாசுரங்களில் நிகழ்ச்சிச் சித்திரங்கள் நேரே காணப்படுகின்றன. இளவரசின் இனிய நீர்மைகளும் புனித மேன்மைகளும் கனிவு சுரந்து காட்சி தந்து மனிதர் உள்ளங்களை மாட்சிமைப் படுத்துகின்றன.

1. உள்ளே புகுந்ததும் தந்தையை ஆவலோடு நாடி உவந்து ஓடிய நெஞ்சனுய் மைந்தன் அயல் எங்கணும் நோக்கினுன்.

"அயர்ந்து தேறுத் தூயவன் இருந்த சூழல் துருவினன்"

இராமன் கைகேசி மாளிகையுள் நுழைந்து, ஆதரமீதூர்ந்து தாதையைத் தேடிய அருமையை உணர்த்தியபடியிது. "அயர்ந்து தேறு" என்றது இரவு நேர்ந்த துயரத்தால் மூர்ச்சை அடைந்து உணர்ச்சியின்றிக் கிடக்கின்ற அக்கிடை நிலை தெரிய வந்தது.

தசரதனை இங்கே தூயவன் என்றது கள்ளம் யாதும் இன்றி உள்ளம் புனிதமாய்ப் பிள்ளைப் பாசம் கனிந்துள்ள அப்பெற்றி கருதி. சத்திய சீலனை அத்தூயவனை மாய மயக்கித் தீயவள் தீங்குவிளைக்கத் துணிந்து தூயவள் போல் தங்கியுள்ளாள்என் பது குறிப்பு.

இராமன் தந்தையை நேரே காணின் உண்மை தெரிந்து விடும் ஆதலால் அங்ஙனம் காணுதபடி கடுகி எதிர்வந்தாள். அவ்வரவு நிலையைக் கவி உணர்த்தியுள்ளது வியய மிக உடையது.

தாய் என நினைவான் முன்னே கூற்று எனத் தமியள் வந்தாள்

அருமைத் தாய் என்று உரிமையுடன் கருதி வருகின்ற இனிய சேயின் எதிரே கொடிய எமன்போல் கொடும்பாவி வந்தாள் என்றது அடுத்து நிகழும் கொடுமையை அறிவுறுத்தி வந்தது.

இராமனையும் கைகேசியையும் இங்ஙனம் காட்டியிருக்கிருர். காட்சி கடுந்துயரமாய் விளைந்திருக்கின்றது.

தாய் என நினைந்த அந்நெஞ்சின் கனிவையும் நேர்மையையும் நினைந்து இரங்குகின்ருேம். கூற்று என வந்த அக்கொடியவளது நிலைமையையும், தீமையையும் கண்டு கொதிக்கின்ருேம்.

இனிமைக்கும் இன்னமைக்கும் தனி எல்லையிலுள்ள இரண்டு மாறுபாடுகளை ஒருங்கே இணைத்து நிறுத்தி உள்ளே வேறுபாடு காண விளக்கியிருக்கும் அருமை வியந்து நோக்கத்தக்கது.

உரிய கணவனைக் கொன்று, பல உயிர்களும் பதைத்துத் துடிக்கும்படியான கொடுமை செய்ய வந்திருத்தலால் கூற்று என நின்றாள்.

உயிரையும் உடலையும் வேறாகக் கூறுபடுத்தும் கூற்றம்போல் பிள்ளையையும் பிதாவையும் பிரித்துப் பெருந்துயர் விளைக்க வந்துள்ளாள் என்க.

இங்ஙனம் தனக்குப் பெருங்கேடு சூழ்ந்து பேயாய் வந்தவளை இச்சேய் தாயாகவே நினைந்து தாழ்ந்து வணங்கினான். வணங்கியிருக்கும் அமைதியும் விநயமும் அவனது மனநிலையையும் குணநலங்களையும் நினைந்துருக நின்றன.

2. "வந்தவள் தன்னைச் சென்னி மண் உற வணங்கி" என்றதனால் பூமியில் தண்டமாக நெடிது விழுந்து தொழுதுள்ள விழுமிய பணிவுடைமை விளங்கி நின்றது.

தாய் தந்தையர்பால் தெய்வ புத்தி கொண்டுள்ள இச்சேயினது உத்தம பத்தியின் உயர்நிலை உலகறிய வந்தது.

இந்தத் தலையில் முடியை ஏற்றி என்னைப் படிஆள வையாமல் தேவர் குடியாள வை அம்மா! என்று கொடியாளை வேண்டியபடியாய்த் தொழுகை அடியுறையாக நெடிதோங்கியுள்ளது.

இங்ஙனம் விழுந்து பணிந்தவன் எழுந்து வாய்புதைத்து உடல் வளைந்து உள்ளம் குழைந்து ஒடுங்கி நின்றான்.

"சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையால் புதைத்து, மற்றைச்
சுந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்றான்"

அந்த அழகன் நின்ற நிலையை எழுதித் தந்துள்ள இந்த எழுத்து ஓவியம் இனிமை சுரந்துள்ளது. காட்சியைக் கண்ணூன்றி நோக்குந்தோறும் மரியாதை மாட்சிகள் எண்ணூன்றி இன்பம் தருகின்றன.

சிந்துரவாய், பவளவாய், செவ்வாய் எனத் தனித்தனி கூட்டிக் காண்க. சிந்துரம் சிவந்த நிறமுடையதாயினும் எளிமை

யானது ஆதலால் அது வெறும் நிறப்பொலிவுக்கு மாத்திரம் ஒப்பாம். ஆகவே அதனினும் அருமையும் பெருமையுமுடைய பவளம் உரிமையாய் வந்தது.

சிலவாய்கள் சிந்தூரம் போலவும், பவளம் போலவும் சிவந்து வெளியே அழகாய்த் தோன்றும்; உள்ளே கோள் பேசல், கொடு மொழி கூறல், பொய்யுரைத்தல் முதலிய ஈனங்கள் படிந்து கொடுவாய்களா யிருக்கும். இந்த வாய் யாதொரு புன்மையு மின்றி எல்லா நன்மைகளும் நிறைந்து செம்மையும் சீலமும் சிறந்து சீர்மை கனிந்து இருத்தலால் செவ்வாய் என வந்தது.

இத்தகைய புனிதவாயை வலதுகையால் புதைத்து இடது கையால் ஆடையை ஒதுக்கி உடல் துவண்டு நின்றான். துவளல் = குழைதல். தானை = உடை. வாய்பொத்துதல் தானைமடக்குதல் மரியாதையின் பெரிய அறிகுறிகள் ஆதலால் உரியவனது அன்பும் பணிவும் உணர வந்தன.

அந்திவந்து அடைந்த தாயைக் கண்ட ஆன்கன்றின் அன்னான்

மூந்தி உரைத்தன எல்லாம் புறநிலைகளைக் குறித்தன; இது அகநிலையை விளக்கியது. உள்ளன்பு உணர்வு சுரந்துள்ளது.

தாயப் பசு வெளியே மேய்ச்சலுக்குச் சென்றிருந்தது. கன்று வீட்டில் தங்கிநின்றது. பகல் முழுவதும் தாயைக் காணாமையாலும், பசியினாலும் மறுகி யிருந்த இளங்கன்று மாலையில் வீட்டுக்கு வந்த தன் தாயைக் கண்டவுடன் எப்படி உள்ளம் களித்துத் துள்ளி ஓடி அதனை அடைந்து உவகை மிகுந்து உருகி நிற்குமோ, அந்த அன்பும் ஆனந்தமும் கைகேசியைக் கண்ட போது இராமனுக்கு உண்டாயின.

மேயப் போன தாய் அந்தி வந்தபோது அதனை எதிர் ஓடி விழைந்து கண்ட கன்றை இணைத்துக் காட்டி அன்புக் காட்சியை இங்ஙனம் இன்புற விளக்கியிருக்கிறார். அதிகாலையில் நிகழ்ந்துள்ள இந்தச் சந்திப்பில் அந்திவந்து புகுந்தது விந்தையானது. வினை விளைவு எந்த வகையிலும் முந்தி வருகின்றது.

கலியாணம் ஆகி நல்ல காளைப் பருவத்தனாயுள்ள இராமனை இங்கே இளங்கன்று என்று குறித்தது, கள்ளம் கபடு யாதும் இன்றி உள்ளன்பு சுரந்து உல்லாசமாயுள்ள உரிமை கருதி.

பிள்ளைத் தன்மை மருவியுள்ள இவ்வள்ளல் உள்ளம் பேரன்பு பெருகியுள்ளமையால், சிறியதாய் என யாதொரு வேற்றுமையும் காணாமல் உரியதாயாகவே உவந்து பணிந்து உருகி நின்றான்.

கண்டவர் எவரும் கரைந்து உருகுமாறு இத்தூயவன் இங்ஙனம் நிற்க அத்தீயவள் யாதும் இரங்காமல் வஞ்சமொழிகளை அஞ்சாது புகன்றாள். கரவு மிக உடைய அவள் விரகுடன் மொழிந்தன வினையமும் சூதும் விரவியுள்ளன. அன்று உரைத்த நிலையை அயலே காண்க.

'நின்றவன் தன்னைநோக்கி இரும்பினால் இயைந்த நெஞ்சிற்
கொன்றுழல் கூற்றம் என்னும் பெயரினால் கொடுமைபூண்டாள்;
இன்றெனக்கு உணர்த்தலாவது ஏயதே என்னிலாகும்
ஒன்றுனக்கு உந்தை மைந்த! உரைப்பது ஓர் உரையுண்டு என்றாள்."

(கைகேசிசூழ்வினை, 105)

தான் கருதியுள்ள இன்னலை உரைத்தற்கு முன்னுரையாகக் கைகேசி இன்னவாறு இசைத்திருக்கிறாள்.

இரும்பு நெஞ்சமுடம் கொடிய கொலை பாதகமும் ஒருங்கு நிறைந்தவள் எனக் கவி கடுத்துக் குறித்தது அடுத்து மொழியும் கொடுமை கருதி.

உள்ளம் எல்லாம் தீமை மண்டி உள்ளமையால் ஒருசிறிதும் இரக்கம் இன்றிப் பிள்ளை எதிரே பிழை பேசத் துணிந்தாள்.

"இராமா! உன் தந்தையார் உனக்கு ஒரு உத்தரவு செய்திருக்கிறார். அதனை அவர் வாயினால் சொல்லாமல் என்னைச் சொல்லும்படி ஏவியுள்ளார். நான் இப்பொழுது உன்னிடம் சொல்லவேண்டியவளாயிருக்கிறேன். எனக்கு மனம் இல்லையாயினும் நாயகன் கட்டளையை உரைக்க நேர்ந்துள்ளமைக்கு என் உள்ளம் வருந்துகின்றது." எனக் கள்ளமொழி பகர்ந்தாள்.

வஞ்சகி உரைத்த இவ்வஞ்ச மொழியைக் கேட்டதும் நம் அஞ்சன வண்ணன் சொன்ன பதில் அவனது நெஞ்சின் நிலைமையையும் பெருந்தகைமையையும் விளக்கி அருமை கனிந்து உரிமை சுரந்துள்ளது. உரைகளில் உயிர்ப் பண்பு உயிர்த்து மிளிர்கின்றது.

இராமன் உரைத்தது

எந்தையே ஏவ நீரே உரைசெய இயைவது உண்டேல்
உய்ந்தனன் அடியேன் ; என்னின் பிறந்தவர் உளரோ? வாழி !
வந்ததென் தவத்தின் ஆய வருபயன் மற்றென் றுண்டோ
தந்தையும் தாயும் நீரே தலைநின்றேன் பணிமின் என்றான்.

(கைகேசி சூழ்வினை, 106)

புனித வாயிலிருந்து வந்துள்ள இந்த இனிய வாசகங்கள் தனி மகிமை யுடையன. உத்தம புத்திரனது தலை சிறந்த சித்த நிலை இங்கே ஒளி வீசி யுள்ளது. ஒரு உயர்ந்த குலமகனுடைய உள்ளப்பண்புகள் உலகம் உணர ஈண்டு உதித்திருக்கின்றன.

எந்தை எனத் தந்தையை ஒருமையாகவும், நீர் எனக் கைகேசியைப் பன்மையாகவும் குறித்தது அவள்பால் தான் கொண்டுள்ள மரியாதையை விளக்கியது. அத்துடன் கொஞ்சம் அந்நியமும் உய்த்துணர வந்தது. என்னை ? உரிமை விலக விலக உரையளவில் உயர்வுப் பன்மை நிகழும் ; அது அணுக அணுக உள்ளம் ஒன்றாய் ஒருமைத் தன்மை மருவும் என்க.

பழமை மாறாகக் கிழமை வேறாகின்றது.

“ இயைவது உண்டேல், அடியேன் உய்ந்தனன் ” என்றது தந்தை ஏவலையும் தாயின் உரையையும் ஒருங்கே நிறைவேற்றும் பெரும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமானால் நான் பிறந்தபயனை அடைந்தேன் என்றவாறு.

உண்டேல் என்றது வாய்ப்பின் அருமையை உணர்த்தி நின்றது. தந்தை தாயர்களுடைய விருப்பத்தைத் தனித்தனியே பூர்த்திசெய்வதினும் இருமையும் ஒருமையாய் இயைவது மிகவும் அருமை ஆதலால் அந்த அமைதியை உவந்து கொண்டாடினான்.

இருவருடைய பணிகளுள் எவருடையதாயினும் ஏதாவது ஒன்று கிடைக்காதா ? என்று இப் பிள்ளை நாளும் ஏங்கி நின்றுள்ளமை ஈங்கு உள்ளுற உணர வந்தது.

ஒருவன் பிள்ளை என்று பிறந்ததற்குரிய பெரிய பயன் பெற்றோர்களுடைய உள்ளம் களிக்க நடப்பதேயாம் ; அந்தச் சிறந்த பிறவிப் பெரும் பேறு எனக்கு இன்று ஒருங்கே கிடைத்தது ; நான் அடைய வேண்டியன யாவும் அடைந்தேன் ; என் பிறப்புத்

தனி மகிமையுடையதாய்ப் புனிதமாயது என இக் குலமகன் மனம் மிக மகிழ்ந்துள்ளான்.

அவளுடைய ஏவல் இன்னது என்று தெரியு முன்னரே இவனது ஆவல் இன்னவாறு பெருகி எழுந்தது.

அடியேன் என்று கைகேசி முன்னிலையில் சொன்னது போல் வேறு யாரிடமும் இவ்வளவு எளிமையாக இராமன் பேச வில்லை.

"அஞ்சன வண்ண நின் அடியம் யாம்" என வானவரும் மானவரும் வாழ்த்த நின்ற ஆண்டவன் ஈண்டு அடியன் என நின்று படி யறிய நடிக்கின்றான். நடிப்பெல்லாம் கொடியவள் எதிரே இனிமையுடன் குலாவி நிற்கின்றன.

அடிமையில் ஒரு மோகம் ஆண்டவனுக்குப் புதுமையாய் அமைந்திருக்கிறது. எவ்வழியும் என்றும் தனக்குக் கிடையாதது ஆதலால் அதில் இவ்வளவு ஆவல் வந்தது. பிறர் வாயினால் இவ்வாறு எவ்வாற்றானும் பேசக் கிடையாமையால் தன் வாயினாலாவது சொல்லி இங்ஙனம் உள்ளம் உவந்தான்.

சாதியிலும் சக்கரவர்த்தித் திருமகன்; ஆதிமூல நிலையிலும் வேதமூலம் அறியாதவன்; அவன் மாது ஒருத்தியின் பாதமூலம் பணிந்து பணி மொழி பகர்ந்து தனது சாதனைக்குச் சாதகமான போதனையை எதிர் பார்த்து நின்றது போதம் கனிந்துள்ளது.

என்னின் பிறந்தவர் உளரோ? என வியந்து வினவியது நயந்து காணத்தக்கது. பெற்றோர் இட்ட பணியைப் பிழையாது செய்யும் பெரும் பாக்கியம் கிடைக்கப் பெற்றமையால் தன் பிறப்பின் பெருமையைச் சிறப்பித்துப் பேசினான்.

பிள்ளைகளாய்ப் பிறந்தவர்களுள் தன்னினும் சிறந்தவர் எவரும் இலர் என உளம் உவந்து ஒரு நோக்கில் அவன் சொல்லியிருப்பினும், உண்மை நோக்கையும் அஃது உணர்த்தியுள்ளது.

தன் பிறப்பின்பயன் இங்கே சிறப்படைய வந்துள்ளமையால் அதன் சீர்மையும் நீர்மையும் நேர்மையாக உரைகளில் ஒளிர்ந்தன.

இராமனைப் போல் உலகம் உய்யப் பிறந்தவர் ஒருவரும் இலர் என்பது தொனிக் குறிப்பினால் நுனித்துணர வந்தது.

என் தவத்தின் ஆய வருபயன் வந்தது என்று சிந்தை களித்திருக்கின்றான். கைகேசியின் வாயிலிருந்து வருவது எதுவோ அது தனது அருந்தவத்தின் பெருபயனும் என இராமன் உவந்திருத்தலால் அவ்வரவின் உயர்வும் உரிமையும் உணரலாம்.

தான் வந்த பயனைத் தந்தருள அவள் வாய்ச் சொல் வரவுள்ளது என்பதாம். தந்தை ஏவத் தான் உரை செய்ய வந்ததாக அவள் முந்துற மொழியவே இவன் சிந்தை இவ்வாறு மகிழ்ந்தது.

சொல் வெளிவரும் முன்னரே உள்ளம் கழி பேருவகையில் துள்ளி நிற்கின்றது. அதனை விரைந்து சொல்லி அருளும்படி விழைந்து துடிக்கின்றது.

தந்தையும் தாயும் நீரே தலை நின்றேன் பணிமின்!

எனத் தனது நிலைமையை உணர்த்தி நேரே கேட்டான். தந்தையும் தாயும் வேறே உள்ளமையால் நீரே என்றான். அந்த இருமுதுகுரவரும் ஒருமையாய் மருவி இந்த உருவில் வந்துள்ளது எனச் சிந்தை செய்துள்ளமை தெளிவுற வந்தது.

தன் தாயும் தந்தையும் கைகேசியே என்று உறுதிசெய்து கொண்டமையால் இனிமேல் கோசலையும் தசரதனும் அவளுக்கு மாறாக யாது கூறினும் அது மறுக்கப்படும் என்பது பெற்றும்.

மாதா பிதா குரு தெய்வம் யாவும் அவளே என இவன் உவகை மீக்கூர்ந்து உரிமை செய்து நின்றது, வருபயன் கருதியபடியாய் உறுவினை மருவி மருமமாய் எழுந்தது.

ஒரு வேற்றுமையும் பாராமல் பெற்ற பிள்ளையாகவே கருதி உற்றதை உடனே உரைத்தருளுங்கள் என்று ஊக்கி நின்றான்.

தலைநின்றேன் பணிமின்! என்றது தாங்கள் இட்ட கட்டளை எதுவாயினும் அதனை யாதும் தட்டாமல் தலைமேல் கொண்டு செய்வேன்; உரிய பணியை விரைவில் சொல்லியருளுங்கள் என்றவாறு. நீங்கள் காலால் இட்டதை நான் தலையால் செய்வேன் என்னும் பணிவுடைமை தோன்றப் பணிமொழி வந்தது.

கைகேசியின் பணியை ஏற்றுக்கொண்ட பின்புதான் உலகம் எல்லாம் தலைமேல்கொண்டு போற்றும்படி இராமன் தலை சிறந்து நின்றான் ஆதலால் அந்நிலைமை "தலை நின்றேன்" என்னும் அவனது புனித வாய்மொழியில் உள்ளே தொனித்து நிற்கின்றது.

தன்னை யாண்டும் என்றும் தலைமையாக நிலை நிறுத்தும் தகைமை கருதித் தந்தையும் தாயும் என அவனை வந்தனை செய்தான். சிந்தனை நினைவுடைய அவள் முன் இச் சுந்தரன் இங்ஙனம் தொழுது மொழிந்தது மந்திர முறையாய் மருவிநின்றது.

இவை எல்லாம் யாதும் சிந்தனை செய்யாமலே தெய்வ கதியாய் எளிது வெளி வந்துள்ளன. இக்குலமகனது பணிவும் பண்பும் பெற்றவரை மதித்துப் பேணும் பெருந்தகைமையும் உணருந்தோறும் உள்ளம் உருக்கி உயிரினங்களுக்கு உயர் நலங்களை அருளி வருகின்றன.

தன் நெற்றி நிலத்தில்படிய வணங்கி எழுந்து வாய்பொத்தி இங்ஙனம் பணிமொழி பகர்ந்து பணிவிடைக்கு எதிர்பார்த்து நின்றான். உள்ளப் பண்புகள் வெளியே ஒளி வீசி நின்றன.

இந்த நிலையில் அந்தக் கொடியவள் வாயிலிருந்துபடு மொழிகள் வந்தன. கூற்று என வந்த அவள் அன்று கூறிய கூற்றுக்களை அயலே பார்க்க.

கைகேசி மொழிந்தது.

ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீபோய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற் கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண் டாண்டின்வா என்று இயம்பினன் அரசன் என்றான்''
(கைகேசி சூழ் வினை, 107)

தாய் என உருகி நிற்கும் சேயை நோக்கிப் பேய் எனமுறுகி நின்றவள் பேசியபடியிது. அவளுடைய நெஞ்சக்கரவும் வஞ்சமும் வன்கண்மையும் பேராசையும் நேரே உரைகளில் ஒளிர்கின்றன.

பார் ஆளும் உரிமையில் பேராவல் மண்டியுள்ளமையால், '' ஆழி சூழ் உலகம் எல்லாம் '' என எல்லையை எட்டி வளைந்து சுட்டிச் சொல்லினாள். பரதனே என்றதில் உள்ள ஏகாரம் வேறு எவருக்கும் இங்கே யாதொரு உரிமையும் இல்லை என்பதை உணர்த்தி நின்றது. அவன் ஒருவனுக்கே அகில உலகங்களும் தனி உரிமையாம் என்பதை உறுதி செய்த படியிது.

நாட்டில் எள் அளவும் இராமனுக்கு இடம் இல்லை என்பதாம். உடனே அவன் காட்டுக்குப் போகவேண்டும் என்பதை விவரமாகக் காட்டலாயினாள்.

சடைமுடி யுடையனாய் மரவுரி தரித்துத் துறவுக்கோலம் பூண்டு போய்க் கொடிய கானகங்களில் தங்கி கனி காய் கிழங்கு களைத் தின்று முனிவர்களைப் போல் காலம் கழிக்கவேண்டும் என்று பாலன் எதிரே யாதும் கருதாமல் துணிந்து சொன்னாள்.

தாங்கு அருந் தவம் என்றது எவரும் எளிதில் மேற் கொள்ளமுடியாத அரிய விரத நியமங்களை. அங்கேபோய் எல்லா வற்றையும் தின்று உல்லாசமாய் உலாவியிருக்கலாகாது; பட்டினி முதலியன கிடந்து அருந்தவக் கொள்கையில் திருந்தி ஒழுக வேண்டும். காட்டிலேயும் ஓரிடத்தில் உறைந்திருக்கலாகாது; பல நிலைகளிலும் அலைந்து திரியவேண்டும் என்பதாம்.

வனவாழ்க்கை நிலையை வகை விவரமாக் குறித்தவள் பின்பு கால எல்லை கணித்தாள். பதினன்கு வருடங்கள் வரையும் நீ வனவாசம் செய்யவேண்டும் என்பாள் ஏழிரண்டு ஆண்டு என்றாள். ஏழை இரண்டால் பெருக்கிய ஆண்டுகள் என எண்ணத்தில் ஓர் எளிமை தோன்ற உரைத்தாள். அதிகம் இல்லை; கொஞ்சம்தான்; இரண்டு ஏழு ஆண்டுகள் என்று வஞ்சனை கனிந்து நெஞ்சம் தடவியபடியிது.

பத்து, பதினறு, இருபது, அல்லது ஆயுள்வரையும் என ஏதாவது வேறு ஒரு அளவை உரையாமல் பதினன்கு என்று தீர்ப்புக் கூறியது சிந்தனைக்கு உரியது.

என்ன குறிக்கோளோடு இந்தக் காலக் கணக்கை விதித்தாள்? என்பதற்குத் தெளிவான காரணம் எளிதாகக் காண்டல் அரிது.

ஸப்த ஸப்தச வர்ஷாணி தண்டகாரண்யம் ஆச்ரத;
அபிஷேகமிதம் த்யக்த்வா ஜடாசீர தரோ பவ.

(அயோத்தியா காண்டம், 18)

"முடிதுறந்து சடை உரி தரித்து ஈரேழு வருடங்கள் தண்டகாரணியம் போயிரு" என வால்மீகத்திலும் கைகேசி கூறியுள்ளதாக அமைந்தது ஈண்டு அறியத்தக்கது.

"வேதநூல் பிராயம் நூறு" என்றபடி மனிதனுடைய பூரண ஆயுள் நூறு வருடங்களாம். அதில் ஏழில் ஒரு பாகம் இங்கே ஊழ்முறையாகக் குறிக்கப்பட்டுள்ளது.

மனிதனது உடல் வாழ்க்கையில் பதினன்கு வருடங்களுக்கு ஒரு மாறுதல் உண்டாகின்றது. ஆகவே அஃது ஒரு விதி நியமமாய் வந்தது.

இக்காலத்து அரசாங்கமும் கொடுங்குற்றவாளிக்குச் சன்மத் தீர்ப்புப் பதினன்கு வருடங்கள் என்று உறுதிசெய்துள்ளதும் உணரத்தக்கது.

பாண்டவர்க்கு அஞ்ஞாத வாசம் பதின்மூன்று ஆண்டுகள் ; இராமனுக்கு வனவாசம் பதினன்கு ஆயின. அன்னவர் தாயாதிகளால் நோய் அடைந்தனர். இன்னவன் மாற்றாந் தாயால் மாற்றப்பட்டான்.

ஏழிரண்டில் வா என்றது போ என்று பணித்ததற்குஇதமாக ஒரு போக்குக் காட்டினாள். பதினன்கு வருடங்கள் வனவாசம் செய்தால் மனம் மாறி இராமன் துறவியாய்ப் போவன் ; பரதன் ஆட்சியின் சுவை கண்டு அரசுரிமையைத் தனக்கே உறுதிசெய்து கொள்வன் என்று கைகேசி கருதி யிருக்க வேண்டும்.

இயம்பினன் அரசன் என்று பழியைத் தசரதன் தலைமேல் வைத்திருக்கிறாள். தானாகக் கூறின் தட்டிவிடுவான் என்று பயந்து இப்படிக் கட்டிவிட்டாள். கள்ள நெஞ்சம் உள்ளூற அஞ்சிக் கரவுரையாடியுள்ளது.

தன் மகன் நாடாள, மன்மகன் காடேக வன்மனமுடையவள் இவ்வாறு புன்மொழியாடினாள்.

ஆழிசூழ் உலகம் எல்லாம் என்னும் இப்பாசுரம் சொன்னலம் கனிந்து பொருள் நலம் பொலிந்து பரிபவ நிலையில் உருவாகியுள்ளமையால் பலரும் இதனைப் பாடம் செய்துள்ளனர்.

"சூழிரும் சடைகள் தாங்கிச் சுடர்முடி துறந்து கான்போய்
வீழ்சரு கருந்தி நீவிர் மெய்த்தவம் புரிதல்வேண்டும் ;
தாழிரும் கூந்தலாளை நிடதர் கோன் தழீஇய போதே
ஆழிசூ ழுலகம் எல்லாம் அவனடி படுக்கு மன்றே !"
(நைடதம், போர்புரிபடலம், 4)

இது நமது பாடலை அடியொற்றி வந்துள்ளமை அறியலாகும். நம் கவியின் உரை நடையும் ஓசை நயமும் உணர்வு நலமும் தனி மகிமையுடன் இனிமை சுரந்துள்ளன. கவியுலகம் அவற்றை விழைந்து நுகர்ந்து நினைந்து புகழ்ந்து மகிழ்ந்து வருகின்றன.

முடி சூட வந்த இக்குலமகன் உள்ளம் கைகேசி கூறிய இக் கொடு மொழியைக் கேட்டதும் எப்படி வருந்தி யிருக்குமோ? என்று நாம் எண்ணி இரங்குகின்றோம். அப்பொழுது இப் புண்ணிய சீலன் அடைந்து நின்ற நிலைமையை அயலே காண்போம்.

இராமனது நிலை

இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதே யாரும்
செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகம் உணரக் கேட்ட
அப்பொழுது அலர்ந்த செந்தா மரையினை வென்றதம்மா! (1)

தெருளுடை மனத்து மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி
இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்கு இயைந்து நின்றான்
உருளுடைச் சகடம் பூண்ட உடையவன் உய்த்த கார் ஏறு
அருளுடை ஒருவன் நீக்க அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான். (2)

மன்னவன் பணியன் றாகின் நும்பணி மறுப்பனோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ
என்னினி உறுதி அப்பால் இப்பணி தலைமேல் கொண்டேன்
மின்னெளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்

(கைகேசி சூழ்வினைப்படலம், 108-110)

நாட்டை விட்டுக் காட்டுக்குப்போ என்னும் கடுமொழியைக் கேட்ட பொழுது இளவரசு உளம் உவந்து நின்ற நிலைமையைக் கருதி நோக்குந் தோறும் உள்ளம் உருகி ஈர்க்கின்றது.

இராமனுடைய மனப்பண்பும் மதிநலனும் குணசவுந்தரியங்களும் அமுத சமுதாயமாய்ப் பெருகி மனித உலகத்தைப் புனிதப் படுத்தி மகிமை விளைத்து வருகின்றன.

1 இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதே!

இராமன் அப்பொழுது நின்ற அந்த அற்புத நிலைமையைத் தெளிவாக விளக்கிச் சொல்ல எம்போல்வார் எவர்க்கும் எளிதாக இல்லையே! என்று கவி இப்படி அலறி யிருக்கிறார். எளிதே என்றதில் ஏகாரம் எதிர் மறையாய் ஆற்றுமை தோற்றி அருமை குறித்து நின்றது. யாராலும் இயம்புதல் அரிது என்றவாறு.

எம்மனோர் என்றது முத்தமிழ்த் துறையும் முறையே பயின்று தெளிந்த உத்தமக் கவிஞரை. கற்ற கலைஞானிகளுக்கும் எல்லை காணமுடியாதபடி இத் தலைமகன் நிலை நீண்டு நிற்கின்றது.

"புலவரை அறியாப் புகழொடு பொலிந்து" (பரிபாடல், 15)

என்த் திருமாலை இளம்பெரு வழுதி குறித்துள்ளதும் ஈண்டு உளங்கொளத் தக்கது. புலவரை அறியாப் புகழ் = அறிவு எல்லை யால் அறிய முடியாத கீர்த்தி.

யாரும் செப்பரும் குணத்து இராமன் என்றது யாராலும் அளந்து சொல்ல முடியாத குணகணங்களை யுடைய குலமகன் என்றவாறு; முனிவர் அமரர் முதலிய எத்தகைய மேன்மையாள ராலும் இவனது பான்மையை அளந்து கூற இயலாது என்பார் "யாரும்" என்றார். யாரிடமும் யாண்டும் காணமுடியாத திவ்விய குணசீலங்கள் யாவும் ஒருங்கு நிறைந்துள்ள பெரிய அமுதக்கடல் ஆதலால் அளவு காண்டல் யார்க்கும் அரியதாயது.

"யாரும் ஓர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்"

(திருவாய்மொழி)

என்றபடி தன் பெருமையை எவரும் எல்லை காணாதவாறு இராமன் இயல் உயர்ந்துள்ளமையான் செப்பருங் குணத்தன் என இப்படி ஒரு ஒப்பரும் பெயரை உடையனாயினான்.

இவ்வாறு ஒப்பற்ற குணசீலனான இவன் கைகேசி சொல்லைக் கேட்ட அப் பொழுது அடைந்த நிலையைக் கவி ஓர் ஒப்பனையால் உணர்த்தியிருக்கிறார்.

நீ மணிமுடி துறந்து பதினாலு வருடம் காட்டில் போய் வாழ வேண்டும் என்று தாய் என்னும் அப் பேய் சொன்ன பொழுது இச் சேய் உள்ளம் களித்து உவகை மீக்கூர்ந்தான். அகத்தில் பொங்கி எழுந்த அவ்வுவகை ஒளி முகத்தில் பொலிந்து விளங்கியது. அவ்விளக்கத்தை இப்பொழுது நினைத்தாலும் வியப் பும் விம்மிதமும் விளைந்து பெருகுகின்றன.

அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா!

என அந்தத் திருமுகச் செவ்வியைக் கவி இப்படி விளக்கியுள்ளார். எப்பொழுதும் தாமரை மலரை ஒத்திருந்த முகம் அப்பொழுது அதிசயமான ஒரு புதிய மலர்ச்சியைப் பெற்று விளங்கியது.

முன்னும் பின்னும் அம்மலர் இம் முகத்திற்கு ஒப்பதாய் இருந்தது. கைகேசி சொன்ன அந்த வார்த்தையைக் கேட்ட அச் சமயத்தில் அத்தாமரை மலர் ஒப்பிழந்து இழிந்தது என்பார் "வென்றது" என்றார். அம்மா! என்றது அதிசய பிரகிருதியால் தம் மை மறந்து வியந்து பேசியுள்ளமையை வெளிப்படுத்தி நின்றது.

அலர்ந்த செந்தாமரை என்றது சூரியன் உதயமாகும் பொழுது இதழ் விரிந்து பொலிந்து விளங்குகின்ற மலரை. அதன் இனிய செவ்வியும் எழிலும் தெரியவந்தது.

அகத்தின் மகிழ்ச்சியை அளந்து காட்டுதற்கு முகத்தின் எழுச்சி தெளிவான காட்சியாய் நின்றது.

இன்பத்தை விழைந்து மகிழ்தலும், துன்பத்தை வெறுத்து வருந்தலும் மனித இயல்பு. நிலையான அவ்வுலக இயல்புக்கு முழுதும் மாறாய் இக் குலமகன் நிலை இங்கே குலாவி நிற்கின்றது.

பேரின்ப நிலையமான பெரிய அரச பதவியைப் பிடுங்கிக் கொண்டு கொடிய அல்லலான அடவிக்குத் தள்ளும் போது இப் பிள்ளையின் உள்ளம் பெரு மகிழ்ச்சி அடைந்தது அதி விசித்திரமாகின்றது.

எந்த இன்பநலத்தை நினைந்து இந்த உவகை வந்தது? யாவும் சிந்தனை செய்ய வேண்டும். அயலேயுள்ள நாம் எல்லாரும் இரங்கி வருந்திப் பரிந்து துடிக்கின்ற இந்த இடத்திலே, முன்னும் பின்னும் காணாத முகமலர்ச்சி இம் மூர்த்திக்கு விளைந்தது பெரிய ஒரு மருமமாய் உறுதியுண்மையை ஊன்றி உணரச் செய்கின்றது.

சூரிய கிரணங்களைக் கண்டு தாமரை மலர்வது போல் கைகேசியினுடைய கூரிய மொழிகளைக் கேட்டு இராமனது உள்ளத்தாமரை உவந்து மலர்ந்திருக்கிறது. உள்ளத்தில் எழுந்த அவ் உவகை வெள்ளம் வெளியே துள்ளி முக மலர்ச்சியாய்ப் பொங்கியுள்ளது.

சிறிது பொருள்வரின் பெரிதும் மகிழ்கின்றோம்; கொஞ்சம் கேடு எனின், நெஞ்சம் துடிக்கின்றோம்.

அகில உலக ஆட்சியை இழந்ததோடு அமையாமல் அடவியிலும் போயுழலும்படி நேர்ந்தும் இந்த அஞ்சனவண்ணன் யாதும் கவலாமல் பேரின்பம் பெற்றான்போல் நெஞ்சம் களித்திருக்கின்றான். மானவீரனை இவனது ஞானசீலம் மானுடவுலகிற்கு ஒரு இனிய பேரொளியாய்ப் பெருகியுள்ளது.

இக்குலமகனது மனநிலையோடு உலக மக்களது நிலைமைகளை எண்ணி நோக்கின், அவை நாணி வெட்கி ஈனமாய் இழிந்து படுகின்றன. இவன் வான சோதியாய் வயங்கி மிளிர்கின்றான்.

அரசபதவியை இழந்த பொழுது மனம் மிக மகிழ்ந்தது. அந்த மகிழ்ச்சிக்குக் காரணம் அடுத்து விளங்கியது.

2. தந்தையின் கட்டளையைத் தட்ட அஞ்சியே அரசு முடிசூடுதற்கு இக்கோமகன் இசைந்து நின்றான். தாதை ஏவியது எதுவோ அதைச் செய்தலே தனக்குத் தலைசிறந்த தருமம் என ஆதிமுதலே பிதுர்வாக்கிய பரிபாலனத்தைக் காதலோடு பேணி வருகின்றான்.

"மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி" என்னும் இதில் அச்சச் சொல் உச்சமாக ஊன்றி உணர வுரியது.

யாண்டும் என்றும் எவர்க்கும் அஞ்சாத போர்வீரனாகிய இராமன் இவ்வுலகில் ஒன்றுக்கு மாத்திரம் அஞ்சி யுள்ளான். அது எது? தந்தை சொல்லைத்தவறாது நடத்தலிலேயே கண்ணும் கருத்தும் உடையனாய் இம்மைந்தன் ஒழுகி வருதலால் அந்த ஒழுக்கத்திற்கு இழுக்கம்வரின் உள்ளம் துடிக்கநேரும் என்க.

திறம்புதல்—பிறழ்தல், மாறுதல், மீறுதல்.

மன்னன் ஏவல் மதிநலமுடையதாய் என்றும் விதிமுறை தழுவியிருக்கும் என்பது தெருளுடை மனம் என்றதால் அறிய லாகும். அந்தத் தாதை ஏவலின் ஆவலாலேயே இச் சேவகன் காவலுக்கு நேர்ந்தான்.

இருள் உடை உலகம் தாங்கும் இன்னல்.

என்றதனால் பூபாரம் தாங்குவதில் மன்னற்குள்ள பொறுப்பு நிலை புலனாம். அஞ்ஞான இருளில் ஆழ்ந்து கிடக்கின்ற சீவகோடிகளை யுடைமையால் இஞ்ஞாலம் இங்ஙனம் இழிக்க நேர்ந்தது.

மக்களுடைய மதிகேடு மாநிலத்தின் மேல் நின்றது. மடமை பகைமை பொறாமை கோள் கொடுமை முதலிய கெடு நிலைகளில் மாந்தர் நெடிது திரிந்து வறிது உழன்று வருதலால் இவ் வுலக ஆட்சி இவ்வாறு புலையாக இகழ வந்தது.

அரச பதவி மிகவும் பெரியது; மேன்மை வாய்ந்தது; எவரும் வியந்து போற்றும் ஏற்றமுடையது. அந்த உன்னத நிலையில் அமர்ந்து உலகம் முழுவதையும் நீதி நிலை கோடாமல் மன்னன் பாதுகாக்க வேண்டும். அக்காப்பில் சிறிது வழுவினும்

பழி பாவங்கள் பெரிதாம் ஆதலால் "உலகம் தாங்கும் இன்னல்" என அதன் நிலைமையும் நீர்மையும் நினைந்து சிந்திக்க வந்தன.

இவ்வளவு பெரிய உயர்ந்த அரச பதவியை அல்லல் என எண்ணினமையால் இவன் உள்ள நிலை உணரலாகும்.

எய்திய அரசு நழுவியது உய்தி பெற்றபடியாய் உவகை ஆயது.

"உருள் உடைச் சகடம் பூண்ட உடையவன் உய்த்த கார் ஏறு
அருள் உடை ஒருவன் நீக்க அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்"

இந்த உவமை நிலையை ஊன்றி நோக்குக. சகடம் = வண்டி.

பால்குடி மறந்து பருவம் அடைந்த அழகிய நல்ல ஒரு இளங்காளையை உரிய உழவன் பெரிய பாரம் நிறைந்த வண்டியில் பூட்டி ஓட்ட முயன்றான். கழுத்தில் அழுத்தமாக நுகத்தைப் பிணித்துவைத்து அவன் அகத்தே போயிருந்தான்; அச்சமயம் அவ்வழியே வந்த கருணையாளன் ஒருவன் அக் காளை நிற்கும் காட்சியைக் கண்டான்; அதன் இளமையும் எழிலும் உள்ளத்தைக் கவர்ந்தன. "இந்த விழுமிய இனிய கன்றின் அருமையை உணராமல் கொடிய சுமையை ஏற்றிச் செலுத்தத் துணிந்தானே! கொடுமையாளன்" என்று உடையவனை உள்ளூறவைது மெல்ல அந்தக் கட்டை அவிழ்த்துக் காளையை வெளியே விட்டான். அங்ஙனம் விடுதலை அடைந்த போது அக் கார் ஏறு மகிழ்ந்து துள்ளியது போல் இப்போர் ஏறு உள்ளம் உவந்து நின்றான்.

அரசபதவி பாரம் ஏற்றிய சகடம் ஆகவும், உடையவன் தசரதன் ஆகவும், கார் ஏறு இராமன் ஆகவும், அருள் உடை ஒருவன் கைகேசி ஆகவும் இங்கே பொருள் அடைந்து நிற்கும் பொலிவினைப் பார்க்க.

உருள் உடை என்றது நல்ல உருளைகளையுடைய வண்டி போலப் பரம்பரையாக ஒழுங்கமைந்து நன்கு இயங்கும் அரசின் நயம் தெரிய வந்தது.

அரசாட்சியைச் சகடம் என்றும் அதனைச் செலுத்தும் அரசனை எருது எனவும் உருவகித்தது உரிமையும் உழைப்பும் கருதி.

"ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட்டு அன்ன எம் கோன்." (புறம்,60)

கால்பார் கோத்து ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு உகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே;
உய்த்தல் தேற்றான் ஆயின் வைகலும்
பகைக்கூழ் அள்ளற் பட்டு
மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே. (புறம், 185)

ஆர்வலம் சூழ்ந்த ஆழி அலைமணித் தேரை வல்லான்
நேர்நிலத் தூருமாயின் நீடுபல் காலம் செல்லும்;
ஊர்நிலம் அறிதல் தேற்றா தூருமேல் முறிந்துவீழும்
தார்நில மார்ப வேந்தர் தன்மையும் அன்னதாமே.
(சீவக சிந்தாமணி 2909)

அரசைச் சகடம் என இவை குறித்திருத்தல் அறிக. ஊர்தி எருத்து எனத் தன்னைக் குறித்துத் தசரதன் முன்னம் சொன்னதும் ஈண்டு எண்ண உரியது.

இங்ஙனம் அரசுமுடி நீங்கியதை அறிந்து உளம்மிக மகிழ்ந்த இராமன் கைகேசியைப் பணிவுடன் நோக்கி, "அம்மா! ஏவினன் அரசன் என்று தாங்கள் சொன்னது என் நெஞ்சை வருத்துகின்றது; இராமா, முடிதுறந்து காடுபோ என நீங்களே உத்தரவு செய்தால் நான் தட்டிவிடுவேனா? தாய்வார்த்தை கேளாத பேயன் என என்னை எண்ணிவிடலாமா?" என்று இரங்கி நின்றான்.

மன்னவன் பணிஅன்று ஆகில் நும் பணி மறுப்பனோ?

என வினவிய இதில் இக்குல மகனது மனநிலை விளங்கியுளது.

தந்தையைப் போலவே தாயையும் மதித்து வணங்கிப் பணி செய்து ஒழுகும் மனப்பான்மை தனக்கு உண்டு என்பதை இங்ஙனம் உணர்த்தியிருக்கிறான். அரச கட்டளை என்று சுட்டாமல் நீங்களே சொல்லினும் அதனை நான் சிரசில் ஏந்திச் செய்வேன் என்பதாம்.

"மன்னவன் பணிஅன்று; ஆகில், நும் பணி" என்று பதம் பிரித்துக்கொண்டால் "அம்மா! இது அரசர்பிரான் உத்தரவு அல்லை; உங்கள் சொந்த ஏவலே; ஆயினும் அதனை நான் மறுக்கமாட்டேன்" என உண்மையாக நிகழ்ந்துள்ளதும் தன்னை அறியாமலே இராமன் வாக்கில் தொனித்திருத்தலைக் காணலாம்.

"என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ?" தம்பியின்பால் இந்த அண்ணல் கொண்டுள்ள உள்ளப் பாசமும் உரிமை நேசமும் இங்கே உணர்ச்சி ததும்பி உவகை சுரந்து உருக்க மீதூர்ந்து ஒளிர்கின்றன.

தன் மகனுக்கு வேண்டும் என்ற ஆவலால் அரசைக்கைகேசி வலிந்து கவர்ந்து கொண்டாள்; அதனை இழந்து நின்ற அண்ணன் இங்ஙனம் உவந்து பேசியிருக்கிறான். என் தம்பி பெற்ற செல்வம் நான் பெற்றது அன்றோ? என்றது எவ்வளவு பெருந்தன்மை! எத்துணை அன்புரிமை! சகோதர வாஞ்சை மன்பதைக்கு இன்பமாய் ஈண்டு மருவியுள்ளது. அடியனேன் பெற்றதே என் பின்னவன் பெற்றது என முன்னவன் சொன்னபடியே அன்னவனும் மன்னவன் ஆகாமல் மரவுரி தரிக்க நேர்வதையும் உறவுரிமையாக உள்ளே உரை உணர்த்தி நின்றது.

தனக்கு நேர்ந்த பெரிய அரச பதவியை மாற்றாந்தாய் கொடுமையாகக் கவர்ந்து தன் பிள்ளைக்குச் சேர்த்த பொழுது இக்குலமகன் உள்ளம் யாதும் திரியாமல் தம்பி என்று தழுவி அன்புரிமை செய்தது மனித இயல்பைக் கடந்து புனித வுயர்வு கனிந்து எண்ணுந்தோறும் இனிமை புரிந்தருள்கின்றது.

தன் பதவிக்கு இடையூறாக நேர்ந்தானே! என்று எண்ண வேண்டிய இடம் இது; அங்ஙனம் யாதும் எண்ணாமையோடு தம்பி மீது ஆர்வம் மீதூர்ந்திருக்கிறான். இந்நம்பியின் குண நலங்கள் அமிர்த மயமாய் இனித்து நமர்களுக்கு உணர்வு நலம் உதவி வருகின்றன.

"இப்பணி தலைமேல் கொண்டேன்" என்றது கைகேசி இட்ட கட்டளையைச் சிரமேல் கொண்டு செய்வதாக இராமன் உறுதி கூறியவாறும் அவளது ஏவலைச் செய்ய இவன் ஆவல் கொண்டுள்ளமையை இவ்வாறு விநயமாக உணர்த்தினான்.

கானம் இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்.

கைகேசியை நோக்கி இறுதியில் கூறிய படி இது. தன் உத்தரவுப்படி நடந்துகொள்வதாக இசைந்தான். அதனை எப்பொழுது செய்வான்? என்று அவள் எண்ண நேரும் ஆதலால் இவ்வண்ணம் விரைந்து மொழிந்தான்.

"அம்மா! தாங்கள் பணித்தபடியே இப்பொழுதே காட்டுக்குப் போகின்றேன்; இதோ விடை பெற்றுக்கொண்டேன்" என்று இரண்டு கைகளையும் தலைமேல் கூப்பித் தொழுது, பின்பு தசரதன் இருக்கும் திசையை நோக்கி வணங்கி நின்று "அப்பா இடம் சொல்லியருளுங்கள்" என மெல்லிய மொழி பயிற்றிப் பணிவுடன் அரண்மனையை விட்டு வெளியே வந்தான்.

## கோசலையிடம் வந்தது.

இக்குலமகன் அன்று வந்த பரிபவ நிலையைக் கண்டு தரும தேவதை கண்ணீர் சொரிந்தது. தனது கரும நிலையைக் கருதிக் கொண்டு கோசலை மாளிகை நோக்கி வந்தான். பெற்ற தாயிடம் உற்றதைச் சொல்லி விடை பெற்றுப் போக விழைந்து நுழைந்தான். தன் அருமைத் திருமகன் மணிமுடி சூடும் கோலத்துடன் தன்னைக் கண்டு கொள்ள வருவான் வருவான் என்று வழிமேல் விழி வைத்துப் பேராவலோடு அத் தாய் எதிர்பார்த்திருந்தாள். அந்த நிலையில் இந்தச் சுந்தரன் புகுந்தான். அரச ஆடம்பரங்கள் யாதொன்றும் இன்றி வெறுமையாய்த் தனியே வருகின்ற தனது அருமை மகனைக் கண்டதும் அவள் உள்ளம் கலங்கி உற்றதை வினவினுள். இவ்வள்ளல் எல்லாவற்றையும் விநயமாகச் சொல்லினுன். அத் தாய் நெஞ்சம் துடித்து நெடுந்துயர் அடைந்ததும், அவனை ஆற்றித் தேற்றி இச் சேய் அயல் அகன்றதும் செயல் நிகழ்ந்ததும் முதலியநிலைகள் யாவும் முன்னம் கூறப் பட்டுள்ளன. *அவற்றை ஈண்டுத் தொடர்ந்து நோக்கிக் கொள்க.

## நகரம் அடைந்த துயரம்.

தனது அருமைத் தாயை உரிமையுடன் போற்றி நிறுத்தி விட்டுச் சிறிய தாயாகிய சுமித்திரை மாளிகையை நோக்கி இராமன் வந்தான். வரு முன்னரே ஊருக்கு எல்லாம் உண்மை தெரிந்து விட்டது. கோசலை மாளிகையிலிருந்து எழுந்த அழுகை ஒலிகள் விழாவை எதிர் நோக்கி மணிமண்டபத்தின் முன் பாகக் குழுமியிருந்த அரச குழாங்களின் செவிகளில் பட்டன. படவே நெஞ்சத் திகில்கள் நீண்டு எழுந்தன. அவ்வமயம் கைகேசி அரண்மனையிலிருந்து கடுந்துயருடன் வெளி வந்த வசிட்டரை வளைந்து

*இந்நூல் பக்கம் 709 முதல் பார்க்க.

கொண்டு "விளைந்தது என்ன?" என அனைவரும் விழைந்து கலங்கி விரைந்து கேட்டார்.

அவர் நிகழ்ந்ததை உரைத்தார். அவ்வுரையைக் கேட்டவுடனே அங்குக் குழுமி நின்றவர் எல்லாரும் குலைதுடித்து நிலை குலைந்து தரையில் விழுந்தனர்.

வாரார் முலையாரும் மற்றுள்ள மாதர்களும்
ஆராத காதல் அரசர்களும் அந்தணரும்
பேராத வாய்மைப் பெரியோன் உரை செவியில்
சாராத முன்னம் தயரதனைப் போல் வீழ்ந்தார், (1)

புண்ணுற்ற தீயிற் புகையுற் றுயிர் பதைப்ப
மண்ணுற் றயர்ந்து மறுகுற் றுடம்பெல்லாம்
கண்ணுற்ற வாரி கடலுற்றது; அந் நிலையே,
விண்ணுற்றது எம்மருங்கும் விட்டழுத பேரோசை. (2)

மாதர் அருங்கலமும் மங்கலமும் சிந்தித்தம்
கோதை புடைபெயரக் கூற்றனைய கண்சிவப்பப்
பாதமலர் சிவப்பத் தாம்பதைத்துப் பார் சேர்ந்தார்
ஊதை எறிய ஒசிபூங் கொடி ஒப்பார். (3)

ஆவா அரசன் அருளிலனே யாம் என்பார்
காவா அறத்தைஇனிக் கைவிடுவேம் யாம் என்பார்
தாவாத மன்னர் தலைத்தலை வீழ்ந்து ஏங்கினர்
மாவாதம் சாய்த்த மராமரமே போல்கின்றார். (4)

கிள்ளையொடு பூவை அழுத; கிளர் மாடத்து
உள்ளுறையும் பூசை அழுத; உருவறியாப்
பிள்ளை அழுத; பெரியோரை என்சொல்ல
வள்ளல் வனம் புகுவான் என்றுரைத்த மாற்றத்தால். (5)

ஆவும் அழுத; அதன் கன்று அழுத; அன்றலர்ந்த
பூவும் அழுத; புனற் புள் அழுத; கள் ஒழுகும்
காவும் அழுத; களிறு அழுத; கால் வயப்போர்
மாவும் அழுத; அம்மன்னவனை மானவே. (6)

ஞானியும் உய்கலான் என்னுதே நாயகனைக்
கானியும் என்றுரைத்த கைகேசி யும்கொடிய
கூனியும் அல்லால் கொடியார் பிறருளரோ
மேனியும் இன்றி வெறுநீரே ஆயினர். (7)

தேரு தறிவழிந்தார் எங்குலப்பார் தேர்ஓட
நீருகிச் சுண்ணம் நிறைந்த தெருவெல்லாம்
ஆருகி ஓடிக் கண்ணீர் அருநெஞ்சம்
கூருகி ஓடாத இத்துணையே குற்றமே. (8)

மண்செய்த பாவம் உளதென்பார்; மாமலர் மேல்
பெண்செய்த பாவம் அதனிற் பெரிது என்பார்;
புண்செய்த நெஞ்சை விதி என்பார்; பூதலத்தோர்
கண்செய்த பாவம் கடலிற் பெரிது என்பார். (9)

ஆளான் பரதன் அரசு என்பார்; ஐயன் இனி
மீளான் நமக்கு விதி கொடிது காண் என்பார்;
கோளாகி வந்தவா கொற்ற முடிதான் என்பார்;
மாளாத நம்மின் மனம் வலியார் ஆரென்பார்; (10)

ஆதி அரசன் அருங்கேகயன் மகள்மேல்
காதல் முதிரக் கருத்தழிந்தானும் என்பார்;
சீதை மணவாளன் தன்னோடுந் தீக்கானம்
போதும் அதுவன்றேல் புகுதும் எரி என்பார். (11)

கையால் நிலந்தடவிக் கண்ணீர் மெழுகுவார்;
உய்யாள் பொற் கோசலைஎன்று ஓவாது வெய்துயிர்ப்பார்;
ஐயா இளங்கோவே! ஆற்றுதியோ நீ என்பார்;
நெய்யார் அழலுற்ற துற்றூர்அந் நீள்நகரார். (12)

தள்ளூறு வேறில்லாத் தன்மகற்குப் பார் கொள்வாள்
எள்ளூறு தீக்கருமம் நேர்ந்தாள் இவள்என்பார்;
கள்ளூறு செவ்வாய்க் கணிகைகாண் கைகேசி
உள்ளூறு காதல் இலள்போலென் றுள்ளழிந்தார். (13)

நின்று தவமியற்றித் தான் தீர நேர்ந்ததோ?
அன்றிவ் வுலகத்துள் ஆருயிராய் வாழ்வாரைக்
கொன்று களையக் குறித்த பொருள் ஒன்றோ?
நன்று வரங் கொடுத்த நாயகற்கு நன்று என்பார். (14)

பெற்றுடைய மண்ணவளுக்கு ஈந்து பிறந்துலகம்
முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த்தீண்டி
உற்றுறைதும் யாரும் உறையவே சின்னாளில்
புற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போகாதோ. (15)

என்னே நிருபர் இயற்கை இருந்தவா
தன்னேர் இலாத தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய் என்பார். (16)

கோதை வரிவிற் குமரற் கொடுத்தநில
மாதை ஒருவர் புணர்வரா? வஞ்சித்த
பேதை சிறுவனைப் பின்பார்த்து நிற்குமா
சீதை பிரியினும் தீராத் திரு என்பார். (17)

உந்தாது நெய்வார்த்து உதவாது கால்எறிய
நந்தா விளக்கின் நடுங்குகின்ற நங்கைமார்
செந்தா மரைத்தடங்கட் செவ்வி அருள் நோக்கம்
அந்தோ பிரிதுமோ ஆவி நியே ஓ என்பார். (18)

(அயோத்தி, நகர் நீங்கு படலம், 96-114)

இராமன் முடிதுறந்தான் என்றதை அறிந்தவுடனே நகர மாந்தர் அனைவரும் துயரமீதூர்ந்தனர். துன்பப் பதைப்புகள் எங் கணும் பொங்கி எழுந்தன. கவிகளில் தொனித்துள்ள அவல ஒலி களை நுனித்து நோக்கின் அன்று அங்கே நேர்ந்த பரிதாபநிலைகளைத் தெளிவாகக் காணலாம். பாடல்களை ஆழ்ந்து கவனிக்கவேண்டும். தனித்தனி விரித்து எழுத இயலாது. இராம பாசத்தால் ஆருயிர் கள் பரிதபித்து அலமந்துள்ள துயரத் துடிப்புகளை மனக் கண் ணால் கூர்ந்து கண்டு ஓர்ந்து கொள்ளுங்கள்.

1. கைகேசி செய்துள்ள கொடுமையை வசிட்டர் வந்து சொன்னவுடனே அங்கு நின்ற அரசர் அமைச்சர் அந்தணர் முதலிய யாவரும் நெஞ்சம் கலங்கி நிலைகுலைந்து அலறி நிலத்தில் விழுந்தார் என்றமையால் இக்குலமகன் மேல் அவர் கொண்டுள்ள ஆர்வமும் பிரியமும் ஆவலும் உலகறிய வந்தன.

"பெரியோன் உரை செவியில் சாராத முன்னம் தயரதனைப் போல் வீழ்ந்தார்" இராமன் வனம் போக வேண்டும் என்று கைகேசி குறித்தபோது தசரதன் எப்படி உயிர்பதைத்து விழுந் தானோ அப்படியே வசிட்டர் உரை செவியில் பட்டவுடன் அனை வரும் துடித்துத் தரையில் விழுந்தனர்.

இந்த உவமையால் அந்த மாந்தர் எல்லாரும் தம்தம் அருமைப்

பிள்ளையைப் பிரிய நேர்ந்ததாகவே கருதி நொந்தனர் என்பது தெரிய வந்தது.

இராமனிடம் தந்தை பூண்டிருந்த உள்ளப்பாசம் எல்லாருடைய உள்ளங்களிலும் தழைத்து ஓங்கியிருந்தது. இந்த விளக்கமும் குறிப்பும் விழைந்து நோக்கத் தக்கன.

கண் உற்றவாரி கடல் உற்றது; எம்மருங்கும் அழுத ஓசை விண் உற்றது. என்னும்இது அல்லல்களின் எல்லைகளை எண்ணுற்று அறிய வந்தது.

கண்ணீர் வெள்ளமாய்ப் பெருகிக் கடலை அடைந்தது; அழுகைஒலி விண்ணைப் பிளந்தது என்றமையால் விளைந்த துன்பங்களை உணர்ந்து கொள்ளலாம். இடங்கள் தோறும் அழுகையும் அலறலும் அவலமும் ஓலமும் பரிதாபமாய்க் கிளர்ந்து எழுந்தன ஆதலால் "எம்மருங்கும்" என அவ் வெம்மையின் விரிவையும் விதங்களையும் விளக்கினார்.

உயிரினங்கள் பட்ட துயரினங்களைத் தனித்தனியே சுருக்கமாகச் சுட்டியிருக்கிறார். உயிரில் பொருள்களும் துயரில் மூழ்கின என்றமையால் உரிய பொருளின் இயலுணர வந்தது.

வள்ளல் வனம் புகுவான் என்று உரைத்த மாற்றத்தால் கிள்ளைகள் அழுதன; பூவைகள் அழுதன; பூனைகள் அழுதன; பிள்ளைகள் அழுதன; உள்ளங்கள் உருகின; பசுக்கள் கதறின; கன்றுகள் அலறின; பூக்கள் வாடின; புள்ளுகள் புலம்பின; யானைகள் பிளிறின; குதிரைகள் குழறின; தருக்கள் தவித்தன; பகுத்தறிவு இல்லாத யாவும் அழுதன என்றால் அறிவுடைய மனிதர் அழுதனர் என நான் மொழிய நேர்ந்தது முழுதும் மூடமாம் எனக் கவி ஒரு அழுகை இங்கே அழுதிருக்கிறார்.

சராசரங்கள் எல்லாம் இங்ஙனம் தவித்துத் துடித்தன என்றமையால் இராமனது தகவும் தன்மையும் அறியலாகும்.

கைகேசியும் கூனியும் தவிர மற்றவர் எல்லாரும் உள்ளம் துடித்து உயிர் பதைத்துக் கண்ணீர் வெள்ளமாய்ப் பெருகி ஓட உருகி அழுது ஓலமிட்டு மறுகிப் புரண்டார்.

தேர்களும் யானைகளும் குதிரைகளும் ஓடி எங்கும் செல்வ வளங்கள் கொழித்து மங்கலங்கள் பொங்கி இன்பக் காட்சிகள்

நிறைந்திருந்த வீதிகள் எல்லாம் இப்பொழுது கண்ணீர்கள் ஆறு களாய் ஓடின. ஊரெங்கும் ஓலங்கள் ஓங்கி எழுந்தன.

இராமனை அரசனாகப் பெற்று மகிழும் பாக்கியம் பூமிக்கு இல்லாது போயதே என்பார் மண் செய்த பாவம் உளது என்றார்.

மாமலர் மேல் பெண் செய்த பாவம் அதனில் பெரிது என்றது இந்தக் குலமகனைத் தலைவனாகக் கொண்டு நிலவி ஒளிரும் நிலைமை யை இராச லட்சுமி இழந்து விட்டாளே! என்று ஏங்கித் துடித்து இனைந்து நொந்துள்ளமை உணர்ந்து கொள்ள வந்தது.

பூதலத்தோர் கண் செய்த பாவம் கடலிற் பெரிது என்றது இச் சுகுண சுந்தரன் மணிமுடி புனைந்து பவனிவரும் காட்சியைக் கண்டு களிக்கும் பேற்றை மன்பதை இழந்துள்ளமையை நினைந்து பரிந்து கூறிய படியாம்.

என்னபாவம் செய்தேமோ பாழும்விதி நம் நெஞ்சைப் புண் செய்தது என்று புழுங்கி நொந்தார். புண் என்றது கொடிய வேதனையின் கடுமை நோக்கி.

கண் படைத்த பயன் இன்று பெற்றோம் என இராமனது இராச தரிசனத்தை எல்லாரும் பேராவலோடு எதிர்பார்த்து நின்றார்; அது இழந்து போனமையால் இவ்வாறு ஏங்கி அழுதார்.

"கேகய தேசத்திலிருந்து பரதன் வந்தால் அந்தோ அரசை ஆளான்; அண்ணனைத் தன் கண்ணினும் உயிரினும் அருமையாகக் கருதி ஒழுகியுள்ள அப் புண்ணிய சீலன் இங்கு நண்ணிய பொழுது என்னபாடு படுவானோ? இராமன் பொய் சொல்லா மெய்யன்; தன் மனம் துணிந்ததைச் செய்தே தீருவான்; வனம் போகாமல் இரான்; கோமுடி நமக்குத் தீவினையாய் வந்ததே! இனிய தரும மூர்த்தி கொடிய கானகம் போக நேர்ந்ததை அறிந் தும் உடனே சாகாமல் இன்னும் உயிரை வைத்துக் கொண்டு ஏதோ பன்னிப்பேசிப் பாசாங்குசெய்து நிற்கின்றோமே! அய்யோ தெய்வமே! சீதை நாயகனோடு தொடர்ந்து நாமும் தீய கானகம் போவோம்; இல்லையானால் தீயில் விழுந்து சாவோம்; நாம் எல்லா ரும் நம் ஐயன் பின் போய்க் காட்டில் குடி ஏறினால் அந்தக் காடு நாடாகிப் போகாதா? அந்த அழகன் இல்லாத இந்த நாட்டில் நாம் அரைக்கணமும் இருக்கலாகாது" என நகர மாந்தர் எல்லா

ரும் இன்னவாறு பலபலபுலம்பிப் பரிதபித்து அலறிச் செயலிழந்து மறுகி அயல்விழுந்து உருகி எங்கணும் ஓலமாய் நொந்து தவித்தார்.

## இலக்குவன் எழுந்தது.

இங்ஙனம் ஊரெல்லாம் அலங் கோலமாய் அலமந்து தவிக்குங்கால், இலக்குவன் உள்ளங் கொதித்து வில்லை எடுத்து அம்புகளோடு உருத்து ஓடி வந்தான். எப்பொழுதும் அண்ணன் அருகே இருப்பவன். கைகேசி முன்னவனை மாத்திரம் தனியே வரச் சொன்னமையால் இப் பின்னவன் பிரிந்து நின்றான். அக் கொடியவள் சொன்னதைக் கேட்டு அவன் கோசலைமாளிகைக்குப் போனபொழுது இவன் தனது தாயின் அரண்மனையில் தனித்திருந்தான். ஊரில் எழுந்த ஓலத்தால் நேர்ந்த நிகழ்ச்சியைத் தெரிந்தான். நெஞ்சம் கொதித்தான். ஊழிக் காலத்து உருத்திர மூர்த்திபோல் உக்கிர வீரமாய்ச் சீறி எழுந்தான். இவன் வெகுண்டு மூண்ட நிலை வெகுளிச் சுவைக்கு ஓர் இலக்கியமாக விளங்கிருக்கிறது. அயலே காட்டும் பாட்டுக்களை நோக்குக.

*கேட்டான் இளையோன் கிளர்ஞாலம் வரத்தினாலே*
*மீட்டாள்; அளித்தாள் வனம் தம்முனை வெம்மைமுற்றித்*
*திட்டாத வேற்கட் சிறுதாய்என யாவராலும்*
*மூட்டாத காலக் கடைத்தீஎன மூண்டெழுந்தான்.* (1)

*கண்ணில் கடைத்தீயுக, நெற்றியில் கற்றைநாற,*
*விண்ணிற் சுடரும் சுடர்தோன்ற மெய்ந்நீர் விரிப்ப*
*உண்ணிற்கும் உயிர்ப்பெனும் ஊதை பிறங்க நின்ற*
*அண்ணற் பெரியோன்தனது ஆதியின்மூர்த்தி ஒத்தான்.* (2)

*சிங்கக் குருளைக்கு இடும் தீஞ்சுவை ஊனை நாயின்*
*வெங்கட் கடுங்குட்டியை ஊட்ட விரும்பினாளோ?*
*நங்கைக்கு அறிவின்திறம் நன்றிது நன்றிது என்னாக்*
*கங்கைக்கு இறைவன் கடகக்கை புடைத்து நக்கான்.* (3)

*சுற்றார் மணியார் வடிவாள்புடை தோன்ற ஆர்த்து*
*விற்றாங்கி வாளிப் பெரும் புட்டில் புறத்து வீக்கிப்*
*பற்றார்ந்த செம்பொற் கவசம் பனிமேரு வாங்கோர்*
*புற்றாமென ஓங்கிய தோளொடு மார்பு போர்க்க.* (4)

அடியிற் சுடர் பொற்கழல் ஆர்கலி நாண ஆர்ப்பப்
பொடியிற் றடவும் சிறுநாண் பெரும் பூசல் ஓசை
இடியில் தொடரக் கடல்ஏழு மடுத்திஞ் ஞாலம்
முடியிற் குமுறும் மழைமும்மையின் மேல் முழங்க. (5)

வானும் நிலனும் முதலீறில் வரம்பில் பூதம்
மேனின்று கீழ்காறும் விரிந்தன வீழ்வ போலத
தானும் தன தம்முனும் அல்லது மும்மை ஞாலத்து
ஊனும் உயிரும் உடையார்கள் உடைந்து ஒதுங்க. (6)

புவிப்பாவை பரம்கெடப் போருவந்தோரை எல்லாம்
அவிப்பானும், அவித்தவர் ஆக்கையை அண்டமுற்றக்
குவிப்பானும் எனக்கொரு கோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானும் நின்றேன் இது காக்குநர் காமின்என்றான். (7)

விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர் நாகர் மற்றும்
எண்ணாட்டவர் யாவரும் நிற்க ஓர் மூவராகி
மண்ணாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்த போதும்
பெண்ணாட்டம் ஒட்டேன் இனிப்பேருலகத்துள் என்னா (8)

காலைக் கதிரோன் நடுவுற்றதோர் வெம்மை காட்டி
ஞாலத்தவர் கோமகன் அந் நகரத்து நாப்பண்
மாலைச் சிகரத் தனிமந்தர மேரு முந்தை
வேலைத் திரிகின்றது போற்றிரி கின்ற வேலை. (9)

வேற்றுக் கொடியாள் விளைவித்த வினைக்கு விம்மித்
தேற்றத் தெளியாதயர் சிற்றவை பால் இருந்தான்
ஆற்றல் துணைத்தம்பிதன் விற்புயல் அண்ட கோளம்
கீற்றுத்து உடையப் படுநாண் உருமேறு கேட்டான். (10)

(நகர் நீங்கு படலம், 115-124)

இலட்சுமணனுடைய சீற்றமும் வீராவேசமும் ஆரவாரமும் ஆங்காரமும் ஈங்குக் கொந்தளித்துப் பொங்கி நிற்கின்றன. பாடல்களைக் கூர்ந்து படிப்பவர்எவரும் அக் குலவீரனது தீர நிலையையும் பேரபிமானத்தையும் போர் வெறியையும் நேரே கண்டு நெஞ்சம் திகைப்பர். கவிகளைக் கொஞ்சம் கண்ணூன்றிக் கவனியுங்கள். ரௌத்திர ரசம் ததும்பி யுள்ளது.

இராமனது பரிதாப நிலையைப் பார்த்துப் பரிதபித்து வந்த நாம் தம்பியினது பராக்கிரம நிலைமையை நோக்கி இங்கே உயிர்

ஊக்கி எழுகின்றோம். அவனைப் போல் வில்லும் கணைகளும் நம் கைகளில் இல்லை ஆயினும் உள்ளங்கள் துள்ளி உருத்து ஓடுகின்றன. நிறுத்தினும் நில்லாமல் கொதித்து மூள்கின்றன.

1. அரசைக் கவர்ந்து கொண்டு அண்ணனைக் காட்டுக்குப் போகும்படி கைகேசி பணித்தாள் என்றதைக் கேட்டவுடனே தம்பி சீறி எழுந்த சீற்றம் யாரும் நேரே அளந்து கூற முடியாது. அகில வுலகங்களும் அழிந்து படும்படியாய்க் கிளர்ந்து நீண்டது என அதன் அடுந்திறலையும் ஆற்றலையும் குறிப்பாக உணர்ந்து கொள்ள உரைத்தார்.

"மூட்டாத காலக் கடைத்தீ என மூண்டு எழுந்தான்".

ஈண்டு வந்த இந்த உவமை நீண்ட சிந்தனையில் விளைந்தது. காலக் கடைத்தீ என்றது ஊழித்தீயை. யுகாந்த காலத்தில் உலகங்களையெல்லாம் ஒருங்கே அழித்து ஒழிக்க வல்ல காலாக்கினியை இலக்குவன் கோபத்திற்கு ஒப்பு உரைத்தது, யாராலும் தடுக்க முடியாத வேகமும் வெப்பமும் வெல்லும் திறலும் கருதி.

உலகத்துத் தீ பிறர் மூட்ட மூளும்; ஊழித்தீ ஒருவரும் மூட்டாமல் காலாந்தத்தில் தானாகவே கதித்து எழும் ஆதலால் "யாவராலும் மூட்டாத தீ" என அதன் இயல்பையும் செயலையும் காட்டியருளினார்.

உலகத்தில் தருமம் குன்றிப் பாவம் நிறைந்த பொழுது அத் தீ தெய்வகதியாய் மூண்டு வையம் முழுவதையும் எரிக்கும். இங்கே தரும மூர்த்தியான இராமனுக்கு இடையூறு நேர்ந்தமையால் கடையில் மூளும் தீ இடையில் மூண்டது.

தரும நீதி சிதைய நேர்ந்ததே! என்று வருமம் மீறி வந்தமையால் இந்தக் கோபத்தின் அருமையும் பெருமையும் அறியலாகும்.

2. உரிமை மீதூர்ந்த இச்சினம் மனத்தில் மண்டியபொழுது அவ்வுருவம் நின்ற நிலையை அடுத்துக் காண்கின்றோம்.

கண்களில் நெருப்புப்பொறிகள் பறந்தன; நெற்றியும் புருவங்களும் துடித்தன; மெய்யில் வியர்வைகள் பொடித்தன; உயிர்ப்பும் பெருமூச்சும் உக்கிரமாய் வீசின; செயிர்ப்பும் சீற்றமும் புகைந்து பொங்கின; ஆகவே இவனது ஆதிமூலநிலை அறியவந்தது

"அண்ணல் பெரியோன் தனது ஆதியின்மூர்த்தி ஒத்தான்".

இந்த இளையவனது பழைய நிலைமையை உணர்த்தியபடியிது. ஆதியின் மூர்த்தி என்றது ஆதிசேடனை. இலக்குவன் ஆதிசேடனது அமிசமாய் அவதரித்துள்ளான். திருமால் இராமனாய் அவதரித்த பொழுது அப்பரமன் பாயலான அரவரசு இளையவனாய் வந்தது. "வளையொடு திகிரியும் வடவை தீதர, விளைதரு கடவுடை விரிகோள் பாயலும், இளைஞர்கள்" (திரு அவதாரம், 23) என முன்னம் அம்முதல்வன் கூறியுள்ளதும் ஈண்டு அறிய உரியது. அங்கு இடை மிடைந்த வடவை இங்கும் வந்தது.

இது பொழுது அரச குமாரனாய் அழகும் இனிமையும் மருவியிருப்பினும், பழைய குல இயல்பு தலை நிமிர்ந்து நின்றது. கோபத்தை வருணிக்குங்கால் அவதார மருமத்தையும் கவி ஞாபகப் படுத்தினார். "பாம்பு சீறியது போல் சீறினான்" என்னும் பழமொழியால் சீற்றத்திற்கு அது ஏற்றம் பெற்றுள்ளமை புலனாம்.

படுக்கைக்கு அணையாய் அமைந்திருந்த அந் நாகராசன் தன் நாயகனுக்கு எவ் வழியும் உறுதித் துணையாய் இதம் புரிய ஈண்டு உரிமை பூண்டு வந்துள்ளான். அவ் வரவு உரம் பெறப் பிறவியிலேயே உடன் தோன்றிப் பிறப்புரிமையுடன் சிறப்புற்று எழுந்தான். ஆகவே அவ்வண்ணலுக்கு நேர்ந்த இடையூற்றைக் கேட்டுக் கண்ணில் கடைத்தீயுக இவ்வண்ணம் கடுத்து வந்தான்.

3. இங்ஙனம் சீறி வந்த இவன் கூறிய மொழிகள் கூரிய வேல்கள் போல் கொதித்துப் பாய்ந்தன.

"சிங்கக் குருளைக்கு இடும் தீஞ்சுவை ஊனை நாயின்
வெங்கட் கடுங் குட்டியை ஊட்ட விரும்பினாளோ?"

இங்கே வார்த்தைகள் சினமும் கொடுமையும் சிறுமையும் தோய்ந்திருக்கின்றன. யாண்டும் இழி மொழி பகராத விழுமிய குலமகன் வாயிலிருந்து இங்ஙனம் பழிமொழிகள் வெளி வந்துள்ளன. இவ்வாறு வரலாமா?

ஈண்டு நாய்க் குட்டி என்றது யாரை? உருவகங்களாய் மருவி எழுந்த உரைகளில் உணர்ச்சியும், உள்ளத் துடிக்கும், எள்ளலும் பழிப்பும் துள்ளி நிற்கின்றன.

இராமனுக்கு உரிய இனிய அரசை வஞ்சித்துக் கவர்ந்து கைகேசி தன் மகனுக்குக் கொடுக்க நேர்ந்ததைக் கடுத்துச் சுட்டி இலக்குவன் இப்படிக் கொதித்துத் திட்டியிருக்கிறான்.

இராமனைச் சிங்கக் குருளை என்றது அருந்திறலாண்மையும் பெருந்தகைமையும் கருதி. குருளை=குட்டி. வஞ்சம் அறியாத நெஞ்சமும், அஞ்சாமையும் இளமைநலமும் தெரியவந்தது.

அரசர்க்குச் சிங்கத்தை உவமை கூறுவது மேல்நாட்டு இலக்கியத்திலும் வழக்கமாயுள்ளது.

"We are two lions litter'd in one day,
And I the elder and more terrible." (Julius Caesar, 2-2)

"ஒரே நாளையில் பிறந்த இரண்டு சிங்கக் குட்டிகளில் நான் மூத்தவன்; ஆற்றல் மிக்கவன்." எனச் சீசர் என்னும் உரோமாபுரி மன்னன் தன்னைக் குறித்துச் சொல்லியுள்ளான்.

அரசபதவியைத் தீஞ் சுவை ஊன் என்று குறித்தது அதன் செழுமையும், கொழுமையும், இனிமையும் நோக்கி. இளவரசை அரியேறு என்றமையால் அதற்கு ஏற்ப அரசுரிமை உருவகிக்க வந்தது. சத்திரியத் தன்மை உய்த்துணர நேர்ந்தது.

நாயின் குட்டி என்றது பரதனைச் சுட்டியது. பெற்றதாய் செய்த பிழையால் அந்த உத்தமன் இப்படிப் பழிக்கப்பட்டான்

ஒரு தந்தைக்குப் பிறந்த பிள்ளைகள்; ஒன்று சிங்கக் குட்டி என நின்றது. மற்று ஒன்று நாய்க் குட்டி ஆயது. இது எப்படிப் பொருந்தும்? அப்படியாயின், இப்படிச் சொன்ன இந்தக் குட்டி எந்தவகையைச் சேர்ந்தது? இவ்விசித்திர வேறுபாடு எவ்வாறு நேர்ந்தது? இதனைக் கொஞ்சம் சிந்தனை செய்ய வேண்டும்.

இம் மாறுபாடு பாத்திரபேதத்தால் என்பது ஆத்திரத்தோடு நுணுக்கமாக உணர்த்தப்பட்டது.

தசரதன் என்னும் சிங்க ஏற்றுக்குக் கோசலையான சிங்கப் பேடு தகுதியாக இசைந்திருந்தது. அதன் வயிற்றில் பிறந்தது சரி யான சிங்கக் குருளையாய் வந்தது.

இறுதியில் பேய் என வந்த அந்தத்தாயின் வயிற்றில் பிறந்த மையால் சிறந்த தூயவன் நாயின் குட்டி என நேர்ந்தான்,

சிங்கக் குருளை, தீஞ்சுவை யூன், நாய், குட்டி என்பன இராமன், அரசு, கைகேசி, பாதனை முறையே சுட்டி நின்றன.

வெம்கண் கடும் என்றது அக் குட்டியின் வெம்மையும் கடுமையும் விளக்கிய படியாம். அருமையான தலைவனுக்கு உரியதை வலிமையாகக் கவர வந்ததே என்னும் கொடுமைபற்றி வந்தது.

ஊட்ட விரும்பினளோ! என்றதில் அது உண்ண விரும்பவில்லை என்னும் உண்மை உள்ளே தொனித்து நின்றது. கொடுங் கோபத்தால் நெஞ்சம் கொதித்துப் பேசினும் உள்ளதும் மெல்ல வெளிப்படுகின்றது. ஓகாரம் அவள் விருப்பம் விளைந்தபடியை நினைந்து ஆங்காரத்தோடு ஆர்த்து வந்தது.

''நங்கைக்கு அறிவின் திறம் நன்று நன்று'' என்றது இகழ்ச்சி பற்றி எழுந்தது. அடுக்கு உளத்துடிப்பில் தோன்றியது.

வழிவழியே முறை திறம்பாதுவந்த அரசுரிமையைத் தனது பொல்லாத அறிவின் வலியினலேயே வஞ்சமாக வலிந்து கவர்ந்திருக்கிருள் என நினைந்து சினந்து மனம் கசந்து இங்ஙனம் இகழ்ந்து கூறினன்.

கொடிய தீமையாய் நெடிதோங்கி யுள்ள இவளது அறிவின் திறம் தீது தீது என்பான் அதனை மாற்றிக் கூறி வயிற்றெரிச்சலோடு நகைத்தான். நகை எள்ளல் பற்றி எழுந்தது.

புனிதமான பாதனை அநியாயமாக இங்கே இளித்திருப்பது அண்ணனுக்கு நேர்ந்ததை எண்ணிக் கொதித்தமையாலாயது.

மிகுந்த வெகுளி மூண்டால் பெருந்தகையான சிறந்த மனிதனும் வரம்புமீறிப்பேசிவிடுவான் என்பது ஈண்டு விளங்கிநின்றது.

இங்ஙனம் கொடிய சினமுடையனுய்க் கொதித்தெழுந்த இலக்குவன் இராசவீதியில் நின்றுகொண்டு யாரும் அஞ்ச ஆங்காரத்தோடு வீரவாதங்கள் கூறினன்.

''ஊனும் உயிரும் உடையார்கள் உடைந்து ஒதுங்க'' என்றதனல் இந்த மானவீரனது கொடுஞ்சீற்றத்தையும் போராற்றலையும் போராற்றமூண்டுள்ள போக்கையும் கண்டு யாவரும்அஞ்சிநடுங்கி அயல் மறைந்து செயல் மறந்துள்ளமை அறியலாகும்.

"எனது அண்ணனுடைய முடி சூட்டுக்கு மாறுபாடானவர் யாவராயினும் அவரனைவரையும் ஒருங்கே கொன்று தொலைத்துக் கண்ட மட்டும் வென்று பிணங்களை அண்டமுற்றும் குவித்து வீரவேள்வி செய்து மணிமகுடத்தை என் கையினாலேயே எடுத்து இரகுநாதன் திருமுடியில் இதோ சூட்டுகின்றேன்; இதனைத் தடுக்க வருகிற பயல்களெல்லாம் அயல் ஒதுங்கி நில்லாமல் நேரே வந்து பார்க்கலாம். பேடித்தனமாய் மறைந்துநின்று கோளும் குண்டுணியும் கூறி இடையூறு செய்வது ஈனமக்கள் செயலாம். மானவீரராயின் உடனே எதிர்வர வேண்டும்" என இவ்வாறு முதிர் கோபத்தோடு மூண்டு மொழிந்தான்.

அந்த ஆண்டகை வீரவெறியுடன் நின்று அன்று பேசிய தீரமொழிகள் பேராண்மை ததும்பி யாரும் அஞ்சி அயரப் பெருகி எழுந்தன. இந்த வெய்ய தடையைச் செய்தவள் கைகேசி என்று தெரிந்தமையால் வையகத்திலுள்ள பெண்கள் மீதெல்லாம் அவன் கோபம் பொங்கி மூண்டது.

"மண் நாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்த போதும்
பெண் நாட்டம் ஒட்டேன் இனிப் பேருலகத்துள்"

இதில் இவனது வீரத்திறல் அளவுமீறி வீறிட்டுள்ளது.

படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்கின்ற திரிமூர்த்திகள் வந்து கெஞ்சினாலும் மிஞ்சித் தடுத்தாலும் இனி இந்த உலகத்தில் பெண் பிறப்பை நிலைக்க ஒட்டேன்; தொலைத்தே தீருவேன் என்று தோள்தட்டி நின்றான்.

ஒருத்தி செய்த பிழையால் அந்த இனத்தை எல்லாம் சினத்தீ சென்று பற்றியது. கோபவெறி நிலைமீறியுள்ளமையால் தேவதேவரையும் இவ்வாறு எடுத்தெறிந்து பேசினான்.

சினம் மண்டியபின் மனிதன் மனம் கொண்டபடியெல்லாம் இனந்தெரியாமல் பேசுவான் என்பது இதனால் அறியலாகும்.

சாதாரணமான ஒரு அரசகுமாரன் மும்மூர்த்திகளையும் எம்மாத்திரம் என்று எண்ணி இருக்கிறான். இது என்ன வியப்பு? பேச்சு எவ்வளவு எல்லையில் எழுந்து பாய்ந்திருக்கின்றது!

இதுபொழுது உருவத்தில் மனிதன் ஆயினும் இவனது

உண்மைநிலை உள்ளே ஒளிவிட்டு மிளிர்கின்றது. பரமனது ஓர் அமிசம் என்பதை உரை உணர்த்திநின்றது.

## இராமன் இலக்குவனை ஆற்றியது.

இங்ஙனம் கொடிய கோபாவேசத்துடன் நகர் நடுவே நின்று இலக்குவன் வீரவாதங்கூறி ஆரவாரம் செய்தான். போருக்கு அறை கூவிய அப்பேரொலி இராமன் காதில் விழுந்தது. சுமித்திரையிடம் விடைபெறச் சென்றிருந்த அக் கோமகன் தம்பியை நோக்கி விரைந்து வந்தான்.

அக் குலமகன் வந்ததும், இளவலைக் கண்டதும், உளம் மறுகி உரைகள் பகர்ந்ததும் உழுவலன்பும் கெழுதகைமையும் தழுவியுள்ளன.

### இராமன் வந்த நிலை

*வீருக்கிய பொற்கலன் வில்லிட, ஆரம் மின்ன*
*மாருத் தனிச்சொல் துளிமாரி வழங்கி வந்தான்*
*கால்தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும்*
*ஆருக்கனல் ஆற்றும் ஓர் அஞ்சனக் குன்றம் என்ன.* (1)

### தம்பியை வினவிய முறை

*மின்னொத்த சீற்றக் கனல் விட்டு விளங்க நின்ற*
*பொன்ஒத்த மேனிப் புயல்ஒத்த தடக்கை யானை*
*என் அத்த என்நீ இறையேனும் முனிந்திலாதாய்*
*சன்னத்த னாகித் தனு ஏந்துதற்கு ஏது? என்றான்.* (2)

### இளையவன் இசைத்தது

*மெய்யைச் சிதைவித்து நின் மேன்முறை நீத்த நெஞ்சம்*
*மையிற் கரியாள் எதிர் நின்னை நன் மௌலி சூட்டல்*
*செய்யக் கருதித் தடைசெய்குநர் தேவ ரேனும்*
*துய்யைச் சுடுவெங் கனலிற் சுடுவான் துணிந்தேன்.* (3)

*வலக்கார் முகம்என் கையதாக வானு ளோரும்*
*விலக்கார்; அவர் வந்து விலக்கினும் என்கை வாளிக்கு*
*இலக்கா எரிவித்து உலகேழினொடு ஏழும் மன்னர்*
*குலக்காவலும் இன்று உனக்கு யான்தரக் கோடி என்றான்.*

### முன்னவன் மொழிந்தது

இளையான் இது கூற இராமன் இயைந்த நீதி
வளையாவரு நன்னெறி நின்னறி வாகும் அன்றே
உளையா அறம் வற்றிட ஊழ்வழு வுற்ற சீற்றம்
விளையாத நிலத்து உனக்கு எங்ஙன் விளைந்ததென்றான். (5)

### பின்னவன் பதில்

நீண்டான் அது உரைத்தலும் நித்திலம் தோற்க நக்குச்
சேண்டான் தொடர்மாநிலம் நின்னதென் றுஉந்தைசெப்பப்
பூண்டாய் பகையால் இழந்தே வனம் போதி என்றால்
யாண்டோ அடியேற்கு இனிச்சீற்றம் அடுப்பதென்றான். (6)

நின்கட் பரிவில்லவர் நீள்வனத்து உன்னை நீக்கப்
புன்கட் பொறியாக்கை பொறுத்துயிர் போற்று கேளோ
என்கட் புலமுன் உனக்கீந்து வைத்து இல்லை என்ற
வன்கட்புலம் தாங்கிய மன்னவன் காண்கொல் என்றான். (7)

அண்ணனும் தம்பியும் எதிர்முகமாய் உரையாடி நிற்கும் இதில் பரிவும் பண்பும் அறிவும் அமைதியும் பெருகியிருக்கின்றன. கவிகளைக் கருத்தூன்றி நோக்கி உள்ளுணர்ச்சிகளையும் உரைமாட்சிகளையும் நன்கு ஓர்ந்து கொள்ளவேண்டும்.

1. இராமன் இளவலை நோக்கி ஆத்திரத்தோடு கடுகி வந்த நிலை காட்சி இன்பமாய் நெடிது நிமிர்ந்துள்ளது.

இளவரசுக்குரிய உயர்ந்த மணியணிகள் திருமேனியில் மருவியிருந்தன. அவன் விரைந்து வருங்கால் அந்த அணிகளிலிருந்து செம்மை வெண்மை பசுமை முதலிய ஒளிகள் அயல் எங்கணும் வீசின ஆதலால், "பொற்கலன் வில் இட; ஆரம் மின்ன" என அந்நீர்மை நிலை தெரிய வந்தன. வில்=ஒளி. வீறு ஆக்கிய என்றது அரசமாட்சியின் பெருமிதமும், பேரழகும் நேரே விளக்கி நின்ற அக்கலன்களின் நலன் காணவந்தது. ஆரம்=முத்துமாலை. அரசகோலத்துடன் இக் கோமகன் அது பொழுதிருந்த நிலைமையும் தலைமையும் தெரிந்தன.

ஊழித்தீயைப் போல் கொதித்துநின்ற தம்பியின் கோபத்தை ஆற்ற வருதலால் அதற்கு ஏற்ப உருவகம் வந்தது.

மின்னலை வீசி நீர்த்துளிகளைச் சிதறிக் கார்மேகம் நேர்வந்ததுபோல் கலன் மின்ன இனிய மொழிகளை வழங்கிச் சீராமன் வந்தான் என்க. காற்று அடிக்க மண்டி எழுந்த கடுந்தீ எனக் கோபம் நெடிது ஓங்கி நின்றமையால் "கால் தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும் கனல்" என்றார். கால் = காற்று. மனத்தில் கொதித்து மூண்ட சினத்தீயை வருணித்த படியிது.

ஆறுக்கனல் ஆற்றும் ஓர் அஞ்சன மேகம் என இராமனது நீர்மையை நெஞ்சுணர உரைத்தார். இளையவன் நிலைமையும், மூத்தவன் தலைமையும் இங்ஙனம் புலனுற நின்றன. கனல் நீரால் அன்றி வேறு ஒன்றாலும் அவியாது; இலக்குவன் சினமும் இராமனால் அன்றி வேறு எவராலும் தணியாது. ஓர் என்றது தனி மகிமை கருதி. காளமேகம் கால் நடந்து வந்தது போல் வந்தான் என்க.

2. இவ்வாறு விரைந்து வந்த அண்ணல் தம்பியை அணுகி, "ஐயா என்ன இது? எதற்கு இப்படிக் கோபம்! யாண்டும் வெகுளாத நீ ஈண்டு வெகுண்டு வில்லும் கையுமாய் மூண்டது ஏன்?" என நீண்ட கையால் தழுவி ஆர்ந்த அன்புடன் நின்றான்.

என் அத்த! என இளையவனை விளித்துள்ளதில் பிரியமும் அன்பும் பெருகி யுள்ளன. எப்பொழுதும் மலர்ந்த முகத்தனாய் அன்பும் பணிவும் கனிந்து அண்ணனிடம் பழகி வந்துள்ளான்; என்றும் யாதும் முனியாமல் எங்கும் இனியனாய் ஒழுகிவந்தவன் இன்று கோபம் கொண்டு மண்டிநிற்பதைக் கண்டதும் வியந்து இறை ஏனும் முனிந்திலாதாய்! என்று முறை ஓர்ந்து நயந்து கூறினான். இறை = சிறிது. இளையவன் சினக்குறிப்பை இது வரையும் மூத்தவன் நேராகப் பார்த்ததில்லை என்று தெரிகின்றது.

என்றும் இல்லாத கோபம் கொண்டு போருக்கு மூண்டு நிற்கின்றாயே! இதற்குக் காரணம் என்? என்று கனிந்து கேட்டான்.

"சன்னத்தன் ஆகித் தனு ஏந்துதற்கு ஏது என்?" என்றதனால் அப்பொழுது இலக்குவன் நின்றநிலை அறிய வந்தது. சன்னத்தம் = ஆயத்தம். போர்க் கோலத்துடன் மூண்டு வில் வீரம் காட்டி வீறிட்டு நிற்கும் நிலை நோக்கி வந்தது.

எவ்வளவு எதிரிகள் சேர்ந்தாலும் அவ்வளவு பேரையும் ஒருங்கே கொன்று தொலைப்பேன் என்னும் குறிக்கோளுடன் வில் ஏந்தி யுத்தசன்னத்தனாய் உருத்துநின்ற தம்பியைத் தடவி அன்பு நலம் கனிய நம்பி நயமொழி பகர்ந்தான்.

இளையவன் கோபித்து எழுந்துள்ளதற்குக் காரணம் இது தான் என்பதை ஊகித்து அறிந்தும் யாதும் அறியாதவன் போல் இதற்கு ஏது என்? என்று சாதுரியமாகக் கேட்டான். கேட்கவே தம்பி உற்றதை உரைத்தான். அவ்வுரைகளில் உள்ளக்கொதிப்பும் ஆங்காரமும் ஓங்கி எழுந்தன.

"நமது குலமரபைச் சிதைத்து, சத்தியத்தைத் தொலைத்து வஞ்சநெஞ்சளாய் மடமைபுரிந்துள்ள அந்தக் கொடியவள் எதிரே தேவரீர் திருமுடியில் என்கையால் மணிமுடி சூட்டுகின்றேன்; இதற்குத் தடைசெய்யத் தேவரே திரண்டுவரினும் யாவரையும் அடியோடு நீறாக்கி அரசை உங்களுக்கு ஆக்குவேன்; வீரவில் என்கையில் இருக்கும் பொழுது இந்த மண்ணும் விண்ணும் எனக்கு எம்மாத்திரம்! ஈரேழு எனப் பேரமைந்துள்ள பதினாலு உலகங்களையும் தாங்கள் தனி அரசு ஆள அடியேன் அயல்நின்று காக்கின்றேன். முடியை நானே புனைகின்றேன்" என்று அண்ணன் எதிரே தம்பி துடிதுடித்து நின்றான்.

"தேவர் ஏனும், துய்யைச்சுடு வெங்கனலில் சுடுவான் துணிந்தேன்" என்றமையால் இவனது உள்ளத்துணிவும் உறுதியும் உணரவந்தன. துய்=பஞ்சு. இன்று என் விருப்பத்திற்கு மாறுபட்டவர் எவராயினும் அவர் நெருப்பில்பட்ட பஞ்சுபோல் படுவார் எனத்தனது அடுதிறலை வெளிப்படுத்தினான்.

பெருஞ்சீற்றம் உடையனாய் இளையவன் இங்ஙனம் கொதித்துக்கூறவே மூத்தவன் ஆர்த்தியுடன் பார்த்து, "தம்பி! இது என்ன? இப்படி நீ சினம் கொள்ளலாமா?" என்று மனம் கனிய மொழிந்தான். சினம்தணிய மொழிந்த இந்த இனிய வாசகத்தைக் கேட்டு இளையவன் மீளவும் மூண்டான். "தரும மூர்த்தியாகிய தங்களுக்கு நேர்ந்துள்ள இந்த ஆபத்தில் என் கோபத்தைப் பயன்படுத்தவில்லையானால் நான் உயிரோடு இருந்து பயன்என்? வயது முதிர்ந்தும் மனைவியிடம் அதி மோகியாய் மதிமயங்கி

அருமை மகனுக்கு நல்கிய உரிமை அரசை மாற்றி வாக்குமாறி இருக்கும் அந்த அரசனைப் போல் நானும் இராமத்துரோகியாய் மானம் அழிந்து நிற்க வேண்டுமா?'' என்று உள்ளம் குமுறிக் கண்ணீர் ததும்பி உருகி மொழிந்தான்.

''வன்கண் புலம் தாங்கிய மன்னவன் காண்கொல்?''

தசரதனை இலக்குவன் இவ்வாறு மனம் கடுத்து வைதிருக்கிறான். வன்கண் = கொடுமை. கண் இரங்காத கடிய நெஞ்சுடைய கொடியவன் என்றபடி.

ஊரும் நாடும் உள்ளம் உருகிப் போற்றும் அருமைப் பிள்ளையிடம் யாதும் இரங்காமல் பெற்றவன் என்று பேர்வைத்துக் கொண்டு பெருந்துயர் செய்துள்ளானே! எனவருந்தி நொந்தான்.

தந்தை என்னாமல் மன்னவன் என அந்நியமாச் சொன்னது தனது தமையனுக்கு இடர் இழைத்துள்ளமையை எண்ணி.

''பெற்ற பிள்ளைக்குப் பெரும் பிழை செய்த குற்றமுடையான் கண்முன் என் அண்ணனுக்குக் கொற்றமுடி சூட்ட நான் இந்த வெற்றி வில்லை எடுத்தேன்; என்னை விட்டருள வேண்டும்'' என்று விழிநீர் மல்கி வெதும்பி நின்றான்.

உழுவலன்புடைய தம்பியின் உள்ள நிலையை நோக்கி இராமன் மெள்ள உணர்வு நலங்களை உரைத்தான்.

## அண்ணனது அறிவுரை.

''தம்பி! நமது அருமைத் தந்தைமீது நீ வீணே வெகுள்கின்றாய்! அவர் என்பால் பிரியம் மிகவுடையவர். அரசை உரிமையுடன் உவந்து உதவினார். அங்ஙனம் உதவுங்கால் நான் அதனை விழைந்து கொண்டேன். அது என் குற்றம். அரிய பெரிய அரசாட்சியைச் சிறியவனான நான் பெரியவர் இருக்கும் போதே பெற இசைந்தது எவ்வளவு பேதைமை! அவர் ஆர்வமுடன் தந்தார்; பிழை என்று உணராமல் பேராசையோடு நானும் இசைந்தேன்; அது பேர்ந்து பட நேர்ந்தது; இதனைக் கொஞ்சம் ஓர்ந்துபார்! அரசை ஆளும் தகுதி எனக்கு இதுபொழுது இல்லை என்பதை விதி விளக்கியுள்ளது. மதிநலமுடைய நீ எதையும் கூர்ந்து நோக்கி யாண்டும் தெய்வநியமங்களைத் தேர்ந்து கொள்ள வேண்டும். எவரையும் இகழ்ந்து பேசலாகாது. நம் வினையின் படி

மே யாவும் விளைந்து வருகின்றன. பிறரை நோவதால் யாதுபயன்? மதிமானுன உனக்கு அதிகமாகப் போதனை செய்வது மிகையாம்'' என இனிய முகத்தனாய் இதமொழி பகர்ந்தான். இங்ஙனம் பகர்ந்தும் இளையவன் பழைய படியே பரிந்து நின்றான். அத் தம்பிக்கு இந் நம்பி மறுபடியும் மதி நலம் கூறினன்.

நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை; அற்றே
பதியின் பிழையன்று; பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழைஅன்று; மகன்பிழை அன்று; மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது? என்றான்,

(அயோத்தி, நகர் நீங்கு படலம், 133)

இராம வாசகமாய் வந்துள்ள இது அரிய பொருளமைந்தது. ஆழ்ந்து ஆராய உரியது. கருதிய உறுதியைத் தெளிவுறுத்த உவமை மருவி வந்தது.

ஆற்றில் தண்ணீர் இல்லாமல் போனல் அது நதியின் பிழை ஆகுமா? ஆகாது. மேகம் மழை பொழிந்தால் நீர் வெள்ளமாய்ப் பெருகி நதியில் நிறைந்து ஓடும். மழை பொழியாது ஒழியின் நீர் இலதாய் முடியும்; அந்த இன்மைக்குக் காரணம் மழையே ஆம்; ஆகவே அது நதியின் பிழை அன்று என்று மதி தெளிய வந்தது.

இந்த நதி பதி முதலியோர்க்கு ஒப்பாய் நின்றது.

பதி என்றது தசரதனை. உலகிற்கெல்லாம் அதிபதி என்னும் தலைமை தோன்ற வந்தது. பயந்து நமைப் புரந்தாள் என்றது கைகேசியை. மகன் என்றது பரதனை. தான் அரச பதவியை இழந்து மணிமுடி துறந்து வனம் போதற்குக் காரணம் இந்த மூவருமே என்று தம்பி கோபமீதூர்ந்து கொதித்து வந்துள்ளமையால் அண்ணன் இவ்வாறு அவரை எண்ணி இசைத்தான்.

யாண்டும் என்றும் எவ்வழியும் தமக்கு இதமே புரிந்துவரும் பேரன்பாளரை ஈண்டு நீ பிழையாக எண்ணியது பெரிதும் பிழை என இளையவனுக்கு மூத்தவன் உணர்வுறுதி காட்டினன்.

விரிந்த விளை நிலங்களுக்கும் பரந்த உயிரினங்களுக்கும் நாளும் இனிய நீர் ஊட்டி நலம் புரிந்து வந்த நதி திடீர் என்று புனல் வறந்து நின்றால் '' இந்தப் பாவி நதி நீர் தாவில்லையே ''

என யாரேனும் அதனை இகழ்ந்து பழிப்பார்களா? பழித்தால் அது எவ்வளவு மடமை! எத்தகைய நன்றி மறப்பு! எத்துணை ஈனம்! உய்த்துணர வேண்டும்.

என்றும் அன்புரிமையுடன் இதமே கருதி இன்பமே செய்து வந்த தந்தை தாயர்களை இன்று நீ மாறுபாடாக எண்ணிச் சிந்தை திரிந்து சீறி வைவது சீர்மையாகுமா? நேர்மையோடு கொஞ்சம் நினைந்து உனது நீர்மையை ஓர்ந்து பார்.

பெரிய சீவ நதியில் குடிநீர் வற்றியது போல் உரிய பதி முதவியோரிடம் புதிய மாறுதல் தோன்றின் அந்த அதிசயநிலைமையை ஆராய்ந்து விதி விளைவை வியந்து அமைதியுற வேண்டும்.

நனவிலும் கனவிலும் நமக்கு இன்பமே செய்யும் இனிய இயல்பினர்; பெரிய அன்பு நிலையங்கள் அவர்மேல் குறை கூறல் பெருங் குற்றமாம்.

என்பாலுள்ள பேரன்பால் நீ மதிமயங்கி நிற்கின்றாய்; நான் தெய்வமாக நினைந்து போற்றுவோரை நீ சினந்து தூற்றுகின்றாய்; அங்ஙனம் செய்வது தவறு; அடங்கி அமைதல் நலம்.

அண்ணன் அரசுமுடி சூடவில்லையே என்று எண்ணி வருந்திக் கண் எதிரே யுள்ளவரைக் கடுத்து எழுந்தாய்; உண்மையைச் சிறிது உணர்ந்து நோக்கின் உறு சினம் நீங்கிப் பொறுமை மீக் கொள்வாய்.

தந்தை முதலிய எல்லாரும் ஒருங்கு கூடி உவந்து உதவிய அரச பதவி இடையே தடையாயதற்குக் காரணம் எனது வினைப் பயனேயாம்; ஆகவே யாரையும் வீணே நொந்து கொள்ளலாகாது.

பயந்து நமைப் புரந்தாள் எனக் கைகேசியை இங்கே புகழ்ந்து கூறியது இராமனது உயர்ந்த பெருந்தகைமையை உணர்த்தி நின்றது. உள்ளப் பண்பு உரையில் துள்ளுகின்றது.

தனக்குக் கொடுந்துயர் புரிந்துள்ள அக் கொடியவளிடம் இக் கோமகன் ஒரு சிறிதும் மனம் மாறாமல் உரிமை கூர்ந்திருப்பது அருமை நிலையமாய் அதிசய மாகின்றது.

பிறர் அணு அளவு இடர் செய்தாலும் மனிதன் ஆங்காரம் கொண்டு ஆயுள்வரையும் வைது பழித்து அவர்க்கு வெய்யதுயர்

செய்ய விரைந்து நிற்கின்றான். பொதுவான இவ்வைய நிலையோடு அவ்வையன் இயல்பை எண்ணி நோக்கின் எவ்வழியும் இறும்பூதே விளைகின்றது.

தன்னைப் பெற்ற கோசலையையும் தம்பியைப் பெற்ற சுமித்திரையையும் அயல் ஒதுக்கிக் கைகேசியே தாய் என இருவருக்கும் ஒருமையாக இந் நம்பி உரிமை பாராட்டினான்.

வெம்பிக் கொதித்த தம்பிக்கும் தாய்என உடன் அணைத்தது உற்ற சினம் நீங்கி அவன் உள்ளம் கனிய.

தன் அறிவின் திறத்தினால் வஞ்சித்து அரசைக் கவர்ந்து கொண்டாள் எனக் கைகேசியை வெகுளலாகாது என்பான் மதியின் பிழை அன்று என்றான். இந்த மதியினாலேதான் பதியும் மகனும் பழிபட நேர்ந்தனர்; அந்த அதிசயம் தோன்ற அது நடுவே நின்றது.

அரியாசனத்தில் அமர்ந்து அரசு புரியும் நல்வினைப் பயன் எனக்கு இதுபொழுது இல்லை என்பான் விதியின் பிழை என்றான்.

விதியின் பயன் என்னாது பிழை என்றது சும்மா இருந்த தன்னை முடி புனைவதாக வெளியே இழுத்து உலகறியச் செய்து முடிவில் பழுது படுத்திய அப்பிழை உணர வந்தது.

என் விதி செய்த பிழைக்குப் பிறர்மீது பழி கூறலாகாது; அதன் பயனை நான் அனுபவிக்க வேண்டும் என்பதாம்.

> "விதியினால் வாழ்வதல்லால் மேதினியோர் தங்கள்
> மதியினால் வாழ்வதொன் றுண்டோ—பதிதோறும்
> சங்கரனும் ஐயம்எடுத் துண்டான் தடங்கடல்சூழ்
> மங்கையுடன் காடுறைந்தான் மால்."

இராமன் முடிதுறந்து மனைவியோடு போய் வனவாசம் செய்தது விதியின் வினைவாம் என இது விளக்கியுள்ளமை அறிக.

நறுநீர் இல்லாத நதிபோல் அரசுரிமை இன்றி வெறு நீர்மையனாயுள்ள தன் நிலைமைக்கு விதியே காரணம் என விளக்கி இளையவன் அமைதியுறுமாறு அறிவுரை அருளினான்.

"ஆராத சூடருடைமை ஆரமிர்தின் குற்றமோ?
ஏரியங்கு இல்லாமை எழிலியின் குற்றமோ?
காரரும்பு மலராமை காய் கதிரோன் குற்றமோ?
தேராதான் உணராமை தெளிவுடையோன் குற்றமோ?"
(நீலகேசி-உரை)

புனல்இன்மை நதியின் பிழை அன்று என்ற நம் கவியோடு ஒருவகையில் இது ஒத்துள்ளது. பொருள் நிலைகளை உய்த்துணர்க.

செங்கோல் ஏந்தி அரசு ஆளாமல் வில் ஏந்தி வெளியே போம்படி விதியே என்னை ஏவியுள்ளது என அதிமேதையான இராமன் இங்கே கூறியுள்ளதில் பல குறிப்புக்கள் உள்ளன. என் விதி என்னாமல் பொதுவாகக் கூறியுள்ளமையால் அது பொதுமையாய் நின்றது.

யாருடைய விதி ஈண்டு நேரடைய நேர்ந்தது?

இராவணனது விதியே இங்கு நன்கு மூண்டு வேலை செய்துள்ளது. கூனி கோள் சொல்ல எழுந்த பொழுதே "இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை" என அவள் குறிக்க நேர்ந்தாள். அந்தத் தீவினை இந்தக் கோவினை அழைத்தது.

எந்த விதியை மேற்கொண்டு இராமன் ஈண்டு வந்துள்ளானோ அந்த விதி மந்திர மறையாய் மூந்துற மூண்டு நின்றது.

மனிதன் அடைகின்ற அனுபவங்களுக்கெல்லாம் விதியே காரணம்; அதன்படியே யாவும் நடைபெறும்; அதனை மீறி யாரும் வேறு செய்ய முடியாது என்பன இங்கே விளங்கி நின்றன.

இங்ஙனம் விதி வலியைக் குறித்துக் கூறி அமைதியுறும்படி இராமன் அறிவுறுத்தவே இலக்குவன் மீண்டும் கொதித்தான்.

"என் ஐயனே! தங்களுக்கு இடர் செய்ய ஒரு விதியும் இடை எழுந்ததா? அப்படியாயின், அந்த விதியையும் அடியோடு தொலைத்து உங்களுக்கு நான் முடி சூட்டுகின்றேன்" என்று முனைந்து துடித்தான்.

உதிக்கும் உலையுள் உறுதீ என ஊதை பொங்கக்
கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்றுவென்? கோள் இழைத்தாள்
மதிக்கும் மதியாய் முதல் வானவர்க்கும் வலீஇதாம்
விதிக்கும் விதியாகும் என் வில்தொழில் காண்டி! என்றான்.
(நகர் நீங்கு படலம், 134)

இலக்குவனது உள்ளமும் ஊக்கமும் உக்கிரவீர நிலையும் இவ்வாறு ஓங்கி நிற்கின்றன. அண்ணன் எவ்வளவு ஆற்றியும் "கோள் இழைத்தாள் மதி" எனக் கைகேசியின் வஞ்சச் செயலை நினைந்து நெஞ்சம் கொதிக்கின்றான். சதி புரிந்தது ஆதலால் அம்மதியைச் சினந்து வெறுத்துச் சீறி இகழ்ந்தான்.

அவள் இழைத்துள்ள பிழையையும் முன்னவன் நிலையையும் எண்ணி எண்ணிக் கனன்று கவல்கின்றான். மனத்தில் சினத்தை அடக்க முடியாமல் மறுகித் துடிக்கின்றான்.

"கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்றுவென்?" என்றதில் அவனது ஆங்காரமும் அருந்திறலும் ஆற்றாமையும் அடல் கொண்டுள்ளன. உள்ளம் பீறி உரைகள் வெளி வருகின்றன.

தருமநிலையமான உங்களுக்கு ஊறுசெய்தாரை நான் நீறு செய்யாது விடேன்; அவர் யாராயினும் அழிந்துபடுவது திண்ணம் என்று விரைந்து துடித்தான். "விதியின் பயன்" என அண்ணல் அமைதியுடன் ஆற்றவே அதன்மேல் பாய்ந்தான்.

விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி என்றான்.

இளையவனது மனவுறுதியையும் போராற்றலையும் இங்கேகண்டு வியக்கின்றோம். முதல் வானவர்க்கும் வலிதாம் விதி என்றதனால் தேவ தேவர்களாலும் வெல்ல முடியாத வல்லமை யுடையது என விதியின் வன்மையையும் தன்மையையும் நன்கு அறிந்திருக்கின்றான் என்று தெரிகின்றது. தெரிந்தும் அதனை எளிதே வென்று விடுவதாக வீறுடன் மூண்டான்.

இது பொழுது நான் மணிமுடி சூடாது போயது விதியின் விளைவேயாம்; வேறு யாரையும் வெறுக்க வேண்டாம்; பொறுத்திரு என்று அண்ணன் கூறத் தம்பி இங்ஙனம் சீறினான்.

எந்த விதி தங்களுக்கு இடர் செய்ததோ அந்த விதியை அடியோடு வென்று முடி புனைகின்றேன்; எனது வில் ஆற்றலைக் கண்டு அருளுங்கள் என்று சொல்லாற்றித் துடித்து நின்றான்.

கொடியவள் மதிக்கும், அதற்குத் துணையாய் நின்ற விதிக்கும் என் வில் விதியாம் என்றது அவற்றால் நேர்ந்த தடையை விலக்கி முடியை உங்களுக்கு நானே சூட்டுகின்றேன் ; மணி

மகுடம் உங்கள் தலையில் அணி பெற வைப்பதினாலேயே அந்தக் கொடிய விதியை அடியோடு வென்றவன் ஆவேன்; அந்த வெற்றியைக் கண்டு மகிழுங்கள் என்று வீறு கொண்டு நின்றான்.

"யாரும் வெல்ல முடியாத விதியை என் வில்வலியால் நான் வெல்லுவேன்" என்று இலக்குவன் சொல்லியுள்ள இதில் அவனது உள்ளத்துணிவும் ஊக்கமும் நன்கு வெளிப்பட்டுள்ளன.

சிவபெருமான் முன்னம் காலனுக்குக் காலன் ஆனது போல் இளைய பெருமாள் இங்கே விதிக்கு விதி ஆவேன் என்றான்.

தனது வினை ஆண்மையிலும் வீரத்திலும் உறுதியான நம்பிக்கை யுள்ளமையால் விதியை ஒரு பொருளாக மதிக்கவில்லை.

தனது ஆர்வத்தையும் ஆற்றலையும் விளக்கிப் போர் வேகத்தைப் புலப் படுத்தியது, தன்னை இடையே தடை செய்யாமல் அண்ணன் விட்டருள வேண்டி. தெவ்வளவு எவ்வளவாயினும் அவ்வளவையும் அடியோடு வென்று கருதியதை முடித்தே தீருவன் என்று உறுதிமண்டி ஊக்கி மூண்டான்.

இவ்வாறு இலக்குவன் மூண்டு மூள்வதை நினைந்து இராமன் சிறிது இரங்கி நோக்கினான். "தம்பி! என்ன இப்படிச் சினந்து நின்று வாய்க்கு வந்தபடி பேசுகின்றாய்! என்றும் நெறியோடு அமைந்து பெருந்தன்மையில் ஒழுகிவந்த நீ இன்று நெறிதிறம்பி வரம்பு மீறி வார்த்தை ஆடுகின்றாய். பெற்ற தாயும் தந்தையும் ஏவிய பணியை உரிமையுடன் உவந்து செய்வதே நமது கடமை; அதற்கு மாறாக நடப்பது மடமை யாகும். மாதா பிதாக்களுக்கு ஏதமாக யாதும் பேசலாகாது" என்று நீதி நலம் தெளிய நெறியோடு பேசியருளினான். அந்த அருமைப் பேச்சைக் கேட்டும் சீற்றம் நீங்காமல் தம்பி மாற்றம் பகர்ந்தான்.

"நற்றாதையும் நீ; தனி நாயகன் நீ; வயிற்றில் பெற்றாயும் நீயே பிறர் இல்லை" எனக் கண்ணீரும் கம்பலையுமாய் அண்ணன் எதிரே கதறி நின்றான். பரிவும் சினமும் உள்ளத்தில் கொந்தளித்தலால் வெளியே மறுகி அழல்கின்றான்.

"ஈன்ற தாய் தந்தையர் மேல் சலிப்பது தவறு" என முன்னவன் மொழிந்த அவ்வுறுதி மொழிக்குப் பின்னவன் இன்னவாறு தன் உள்ளக்கிடையை நன்கு உணர்த்தலானான்.

எனக்குத் தாய் தந்தை தெய்வம் யாவும் நீங்களே; வேறு எவரும் இலர்; உங்களுக்கு இதமான ஊழியம் புரிவதே எனது கடமை எனத் தனது நிலைமையைத் தெளிவுறுத்தினன்.

இந்தத் திருமுடியில் மணிமுடி புனைந்து சிங்காதனத்தில் உங்களை வைத்த பொழுதுதான் நான் உயிருடன் தங்கினவனு வேன்; அது வரையும் பொங்கி எழுந்த என்கோபம் மங்காது எனச் சிங்கம் சீறியது போல் சுமித்திரைச் சிங்கம் இங்ஙனம் துடித்து முழங்கினன். அந்நிலைமையைக் கண்டு தன் நிலைமையை இராமன் உறுதியாக வலியுறுத்தினன்.

வரதன் பகர்வான் வரம் பெற்றவள் தான் இவ்வையம்
சரதம் உடையாள்; அவள் என்தனித் தாதை செப்பப்
பரதன் பெறுவான்; இனியான் படைக்கின்ற செல்வம்
விரதம்; இதின் அல்லது வேறினிது யாவது? என்ருன். (1)

ஆன்ருன் பகர்வான்பினும் ஐய! இவ் வைய மையல்
தோன்ருநெறிவாழ் துணைத் தம்பியைப் போர் தொலைத்தோ?
சான்ருேர் புகழும் தவத் தாதையை வாதை கொண்டோ?
ஈன்ருளை வென்ருே இனி இக்கதம் தீர்வது? என்ருன், (2)

செல்லும் சொல் வல்லான் எதிர் தம்பியும் தெவ்வர் சொல்லும்
சொல்லும் சுமந்தேன்; இருதோள் எனச் சோம்பி ஓங்கும்
கல்லும் சுமந்தேன்; கணைப்புட்டிலும் கட்டமைந்த
வில்லும் சுமக்கப் பிறந்தேன் வெகுண்டு என்னை என்ருன். (3)

நன்சொற்கள் தந்து எனை நாளும் வளர்த்த தாதை
தன்சொற் கடந்து எற்கு அரசாள்வது தக்கது அன்ருல்
என் சொற் கடந்தால் உனக்கு யாதுளது? ஈனம் என்ருன்
தென் சொற் கடந்தான் வடசொற்கடற்கு எல்லை தேர்ந்தான்.(4)

சீற்றம் துறந்தான்; எதிர் நின்று தெரிந்து செப்பும்
மாற்றம் துறந்தான்; மறை நான்கென வாங்கல் செல்லா
நாற்றெண்திரை வேலையின் நம்பிதன் ஆணையாலே
ஏற்றம் தொடங்காக் கடலின் தணிவெய்தி நின்ருன். (5)

(நகர் நீங்கு, 137-141)

வெகுளி மண்டி வேகமாய்ச் சண்டைக்கு மூண்டுநின்ற தம்பியைச் சாந்த சீலனை தமையன் ஆற்றியிருக்கும் அமைதியும் அடங்கி

யுள்ள நிலைமையும் அறிவு நலங்களும் இங்கே செறிவு மீதூர்ந்து நெறி முறைகள் நிறைந்து நீர்மை சுரந்து சீர்மை கனிந்துள்ளன.

## இலக்குவனுக்கு இராமன் அறிவுறுத்தியது.

பரம்பரையாய் வந்துள்ளமையால் அரசு எனக்கே உரியது என நீ வாதாடுவது பேதைமையாம். நம் தந்தை கைகேசிக்கே உரிமையாக அரசை முழுவதும் தந்து விட்டார்; இனிமேல் யாவும் அவளுடைமையே; அதில் நாம் தலையிடுவது மிகவும் தவறு. தம்பி பரதனே மணிமுடி புனைந்து அரசாள உரியவன்; சடைமுடியுடையனாய் உடனே நான் வெளியேற வேண்டும். எனது மனநிலையை உணர்ந்து சினம் தணிந்து இனம் தெரிந்து என் உரை வழி ஒழுகலே உனக்கு இனிதாம்.

நீ போர்க்கோலம் பூண்டு பொங்கி எழுந்ததை நினைக்குந்தோறும் எனக்குச் சிரிப்பு வருகின்றது. உன் வீரப்போரை யாரிடம் காட்ட நீ இங்ஙனம் வீறு கொண்டு எழுந்தாய்? எதிரிகள் எவர்? அவர் எந்நிலையர்? உன் நிலையை எண்ணிக் காண்!

“யாதொரு வஞ்சமும் தெரியாமல் என்றும் புனித நெஞ்சனுயுள்ள எனது இனிய தம்பியை வெல்லவா? அல்லது அருமைத் தந்தையைக் கொல்லவா? அன்றி உள்ளன்புடைய உரிமைத் தாயை ஒழிக்கவா? யாரைக் கொன்று தொலைக்க வில்லும் கையுமாய் இவ்வாறு வீராவேசம் கொண்டு நீ ஆரவாரம் செய்கின்றாய்? கொஞ்சம் யோசனை செய்து சொல்! மனம் போனபடியெல்லாம் சினந்து பேசி விடுவது மதிநலம் ஆகுமா? உனது நிலைமையையும் தலைமையையும் உணர்ந்து பார்! என்பால் அன்பிருந்தாலும் அதற்கு ஓர் அளவு வேண்டாமா? நெறிகடந்து அறிவழிந்து போகலாமா? இன்ன காலத்தில் இன்ன இடத்தில் இன்னாருக்கு இன்னபடி என முன்னம் விதித்த விதியின் படிதானே யாவும் நடக்கும். அதனை மீறி யாரும் நடக்க முடியாதே; வேதங்களை எல்லாம் நன்கு ஓதி யுணர்ந்த நீ உணர்ச்சி யின்றி இங்கே உரையாடுகின்றாயே! உன் குடிப்பிறப்பும் படிப்பும் குண நலங்களும் மதி மாண்பும் எங்கே போயின? சின மிகுதியால் மனநலத்தை யிழந்து

மறுகி யுழல நேர்ந்தாய்! விதி நியமங்களை நினைந்து உறுதியுண்மையை உணர்ந்து பொறுதியாய் இரு'' என இங்ஙனம் இராமன் இலக்குவனுக்கு அறிவுறுத்தினன்.

இவ் வைய மையல் தோன்ற நெறி வாழ் துணைத் தம்பி

எனப் பரதனை இராமன் நினைந்து உருகி இருக்கும் நிலை உணர்ந்து சிந்திக்க வுரியது. வஞ்சனை சூது பொறாமை பேராசை முதலிய ஈனங்கள் யாதும் இல்லாத ஞான சீலன் என அந்த அருமைத் தம்பியை எண்ணி எண்ணி இந்த அண்ணன் கரைந்துள்ளமையால் உண்மை நிலையும் உணரவந்தது. துணைத்தம்பி என ஆர்வம் கனிந்து அணைத்திருக்கும் அன்புரிமையை நினைத்து நோக்குக.

நெறி திறம்பாத அந்தப் புண்ணிய நீரனை என்னினும் இனியனைக் கருதி உன் அண்ணன் என உரிமை கூர்ந்து நீ போற்ற வேண்டியதை மறந்து இங்ஙனம் தூற்றலாமா? என்பது குறிப்பு.

சான்றோர் புகழும் தவத் தாதை என்றதனால் தன் தந்தையை இம் மைந்தன் மதித்திருக்கும் மாட்சி புலனும். அவனைத் தந்தையாகப் பெறுதற்கு நாம் என்ன தவம் செய்தோமோ? என்று எண்ணி மகிழ்ந்திருக்கிறான்.

அவனது அருந்தவமே இவன் மகனாய்ப் பிறந்து வருதற்குச் சிறந்த காரணமாய் விளைந்திருத்தலால் "தவத் தாதை'' என்றான்.

ஈன்றாள் எனக் கைகேசியை ஆன்ற அன்புரிமையுடன் போற்றியிருக்கிறான். அக் கொடியவள் எவ்வளவு கேடு செய்திருக்கிறாள்? அப்படி யிருந்தும் இப்படி உள்ளம் கனிந்து பேசியிருக்கிறானே! இவனது இதயப் பான்மை அதிசய நிலையில் தனியமைந்துள்ளது.

வெம்பிக் கொதித்த தம்பிக்கு இந் நம்பி இவ்வாறு அன்புரிமையுடன் அறிவுரை பகர்ந்து ஆற்றி யருளினன்.

ஆற்றவே இளையவன் சீற்றம் சிறிது தணிந்தது. தணியினும் மனத்துயரமும் சினமும் உள்ளே கனன்று கொண்டிருந்தன. தன் மனம் போல வேலை செய்யவிடாமல் அண்ணன் அடக்கி நிற்றலை நினைந்து நினைந்து நெஞ்சம் புழுங்கினன். எதிர் பேச முடியாமல் முதிர் கோபம் அடங்கி மதி மயங்கி மனம் உயங்கித் தனியே தியங்கித் தவித்து மறுகினன்.

செல்லும் சொல் வல்லான் என இராமனை இங்கே கவி சொல்லியிருக்கிருர். எல்லாரையும் வெல்லும் வீறுடன் வில் ஏந்தி வெகுண்டு மூண்ட தம்பியைத் தன் சொல்லால் அடக்கியுள்ளமையால் அந்தச் சொல் வன்மை பாராட்ட வந்தது.

ஈண்டு மட்டும் அன்று; யாண்டும் செல்லும் சொல் வல்லானய் அவன் நீண்டு நிற்றலால் பொது நிலையில் வைத்து மதி நலம் தெரிய அதி விநயமாக நினைவூட்டி விட்டார்.

வெல்லும் வில் வல்லான் ஆன இளையவன் செல்லும் சொல் வல்லானை மூத்தவன் எதிரே மாறு வார்த்தை பேசாமல் வெளியே மடங்கினனும் உள்ளே மடங்கல் ஏறு போல் அடங்காமையோடு உளைந்து மறுகினன்.

''தெவ்வர் சொல்லும் சொல்லும் சுமந்தேன்; இரு தோள் எனச் சோம்பி ஒங்கும் கல்லும் சுமந்தேன்; கணைப்புட்டிலும் சுமந்தேன்; கட்டு அமைந்த வில்லும் சுமக்கப் பிறந்தேன்'' என்றதில் இலக்குவனது நெஞ்சக் கொதிப்பும் கடுப்பும் நிலை தெரிய நின்றன. அந்த உள்ளப் பதைப்பை ஊன்றிப் பாருங்கள்.

தெவ்வர் சொல்லும் சொல் என்றது, எதிரிகள் இகழ்ந்து பேசும் பேச்சுகள் என்றவாறு. தெவ்வர் = பகைவர்.

''தெவ்வுப் பகையாகும்.'' என்றது தொல்காப்பியம்.

''அரசுரிமையைப் பறித்துக் கொண்டு இராமனை நாங்கள் காட்டுக்கு ஓட்டினேம்; அப்பொழுது அவன் தம்பியும் பார்த்துக் கொண்டுதான் இருந்தான்; எங்களை என்ன செய்தான்? பெரிய வில் வீரனைப்போல் வெறும் பேச்சுப் பேசிப் பதுங்கி நின்றான்; கையாலாகாதவன்'' எனக் கைகேசியும் அவளைச் சார்ந்தவர்களும் இளித்துப் பழிப்பர். அந்த இளி மொழிகளாகிய பழிச் சுமையை நான் சுமக்கும்படி நேர்ந்ததே! என்று பதைத்து நின்றான்.

தன் தோள்களையும் வாளிகளையும் வில்லையும் வெறுத்து இகழ்ந்தான். கல் என்று சொல்லினமையால் அப் புயங்களின் திண்மையும் திறலும் அறியலாகும். என் அண்ணனுக்கு ஆபத்தில் உதவி செய்யாத இந்தத் தோள்களையும் வில்லையும் வீணே சுமந்து நான் நாணமின்றி யுள்ளேனே! என்று நைந்து நொந்தான்.

முன்னவன் தடுத்து அடக்கினமையால இனனவாறு இன்ன லுழந்து கூறினன். உழுவலன்பும் உள்ளக் கொதிப்பும் உரைகள் தோறும் புரைகள் ஏறித் துறைகள் எங்கும் துள்ளி மிளிர்கின்றன.

சினம் தணிந்தாலும் மனம் கனன்று தம்பி இங்ஙனம் மறுத்துவதை அறிந்து இறுதியில் இராமன் சிறிது வருந்திமொழிந்தான்.

நாளும் இனிய மொழிகள் பகர்ந்து அறிவு நலங்களை உதவி உழுவலன்புடன் நன்கு வளர்த்து வந்த தந்தை ஏவியதையே நான் சிந்தை மகிழ்ந்து செய்வேன்; அதற்கு மாருக யாதும் செய்யேன். அவரது பணி புரிவதே எனக்குப் பரமபதமாம். தாதை மொழியை மீறி வாழும் பேதைமகனுய் யாண்டும் யான் பிழைபட்டு நில்லேன். எந்தை சொல்லை நான் கேட்பது போல என் சொல்லை நீ கேட்க வேண்டும்.

என் சொல் கடந்தால் உனக்கு யாது உளது? ஈனம்.

தம்பியை நோக்கி அன்பு கனிந்த மொழிகள் பல வழங்கி வந்த இராமன் இங்கே சிறிது சினந்திருக்கின்றான். சினக் குறிப்பால் அவனது மனக்குறிப்பு வெளியாகி நின்றது. வார்த்தையிலுள்ள விநயத்தையும், கனத்தையும் கவனித்து நோக்குங்கள். இறுதியில் எழுந்த மொழியில் பொறுதியும் உறுதியும் அறுதியாயுள்ளன. உள்ளம் திருந்தி வர உரை விரைந்து வந்தது.

தாய் தந்தையர்களை வெறுக்கலாகாது என்று குறித்தான்; வினைப்பயனை விளக்கினன்; தன் மனக் கருத்தைத் துலக்கினன்; மேலும் பல இத மொழிகள் கூறினன்; எவ்வளவு சமாதானம் சொல்லியும் இளையவன் மனம் கேளாமல் மறுகிக் கொதித்து முறுகி நின்றான்; முடிவில் அடங்கினும் பரிவு மீதூர்ந்து பரிந்து புழுங்கினன் ஆதலால் அதனை அறிந்து இங்ஙனம் வலிந்து அறிவுறுத்தினன்.

“என் குறிப்பை உணர்ந்து நடப்பதே உனக்கு நலம்; நமது குலமரபை நீ நினைவுற வேண்டும்; தந்தை சொல்லை மீறித், தாய் உரையை மறுத்து நடக்கும் மைந்தர் எந்த நாளும் நிந்தனைக்கே இடமாவர்; அந்த ஈன நிலையை மான மக்கள் யாண்டும் மருவார். தாய் தந்தை என என்னை வாயாரப் புகழ்கின்றாய்! நான் உரைப்பதை நீ ஓராது உழல்கின்றாய்; என்மீது வைத்துள்ள பாசத்தால்

தருமநீதி மறந்து கருமம் புரிய நேர்ந்தாய்! அது சரி அன்று; என் கருத்தை ஓர்ந்து நட; அதுதான் உனக்கு நன்மை" எனத் தம்பிக்கு இந்நம்பி உணர் உரை கூறினன்.

கூறவே மாறுவேறு கூருமல் ஆறி அடங்கினன். "நம்பி தன் ஆணையாலே ஏற்றம் தொடங்காக்கடலின் தணிவு எய்தி நின்றான்" உலகம் எல்லாம் அழியும்படி கொந்தளித்துப் பொங்கி எழுந்த கடல் ஒரு தெய்வ ஆணையால் உடனே அடங்கி அமர்ந்தது போல் இலக்குவன் அன்று அடங்கி நின்றான் என்றமையால் அவனது நிலைமையும் இராமனது தலைமையும் புலனுற வந்தன.

## சுமித்திரையிடம் சென்றது.

அங்ஙனம் அமைந்து நின்ற தம்பியை உவந்து தழுவிக் கையில் பிடித்துக் கொண்டு இராமன் சுமித்திரை மாளிகைக்கு வந்தான். அந்த வரவு அதிசய நிலையில் நிகழ்ந்தது.

அன்னானை ஐயனும் ஆதி யொடு அந்தம் என்று
தன்னாலும் அளப்பரும் தானும்தன் பாங்கர் நின்ற
பொன்மான் உரியானும் தழீஇ எனப் புல்லிப் பின்னைச்
சொன்மாண் புடை அன்னை சுமித்திரை கோயில் புக்கான். (1)

கண்டாள் மகனும் மகனும்தன் கண்கள் போல்வார்
தண்டா வனம் செல்வதற்கே சமைந்தார்கள் தம்மைப்
புண்தாங்கு நெஞ்சத் தினளாய்ப் படிமேல் புரண்டாள்
உண்டாய துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலாதாள், (2)

சோர்வாளை ஓடித் தொழுது ஏந்தினன் துன்பம் என்னும்
ஈர்வாளை வாங்க மனம் தேற்றுதற்கு ஏற்ற செய்வான்
போர்வாள் அரசர்க்கிறை பொய்த்தனன் ஆக்க கல்லேன்
கார்வான் நெடுங்கான் இறை கண்டு இங்ஙன்மீள்வன் என்றான்.

கான்புக் கிடினும் கடல்புக் கிடினும் கலிப்பேர்
வான்புக் கிடினும் எனக்கு அன்னவை மாண் அயோத்தி
யான்புக்கது ஒக்கும்; எனையார் நலிகிற்கும் ஈட்டார்
ஊன்புக்கு உயிர்புக்கு உணர்புக்கு உலையற்க என்றான். (4)

(நகர் நீங்கு படலம், 142-145)

சினம் நீங்கி மனம் அடங்கிய தம்பியை இராமன் கையோடு அழைத்துக் கொண்டு சிறிய தாயாரிடம் வந்ததும், மக்கள் இரு

வரைக் கண்டவுடனே அவள் மறுகித் துடித்து உருகி அழுது உருண்டு புரண்டதும், அவளை ஆற்றித் தேற்றி அவன் அறிவுரை பகர்ந்ததும் பரிவு மீதூர்ந்து உருக்கமும் மறுக்கமும் பெருகி உள்ளங்களைக் கரைத்து ஆர்வ நலங்களை விளைத்து நிற்கின்றன.

திருமால் சிவபெருமானைத் தழுவியது போல் இராமன் இலக்குவனை அணைத்து வந்தான் என்றமையால் அவரது இயல்பும் உயர்வும் இனிது புலனும். தானும் என்றது திருமாலை. அவனே இவன் ஆய் வந்துள்ளமையால் உரிமை தோன்ற உரைத்தார்.

பொன்மான் உரியான் என்றது சிவனை. செந்நிறத்திருமேனியும், யாரையும் வெல்லவல்ல போராற்றலும் உடைமையால் அந்த முழுமுதல் பரமனை இந்த இளையவனுக்கு உவமை கூறினர்.

"முற்று மதியம் மிலைந்தான் முனிந்தானை அன்னான்" என முன்னம் வீரம் அழகுகளில் சிவனையும் மதனையும் ஒத்து நின்றவன் ஈண்டு ஆற்றலின் ஏற்றம் தனியே தெரிய வந்தான்.

இத்தகைய வீரத் தம்பியுடன் வந்த இராமனைக் காணவே சுமித்திரை உள்ளம் கலங்கி உருகித் துடித்தாள்.

கண்டாள் மகனும் மகனும் தன் கண்கள் போல்வார்

இராமனையும் இலக்குவனையும் சுமித்திரை கருதியுள்ள உரிமையைக் கவி இவ்வளவு அருமையாக விளக்கியிருக்கிறார். பெயர் குறியாமல் "மகனும் மகனும்" என்றதிலுள்ள நயனையும் வியனையும் நயந்து காண்க.

தனது இரு கண்களைப் போலவே அந்த இருவரையும் ஒருமை உணர்வுடன் உவந்து ஒழுகி வந்துள்ளாள்

பத்து மாதம் சுமந்து பெற்ற பிள்ளை ஒன்று; அங்ஙனம் பெறாத மகன் ஒருவன்; அவ் இருவரிடமும் யார் மீது பிரியம் அதிகம்? இக் கேள்விக்குத் தெளிவான பதில் எளிதாகக் கூற முடியாது. ஓர் உவமை கூறி உணர்த்தியிருக்கிறார்.

இரண்டு கண்களுள் எதனை மனிதன் அருமையாக விரும்புவன்? இதற்கு விடை கூறின் அதற்குப் பதில் ஆம்.

வலக்கண் இடக்கண் என இலக்கம் பெற்றிருப்பினும் இரு விழிகளும் உயிர்க்கு ஒரு நிகராகவே உரிமை மிக வுடையன.

சிறிய தாயின் அன்பு பெரியதாயினும் ஒருவகையில் பெரிய தாகவே பெருகியுள்ளது. இவ்வுண்மையைப் பின்னே காணலாம்.

தலைமகன் வனம் போக நேர்ந்துள்ள நிலைமையை அறிந்தமையால் நெஞ்சம் பதைத்து நெடுந்துயரடைந்து நிலை குலைந்து விழுந்தாள்.

புண்தாங்கு நெஞ்சத்தினளாய்ப் படிமேல் புரண்டாள்

என்றமையால் அன்று அவள் துடி துடித்துத் தரையில விழுந்து உருண்டு புரண்டு தலை விரிகோலமாய் அலறி அழுது அலமந்துள்ளமை அறியலாகும். துன்பமாகிய கடலில் மூழ்கி எல்லை காணுமல் தவித்தாள்.

உழுவலன்பினுல் உள்ளம் பதைத்து அங்ஙனம் அழுது துடித்து விழிநீர் சொரிகின்ற அவளை இராமன் தொழுது வணங்கி "அம்மா! ஏன் இப்படி அழுகின்றீர்கள்! சும்மா இருங்கள்; நான் சுகமாகவே இருக்கின்றேன்; யாதும் கவலை வேண்டாம்" என்று இதமொழி புகன்று இனிது தேற்றினுன்.

அவள் சிறிது தேறி இராமனது திருமுகத்தை நோக்கினுள். கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகி ஓடின. "நீ முடிதுறந்து காடு போகக் கொடிய பாவியாகிய நான் இந்தக் கண்களால் பார்த்து நிற்கவா? ஆ! தெய்வமே!" என்று அலறி அழுதாள்.

அந்த அருமைத் தாயை உரிமையுடன் போற்றி இக்குல மகன் நலமாக ஆறுதல் கூறினுன்.

"ஐயா வார்த்தையும் பொய்யாகாமல், சின்ன அம்மா விரும்பியபடியே நான் வனம் போய் விரைவில் வந்து விடுவேன்; நீங்கள் மனம் வருந்தாமல் இருங்கள்" என விநய மொழி பகர்ந்தான்.

"கார்வான் நெடுங்கான் இறைகண்டு மீள்வன்" என்றது விரைவு குறித்து வந்தது. இறை=சிறிது. கானகத்தைப் போய்ப் பார்த்துவிட்டு ஒரு நொடியில் வந்து விடுகிறேன் என்றபடி யிது. சிறிய தாயின் சோகத்தை மாற்றி உள்ளத்தைத் தேற்ற இவ்வாறு சாதுரியமாகப் பேசினுன்

"பத்து நாளும் பகல் அல்லவோ?" என்று பெற்றதாயைத் தேற்றினுன். "இறைகண்டு மீள்வன்" என்று இங்கே துறை

கண்டு கூறினன். தாயர் மனத்தைத் தேற்றிச் செல்வதில் இச் சேயினது பண்பும் விநயமும் அன்பு சுரந்துள்ளன.

அன்னையர் உள்ளங்கள் எவ்வழியும் இன்னலுருவகை இவன் இனிமை புரிந்து வருகின்றான். விரைந்து வருவதாக மொழிந்தவன் பின்பு தனது அருந் திறலாண்மையையும் அமைதியையும் உணர்த்தினன்.

"கான் புக்கிடினும், கடல் புக்கிடினும், வான் புக்கிடினும் எனக்கு அவை அயோத்தி" என்னும் இதில் தனது பரிபக்குவமான மனநிலையை இராமன் இனிது விளக்கியிருக்கிறான். கலி = ஓசை. ஆகாயம் ஒலியின் இயல்புடையது ஆதலால் கலிப்போர்வான் என வந்தது.

காடோ, மலையோ, கடலோ, வானோ வேறு எங்கே போனாலும் அவை எல்லாம் எனக்குச் சொந்தமான வீடே என்பான் அயோத்தி என்றான். மாண் என்றது அதன் மாட்சிமை கருதி.

இராமர் போன இடம் அயோத்தி என்னும் பழமொழி இந்த அழகன் வாயினாலேயே இங்ஙனம் உதித்திருக்கின்றது.

எந்த இடம் போனாலும் அங்கெல்லாம் சொந்த இடம் போலவே நான் சிந்தை மகிழ்ந்திருப்பேன்; என்னைக் குறித்துக் கொஞ்சம் கூட நீங்கள் நெஞ்சம் கவல வேண்டா என்று ஆற்றிய படியிது.

நல்ல ஞானசீலன் ஆதலால் இன்னவாறு இவனது உள்ளப் பண்பு உயர்வடைந்துள்ளது. அரசதிரு நேர்ந்த போதும், பேர்ந்த போதும் யாதொரு மாறுபாடுமின்றி ஒரே தன்மையனாய் உவந்து நின்றமையால் இவனுடைய நீர்மையும் நிலைமையும் நிலை தெரிய வந்தன.

இங்ஙனம் தனது இயல்பினை உரைத்தவன் பின்பு வீரத்தின் வியனிலையை உணர்த்தினன்.

எனை நலிகிற்கும் ஈட்டார் யார்?

வீறு மண்டி வெளிவந்துள்ள இந்தக் கேள்விக்கு நேரே விடை தருவார் யார்? பான்மையோடு அமையாமல் தனது ஆண்மையையும் அறிவுறுத்தியது, அத்தாய் ஆறுதலடைந்து எளிதே தேறுதலுற்றுத் தன்னை இனிதாக அனுப்பும் குறிப்புடன் வந்தது.

தாயின் தளர்ச்சியை நீக்கிக் கிளர்ச்சி யூட்டும் குறிக்கோளோடு உரைத்தமையால் இது தற்புகழ்ச்சி ஆகாது. பிறர் வலிந்து வந்து நலிவு செய்யும் மெலிவுடைமை தன்பால் இல்லை என்பதை அன்பால் அறிவுறுத்தினன். ஈட்டம்=வலிமை, கூட்டம்.

"கடிய விலங்குகளும், கொடிய வேடரும், வலிய அரக்கரும் உலாவி நிற்கும் காட்டுக்குப் போகின்றனே! அங்கே என்ன நேருமோ? என்று எண்ணி வருந்தற்க; யாரும் எவ்வழியும் என்னை யாதும் செய்ய முடியாது. நான் அஞ்சத்தக்கன யாண்டும் இல்லை" எனத் தனது அஞ்சாமையையும் அரும் பெருந்திறலையும் தெளிவுறுத்தி வெளி அனுப்ப வழி வகுத்தான்.

"The things that threaten'd me
Ne'er look'd but on my back; when they shall see
The face of Caesar, they are vanished." (Julius Caesar, 2)

"என்னை அச்சுறுத்த வல்லவர் எங்கும் இலர்; எத்துணை வலியரும் என் எதிர் வர அஞ்சுவர்; என் முகத்தை நேரே காணின், பதுங்கி ஒதுங்கி அவர் மறைந்து போவர்" என மேல் நாட்டு வீரனை சீசர் தனது மனைவியின் மனத்தைத் தேற்றுங்கால் இங்ஙனம் கூறி யிருக்கிறான்.

இராமன் எந் நிலையிலும் தன்னிகர் இல்லாத் தனி வீரன் ஆதலால் யாரும் தன்னை நலியகில்லார் என உறுதிபூண்டு நின்றான். அந் நிலை உரையில் வெளியாயது.

சிங்கத்திற்குத் தன் காடு என்றும் அயல் இடம் என்றும் வேறுபாடு இல்லை; அது எங்கே போனாலும் எந்த விலங்குகளும் அதனை யாதும் செய்யலாற்றா; இந்தச் சிங்க ஏறும் அவ்வாறே காடு போவதில் பீடு பெற்று நின்றது.

செல்லும் இடம் எல்லாம் சீர் மிகப் பெறுவேன்; அல்லல் அடையேன்; ஒல்லையில் வருவேன் என்று சொல்லி யருளினன்.

ஊன் புக்கு, உயிர் புக்கு, உணர் புக்கு உலையற்க. என்றமையால் இந்தப் பிள்ளைப் பாசத்தால் அத் தாய் உள்ளம் உருகி உணர்வழிந்து உயிர் கரைந்துள்ளமை உணரலாகும்.

## இராமன் மரவுரி கொண்டது.

இவ்வாறு தளர்ந்து தவிக்கும் தாயை இராமன் அன்புரிமையுடன் தேற்றிக் கொண்டிருக்குங்கால் கைகேசி யிடமிருந்து

காசாய உடை வந்தது. அரச கோலத்தை அறவே இழந்து துறவி வேடம் பூண்டு விரைவில் வனம் போக வேண்டும் என்னும் குறிப்போடு தாதியரிடம் அத் தீயவள் மரவுரியைத் தந்து விடுத்தாள். அவர் கொண்டு வந்தார். வரும்போதே அவர் உள்ளம் துடித்து உருகி நொந்து மறுகி அடைந்தார். கொடியவளது கொடுமைக்கு அஞ்சி அடிமை வேலையை வெறுத்து அலமந்து வந்த அவர் இச்சுந்தரனைக் கண்டார். காணவே கண்ணீர் சொரிந்து விம்மி விம்மி வெய் துயிர்த்துச் செய்வது அறியாமல் தியங்கி மயங்கி உயங்கி உளைந்து ஒதுங்கி நின்றார்.

*தாயாற்று கிலாள் தனை ஆற்றுகின் றார்கள் தம்பால்*
*தீயாற்று கின்றாரெனச் சிந்தையின் நின்று தேற்ற*
*நோயாற்று கில்லா உயிர்போல நுடங்கிடையார்*
*மாயாப் பழியாள் தர வற்கலை ஏந்தி வந்தார். (1)*

*கார்வானம் ஒப்பான் தனைக் காண்தொறும் காண்தொறும்போய்*
*நீரா யுகக் கண்ணினும் நெஞ்சழி கின்ற நீரார்*
*பேரா இடர்ப்பட்டு அயலாருறு பீழை கண்டும்*
*தீரா மனத்தாள் தர வந்தன சீரம் என்றார். (2)*

*வாணித்தில வெண்ணகை யார்தர வள்ளல் தம்பி*
*யாணர்த் திருநாடு இழப்பித்தவர் ஈந்த எல்லாம்*
*பூணப் பிறந்தானும் நின்றான் அவை போர்வில் ஓடும்*
*காணப் பிறந்தேனும் நின்றேன் அவை காட்டும் என்றான். (3)*

### இராமன் விடை கேட்டது.

*அன்னான் அவர் தந்தன ஆதரத்தோடும் ஏந்தி*
*இன்னா இடர்தீர்ந் துடன்ஏகுஎன எம்பிராட்டி*
*சொன்னால் அதுவே துணையாம்எனத் தூய நங்கை*
*பொன்னார் அடிமேல் பணிந்தான் அவளும் புகன்றாள். (4)*

### சுமித்திரை இலக்குவனுக்குச் சொன்னது.

*ஆகாத தன்றால் உனக்கு அவ்வனம் இவ்வயோத்தி*
*மாகாதல் இராமன்நம் மன்னவன் வையம் ஈந்தும்*
*போகா உயிர்த்தாயர்நம் பூங்குழல் சீதை என்றே*
*ஏகாய் இனிஇவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள். (5)*

*பின்னும் பகர்வாள் மகனேஇவன் பின்செல் தம்பி*
*என்னும் படிஅன்று அடியாரினில் ஏவல் செய்தி*
*மன்னும் நகர்க்கே இவன்வந்திடில்வா ; அதன்றேல்*
*முன்னம் முடிஎன் றனள் பால்முலை சோரநின்றாள். (6)*

(நகர் நீங்கு படலம், 146-151.)

பரிதபித்து அயர்ந்த சுமித்திரையை இராமன் அறிவுரை கூறி ஆறுதல் செய்யுங்கால் நேர்ந்த பரிபவக் காட்சிகளை இங்கே கண்டு கவல்கின்றோம். நிகழ்ச்சி நிலைகள் நேரே புலனாய் நெஞ்சை உருக்குகின்றன.

மாயாப் பழியாள் என்றது கைகேசியை. என்றும் அழியாத வசையை வளர்த்து நிற்கும் பழிகாரி என்று வைதபடியிது. வற்கலை=மரவுரி. துறவிகள் உடுக்க உரியது.

அவள் ஏவலை மறுக்கமுடியாமல் மரவுரியை எடுத்து மறுகி வந்த தாதியர் இராமனைக் கண்டவுடனே உருகி அழுதுள்ளமையால் அவரது உள்ளன்பும் உரிமையும் உண்மை நிலையும் உணர வந்தன.

காண்தோறும காணதோறும போய நராய உக

என்றமையால் இக்கோமகனை நோக்கி நோக்கி அவர் நொந்து பதைத்துக் கண்ணீர் சிந்தியுள்ளமை தெளிவாம். அவர் கொண்டு வந்ததைக் கண்டவுடனே இலக்குவன் உள்ளங் கொதித்துப் பல்லைக் கடித்தான். பொன் ஆடை புனையும் என் அண்ணனுக்கு இந்த மரப்பட்டையை அனுப்பினாளே கொடிய பாதகி; அதனைக் கண்ணார நேரே நான் காணும்படியும் நேர்ந்ததே! என்று கடுத்துக் கலுழ்ந்து கனன்று நின்றான்.

அரசுமுடியை இழப்பித்துக் கொடியவர் அனுப்பிய துறவாடையைச் செங்கோல் ஏந்த நின்ற தன் செங்கையால் வாங்கிப் பூணப் பிறந்தானும் நின்றான்; அதனைக் கண்ணார நேரே "போர்வில் ஓடும் காணப் பிறந்தேனும் நின்றேன்" என்றதில் இளையவனது நெஞ்சக் கொதிப்பு நிலை மீறியுள்ளது.

தன் மனம்போல யாதும் செய்ய ஒட்டாமல் அண்ணன் அடக்கிவிட்டமையால் மனத்தாங்கலோடு செயலிழந்து மறுகியிருக்கிறான்.

செல்வத் திருமகனுக்கு வந்த இந்தத் தீனக்காட்சியைக் கண்டு நானும் கையில் வில் வைத்திருக்கவேண்டுமா? என்று பல்லைக் கடித்துப் பரிதபித்தான். வெளியே வாய் திறந்து யாதும் சொல்ல முடியவில்லை. அண்ணனுக்கு நேர்ந்த நிலைமை

யை நினைந்து நெஞ்சம் கொதித்துக் கண்ணீர் மல்கிக் கவிழ்ந்து நின்றான்.

ஆர்வம் கனிந்த வீரவுள்ளம் அழன்று பதைக்கப் பாவை நோக்கி அவன் பரிந்து நின்ற நிலை பரிதாபமாயிருந்தது.

கொடிய கைகேசி அனுப்பியிருந்த காசாய உடையைத் தோழியரிடம் இருந்து இராமன் இருகையாலும் மரியாதையுடன் வாங்கிக் கண்ணில் ஒற்றி அரையில் சுற்றினான். அதைக் கண்டதும் சுமித்திரை கதறி அழுதாள்.

அந்தத் தாயின் அடியில் வீழ்ந்து நெடிது பணிந்து எழுந்து " அம்மா ! யாதும் கவலாமல் சும்மா விடை தந்தருளுங்கள் ; விரைந்து வந்து விடுவேன் ; இனி இங்கே தாமதிப்பது நலம் அன்று ; மனம் பொறுத்து ஆசிர்வதித்து என்னை அனுப்பி வையுங்கள் " என்று பேரன்போடு வணங்கி முன் நின்றான்.

சுமித்திரை நிலை.

இனிமேல் பேசுவதால் யாதும் பயன் இல்லை என்று தெரிந்து, அழுது மறுகி அலமந்து நின்ற அந்த அருமைத் தாய் இளையவனை உளம் உருகி நோக்கினாள். தான் பெற்ற பிள்ளையாகிய இலட்சுமணனை உவந்து நோக்கி, " அப்பா ! நீ உன் அண்ணனுடன் கூடவே வனம் போக வேண்டும். ஒரு கணமும் பிரிந்து இங்கே நிற்கலாகாது. உனக்குத் தாயும் தந்தையும் யாவும் அவனே " என்று அன்பு கனிந்து மொழிந்தாள். பெருந் தன்மை நிறைந்த அப்புனித மொழிகள் அறிவு நலம் கனிந்து கெழுதகைமை சுரந்து விழுமிய நிலையில் விளைந்து வந்துள்ளன.

அவ் வனம் இவ் அயோத்தி என்றது இராமன் செல்லுகின்ற அந்தக் கானகமே இந்த மாநகரமாக நீ நினைந்து கொள்க என்றவாறு. அகரச்சுட்டு இராமனை அடைய நேர்ந்துள்ள அதன் தூய்மையையும் சேய்மையையும் குறித்து நின்றது.

நம் மன்னவன் மாகாதல் இராமன்

இராமனை நீ தந்தையாகக் கருதிக் கொள்க என்பதை இங்ஙனம் குறித்தாள். என் நாயகன் என்றோ, உன் தாதை எனவோ உரிமை தழுவிக் கூறாமல் பொதுவாக " நம் மன்னவன் " என்றது

அவளது அமைதியையும் மரியாதையையும் உணர்த்தி நின்றது. நம்முடைய மன்னர்பிரான் எனச் சக்கரவர்த்தியின் மாட்சியும், தாய் பிள்ளை என்னும் தம்முடைய கிழமையும் ஒருமையாய் உள்ளே மருவி யுள்ளன.

தாயர் பூங்குழல் சீதை என்றது இனி உனக்குத்தாய் சீதையே என்பதாம். தாயர் எனப் பன்மையில் குறித்தது, கோசலையையும் சேர்த்து.

வையம் ஈந்தும் போகா உயிர்த் தாயர் என்றதில் அவளது பரிதாப நிலை வெளியே தெரிய நின்றது.

பூமி இராமனுக்கு இல்லை என்று தெரிந்தும் சாகாமல் உயிர் வைத்துக்கொண்டு இருக்கின்றோமே! அந்த அருமைத் தாயர் என உள்ளம் கொதித்துப் பேசி யிருக்கிறாள். தன்னை மட்டும் தனியே சொல்லாமல் முன்னவளையும் அணைத்துக்கொண்டாள்.

பெறாத பாவியாகிய என் உயிரே இப்படித் துடிக்கின்றதே! இக்கோமகனைப் பெற்றதாய் எப்படிப் பொறுப்பாளோ? என்று ஏங்கி இருக்கிறாள். அக்காள் பக்கல் இவள் கொண்டுள்ள ஆர்வமும் மதிப்பும் சீர்மை மிகவுடையன.

"இலட்சுமணா! உனக்கு இராமனே தந்தை; சீதையே தாய்; வனமே ஊர்; அவனைப் பின் தொடர்ந்து உடனே போ ஐயா!" என்று சுமித்திரை தன் மகனைப் பார்த்து இவ்வாறு கட்டளை யிட்டருளினாள்.

"ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம்
அயோத்யாம் அடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம்."
(வால்மீகி, அயோத்தி, 40-9)

"இராமனைத் தசரதனாக உணர்; சீதையை நான் என்று நினை; காட்டை அயோத்தியாகக் கருதிக்கொள்; அப்பனே! சுகமாகப் போ" என்று மூல நூலில் இங்ஙனம் குறித்துள்ளது. அதன் நேர் மொழி பெயர்ப்பாய் இப்பாடல் அமைந்திருக்கிறது.

அங்கே மாம் என்று ஒருமையாகத் தன்னை மட்டும் தனியே குறித்திருக்கிறாள். இங்கே அதனைப் பன்மையில் மாற்றிச் சுமித்திரையின் பெருந்தன்மையை நம் கவி நன்கு துலக்கி

யிருக்கிறார். சக்களத்தி என்னும் மாறுபாடு யாதும் இன்றிக் கோசலேயால் இவள் பூண்டுள்ள நேசப்பான்மையை யாண்டும் நினைவுறுத்தி வருகிறார். மித்திரத்தன்மையில் இவ்வாறு தலை சிறந்துள்ளமையால் சுமித்திரை என நிலை யுயர்ந்து நின்றாள்.

தன் அண்ணனையும் அண்ணியையும் தந்தையும் தாயும் ஆக எண்ணி ஒழுகும்படி தனது சொந்த மைந்தனுக்கு இப் புண்ணியவதி கண்ணியமாகப் புத்தி போதித்துள்ளாள்.

இராமன் ஒருவன்தான் வனம் போக நேர்ந்துள்ளான்; அப்படியிருந்தும் சீதையை இனம் கூட்டிப் பேசியது, இந்தக் கோமகனைப் பிரிந்து அக்குலமகள் தனியே இராள் என்னும் துணிவினால் என்க.

பத்து மாதம் தான் சுமந்து பெற்ற பிள்ளையைச் சிராமன் பின் காட்டுக்கு இவள் துணிந்து அனுப்பியதும் விழைந்து சொல் லியதும் நினைந்து உருக வந்தன.

"மகனே! இவன் பின் செல் தம்பி என்னும் படி அன்று; அடியாரினின் ஏவல் செய்தி" இளையவன் கருதி ஒழுகவேண்டிய விதி நியமங்களை இவ்வாறு அறிவுறுத்தி யிருக்கிறாள்.

"என் அருமை மகனே! இராமன் பின் பிறந்த தம்பி தானே; நானும் ஒரு அரசிளங்குமரனே என உன்னை யாண்டும் எண்ணிக்கொள்ளாதே; ஒரு அடிமைபோல் ஒடுங்கி யிருந்து யாண்டும் அன்புரிமையுடன் அண்ணனுக்கு வேண்டிய பணிவிடை களைக் குறிப்பறிந்து செய் ஐயா?" என்றாள்.

தம்பி என்று சம உரிமை பாராட்டி நில்லாது, ஆண்ட வனுக்கு அடிமை போல் இராமனுக்கு நீ அடி பணிந்து ஊழியம் செய்யவேண்டும் என்று உணர்த்தியருளினாள். மூன் மகனுக்கு ஏவல் செய்யத் தன் மகனை ஏவியுள்ள இதில் தாயினது உள்ளப் பெருமை உலகறிய நின்றது.

மன்னும் நகர்க்கே இவன் வந்திடில்வா...வனவாசம்கழித்து இராமன் இந்த ஊருக்குத் திரும்பி வந்தால் நீயும் உடன் வருக.

அது அன்றேல், முன்னம் முடி

"அவ்வாறு வர முடியாமல் ஏதேனும் அங்கே அண்ணனுக்கு ஆபத்து நேர்ந்ததாயின் நீ முன்னதாக உன் உயிரை விட்டு விடு"

என்னும் இவ் வுத்தரவு எத்துணை வேக முடையது? இந்த வார்த்தை மிகவும் பரிதாபமானது. எந்த உள்ளத்தையும் உருக்கி நிற்பது. சிந்தனை செய்து ஆராயத்தக்கது.

இராமன் அயோத்திக்கு மீண்டு வந்தால் நீயும் வா; இல்லையாயின் அங்கேயே மாண்டுபோ என்று தன்பிள்ளையைப் பார்த்துப் பெற்ற தாய் இப்படிச் சொல்லலாமா? அவ்வுள்ளத்தின் உண்மையும் திண்மையும் உலகத்தைக் கவர்ந்துள்ளன.

"முன்னம் முடி" என்றது அண்ணன் இன்னலுற நேரின் அதனைக்கண்ணுரக் கண்டுகொண்டு நில்லாதே; துயரை விரைந்து விலக்கு; முடியாதாயின், அவனுக்கு முந்தி உன் உயிரை முடித்துவிடு என்பதாம். இங்கே இராமபாசம் தலைமண்டியுள்ளது.

இராமனைக் கண்ணினும் உயிரினும் இனியனுக் கருதிப் பேணுக; குடி அடிமைபோல் குறிப்பறிந்து ஏவல் செய்க; என ஆவலோடு உரைத்து வந்தவள் முடிவில் கடுமையான நியமங்களைக் கருதிக் குறித்தாள்.

கொடிய விலங்குகள் வாழும் காட்டில் இனிய இச்சுகுமாரன் சுகமாக இருக்கவேண்டுமே! என்று உள்ளம் துடித்திருக்கிருள்.

அவன் இன்ப நிலையில் இனிது வீற்றிருக்க எவ்வழியும் நீ அன்பு செய்து போற்றுக என இவ்வளவில் நிறுத்தியிருக்கலாம்; துன்பம் உறவரின் முன்புற முடிக என்றதுதான் முடிவுகாண முடியாத அவளது அன்புநிலையைக் கடிது வெளிப்படுத்திநின்றது.

அளவு மீறிய ஆசையும் பாசமும் ஒரு பொருளின்மீது இயல்பாக அமைந்திருந்தால் அதற்கு யாதும் ஏதம் நிகழாமல் பாதுகாப்பதிலேயே கண்ணும் கருத்தும் கனிந்து நிற்கும்; அந்நிலைமையும் நீர்மையும் இங்கே நிலவியுள்ளன.

பெண்ணின் இதயம்; பெரும் பாசம் உடையது; பேரிரக்கம் வாய்ந்தது; அந்தத் தூய தாய் நெஞ்சம் நேயம் மீதூர்ந்து துடித்து வாய்மொழிந்திருக்கின்றது.

இராமன் அருந்திறலாளன் என்று தெரிந்திருந்தாலும் பெற்ற மனம் பித்து என்றபடி பேதைமையால் ஏதங்களை எதிர் எண்ணி சோகவடன் மயங்கி மறுகியிருக்கிறாள்.

காதலால் உள்ளம் கரைந்து இவள் எண்ணிய படியே எண்ணரிய துயரங்களையும் அல்லல்களையும் அந்த அண்ணல் அடைந்து வருந்தி அடவியில் உழன்றான்.

வனத்தில் பின்னே நேர்கின்ற பெரியதுன்பங்கள் சிறிய தாய் மனத்தில் முன்னே இங்ஙனம் முகிழ்த்து எழுந்தன.

இராமனது ஆபத்துகளை வாய் திறந்து சொல்லவும் கூசியுள்ளாள்; நல்ல நிலைமைகளைச் சொல்லி வந்தவள் பொல்லாததைக் குறிக்குங்கால் "அது அன்றேல்" என அச்சக் குறிப்போடு சுட்டிவிட்டாள்.

சக்களத்தி மகனைப் பேணுதற்குத் தன்பிள்ளையை இவ்வாறு இவ்வுத்தமி தத்தம் செய்துள்ளாள். உள்ளம் துணிந்து பிள்ளையை இப்படித் தள்ளியுள்ளமையால் இவள் மிகவும் வன்கண்மையுடையளோ? என ஐயமுற நேரும் என்று கருதி இறுதியில் கவி மெய்யுருவை விளக்கியிருக்கிறார்.

பால்முலை சோர நின்றாள்

இதில் சுமித்திரையின் தூய்மையான தாய்மை அன்பு சொலித்து நிற்கின்றது. இலக்குவனுக்கு இப்பொழுது வயது இருபத்தைந்து; இந்த வயதில் அவன் தாயினிடம் பால் சுரந்து வந்தது வியப்பாகின்றது.

பிள்ளைப்பாசம் எல்லை மீறி உள்ள உத்தமத்தாயர் உள்ளம் உருகுங்கால் பருவமல்லாத காலத்தும் பால் சுரக்கும் என்க.

"முன்னம் முடி என்றனள் சுமித்திரை அரசி அம்மா" என்று பாட்டை முடித்திருக்கலாம். அங்ஙனமின்றிப், "பால் முலை சோரநின்றாள்" என்றது அவளது மேலான தாய்மைத் தன்மையைத் துலக்கி எண்ணுந்தோறும் அன்பு நலம் பெருக இன்ப வூற்றாய் நின்றது.

தன் மகன் வனம்போக நேர்ந்தான் என்றதை அறிந்தவுடனே கோசலை பதைத்துத் துடித்தாள். சுமித்திரை தன் பிள்ளையை இப்படித் துணிந்து அனுப்புகிறாள். இந்த இரண்டு தாய்களுடைய உள்ளங்களும் உலகறிய வெளிவந்துள்ளன. அன்புரிமைகள் எல்லாருடைய உள்ளங்களையும் உருக்கிப் பரிவும் பண்பும் பெருக்கிஅறிவுலகில் ஒளிமிகுந்து நிற்கின்றன.

பெற்ற மகனைப் பிரிய முடியாமல் ஒரு தாய் மறுகி அழுதாள். அந்த அருமை மகனைப் பேணும்பொருட்டு தான் வருந்தி ஈன்ற உரிமை மகனை ஒரு தாய் உவந்து உதவினாள். உதவியுள்ள நிலை உரையிட முடியாத உயர்நிலையில் உயிர் நிலையமாயுள்ளது.

இருதாயருள் எவரது நிலைமை தலைமையில் மிளிர்கின்றது?

சிறிய தாய் இங்ஙனம் அறிவுரைகூறி அனுப்பினும், உரிய மகன் எங்ஙனம் ஒழுகினான்! அவ் ஒழுக்கம் தாயின் உள்ளத்தையும் கடந்து அப் பிள்ளையிடம் பெருகியுள்ளமையைப் பின் வரும் சரிதத்தில் காணலாம்.

மன்பதைகளுடைய உள்ளங்களும், உணர்ச்சிகளும், உருக்கங்களும் இராமனையே பற்றித் தழுவிப் பரிந்து துடிக்கின்றன. ஆகவே அவனது இனிமையும் மகிமையும் உயிரினங்களுக்கெல்லாம் தனி யுரிமையாய்த் தழைத்து நிற்கும் தகைமையும் வெளியாய் உவகை விளைத்து வருகின்றன.

உடல் பொருள் ஆவி யாவும் அவன் பொருட்டு உதவுதற்கு யாவரும் ஆவலுற்று நிற்கின்றனர். உலகம் இவ்வாறாயின் உற்ற கிளையும் பெற்ற தாயும் அவன்பால் பேணிவரும் ஆர்வம் பேசும் தரத்ததோ?

அத் தலைமகனுக்குத் தன் குலமகனை உரிமைசெய்து உதவி நிற்கும் இச் சிறியதாயின் பெரிய நீர்மை மன்பதைக்கு ஓர் அரிய சீர்மையை அருளி மிளிர்கின்றது.

இவளுடைய உள்ளப் பண்பும் உணர்ச்சி நலனும் பிள்ளைப் பாசமும் பெருந்தகைமையும் உலக நிலையைக் கடந்து தலைமை நிலையில் தழைத்து நிற்கின்றன.

யாரிடமும் மாறுபடாமல் எவரையும் குறை கூறாமல் யாண்டும் எவ்வுயிர்க்கும் இனிய நீரளாய்ப் பெரியமனதுடன் இத்தாய் பெருகி யிருக்கிறாள்.

இந்த அருமைத் தாயைத் தொழுது நிறுத்தி இராமன் வெளியே வந்தான். இலக்குவனும் பின் தொடர்ந்து நடந்தான். இக்குலமக்கள் பிரிந்து போகவே, அந்தப்புரத்தில் நின்றுகொண்டு நெடிது நோக்கி உள்ளம் எல்லாம் உருகிக் கண்ணீர் சொரிந்து எண்ணீர்மை திரிந்து சுமித்திரை விம்மி மறுகி வெய்துயிர்த்தாள்.

இருவரும் தொழுதனர் இரண்டு கன்றுஒரீஇ
வெருவரும் ஆவினில் தாயும் விம்மினுள்
பொருவரும் குமரரும் போயினர் புறம்
திருவரைத் துகில்ஒரீஇச் சீரை சாத்தியே. (நகர் நீங்கு, 152)

மக்கள் இருவரும் தொழுது வெளிவரவே சுமித்திரை அங்கே உருகிநின்ற நிலையை இங்கே உணர்ந்து இரங்குகின்றோம். ஒருவுதல்=நீங்குதல். வெருவுதல்=உயிர்பதைத்து அஞ்சுதல்.

ஈன்ற தனது இளங்கன்றைப் பிரிய நேர்ந்தபோது பரிதபித்து அலமருகின்ற பசு ஈண்டு சுமித்திரைக்கு உவமையாய் வந்தது.

வாய் பேசமுடியாமல் கண்கலங்கிப் பரிந்து பதைத்திருக்கும் அப் பரிபவ நிலைகளை "வெருவரும் ஆ" என்னும் ஒரு மொழியால் தெளிவுற உணர்த்தி யருளினர்.

கன்று பிரி காராவின் துயருடைய கோடி எனக் கோசலையை * முன்னம் குறித்தார். இரண்டு கன்று ஒரீஇ வெருவரும் ஆ எனச் சுமித்திரையை ஈண்டு உரைத்தார். இரண்டுக்கும் உள்ள வேற்றுமையை உரிமையுடன் துருவி நோக்குக.

ஒருகன்றைப் பிரிந்த பசுவின் துயரினும், இரண்டு கன்றுகளை இழந்த ஆவின் துயரம் அதிகம் ஆதலால் பரிதாப நிலை இங்கே பெரிதாய் எழுந்தது. பெரியதாயுடைய துன்பத்தினும் சிறியதாயது பெரிய தாயது.

அன்புத்தாய் இங்ஙனம் துன்புழந்து நிற்க அச்சேயர் இருவரும் வாயிலைக் கடந்தனர். பொருவரும் குமரர் என்றது உலகில் தலைசிறந்து நிற்கும் அவரது நிலைமை தெரியவந்தது. பொருவு = ஒப்பு. வீரம் கொடை சீலம் முதலியவற்றில் யாரும் நிகர் இல்லாத அரசிளங் குமரர்கள் ஊரைவிட்டுப் போக உள்ளம் துணிந்தனர்.

## இராமன் மரவுரி தரித்தது.

இராமன் வெளிவந்தவுடனே மாளிகை அயல்நின்று தான் உடுத்தியிருந்த பட்டாடையை அவிழ்த்து ஒதுக்கிக் கைகேசி அனுப்பியிருந்த காசாய உடையை அணிந்து கொண்டான். சுமித்திரை எதிரே உடுத்தினால் அவள் உள்ளந்துடித்து அலறுவாள் என்று கருதி அயல் அடைந்தபின் இச்செயல் செய்ய நேர்ந்தான்.

* இந்நூல் பக்கம் 770. வரி 31 பார்க்க.

அண்ணன் அணிந்ததைக் காணவே கண்ணீர் ததும்பிய தம்பியும் அவ்வாறே மரவுரி வனைந்து அயலமர்ந்து நின்றான்.

அந்தத் தம்பி நிலையைக்கண்டு நம்பி மறுகினான். தன்னோடு காட்டுக்குத் தொடர்ந்துவரத் துணிந்துள்ளானே! என்று உள்ளம் தியங்கி அவனை இனிது தழுவிச் சில நய மொழிகள் நவின்றான்.

தான்புனை சீரையைத் தம்பி சாத்திடத்
தேன்புனை தெரியலான் செய்கை நோக்கினான்
வான்புனை இசையினாய்! மறுக்கி லாதுநீ
யான்புகல் வனையதோர் உறுதி கேள்என: (1)
அன்னையர் அனைவரும் ஆழி வேந்தனும்
முன்னையர் அல்லர்; வெந்துயரின் மூழ்கினார்;
என்னையும் பிரிந்தனர் இடர் உறுவகை
உன்னைநீ என்பொருட்டு உதவுவாய் என்றான. (2)
(நகர் நீங்கு, 153-154.)

தன்னுடன் வனம்வரத் துணிந்துநின்ற இலக்குவனது மன நிலையை நோக்கி இராமன் இவ்வாறு உரைத்திருக்கிறான்.

“தம்பி இலட்சுமணா! நான் சொல்வதைக் கொஞ்சம் கவனித்துக் கேள்; என்னோடு உடன் வரவேண்டும் என்ற எண்ணத்தை நீ மறந்துவிடு. தாய்மாரும் தந்தையாரும் என்னைப் பிரிந்தமையால் ஆதாவின்றி வருந்தி இருக்கின்றனர்; அவர்களுக்கு ஆறுதலாக வேறு இங்கே யார் உள்ளனர்? தம்பிமார் இருவரும் கேகயதேசம் போய்விட்டார்கள். உரிமையான உறுதித் துணை ஈண்டு ஒருவரும் இல்லை. நான்கு பிள்ளைகளைப் பெற்றும் ஒருவராவது அருகே உதவிக்கு இலர்என்றால் பெற்றோர் உள்ளம் எப்படி வருந்தும்? நம் குடிக்கு ஆதரவாய் நீ அவசியம் ஈண்டு இருத்தல் நலம். உனக்குச் சம்மதம் இல்லையாயினும், என் வேண்டுகோளுக்கு இரங்கியாவது இசைந்து இருந்தருளவேண்டும்” என இளையவனை நோக்கி இராமன் உளம் உருகி உரைத்தான்.

அன்னையர் அனைவரும் என்றதனால் கோசலை முதலிய அரசிகள் எல்லாரிடமும் ஒரு நிகராகவே இவன் உள்ளன்பு வைத்துள்ளமை உணரலாகும். ஆழி வேந்தன் என்றது தசரதனை.

அன்னையரும் தந்தையும் முன்னையர் அல்லர் என்றது இப்பொழுது நேர்ந்துள்ள இன்னல் நிலையை எண்ணி.

அரசபோகங்களில் மூழ்கி இன்பக்களிப்பில் இனிதுவாழ்ந்து வந்த அவர் தன் பிரிவினால் இன்று துன்பக்கடலில் விழுந்துள்ளனர் ஆதலால் அன்பு செய்து அருகிருந்து ஆதரித்தருளும்படி அருமைத் தம்பியை இந்நம்பி உரிமையுடன் வேண்டினான்.

"உலகம் எல்லாம் உவந்து தொழ உவகைநிலையில் வளர்ந்து வந்த நமது இராச குடும்பம் நலிந்து மெலிந்துபடின் நாம் பிள்ளைகளாய்ப் பிறந்ததால் யாதுபயன்? தாதை ஏவலைப் பூர்த்திசெய்து விட்டு நான் விரைவில் வந்துவிடுவேன்; எனது ஆவலை நீ ஈண்டு இருந்து ஆர்த்தியோடு பூர்த்தி செய்தருளவேண்டும் தம்பி!" என்று அன்புநலம் கனிய அறிவுரை கூறினான்.

உன்னை நீ என்பொருட்டு உதவுவாய் என்றது எவ்வளவு இனிமையான இதவசனம்! இவ்வளவு பணிவோடு வேண்டியது, தம்பியின் உள்ளக்கிடக்கையை உணர்ந்து. தன்னைப் பிரியாமல் பின் தொடர உறுதிபூண்டிருத்தலால் அந்த உள்ளம் இரங்கி உதவி புரிய இங்ஙனம் உரிமையுடன் மெள்ள உரைத்தருளினான்.

காட்டுக்குப் போகின்ற தனக்குத் துணைவரவேண்டா; வீட்டில் இருக்கின்ற அன்னை தந்தையரை ஆதரித்தருள் என்றமையால் தன்னலம்துறந்து மன்னுயிர் ஓம்பும் இன்னருளாண்மையில் இக்குலமகன் தலைசிறந்துள்ள நிலை அறியலாகும்.

தான் பிறந்த குடும்பத்தை இனிது பாதுகாப்பதில் இப்பெருந்தகை கொண்டிருக்கும் கருத்தும் கவனமும் மக்கள் கருதியுணர வுரியன. எவ்வகையினும் நீ ஈண்டே இருக்க வேண்டும் எனத் தனது அருமைத் துணையை உரிமையாக அவன் வேண்டினான்.

தம்பியை நோக்கி அண்ணன் இவ்வண்ணம் கூறவே அவன் தும்பியாய்த் துடித்து வெம்பி விம்மினான்.

ஆண்டகை அம்மொழி பகர அன்பனும்
தூண்டகு திரள்புயம் துளங்கத் துண்ணென
மீண்டதோர் உயிரிடை விம்ம விம்முவான்
ஈண்டுனக்கு அடியனேன் பிழைத்தது யாதென்றான். (1)

நீருள எனின்உள மீனும் நீலமும்;
பாருள எனின்உள யாவும்; பார்ப்புறின்
நாருள தனுஉளாய்! நானும் சீதையும்
ஆருளர் எனின்உளேம்? அருளுவாய் என்றான். (2)

பைந்தொடி ஒருத்திசொற் கொண்டு பார்மகள்
நைந்துயிர் நடுங்கவும் நடத்தி கான்எனு
உய்ந்தனன் இருந்தனன் உண்மை காவலன்
மைந்தன்என்று இனியசொல் வழங்கி னுய்என. (3)

மாறினி என்னைநீ வனம்கொள் வாய்என
ஏறின வெகுளியை யாதும் முற்றுற
ஆறினை தவிர்கென ஐய ஆணையில்
கூறிய மொழியினும் கொடியதாம் என்றான். (4)

செய்துடைச் செல்வமோ யாதும் தீர்ந்தெமைக்
கைதுடைத்து ஏகவும் கடவையோ ஐயா!
நெய்துடைத்து அடையலர் நேய மாதர்கண்
மைதுடைத்து உறைபுகும் வயங்கொள் வேலினாய்! (5)

உரைத்தபின் இராமன்ஒன் றுரைக்க நேர்ந்திலன்
வரைத்தடம் தோளினான் வதனம் நோக்கினான்
விரைத்தடந் தாமரைக் கண்ணின் மிக்கநீர்
நிரைத்திடை இடைவிழ நெடிது நிற்கின்றான். (6)

(நகர் நீங்கு, 155-160)

தன்னுடன் காட்டுக்கு வரவேண்டா; தாய் தந்தையர்க்கு ஆறுதலாக அயோத்தியிலேயே இரு என்று இராமன் சொல்ல, அதனைக் கேட்டவுடன் இலக்குவன் பதைத்துப் பரிதபித்து இங்ஙனம் பதில் உரைத்திருக்கிறான். உரைகளில் ஒளிர்கின்ற உணர்ச்சி நிலைகளை ஊன்றிப் பாருங்கள்.

"தங்களோடு வரக்கூடாது என்று எனக்கு இந்தக் கொடிய தண்டனையை இடுதற்கு அந்தோ! அண்ணு! நான் என்ன பிழை செய்தேன்?" எனக் கண்ணீர் சொரிந்து கதறியிருக்கிறான். அடியனேன் என்றது அவனது பணிவையும் ஆர்வக்காதலையும் வெளிப்படுத்தி நின்றது. அடியாரினில் ஏவல் செய்தி என்று சற்று முன் தாய் இட்ட கட்டளைப்படியே சேயின் வாய்மொழி தெளிவுற வந்தது.

முதலில் மறுகி மயங்கிய இளையவன் பின்பு உள்ளம் துணிந்து உரிமை மீதூர்ந்து அண்ணன் முகத்தை ஆவலோடுபார்த்துக் கண்ணீர் மல்கி வினயமாகச் சில உரைகள் ஆடினன்.

2. நார் உள தனு உளாய்! என்றது கோதண்ட வீரனே! என்றவாறு. நார்=நாண். தனு=வில். இந்த வாசகம் பேரன்புடைய மெய்யனே! என்று சிலேடையாகவும் அமைந்திருக்கிறது. இந்தப் பொருளில் நார்=அன்பு. தனு=உடல். வில், சொல், செயல் எல்லாம் நல்ல நீர்மையில் நிலைத்துள்ள சீர்மையாளன் என ஆர்வமீதூர்ந்து கூறினன்.

உன் வில்லும்கூட என்றும் நார் அமைந்துள்ளதே; இன்று என்பால் சொல்லிய சொல்லில் அந் நீர் அமைந்திலதே என்று நெஞ்சம் கலங்கினன்.

மீனும், நீலமலரும், நீரை நிலையாகக்கொண்டு நிலைத்து நிற்கின்றன; உயிர் இனங்கள் எல்லாம் பாரை ஆதாரமாகப் பற்றிப் பயின்று வாழ்கின்றன; நானும் சீதையும் உன்னைத் தாரகமாக நம்பி உயிர்த்திருக்கின்றோம் என உணர்த்தி நின்றான். பார்=பூமி.

ஓர் அறிவு முதலிய உயிர்களுக்கு உலகம் ஆதாரம்; மீனுக்கும் மலருக்கும் நீர் நிலை ஆதாரம்; எனக்கும் சீதைக்கும் நீ ஆதாரம்.

மீனும் நீலமும் நீர்உள எனின் உள;
நானும் சீதையும் ஆர் உளர் எனின் உளேம்?

இராமனை நோக்கி இலக்குவன் இப்படி வினவி உருகலானான். இவ் வினாவுக்கு அவன் சரியாக விடை சொல்ல வேண்டும்.

தன் நிலைமையைத் தெளிவாக உணர்த்த முன்னே இரண்டு உவமானங்களை இதமாக எடுத்துக் காட்டினான். காட்சியில் கண்டதைக் கருதி உணர்ந்து கருணை புரிய வேண்டிய படி யிது.

முன்னவன் தன்னை நில் என்று நிறுத்தியதற்குப் பின்னவன் பின்னையும் ஒன்றைத் தன்னுடன் துணைக் கூட்டிக்கொண்டது உன்னி உணர வுரியது. இந்தக் கிளைக் கூட்டு வளைப்பூட்டாய் வாய்ந்தது.

யாண்டும் இணைபிரியாது துணைபுரிந்து வந்த துணைவனையும், என்றும் உயிர்க்கிழமையாயுள்ள துணைவியையும் பிரிந்து நீ தனியே போக முடியாது; ஒருவேளை துணிந்து போக நேரின், நாங்கள் இருவரும் சாக நேர்ந்தபடியாம் எனத் தம் நிலைமையை வேகமாக விளக்கி உயிர் உரிமையை வலியுறுத்தி யிருக்கிறான்.

சீதையைத் தாய் ஆக நினைந்து போற்றுக எனத் தன் அன்னை முன்னம் தனக்கு அறிவுறுத்தியதும், அன்னவாறே பின்னவனும் உறுதி பூண்டு உரிமைபுரிந்து வருவதும் நுணுகி யுணர உரியன.

மீன், இலக்குவனுக்கும்; நீலம், சீதைக்கும் ஒப்பாம். ஆகவே இராமன் இனிய நீர் நிலையமாய் நிலவலாயினன்.

நீலம் என்பது நீர்ப்பூ. மெல்லிய இதழ்கள் அமைந்தது நல்ல வாசம் உடையது. சிறந்த சுனைநீரில் மலர்ந்து திகழ்வது.

"சுனைய நீலமும் சுள்ளியும் சூழ்மலர்" (சிந்தாமணி 1608)
"கூலப் பொய்கையுள் நீலம் ஒடு மலர்ந்த (பெருங்கதை 1-48)
"சுனையெலாம் நீலம் மலர" (பரிபாடல், 15)
"அணிதிகழ் நீலத் தாய் மலர்" (மணிமேகலை, 3)
"நீலம் உற்பலம் நீலோற் பலமுமாம்" (பிங்கலந்தை)

இவற்றால் நீல மலரின் நிலைமையும் நீர்மையும் அறியலாகும்.

இத்தகைய மெல்லிய நீலமலர் செவ்விய சீதைக்கு உவமையாய் வந்தது. பசிய கோலத் திருமேனியனாகிய இராமனது உருவ ஒளி படிந்த பொழுது சீதை மருவி மிளிரும் காட்சி கருதி யுணர நேர்ந்தது. அரிய எழில் கரிய நிலையது.

தன்னை மீன் என்றான்; அண்ணியை மலர் என்றான்; அண்ணனை நீர் என நினைவுறுத்தினன்.

தண்ணீரை விட்டுப் பிரிந்தால் மீன் யாதொரு செயலுமின்றி உடனே இறந்து படும். நானும் உன்னை விட்டு நீங்கினால் அக்கணமே உயிர் அழிந்து படுவேன் என்பதாம்.

தன்னுள் வாழும் மீனை என்ன நிலையிலும் யாண்டும் தண்ணீர் வெளியே தள்ளாது; என்றும் இனிய நீர்மையே புரிந்து நன்று பாதுகாத்து வரும். ஓரறிவும் இல்லாத அந்நீரின் நீர்மையைக் கூடப் பேரறிவுடைய நீ பேணாது நின்றது எனது ஊழ்வினையேயாம் என்று உள்ளம் உருகினன்.

தண்ணீரினும் எவ்வளவோ தண்ணளியுடைய புண்ணிய நீரனை உனக்கு என்னுடைய நிலைமையை மேலும் எடுத்துச் சொல்லுதல் மிகையாம். உய்தி புரிந்து உரிமை செய்தருள்க.

தரையில் விழுந்த மீன் தன் உடலில் ஒட்டிய நீர் இருக்கும் வரையும் துடித்து முடிவில் மடியும்; என்னை அயல் ஒதுக்கிப் போனால், உன்னைக் கண்ணாரக் காணும் அளவும் பதைத்துக் கிடந்து மறைந்தவுடனே இறந்து படுவேன்; இதனை நீ அறிந்தருள். கொல்லாமல் கொல்லற்க என்பது குறிப்பு.

தன் நிலைமையை முதலில் குறித்துப் பின்பு சீதையை வைத்தது என்னை? எனின், முன்னதாகத் தன்னையே நிற்கச் சொன்னமையால் இன்னவாறு பேச நேர்ந்தான்.

தன்னைக் காட்டிலும் அண்ணிக்கு அண்ணன்பால் அதிக உரிமை உண்டு என்பதை உவமையுள் நுட்பமாக உய்த்துணர வைத்துள்ளான்.

மீன் நீரை விட்டு வெளியே துள்ளவும், மீண்டும் உள்ளே பாயவும் வல்லது; மலரோ அங்ஙனம் அயலான செயல் யாதும் இன்றி இயல்பான அமைதியோடு இருந்த இடத்திலேயிருந்து நீரின் நிலை அளவே தன் அளவாய் நிலைத்து விளங்கும்.

* வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. (குறள், 595)

இதில் நீரும் பூவும் உவமையாய் வந்திருக்கும் நிலைமை அறிக.

நீர் உயர மலரும் உயர்ந்து விளங்கும்; அது வறந்துபடின் அம்மலர் இறந்துபடும். பூவுக்கு நீர் போல் சீதைக்கு இராமன்.

உம்மைப் பிரிந்தால் நீர் பிரிந்த மலர்போல் சீதை ஆருயிர் குலைந்து அலமந்தழிவாள் என்பதாம்.

என்னையும் அண்ணியையும் சாகும்படி செய்யாமல் உண்மையை ஓர்ந்து உடன்கொண்டு போகவேண்டும் என இலக்குவன் இவ்வாறு விலக்க முடியா வகை விநயமொழி பகர்ந்தான்.

3. மனைவி ஏவலைக் கேட்டுத் தலைமகனை அடவிக்கு ஓட்டிய காவலன் தனயன் என்று கருதியோ என்னைக் கை ஒதுக்க நேர்ந்தாய்? அக் கொடியவள் செய்த கொடுமையை நினைந்து நான் சினந்து எழுந்த பொழுது என்னை அடக்கிவைத்த அந்தச்சொல்லைக் காட்டிலும் இந்த வார்த்தை என் உயிரைக்கொல்லுகின்றது.

*மலா நீரின் அளவாய் நிலவி மிளிர்தல் போல் மக்கள் ஊக்கத்தின் அளவே உயர்ந்து திகழ்கின்றார் என்பதாம். உள்ளம் = ஊக்கம்.

அண்ணா! நான் கனவிலும் எண்ணாத கடிய கொடிய தண்டனை உன் நினைவில் எழுந்தது எனது வினையின் விளைவேயாம்.

5. அரச செல்வங்கள் எல்லாவற்றையும் துறந்துவிட்டோம்; இவனையும் கைவிட்டுப் போவோம் என்று கருதினாய் போலும்! அது இடையே நேர்ந்தது; இது என்றும் சேர்ந்தது.

"நெய்துடைத்து, அடையலர் நேய மாதர்கண்
மைதுடைத்து உறைபுகும் வயங்கொள் வேலினாய்!"

என்றது இராமனது வீரபராக்கிரமத்தை விளக்கி நின்றது. வயம் = வெற்றி. அடையலர் = பகைவர். இராமனோடு எதிர்த்த பகைவர் எவராயினும் அவர் அடியோடு மடிகின்றார். மடியவே அவருடைய மனைவிமார் விதவைகள் ஆகின்றனர்; ஆகவே முகத்தில் மஞ்சள் பூசல், நெற்றியில் திலகம் தீட்டல், கண்ணுக்கு மை இடுதல் முதலிய சுமங்கலக் கோலங்களை எல்லாம் இழந்து அமங்கலம் அடைகின்றார்கள்; கண்ணீரால் மை கரைந்து போயது ஆதலால் அடையலர் நேயமாதர் கண் மை துடைத்து உறைபுகும் என இராமனது வேல்வீரத்தை விதந்து குறித்தான்.

இங்ஙனம் எல்லாவற்றையும் துடைத்துப் பழகிய அந்தப் பழக்கத்தினாலேதான் இன்று என்னையும் கைதுடைத்து ஏகத் துணிந்தாய் ஐயா! என்று கண் துடைத்து நின்றான்.

இளையவன் இவ்வாறு உளம் உருகி உரையாடவே இராமன் எதிர் உரை ஒன்றும் பேசாமல் அவனது ஆர்வ நிலையை நினைந்து நெஞ்சம் கரைந்து நெடிது மறுகினான்.

என்பும் உருக அன்பு பெருகி நிற்கும் அத்தம்பியின் முகத்தை இந்நம்பி நயந்து நோக்கினான். நோக்கவே, நயனங்களிலிருந்து நீர்த்துளிகள் சிதறி நிலத்திடை விழுந்தன.

"விரைத் தடம் தாமரைக் கண்ணின் மிக்க நீர்
நிரைத்து இடை இடை விழ நெடிது நிற்கின்றான்."

இந்தக் காட்சியைக் கண் ஊன்றிக் காணுங்கள்.

"உன்னை எவ்வழியும் நான் பிரிந்திருக்க முடியாது; என்னைக் கைவிட்டுப்போனால் உடனே என் உயிர் மெய்விட்டுப் போம்' என்று ஆற்றாமை மீதூர்ந்து பேசிய தம்பியின் வார்த்தைகளையும் ஆர்த்தியையும் பார்த்து அண்ணன் உள்ளம் கரைந்தான். தாமரை மலர்கள் போன்ற அவன் கண்களிலிருந்து நீர்கள் சொரிந்தன.

தம்பியை நோக்கி ஒன்றும் பேசாமல் கண்ணீர் மாலையாய் ஓட மௌனமாய் நிற்கும் இப்பரிபவ நிலையில் அரிய சிந்தனைகள் பல அடங்கியுள்ளன.

நான் முடி இழந்ததோடு அமையாமல் அரசர் குடியில் பிறந்த எனது அருமைத் துணைவனும் அடவியில் அலைய நேர்ந்ததே! தாயும் தந்தையும் நொந்து தவிக்க என்குடி யாதொரு பாதுகாவலும் இன்றி நாதி யற்றுள்ளதே! சிறந்த நிலையில் உயர்ந்து விளங்கிய அரச குடும்பம் என்னால் குலைந்துபட வந்ததே! செல்லத் தம்பியும் என்னுடன் அல்லல் அடையத் தொடர்கின்றனே! யாதும் சொல்ல முடியவில்லையே என! இன்னவாறு இன்னலுழந்து கண்ணீர் சொரிந்து அண்ணல் கரைந்துநின்றான்.

## வசிட்டர் வந்தது.

அன்பு நலம் கனிந்து, சகோதர வாஞ்சை ததும்பிப் பரிவுரையாடிப் பிரிவரு நிலையில் தம்பியும் தமையனும் இங்ஙனம் மறுகி மயங்கி உருகி நிற்குங்கால் வசிட்டர் அங்கு வந்தார்.

அம் மாதவரைக் கண்டதும் இம் மானவீரர் வணங்கினர். மரவுரிதரித்துத் துறவுக்கோலம் பூண்டு நிற்கும் இராமனது நிலைமையை நோக்கி முனிவர் நெஞ்சம் கலங்கினர். மதி நலமுடைய அவர் விதிவலியை நினைந்து வெதும்பி நொந்தார். ஞானசீலராயிருந்தும் இக் குலமக்களின் குலைவுக்கு இரங்கிக் குலை நடுங்கி நெடிது நேரம் நிலைமறந்து நின்றார்.

அன்னவர் முகத்தினோடு அகத்தை நோக்கினன்
பொன்னரைச் சீரையின் பொலிவு நோக்கினன்
என்னினி உணர்த்துவது எடுத்த துன்பத்தால்
தன்னையும் உணர்ந்திலன் உணரும் தன்மையான். (1)

வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்
தாழ்வினை யதுவரச் சீரை சாத்தினன்;
சூழ்வினை நான்முகத்து ஒருவற் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ? (2)

வெவ்வினை அவள்தர விளைந்த தேயுமன்று;
இவ்வினை இவன்வயின் எய்தற் பாற்றுமன்று;
எவ்வினை நிகழ்ந்ததோ? ஏவர் எண்ணமோ?
செவ்விதின் ஒருமுறை தெரியும் பின் என்றான். (3)

மணிமுடி இழந்து நிற்கும் இளவரசைக் கண்டு மனம் உடைந்துத் தமக்குள்ளேயே வசிட்டர் மறுகி மொழிந்திருக்கும் இவ்வுரைகளில் உறுதி உண்மைகள் பல மருவி யுள்ளன.

தவ நெறியும் மெய்யுணர்வும் உடைய சிறந்த முனிவர் வாயிலிருந்து உயர்ந்த கருத்துக்கள் விரைந்து வெளிவந்திருக்கின்றன.

இராமனது இன்னல் நிலையைப் பார்த்ததும் தன்னையும் மறந்து செயலிழந்து தவசி அலமந்துள்ளமையால் அந்தப் பரிதாபத்தின் அளவுநிலை தெளிவாயது.

தன்னையும் உணர்ந்திலன் உணரும் தன்மையான்

இவ்வுரை விளக்கம் உணர்வு நலம் கனிந்தது. உயிர் பரங்களின் இயல்புகளையும் நிலம் நீர் முதலிய தத்துவ நிலைகளையும் நன்கு தெளிந்து மெய்ஞ் ஞான சீலராய் மேவியுள்ள முனிவரும் மெய்ம் மறந்து நின்றார் என்றது எய்தி நின்ற துயரின் வெய்ய செய்தியை வையம் தெளிய உணர்த்தியது.

இங்ஙனம் மறுகிநின்ற முனி இராமனது நிலைமையை நினைந்து உருகி உளைந்தார். வினைவலியை வியந்தார்.

வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள் என்றது மணி முடி புனைந்து அரியாசனத்தில் அமர்ந்து செங்கோல் ஏந்தி அரசு புரிய உறுதி செய்த இந்தச் சுபதினத்திலே என்றவாறு.

சிறந்த சக்கரவர்த்தியாய் விளங்கிப் பாரெல்லாம் தொழச் சீரும் சிறப்பும் நேரவேண்டிய இந்தச் சமயத்திலே சீரை சுற்றி இவன் காடு போக நேர்ந்ததே! என்று மாதவர் மதிமயங்கி விதியை நொந்திருக்கிறார்.

"சூழ்வினை நான்முகத்து ஒருவற் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ?"

உலகு உயிர்களைப் படைத்து விதி நியமங்களை வகுக்க வல்ல பிரமனையும் ஊழ்வினை சூழ நேரின் அவன் தாழ்வினை அடைவான். அவ்வினை விளைவை எவராலும் ஒழிக்க முடியாது என முனிவர் இங்கே உள்ளம் கலங்கி உளைந்திருக்கின்றார்.

தான் விதித்ததே விதியாய் நிலவ, ஏகசக்ராதிபதியாய் அமர்ந்து தனிச் செங்கோல் செலுத்தவல்ல தலைமகனுக்கும் இந்த நிலை கேடு வந்ததே! என்று நெஞ்சம் கவன்ற கலைஞானி

விதியின் ஆற்றலை நினைந்து ஆற்றாமை மீதூர்ந்து இங்ஙனம் அலமந்து நின்றார். வினைவலி நினைவில் ஏறி வேலை செய்தது.

தேவதேவனான பிரமனும் விதியினை வெல்லமுடியாது என்றது, மனிதர் அதன் எதிர் என்ன செய்வர்? என இன்னல் நிலையில் இரக்கம் தோன்ற வந்தது.

திரிகாலங்களையும் உணரும் தன்மையன் ஆன தன்னை ஒரு காலமும் உணராதவன் என்னும் சிறுமையை விளைத்து, தான் நல்லது என்று குறித்த சுப முகூர்த்தத்தைப் பொல்லாததாப் புகுத்தி, யாராலும் தட்டமுடியாத பட்டாபிடேகத்தைப் பாழ்படுத்தி, உயர்ந்த சக்கரவர்த்தியாக நின்ற மகாவீரனை எளிய பரதேசியாக்கி, நாடும் நகரமும் நைந்து துடிக்க, எவரும் யாண்டும் எதிர்பாராத துயரங்களைப் பெருக்கித் துடியாய் மூண்டு நிற்றலால் அக்கொடிய விதியின் வன்மையையும் தன்மையையும் நினைந்து வருந்தி முனிவர் நெஞ்சம் கலங்கினார்.

## ஊழ் வலி.

அதி மேதைகளும் விதிவலியால் கதிகலங்கி யுள்ளனர். விதி பெரிதா? மதி பெரிதா? என்னும் கேள்வி உலகில் அதிவிசித்திரமாய் உலாவி வருகின்றது. பலரும் இதனை யாண்டும் பன்னிப் பேசிப் படுவாதங்கள் ஆடி ஒரு முடிவும் காணாமல் பெருமுடிவு காண்கின்றனர். இந்த வினா முதலில் யார் மூலம் வந்தது? எனின், ஓர் மூலமும் தெரியாது. ஆதிமூல நிலையாய் இது ஓதி வரப் படுகின்றது. விதிவலியைக் குறித்து நம் கவி காவியத்துள் பல இடங்களிலும் வியந்து கூறி யிருக்கிறார். விதியையும் வெல்லுவேன் என இலக்குவன் வீறுகொண்டு எழுந்ததைக் குறித்து அவனது பேராண்மையை விளக்கினாரே யன்றி வேறு நிலைகளில் அதனை வெல்ல முடியாதென்றே சொல்லி யுள்ளனர். அது பெரு வலியுடையது; அதன் வயமாகவே உயிரினங்கள் மருவி வருகின்றன என்று உறுதியாகக் கருதி யிருக்கின்றார்.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்." (குறள், 380)

என்னும் பொய்யாமொழியின் பொருள்வழியே இச் செய்யுள் ஈண்டு உருவாகி வந்துள்ளது. வரினும் தனியே ஒரு புதுமை பொலிந்து மிளிர்கின்றது. சூழ்வினை நான்முகத்து ஒருவற்

சூழினும் என்னும் இணைப்பு அவ்வூழின் ஆற்றலை அதியுன்னதமாக எடுத்துக் காட்டுகின்றது.

தேவ தேவராலும் வெல்லமுடியாது என்றமையால் அதன் வல்லமையின் எல்லை நிலை புலனும். அதற்கு இவ்வளவு ஆற்றல் எவ்வாறு நேர்ந்தது? அதன் தோற்றமும் தொடர்பம் துருவித் தெரியின் எற்றமும் இயல்பும் இனிது தெளிவாம்.

### வினை.

வினை என்பது மனிதனது நினைவு சொல் செயல்களால் விளைவது. அவை நல்லனவாயின் நல்வினையாம்; தீயன எனின் தீவினை ஆகின்றது. முன்னது புண்ணிய உருவாய் இன்பம் பயக்கும்; பின்னது பாவ வடிவாய்த் துன்பம் தரும்.

இவ்வினைப் பயன்களை எல்லா உயிர்களும் தப்பாமல் அனுபவித்தே தீரும். வினை விளைவுகளை நுகரவே பிறவிகள் எழுந்தன.

" உலக மூன்றினும் உயிராம் உலகம்
அலகில; பல்லுயிர் அறுவகைத் தாகும்;
மக்களும் தேவரும் பிரமரும் நரகரும்
தொக்க விலங்கும் பேயும் என்றே;
நல்வினை தீவினை என்றிரு வகையால்
சொல்லப் பட்ட கருவினுள் தோன்றி
வினைப்பயன் விளையும் காலை உயிர்கட்கு
மனப் பேரின்பமும் கவலையும் காட்டும்;
தீவினை என்பது யாது? என வினவின்,
ஆய்தொடி நல்லாய்! ஆங்கது கேளாய்!
கொலையே களவே காமத் தீவிழைவு
உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்;
பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்எனச் சொல்லில் தோன்றுவ நான்கும்;
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி என்று
உள்ளம் தன்னில் உருப்பன மூன்றும் எனப்
பத்து வகையால்; பயன் தெரி புலவர்
இத்திறம் படரார்; படர்குவ ராயின்,
விலங்கும் பேயும் நரகரும் ஆகிக்
கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர்;
நல்வினை என்பது யர்து? என வினவின்

சொல்லிய பத்தின் தொகுதியின் நீங்கிச்
சீலம் தாங்கித் தானம் தலை நின்று
மேல்என வகுத்த ஒருமூன்று திறத்துத்
தேவரும் மக்களும் பிரமரும் ஆகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பயன் உண்குவர்."
(மணிமேகலை, 24)

மூன்று காரணங்களிலிருந்து கருமங்கள் விளைகின்றன. அவை இருவினைகள் ஆகின்றன; அவற்றின் பயன்களை உயிரினங்கள் நுகர்கின்றன என உணர்த்தியிருக்கும் இதனை ஊன்றிப்பார்க்க. பொருள் நிலைகளை ஆழ்ந்து ஓர்ந்து கொள்ளுக.

கரும பலன் அனுபவித்தே தீரும். மனிதனது செயலிலிருந்து விளைந்தமையால் இது வினை என வந்தது. வினை முதிர்ந்து பலனை ஊட்டுங்கால் அது விதி என நின்றது.

ஊழ், பால், முறை, தெய்வம், உண்மை, நியதி, வினை, விதி, கருமம் எனப் பல பெயர்களால் இது வழங்கப்படுகிறது. யாவும் காரணப் பெயர்கள். பெயரின் குறிப்பால் அதன் இயல்பும் நிலையும் தெளிவாம்.

வினை விளைவு முதிர்ந்து பழமையா யுள்ளது ஊழ் என வந்தது. ஊழ்=பழமை. இது பழவினை எனவும் வழங்கப்படும்.

பால்=பகுதியாய் வகுக்கப்பட்டது. இன்ன உயிர் இன்ன பலனை இன்னபடி அனுபவிக்கும் என முன்னம் முடிந்ததுஎன்க. யாண்டும் எவ்வழியும் முறை தவறாமல் நியமமாய் வருதலால் நியதி முறை முதலிய பல பெயர்களைப்பெற்று இது நிலவியுள்ளது.

வினையின் அளவே யன்றி அதற்கு மாறாகக் கடவுளும் யாதும் செய்யாது.' தனித்தலைமையில் நின்று உயிர்களை இயக்கி வருதலால் விதியே தெய்வம் என நின்றது. கருமத்தைத் தவிர வேறு கடவுள் இல்லை என்பாரும் உளர். அவ்வாறு கூறுகின்ற அவர்க்குக் கருமப் பிரமவாதிகள் என்று பெயர்.

இந்தக் கருமத்தின் வசமாய் யாவும் இயங்கி வருகின்றன.

"நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம்." (புறம், 192)

நீரில் ஓடும் மிதவைபோல ஆருயிர்கள் விதிவழி ஓடுகின்றன; அறிவுக் காட்சியிலும் உலகக் காட்சியிலும் இவ்வுண்மையைக் கண்கூடாக நன்கு தெளிந்துள்ளோம் எனக் கணியன் பூங்குன்றனார் என்னும் புலவர் பெருந்தகை இங்ஙனம் கூறியுள்ளார். இதில் குறித்துள்ள உவமை நிலையைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நலனை ஓர்ந்து கொள்க.

"முற்படு மாயை முதற்கரை நாட்டில்
பற்பல புவனப் பகுதி பற்றி
ஈரிரு கண்ணுற்று எழுதரம் வகுத்த
ஆறே ழிரட்டி நாரு யிரத்த
செயற்படு செய்களின் உயிர்ப்பயிர் ஏற்றி
ஊழ்எனப் பட்ட தாழ்புனல் படுகரில்
தெய்விகம் முதலாச் செப்புமும் மதகும்
ஒவ்வொரு மதகா யுடனுடன் திறந்து
தாகம் என்னும் தனிப்பெரும் காலில்
போகம் என்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயும்ஐம் பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்
இதத்துடன் அகிதம் எனுமிரண்டு ஊற்றில்
புதுப்புனல் பெருகிப் புறம்பலைத்து ஓட
வார்புனல் அதனை மந்திர முதலா
ஓராறு வகைப்படும் ஏரிகள் நிரப்பி
விளைவன விளைய விளைந்தன அறுத்துஆங்கு
ஒருகளம் செய்யும் உழவன்ஆகி
மாநிலம் புரக்கும் மாசிலாமணி."

(பண்டார மும்மணிக்கோவை.)

உயிர்கள் பயிர்; ஊழ் நீர் என உருவகம் செய்து வந்துள்ள இதன் அரிய கருத்துக்களைக் கருத்தூன்றிக் நுனித்துக் காண்க.

நீர் வழிப்படும் புணை போலவும், நீரால் விளையும் பயிர் போலவும் உயிர்கள் ஊழ் வயமாய் ஒழுகி வருகின்றன என்றமையால் அதன் ஆட்சியும் மாட்சியும் அறியலாகும்.

இந்த ஊழ்வலியைக் குறித்து நூலோர் பலரும் மேலாகவே பேசியிருக்கின்றனர். மாதிரிக்குச் சில காண்போம்.

மதியினை மலரச் சூழ்ந்து வருந்தித்தாம் படைக்கப் பட்ட
நிதியினை நுகர்தும் என்று நினைத்தினி திருந்த போழ்தில்
பதியினைக் கலக்கிச் சென்று பறித்துத்தாம் பிறர்க்கு நீட்டும்
விதியினை விலக்க மாட்டா மெலிபவால் வெளிய நீரார்.

(சூளாமணி.)

வருதிரை மணலினும் வளியி னுல்திரள்
சருகிலை போலவும் சாயை போலவும்
மருவிய வினைவசம் வருவதல்லது இங்கு
ஒருவர்க ணுற ஒருநாளும் இல்லையே. (மேருமந்தரபுராணம்)

தீங்குவந் தடையு மாறும் நன்மைதான் சேரு மாறும்
தாங்கள்செய் வினையினுலே தத்தமக்கு ஆய வல்லால்
ஆங்கவை பிறரால் வாரா; அமுதம் நஞ்சு இரண்டினுக்கும்
ஓங்கிய சுவையின் பேதம் உதவினுர் சிலரும் உண்டோ ?

(கந்தபுராணம்)

ஊழ்வினை உருத்த காலத்து உறுதவத்து ஈன்ற நற்ருய்
வீழ்முலை சுரந்த பாலும் உண்டபின் வெய்ய நஞ்சாம்
ஆழ்கடற் பிறந்த நஞ்சும் உண்டபின் அமிழ்தம் என்ருல்
வாழிய மாந்தர் எல்லாம் இருவினை வயத்தர் மன்னே.

(பிரமோத்தரகாண்டம்.)

அஞ்சினம் எனினும் மெய்யே அடைபவந் தடையும்; ஆனுல்
அஞ்சுதலதனில் என்னை பயனமக்கு ? அதுவும் அன்றி
அஞ்சுதல் துன்பம் தானே அல்லதும் அதனிற் சூழ்ந்த
நஞ்சன வினைகள் நம்மை நாடொறும் நலியும் என்ருன்.

(யசோதர காவியம்)

"ஊழ்வினை வந்திங்கு உதய குமரனை
ஆருயிர் உண்டது ஆயினும் அறியாய்
வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன
அவ்வினை நின்னையும் அகலாது ஆங்குறும்." (மணிமேகலை20)

"ஊழ்வினை வலிப்பின் அல்லது யாவதும்
சூழ்வினை அறுத்த சொல்லரும் கடுநோய்" (பெருங்கதை)

நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகி தன்கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை. (சிலப்பதிகாரம்)

ஊழ்வினை துரப்ப ஓடி ஒன்றுமூழ்த் தத்தி னுள்ளே
சூழ்குலைப் பெண்ணை நெற்றித் தொடுத்ததீங் கனிகள் ஊழ்த்து
வீழ்வன போல வீழ்ந்து வெருவரத் தக்க துன்பத்து
ஆழ்துயர் உழப்ப ஊனும் அருநவை நஞ்சு கண்டாய்.
(சிந்தாமணி)

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. (நாலடியார்.)

பண்டுருத்துச் செய்த பழவினை வந்தெம்மை
இன்றொறுக் கின்ற தெனநினையார்—துன்புறுக்கும்
மேவலரை நோவதென் மின்னேர் மருங்குலாய்
ஏவலாள் ஊரும் சுடும்; (பழமொழி.)

சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மால்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்செய் விப்பதென்றால்
எய்தவனை நாடி யிரு. (சிவபோகசாரம்)

நன்னலம் பயப்ப துண்டேல் தீயவும் நல்லவாகும்;
சென்னலம் இழப்பதுண்டேல் நல்லவும் தீயவாகும்;
இன்னவால் வினையின் ஆக்கம் எனின்இடை ஏதுவான
அன்னவர் தம்மை நோவ வழக்கிலை அந்தோ அந்தோ.
(பேரூர்ப்புராணம்)

ஆமே ஒருவர் ஒருவர்க்கு இடரை அகற்றுவதும்?
ஆமே ஒருவர் ஒருவர்க்கு இடைநன்மை ஆக்குவதும்?
தாமேது செய்தனர் அன்னது தாமே புசிப்பதன்றிப்
போமே தலையிற் பொறித்தான் பிறழ்ந்து நினைப்பினுமே.
(விநாயகபுராணம்.)

பேராசை யால் ஈனர் பின்சென் றுழன்றும்
தீராத மிடியாளர் சிலர்பாரில் உண்டே
நேராக வரில் வாழ்வு நினையாமல் வருமால்
வாராத தார்தாம் வருந்தினும் வராதே.
(பிரபோதசந்திரோதயம்.)

தழைவிரி கற்ப நாடு சார்தலும் புவியில் யாரும்
விழைதரு போகம் துய்த்து மேவலும் நல்லூழ் ஆமால்;
பிழைபட நிரயத் தாழ்ந்து பெருந்துயர் உறலும்மண்மேல்
குழைமிடி யாதித் துன்பு கூர்தலும் தீயூழ் அன்றே.
(குசேலோபாக்கியானம்.)

தானே புரிவினையால் சாரும் இருபயனும்
தானே அனுபவித்தல் தப்பாது—தானூறு
கோடிகற்பம் சென்ருலும் கோதையீர்! செய்தவினை
நாடிநிற்கும் என்ருர் நயந்து. (நீதி வெண்பா,)

தாந்தாமுன் செய்தவினை தாமே அனுப்பவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்ரு
வெறுத்தாலும் போமோ விதி. (நல்வழி)

விதியின் விளைவையும் அதன் வலியையும் உயிரினங்களை ஊட்டி இயல்வழிகளில் ஆட்டி அது காட்டிவரும் நிலையையும் மேலோர் இன்னவாறு வியந்து கூறி யிருக்கின்றனர்.

பாடல்களைக் கண்ணூன்றிப் படித்து ஊழ்வலியைப் பற்றிய எண்ணங்களை நன்கு சிந்தித்துக்கொள்ள வேண்டும்.

மனிதனது அறிவெல்லையைக் கடந்து தொழில்கள் நிகழும் பொழுது அவை ஊழ்வினையால் நேர்ந்தன என்று தள்ளாடித் தவித்து உள்ளம் ஓய்ந்து அவன் அமைதி யுறுகின்ருன்.

காரியம் இனிது நடந்தால் எல்லாம் தனது மதியினுல் ஆயின என்று வீரியம் பேசுகின்ருன்; இடர் அடைந்த போது தான் பழவினையை நினைந்து பரிதபிக் கின்ருன். கடவுளையும் எண்ணுகின்ருன். மனித இயல்புகள் அதிவிசித்திரமானவை.

கருமங்களைப் புரிந்து அவற்றின் வசமாய் மறுகி யுழலும் மானுடங்களைப் போலத் தரும மூர்த்தியான இராமனை ஈண்டு எண்ணலாமோ? எனின், அங்ஙனம் யாரும் எண்ண வில்லை. பின்னர் ஏன் இவனுக்கு இந்த இடையூறு நேர்ந்தது? முன்னம் என்ன வினை செய்தான்? ஊழ்வினையை இவன் தலையில் ஏற்றி இரங்கி நின்றது ஏன்? மனித வாழ்வில் மருவியுள்ள ஊழை இப் புனிதனிடம் பொதுவாக முனிவர் புனைந்து கூறினுர்; அவன் நினைந்து வந்துள்ள படியே யாவும் இனிது நடந்து வருகின்றன. வரினும் உலக நிலையில் அவன்பால் பரிவுமண்டி உறுதியை மறந்து மனித உள்ளம் பெரிதும் மறுகி யுள்ளது என்க.

உத்தம குணசீலனுன சக்கரவர்த்தித் திருமகனுக்கு இத்துணை இடர் நேர்ந்ததே! என்று தத்தளித்த வசிட்ட முனிவர்

ஊழ்வலியை வியந்து உருகி மேல் உறுவதை நினைந்து பரிவு மீதூர்ந்தார்.

இராமன் கருதி வந்த காரியம் விதி முறையே நிகழ்ந்து வருகின்றது. செயல்கள் அதி விநோதங்களாய் இயங்கி இயல்கின்றன.

தம் உயிரினும் இனியனை யாரும் கருதிப் போற்றும் அருமை மகனுக்கு உரிய தாயா யிருந்தவள் கொடிய பேயாய் மாறி இவனை வனம் போக்கியதும், முடிதுறந்த இவன் கடிது போக மூண்டு நிற்பதையும் ஓர்ந்துநோக்கி ஊழ்நிலையை உணர்ந்து தேர்ந்தாலும் ஆர்ந்த அன்பினால் அருந்தவர் அலமந்து நின்றார்.

## வசிட்டர் மறுகி மொழிந்தது.

"இராமா! நீ வனம் போகலாகாது; போனால் சக்கரவர்த்தி உடனே இறந்து படுவார்; உன்னைப் பிரிந்து அவர் உயிர் வைத்து இரார்; இவ் வுண்மையை உணர்ந்து என் உரையைத் தட்டாமல் நீ ஈண்டு இருந்தருளவேண்டும்" என மாதவர் வேண்டி நின்றார். அதற்கு இந்த ஆண்டகை என்ன பதில் சொன்னான்!

"அன்னவன் பணிதலை ஏந்தி ஆற்றுதல்
என்னது கடன்; அவன் இடரை நீக்குதல்
நின்னது கடன்; இது நெறியும் என்றனன்
பன்னகப் பாயலுள் பள்ளி நீங்கினான்."

இந்த நன்னய வாசகத்தை நயந்து காணுங்கள்.

"என் தந்தை இட்ட கட்டளைப்படி நடப்பது என்னுடைய கடமை; எனது பிரிவினால் அந்த அரசர்பிரான் வருந்தநேரின் அருகிருந்து உரிமையுடன் அப்பெருமானை ஆற்றியருள வேண்டியது உங்கள் கடமை. மந்திரியாயும் குருவாயும் அமர்ந்துள்ள தங்களுக்கு அரசு முறையைக் குறித்து நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை" என இங்ஙனம் இராமன் சொல்லவே முனிவர் மறுகினார். பரிவு கூர்ந்து சில பகர நேர்ந்தார்.

"இராமா! தந்தையார் உன்னைக் காட்டுக்குப் போகச் சொல்லவில்லையே; கொடிய கைகேசி அல்லவா வஞ்சனையாக வரம் வாங்கி இந்த வன்கொடுமை செய்துள்ளாள்; இதனைத் தாதை பணியாக எண்ணலாகாது; அரசை வேண்டுமாயின் பரதன் ஆளட்டும்; நீ ஈண்டிருந்தே ஆதரவு செய்தருள வேண்டும்" என மீண்டும் மாதவர் விநயமாக வேண்டினார்.

எனது தந்தையிடம் வரம் பெற்று என் தாய் எனக்கு ஏவிய பணியை நான் விரைந்து செய்வேன்; கடமைகளை நன்கு உணர்ந்த அடிகள் இடையே என்னைத் தடை செய்யலாமா? தாயும் தந்தையும் தெய்வம் என நீங்கள்தானே போதித்தீர்கள். ஈன்றவர் மன மகிழத் தோன்றலாகிய நான் ஒழுகி வரும்படி ஆசிர்வதித்து அனுப்பி யருளுங்கள்.

"என்றனள் எந்தைஇவ் வரங்கள் ஏவினள்
ஈன்றவள் யானது சென்னி ஏந்தினேன்
சான்றென நின்ற நீ தடுத்தி யோ? என்றான்
தோன்றிய நல்லறம் நிறுத்தத் தோன்றினான்."

இவ்வாறு இக்கோமகன் கூறவே அம் மாதவர் யாதும் பதில் பேசாமல் கண்ணீர் சொரிந்து கரைந்து நின்றார்.

அவரை அன்புடன் தொழுதுவிட்டுத் தம்பியுடன் இந் நம்பி தனது அரண்மனையை நோக்கி வந்தான். அங்ஙனம் வருங்கால் இடையே கண்டவர்கள் எல்லாரும் உள்ளம் துடித்து உயிர் பதைத்து ஓலமிட்டு அழுதனர். நகரவாசிகள் அடைந்த துயர நிலைகள் எவராலும் அளவிடலரியன. அத் துன்பத் துடிப்புகளைப் பல பாடல்களால் குறித்துக் காட்டிக் கவி உள்ளங்களை உருக்கியிருக்கிறார். சில அடியில் வருகின்றன.

அந்தணர் அருந்தவர் அவனி காவலர்
நந்தலில் நகருளார் நாட்டுளார்கள் தம்
சிந்தைஎன் புகல்வது? தேவர் உள்ளமும்
வெந்தனர் மேல்வரும் உறுதி வேண்டலார். (1)

தம்மையும் உணர்ந்திலர் தணிப்பில் அன்பினால்
அம்மையின் இருவினை அகற்றவோ அன்றேல்
விம்மிய பேருயிர் மீண்டிலாமை கொல்
செம்மல்தன் தந்தையிற் சிலவர் முந்தினார். (2)

விழுந்தனர் சிலர்சிலர் விம்மி விம்மிமேல்
எழுந்தனர் சிலர் முகத் திழிகண் ணீரிடை
அழுந்தினர் சிலர்பதைத்து அளக வல்லியின்
கொழுந்தெரி யுற்றெனத் துயரம் கூர்கின்றார். (3)

கரும்பன மொழியினர் கண்பனிக் கிலர்
வரம்பறு துயரினுல் மயங்கி யேகொலாம்
இரும்பன மனத்தினர் என்ன நின்றனர்
பெரும்பொருள் இழந்தவர் போலும் பெற்றியார். (4)

இருகையிற் கரிநிகர் எண்ணிறந்தவர்
பெருகையிற் பெயர்த்தனர் தலையைப் பேணலர்
ஒருகையிற் கொண்டனர் உருட்டு கின்றனர்
சுரிகையிற் கண்மலர் சூன்று நீங்கினுர். (5)

அறுபதி னுயிரர் அரசன் தேவியர்
மறுவறு கற்பினர் மழைக்கண் நீரினர்
சிறுவனைத் தொடர்ந்தனர் திறந்த வாயினர்
எறிதிரைக் கடலென இரங்கி ஏங்கினுர். (6)

கன்னிநன் மயில்களும் குயிற் கணங்களும்
அன்னமும் சிறையிழந்து அவனி சேர்ந்தன
என்னவீழ்ந் துழந்தனர் இராமன் அல்லது
மன்னுயிர்ப் புதல்வரை மற்றும் பெற்றிலார். (7)

தண்டலைக் கோசலைத் தலைவன் மாதரைக்
கண்டனன் இரவியும் கமல வாண்முகம்
விண்டலத் துறையுநல் வேந்தற் காயினும்
உண்டிடர் உற்றபோது என்னுருதன ? (8)

அஞ்சன மேனியிவ் அழகற்கு எய்திய
வஞ்சனை கண்டபின் வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் வலிதுயிர் நினைப்ப தென்சில
நஞ்சினும் வலியநம் நலம்என் ருர்சிலர். (9)

திருவரை சுற்றிய சீரை ஆடையன்
பொருவருந் துயரினன் தொடர்ந்து போகின்ருன்
இருவரைப் பயந்தவள் ஈன்ற கான்முளை
ஒருவனே இவற்கிவ்வூர் உறவென்ருர் சிலர் (10)

மக்களை மறந்தனர் மாதர்; தாயரைப்
புக்கிடம் அறிந்திலர் புதல்வர்; பூசலிட்டு
உக்கனர் உயங்கினர் உருகிச் சோர்ந்தனர்
துக்கம்நின்று அறிவினைச் சூறை ஆடவே. (11)

முழ வெழும் ஒலி யில; முறையின் யாழ்நரம்பு
எழ வெழும் ஒலி யில; இமைப்பில் கண்ணினர்
விழ வெழும் ஒலி யில; வேறும் ஒன்றில;
அழ வெழும் ஒலி யலது அரச வீதியே. (12)

(நகர் நீங்கு படலம்.)

இராமன் அரசு துறந்து அடவி போக நேர்ந்தான் என அறிந்தபோது அயோத்தி நகரம் அடைந்த துயரநிலைகள் வரம்பு காண முடியாதன. முன்னே குறித்துள்ள பாடல்களைக் கூர்ந்து பாருங்கள். இன்னவாறே இன்னல்மீதூர்ந்து எங்கணும் பொங்கி எழுந்த அவலக் கவலைகளும் அல்லல் துடிப்புகளும் அலமரல்களும் மேலும் பல பட வருணிக்கப் பட்டுள்ளன.

இக்கோமகன் பால் அன்புமண்டி உயிரினங்கள் துடித்துள்ள துன்பப் பதைப்புகளைத் தனித்தனி எழுதிக் காட்ட இயலா. அழுகை ஒலிகளே யாண்டும் பெருகி எழுந்தன. தசரதனைப் போலவே மூர்ச்சையாய் உயிர் துறந்தனர் பலர். நெருப்பில் இட்ட புழுக்களைப்போல் உள்ளங்களும் உயிர்களும் துள்ளித் துடித்துத் துயரத் தீயில் கரிந்து தவித்தன.

உக்கனர்; உயங்கினர்; உருகிச் சோர்ந்தனர்;
துக்கம்நின்று அறிவினைச் சூறை ஆடவே.

இந்த வாக்கியத்தைக் கருத்தூன்றி நோக்கி மக்களின் பரிதபிப்புகளை ஓர்ந்து கொள்ளுங்கள். பொருள் நிகழ்ச்சிகளையும் உயிருணர்ச்சிகளையும் சொற்கள் எப்படி விளக்கி இதயங்களை உருக்குகின்றன!

சூறாவளியில் அகப்பட்ட செத்தைகள் போல் உயிரினங்கள் அன்று துக்கத்தால் பதைத்துத் துடித்தன. மதி நலங்கள் யாவும் அதிவேகமாய்ச் சிதைக்கப்பட்டன.

இராமனது பிரிவாகிய பரிபவ நிலையில் கோசல தேசத்திலிருந்த பேரறிவுகள் எல்லாம் ஓராதரவுமின்றிக் கொள்ளை போயின என்றால், மற்றச் சாதாரண மக்கள் பட்ட பாட்டுகளைச் சொல்லவும் வேண்டுமோ?

உயிர்களுக்குக் கவலை நேர்ந்த பொழுது அறிவு அதனை இதமாக ஆற்றி ஆறுதல் அருளும்; உற்ற துன்பங்களை நீக்கி என்றும்

உறுதியாய் நின்று உதவி புரியவல்ல அறிவும் அன்று வறிதாய் நிலைகுலைந்து போயது என்றதனால் நேர்ந்த துயரத்தின் கடுமையும் கொடுமையும் நெடிது புலனும்.

ஆருயிர்கள் யாதொரு ஆதரவுமின்றிக் கொடுந் தீயில் இட்ட அரும்புகள் போலவும், கடுங்காற்றில் பட்ட துரும்புகள் எனவும் கரிந்து பொரிந்து திரிந்து சுழன்று பரிதாபமாய்த் துடித்துப் பதைத்தன.

சீவகோடிகள் இங்ஙனம் ஆவலித்து அலமந்து அழுது அயர்ந்தன; உலக மக்களை யன்றித் தத்துவ நிலையில் தலை சிறந்துள்ள அருந்தவர்களும் ஞானசீலர்களும் யோக முனிவரும் உள்ளங் கலங்கி உணர்வு நிலை குலைந்தார்.

திக்கு நோக்கிய தீவினைப் பயன்எனச் சிந்தை
நெக்கு நோக்குவோர்; நல்வினைப் பயன்என நேர்வோர்
பக்கம் நோக்கல் ஏன்? பருவரல் இன்பம் என்றிரண்டும்
ஒக்க நோக்கிய யோகரும் அருந்துயர் உழந்தார். (1)

ஓவில் நல்லுயிர் உயிர்ப்பினோடு உடல்பதைத் துலைய
மேவி நல்லழகு எழில்கெட விம்மல்நோய் விம்மத்
தாவில் ஐம்பொறி மறுகுறத் தயரதன் என்ன
ஆவி நீக்கின்றது ஒத்ததுஅவ் அயோத்திமா நகரம். (2)

உயங்கி அந்நகர் உலைவுற ஒருங்குழை சுற்ற
மயங்கி ஏங்கினர் வயின் வயின் வரம்பிலர் தொடர
இயங்கு பல்லுயிர்க்கு ஒருயிர் எனநின்ற இராமன்
தயங்கு பூண்முலைச் சானகி இருந்துழிச் சார்ந்தான். (3)

தனது அருமைத் திரு மனைவி யிருக்கும் அந்தப்புரத்தை நோக்கி முடியிழந்த தலையனாய் இராமன் வருங்கால், நகரமாந்தர் எல்லாரும் துயர மீதூர்ந்து துடித்துப் பதைத்து அழுது புரண்டு அலமந்து ஓலமிட்ட நிலைகள் யாராலும் அளவுகூற முடியாதன.

அங்கே நிகழ்ந்த துன்ப வகைகளை ஓரளவு தொகையாக உரைத்துவந்த கவி முடிவில் குறித்திருக்கும் நிலை நெடிது சிந்திக்க வுரியது. துயர்களையும் உயிர்களையும் துருவிக் காட்டுகின்றார்.

இன்பம் நேர்வது என்றால் நெஞ்சம் மகிழ்ந்து துள்ளுதலும் துன்பம் வருவது எனின் அஞ்சி அயர்தலும் மனிதர் இயல்பு.

வினைப் தீபயன் = துன்பம். நல்வினைப் பயன் = இன்பம்.

திக்கு நோக்கிய என்றது கேடோ நன்மையோ பலன் கொடுக்கத் திசை நோக்கி விரைந்து எழுந்தது என்றவாறு.

"ஐயா! உங்களுக்கு ஒரு பகையாளி இருக்கின்றான்; கொம்பன் திசை நோக்கி நிற்கின்றான்; ஆபத்து நேர்கின்றது; கேடு எழுகின்றது; ஓடி வருகின்றது" என உடுக்கு அடித்து உரையாடிப் பிச்சை வாங்கும் கோடாங்கி சொல்லினும் உள்ளம் கலங்கி உளைந்து துடிப்பர் என மக்களது மெல்லிய இயல்பையும் புல்லிய நிலையையும் இங்கே சொல்லி யிருக்கிறார்.

தீவினைப் பயன் திக்கு நோக்கிய என்று யாராவது ஒரு குறிகாரனோ, சோதிடனோ சொன்னால் உடனே நெஞ்சம் கலங்குவதும், நல்வினைப் பயனாகிய இன்ப நலங்கள் வருகின்றன என்றால் களிப்பு மீதூர்ந்து குதிப்பதுமாகிய சிறிய நிலைமைகளை என்றும் உரிமையாக உடைய உலக மக்கள் நம் குலமகனுக்கு இன்று நேர்ந்த இடையூற்றைக் கண்டு துடித்து அழுதார் என நான் விரித்துச் சொல்வது வீணே என்பார் "பக்கம் நோக்கல் என்?" என்றார்.

தேச மக்கள் எல்லாரும் இளவரசுக்கு நேர்ந்த இடரை நினைந்து பிரிவாற்றாது வருந்திப் பெருந்துயர் அடைந்தார் எனப் பல பட வருணித்து வந்த கவி முடிவில் சலித்து முடித்திருக்கும் நிலை நுனித்து நோக்கத் தக்கது.

உலக பாசங்களில் உழல்கின்ற இக் கலகமாந்தர் சுக துக்கங்களில் யாண்டும் சலபமாக நிலைதிரியும் நிலையினர் ஆதலால் அவரை அயலொதுக்கிவிட்டு என்றும் நிலைதிரியாத தலைமையான தத்துவ தரிசிகளை அடுத்து எடுத்தார்.

"பருவரல் இன்பம் என்று இரண்டும் ஒக்க நோக்கிய யோகரும் அருந்துயர் உழந்தார்" என்னும் இந்த அருமை வாசகத்தை உரிமையோடு கவனித்துக் காணவேண்டும். பருவரல் = துன்பம்.

சாதாரணமான பொது சனங்கள் அரசிழந்த இக் கோமகனுக்கு இரங்கி அழுது பதைத்துப் பரிதபித்தார் எனப் பன்னிப் பன்னிப் பாடுவதால் என்ன பயன்? என்று தம்பாட்டை எள்ளி ஒதுக்கி வேறொரு நல்ல குறிப்பைக் கவி உள்ளம் உருகி உரைத்திருக்கிறார். உரை மெய்யுணர்வு கனிந்துள்ளது.

நித்திய அநித்திய நிலைகளை நன்கு தெரிந்து, உலக பாசங்களை அறவே துறந்து, துன்பமோ இன்பமோ எது நேரினும் யாதொரு மாறுபாடும் இன்றிச் சுகதுக்கங்களில் சம நோக்குடையராய் என்றும் அகமுகராய்ப் பரமான்மாவின் கண்ணேயே பதிந்திருக்கும் ஞானயோகிகளும் இம் மான வீரனுக்கு நேர்ந்ததை நினைந்து நைந்து துடித்தார் என நிலைமையைச் சிந்தனை செய்து நாம் தெளிந்து கொள்ள இங்ஙனம் தனியே விதந்து குறித்தார்.

யோகரும் என்றதில் உம்மை அவரது இயல்பையும் உயர்வையும் உணர்த்தி நின்றது. அருந்துயர் உழந்தார் என்றது என்றும் யாண்டும் அவர் கண்டு அறியாத அரிய பெரிய கொடிய துன்பத்தில் ஆழ்ந்து அன்று அவர் துடித்து அயர்ந்தார் என்பதாம். உழத்தல்=வருந்தித் துடித்தல்.

உலக நாட்டம் ஒரு சிறிதும் இல்லாத தலைமை யோகிகளும் இக்குலமகன் நிலைமைக்கு உள்ளம் குலைந்தார் என்றதனால் இவனது உண்மை நிலை உணரலாகும்.

வந்த வரவும், வருகின்ற திறனும், நின்ற நெறியும், நிகழ்கின்ற முறையும், செல்லும் செலவும், வெல்லும் விளைவும் எல்லாம் நன்கு தெரிந்த தெள்ளிய ஞானிகளும் இதுபொழுது நேர்ந்த அல்லலைச் சகிக்க முடியாமல் உள்ளம் உருகி உளைந்து மறுகினர்.

இங்ஙனம் சொல்ல முடியாத பரிதாப நிலையில் உலகம் அலமந்து துடிக்க இவ்வள்ளல் தன் இல்லை நோக்கி வந்தான்.

ஊரெல்லாம் உயிர்போன உடம்புபோல் செயலிழந்து மயலுழந்தது. அவலங்களால் யாவும் அயர்ந்து மயங்கின.

தாவில் ஐம்பொறி மறுகுறத் தயரதன் என்ன
ஆவி நீக்கின்றது ஒத்தது அவ் அயோத்திமா நகரம்.

இந்தக் குறிப்பைக் கூர்ந்து பாருங்கள். உரைகள் உணர்ச்சி ததும்பி அவல நிலையை விளக்கிக் கவலை கனிந்து வந்துள்ளன.

பெற்ற தந்தைக்கும், உற்ற ஊருக்கும், உதித்த உலகிற்கும் இராமன் உயிர் என நின்றமை இங்கே உணர வந்தது. அவன் அயலகல நேர்ந்தமையால் அவை யாவும் உயிர் பிரிந்த உடல்கள் போல் துயருழந்து மறுகிச் செயலிழந்து சோர்ந்தன.

"இயங்கு பல் உயிர்க்கு ஓர் உயிர் என நின்ற இராமன்" ஆதலால் ஆருயிர்கள் இவ்வாறு அலமாநேர்ந்தன. தம் காவியநாயகனை ஓவிய உருவமா விளக்கி ஆவியின் ஆவியாகக் கவி உணர்த்தி வருகிறார். ஈண்டு உரைத்ததை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு இடங்கள்தோறும் நளினமாக நிலைகாட்டிவந்தவர் முடிவில் அவன் மீண்டு வருங்கால் இதனை மங்களமாக்கி மாண்புறுத்தி யிருக்கிறார். அம் மாட்சி மதி நலம் கனிந்த அதிசய நிலையது. ஆண்டுக் காண்போம்.

ஊரும் நாடும் அயலே இங்ஙனம் பரிதபித்து நிற்கத் தனது இனிய மாளிகை யுள்ளே இப் புனிதன் புகுந்தான்.

## சீதை கண்டது.

தன் நாயகன் வருகின்ற கோலத்தைக் கண்டதும் சீதை உள்ளம் துடித்து உயிர் பதைத்து விரைந்து எழுந்து நடுங்கி நின்றாள். அண்ணல் அருகு நெருங்கினான். "நாதா! என்ன நிகழ்ந்தது?" என்று அப் பெண்ணரசி வெருவி வினவினாள். யாது பதில் சொல்வது? என முதலில் வள்ளல் மறுகினான். பின்பு தேறி மெள்ள உரை செய்தான்.

பொருவில் எம்பி புவிபுரப்பான், புகல்
இருவர் ஆணையும் ஏந்தினென் இன்றுபோய்க்
கருவி மாமழைக் கல்தடம் கண்டு நான்
வருவன் ஈண்டு வருந்தலை நீ என்றான். (நகர், 221)

தனது மனைவியிடம் இக்கோமகன் இங்ஙனம் விநயமாகக் கூறினான். இருவர் என்றது கைகேசியையும் தசரதனையும் குறித்து நின்றது. தான் போக நேர்ந்ததின் யோகம் காண வந்தது.

எனது அருமைத் தம்பி பரதன் உலகைப் பாதுகாப்பான்; தாயும் தந்தையும் எனக்கு ஓர் இனிய பணியைத் தந்துள்ளனர்; அது வனத்தில் செய்ய உரியது; அதனைப் போய் விரைந்து செய்து முடித்து உடனே நான் வந்து விடுவேன்; நீ யாதும் வருந்தாமல் அதுவரையும் இங்கு அமர்ந்திரு என நயந்து மொழிந்தான்.

மனைவி மனதை இனிது தேற்றி இக்கோமகன் தனியே பிரிய உறுதி செய்துள்ளமை உரையில் மிளிர்கின்றது.

காதலி உள்ளம் நோதல் உறுவகை ஆதாவளித்து வருவதில் இவனது சாதுரியமும் மாதுரியமும் சாதனையும் போதனையும் உலக மாந்தர் தனியே உணர்ந்து மகிழ வுரியன.

தான் அல்லல் அடைய நேர்ந்தாலும் தன் இல்லாள் நல்ல சுகத்தில் இருக்கவேண்டும் என இவன் உள்ளம் கருதி உரிமை கூர்ந்துள்ளான். மனைவியை வைத்து வாழும் முறைமையும் திறமையும் இனிமை சுரந்து இக்குல மகன்பால் தனி அமைந்திருக்கின்றன.

மனிதன் அவல நிலையை அடைந்த பொழுது கவலைகளை மொழிந்து தனது மனைவியையும் கதிகலங்கச் செய்வன். இவ்வீரமகன் அவ்வாறு யாதும் கூறுமல் ஆர்வமொடு தழுவி ஈர மொழிகளை இயம்பித் தீரமிகச் செய்து தேறுதல் புரிந்துள்ளான்.

கொண்டாளை அன்புரிமையுடன் கொண்டாடிப் பேணும் பண்புடைமையில் இவ்வாண்டகையாண்டும் நீண்டு திகழ்கின்றான்.

தனக்கு நேர்ந்த இடையூறுகளை அறிந்து உரியவள் மறுகா வண்ணம் அவற்றைப் புனைந்து வனைந்து கூறியிருக்கும் இவனுடைய விநயமும் வித்தகமும் எவரும் நினைந்து வியந்து கொள்ளத் தக்கன.

தந்தை தாயர் தம்பியர் மனைவி என்னும் இவர்களிடம் உரிமை பாராட்டி இவன் ஒழுகி வந்துள்ள விழுமிய முறைகள் மனிதர்க்கு எழுமையும் துணையாய் இதம் புரிந்திருக்கின்றன.

இங்ஙனம் இனிது கூறவே சீதை யாது செய்தாள்?

நாயகன் வனம் நண்ணல்உற் றுன்என் றும்
மேய மண்இழந் தான்என் றும் விம்மலள்
நீ வருந்தலை நீங்குவென் யான்என் ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள். (நகர், 222)

சீதையின் மன நிலைமையை இங்கே தெளிவாக அறிகின்றோம். அந்த இதயம் உழுவலன்பினில் உதயமாயுள்ளது.

தனது அருமை நாயகன் அரசு இழந்ததையும், அடவிபோக நேர்ந்ததையும் குறித்து யாதும் வருந்தவில்லை; "நீ கவலையுறுமல் இரு; நான் விரைவில் வந்து விடுவேன்" என்று தனக்கு ஆறுத

லாகத் தேறுதல் கூறிய அச் சொல்லை நினைந்தே அல்லலடைந்து உள்ளம் கலங்கி உயிர் துடித்திருக்கிறாள்.

"நீ வருந்தலை நீங்குவென் யான் என்ற, தீய வெஞ்சொல்"

இதில் அந்தச் சொல்லைச் சுட்டியிருக்கும் எல்லையை நோக்குக. தூய நாயகன் வாயிலிருந்து வந்தது தீய வெஞ்சொல் என நின்றது.

தன் உள்ளத்தைச் சுட்டு எரித்து உயிரை மாயச் செய்யும் துயரமுடைமையால் அச்சொல்லை இங்ஙனம் சுட்டித் துடித்தாள்.

செவி சுடத் தேம்புவாள் என்றதனால் அச்சொல்லால் அவள் அடைந்துள்ள துயரத் துடிப்புகள் அறியலாகும்.

பிரிவு என்னும் சொல்லைக் கேட்டவுடனே எரியிடைப்பட்ட புழுவைப் போல் பதைத்துப் பரிதபித்திருத்தலால் தன் காதலன் பால் இவள் கொண்டுள்ள ஆருயிர்க் கேண்மை நேரே தெரிய நின்றது.

இராமன் மணிமுடி துறந்தான் என்றதைக் கேட்டவுடனே நாடு முழுவதும் நைந்து துடித்தன. சீதை அதைக் குறித்து யாதும் கவலையில்லை. இது வியப்பாகின்றது. இதனால் அவளது உள்ளத்தின் பரிபக்குவ நிலையும் வெளியே தெளிவாகின்றது.

அரசு நேர்ந்த போதும் பேர்ந்த காலத்தும் அவன் நிலைதிரியாது நின்றதுபோல் இவளும் குலைதுடியாமல் நின்றுள்ளாள்.

உத்தமனுக்கு வாய்த்த உத்தமியின் சித்த நிலை உலக நிலையைக் கடந்து தத்துவ நிலையில் ஒத்து மிளிர்கின்றது.

அரசு திரு எய்தியதால் புதிய ஒரு பெருமையும் மரியாதையும் தனது நாயகனுக்கு அதிகமாக வரும் என அவள் மதிக்கவில்லை. எல்லா அருமைகளுக்கும் பெருமைகளுக்கும் அவன் ஒருவனே நிலைக்களம் என்று கருதியிருக்கிறாள்.

மண் இழந்தான்; வனம் நண்ணல் உற்றான்; என்றதற்கு யாதும் விம்மலள். ஏன்? விம்மி அழவேண்டிய இந்த இடத்தில் விம்மாமல் இருந்ததற்குக் காரணம் என்னை? எதை இழந்தாலும் எங்குப் போனாலும் அவனைப் பிரியாமல் மருவியிருக்கும் பேறு தனக்கு என்றும் உரிமையாயுள்ளது என்பதை உறுதியாய் எண்

ணியிருத்தலால் நண்ணிய அவல நிலையில் இப் புண்ணியவதிக்குக் கவலை தோன்ற வில்லை

அவன் அருகு இருப்பது ஒன்றே அரிய பேரின்பமாகக் கருதி யுள்ளமையால் வேறு வரவு செலவுகள் அவள் நினைவில் ஏறாமல் விலகி நின்றன.

உழுவலன்புடன் இங்ஙனம் உருகியுள்ளவள் பிரிவுநிலை தெரியவே மறுகலாயினள். தேம்புதல்—நிலை குலைந்து வருந்துதல்.

கனவிலும் கருதாதது கணவன் வாயிலிருந்து வரவே உயிர் அலமர நேர்ந்தது. வெள்ளிடி விழுந்தது போல் உள்ளம் துடித்துள்ளது.

பிரிவு என்ற உரையைக் கேட்டவுடனே இப்படிப் பதைத்திருக்கின்றாளே! என்னே இது? என நாம் எண்ணி வியக்கின்றோம். கவி இங்கே நமக்கு ஒரு சமாதானம் கூறுகின்றார்.

துறந்து போம்எனச் சொற்றசொல் தேறுமோ?
உறைந்த பாற்கடற் சேக்கை யுடன் ஒரீஇ
அறம் திறம்பும்என்று ஐயன் அயோத்தியில்
பிறந்த பின்பும் பிரிவிலள் ஆயினள். (நகர் நீங்கு, 223)

இதனை நினைந்து சிந்தியுங்கள். உரைகளில் உள்ள உணர்ச்சி நலங்கள் உண்மையைத் துலக்கி உள்ளன்பை விளக்கி உவகை விளைத்து ஒளிர்கின்றன.

ஆதிமூலத் தொடர்பை அடிக்கடி இவ்வாறு ஓதி உணர்த்துகின்றார். பண்பும் பயனும் நண்பும் நயனும் பாடல்கள்தோறும் ஆடல் புரிந்து ஆதரவு சுரந்து வருகின்றன.

தருமத்தை நிலை நிறுத்தவே கருமவீரனாய்ப் பரமன் பிறந்துள்ளான். அவனது அருட் சத்தியும் அவனைப் பிரியாமல் மருவி வந்துள்ளது. என்றும் பிரியாத உரிமை யுடையதை இடையே இன்று பிரிக என்றால் அது எப்படிப் பொறுக்கும்? இப்படி ஒரு பரிவுரை சீதைக்கு அரண் கோலி நீதி புரிந்து நிற்கின்றது.

உலகில் அறம் திறம்பாமல் அருள் புரிய வந்த அவன் இடையே தன்னைத் துறந்துபோனால், கருதி வந்த காரியம் கைகூடாது; பிறந்த பலனும் பெறாது போவன்; ஆகவே அங்ஙனம் போகாதபடி உடன் தொடர்ந்துபோக இவள் உளம் துணிந்தாள்.

யாண்டும் பிரிவில்லாத இவள் தன் நாயகன் ஈண்டுப் பிறந்த பேற்றை அடைந்து சிறந்த நிலையில் திகழத் தனியே வஷிந்து தான் பிரிய வேண்டிய இடம் ஒன்று இருத்தலால் இடையே பிரியாமல் பின் தொடர எங்கும் உறுதி பூண்டு நின்றாள்.

பிரியம் மீதூர்ந்து உரிமையோடு இங்ஙனம் உருகி வந்து உவந்து நிற்பவளிடம் பிரிவு கூறவே பரிவு கூர்ந்து மறுக நேர்ந்தாள்.

அன்ன தன்மையள் ஐயனும் அன்னையும்
சொன்ன செய்யத் துணிந்தது தூயதே;
என்னை என்னை இருத்தி என்றுஎனை
உன்ன உன்ன உயிர்உமிழ் ஆநின்றாள். (நகர் நீங்கு, 224.)

கணவன் சொன்ன இன்னல் மொழியை நினைந்து நினைந்து தன்னுள்ளேயே சானகி இன்னவாறு தவித்திருக்கிறாள். தவிப்பின் குறிப்புகளைக் கூர்ந்து நோக்குங்கள்.

"தந்தை தாயர் இட்ட கட்டளைப்படி இம் மைந்தனார் செய்யத் துணிந்தது மாண்புடையதே; இங்ஙனம் மாட்சிமை கனிந்துள்ள இவர் கொண்ட பெண்டாட்டியிடம் உரிய கடமையை மறந்து பெரிய கொடுமையைச் செய்யத் துணிந்தாரே! என்னே இது!" என இன்னலோடு ஏங்கியுள்ளாள்.

உன்ன உன்ன உயிர் உமிழா நின்றாள்

நீ வருந்தாதே; நில்! என்று கணவன் முன்னம் சொன்ன சொல்லை எண்ணுந்தோறும் ஆவி பதைத்து அலமந்து மறுகி ஊசலாடியுள்ளமை உணர வந்தது. பிரிவை நினைக்கும்போதே உள்ளம் குலைந்து உயிர் துடித்துப் படாதபாடு பட்டிருத்தலைக் கவி இப்படிக் காட்டியிருக்கிறார்.

துயரம் மீதூர்ந்த உயிரின் பதைப்பை உரையால் விளக்கி வரும் திறம் வியந்து காண உரியது.

என்னை இருத்தி என்றது என்னே! என அதிசயித்துத் துடித்திருத்தலால் இந்த வார்த்தையின் புதுமையும் கொடுமையும் புலனாய் நின்றன.

மறுகி மயங்கி இங்ஙனம் உருகி உளைகின்ற நிலையை நோக்கிப் பரிவு மண்டித் தான் கருதி மொழிந்ததை இராமன் தெரிய உணர்த்தினான். சொல் எல்லாம் உள்ளம் ஓர்ந்து வருகின்றன.

வல்லரக்கரின் மால்வரை போய்விழுந்து
அல்லரக்கின் உருக்கழல் காட்டயல்
கல்லரக்கும் கடுமைய வல்லநின்
சில்லரக்குண்ட சேவடிப் போது என்றான். (நகர் நீங்கு, 225)

"கரிய பெரிய மலைகளுடைய கொடிய காட்டில் கல்லும் முள்ளும் நிறைந்து கிடக்கும்; அந்தக் கொடிய பரல் கற்களில் உனது மெல்லிய பாதங்கள் நடந்து செல்ல முடியா. மிருது மேனியளாய்ச் சுக போகங்களில் திளைத்துள்ள நீ வனத்தில் வசிக்க வருதலை நினைந்தாலும் என் நெஞ்சம் வருந்துகின்றது. அங்கு வரவே வேண்டாம்; உன் மாமிமார்களுக்கு ஆறுதலாக இங்கேயே இரு. நான் விரைவில் வந்துவிடுவேன்" என்று மனைவியிடம் இனிது மொழிந்தான்.

பாதங்களைக் குறித்துச் சொல்லும்போது சேவடிப்போது என ஆவலோடு பேசியிருக்கிறான். பேச்சில் அன்பும் ஆதரவும் சுரந்திருக்கின்றன. அரக்கு = சிவந்த நிறமுடையது.

செந்தாமரை மலர்போன்ற மெல்லிய அடிகள் கல்லுகளில் நடக்க வல்லன அல்ல என்று சொல்லியுள்ளமையால் நாயகிபால் இவன் கொண்டுள்ள உள்ளன்பும், ஆர்வமுடன் அவளைப் பாது காத்துவரும் பண்பும் நன்கு புலனாகின்றன.

வனவாசம் மிகவும் கடுமையுடையது; தனியாகவே சென்று அதனைக் கழித்துவரவேண்டும்; இனிய மனைவியை ஆண்டு அழைத்துச் செல்லலாகாது என உள்ளம் கருதியுள்ளமை உரையால் உணரவந்தது.

தான் துன்புற நேரினும் தன் துணைவி எவ்வழியும் இன்புற்றிருக்கவேண்டும் என்று இவன் அன்புற்றிருக்கின்றான்.

காட்டின் கொடுமையைச் சுட்டிக் காட்டி வீட்டில் இருக்கும்படி இவ்வாறு வேண்டியருளினான்.

இதற்குச் சீதை சொன்ன பதில் என்ன?

பரிவிகந்த மனத்தொடு பற்றிலாது
ஒருவுகின்றனை! ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது? ஈண்டுநின்
பிரிவினும் சுடுமோ பெருங்காடு என்றாள். (நகர் நீங்கு, 226.)

பிரிய நேர்ந்துள்ள கணவனை நோக்கிச் சனகி இங்ஙனம் மறுகி மொழிந்துள்ளாள். "எம்பெருமானே! என்பால் அன்பும் பற்றும் யாதும் இல்லாமல் அயல் ஒதுக்கிப் போகத் துணிந்துள்ளாய்! காட்டு வாசம் எனக்குக் கடுமையாம் என்று கருதுகின்றாய்! ஊழிக் காலத்துச் சூரிய வெப்பமும் உன் பிரிவைக் காட்டிலும் என்னைச் சுட்டு வருத்துமோ? இதனை எண்ணி அருள்க; புண்ணியமூர்த்தியே" என்று கண்ணீர் சொரிந்து நின்றாள்.

பிரிவுத் துயரைத் தெளிவுறுத்தற்கு ஊழி அருக்கனை அளவு செய்து காட்டினாள். யுகாந்த காலத்தில் எல்லாவற்றையும் ஒருங்கே விரைந்து எரித்து ஒழிக்கும் நெருப்புக் கோளத்தினும் உரியவன் பிரிவு கொடியதாம் என உருகியிருக்கிறாள்.

அந்த ஆதவன் எரிவு உருவுற உடனே தகித்து அழிக்கும்; இந்தக் காதலன் பிரிவு பரிதாபமாய் நாளும் பதைக்கப் பதைக்க உயிரை வருத்தும் ஆதலால் அதனினும் இது கொடியதாயது.

கொடிய தீயினும் பிரிவு நெடிய தீ என நினைந்து நடுங்கினாள்.

உழுவலன்புடன் உள்ளம் கலந்த உயர்ந்த காதலி ஆதலால் உடையவன் பிரிவில் இங்ஙனம் மறுகித் துடித்தாள்.

உயிரும் உடலும் போல் மருவியுள்ளமையால் காதலன் பிரிவு காதலிக்குச் சாதல் என நேர்ந்தது.

செல்லாமை உண்டேல் எனக்குரை; மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. (குறள், 1151)

"பிரிந்து போகேன் என்றால் அதனை என்னிடம் சொல்லுங்கள்; இல்லை, விரைவில் வந்து விடுவேன் என ஆறுதல் கூறத் துணிந்தால், தாங்கள் வரும்பொழுது இங்கே உயிர் வைத்திருப்பவரிடம் உரையுங்கள்" எனப் பிரிய நேர்ந்த தலைவனிடம் ஒரு தலைவி தனது நிலைமையை இங்ஙனம் உரைத்திருக்கிறாள்.

பிரிந்த உடனே இறந்து படுவேன் என்பது குறிப்பு.

சிறந்த காதலிகளுடைய விநய வாசகங்கள் அறிவு நலம் சுரந்து உணருந்தோறும் உவகை கனிந்து வருகின்றன

காதலின் நுணுகிய நிலைகளும் இனிய சுவைகளும் உணர்வு வகைகளும் தமிழ் மொழியில் தனி மகிமையாய்த் தழைத்திருக்கின்றன. அன்புரிமைகள் இன்ப நலம் புரிகின்றன.

உரிய கணவன் ஏதேனும் காரியம் கருதி வெளியே பிரிய நேரும்பொழுது இனிய மனைவி அவனைப் பிரிந்து தனி இருக்க மாட்டாமல் தவித்து மறுகுவள்; அந்நிலைமை அகப்பொருளில் பிரிவாற்றுமை என ஒரு துறையாய் உருவாகி யுள்ளது.

தன்னோடு உடன் தொடரத் துணிந்த தலைவியைத் தலைவன் தடுத்து நிறுத்துதல் உடன்போக்கு மறுத்தல்என்னும் துறையாம்.

பனிச்சந் திரனொடு பாய்புனல் சூழும் பரன்புலியூர்
அனிச்சம் திகழும்அஞ் சீறடிஆவ அழல் பழுத்த
கனிச்செந் திரள்அன்ன கற்கடம் போந்து கடக்கும் என்றால்
இனிச்சந்த மேகலை யாட்கென்கொ லாம்புகுந்து எய்துவதே?
(திருக்கோவையார்)

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிமலர்க்குச்
சனித்த நெருஞ்சிப் பழம்என்று அறிந்தும் தகுவர் அன்றி
மனித்தர் வழங்கரும் வெங்கொடும் பாலை வழிஒருநாள்
இனித்த மொழியுடை யாரை எவ்வாறுகொண்டு ஏகுவனே?
(திருவெங்கைக்கோவை)

மலரனைய மெல்லிய அடிகளை யுடைய உன்னைக் கொடிய கல் அடர்ந்த காட்டில் எவ்வாறு கொண்டு செல்லுவேன்? என்று இராமன் மறுகி நின்றபடியைக் கோவைத் துறைகள் இங்ஙனம் மருவி வந்திருக்கின்றன. இவ்வாறு மறுத்த தலைமகனை நோக்கித் தலைவியும் தோழியும் மாறுகூறுவது உடன்படுத்தல் எனவரும்.

மாலையன் போற்றிடு கோடீச்சுர நித்தர் மால்வரைக்கண்
ஆலை அநங்கன் ஒப்பாய்! உன்னுடன் நடந்தால் அனைய
பாலையில் கள்ளியங் காடும்வெங் கானும் படர்தழலும்
சோலையும் தென்றலும் வாவியும் போலும் துடியிடைக்கே,
(கோடீச்சுரக்கோவை)

துணையிற் புணர்களி வண்டினம் பூந்தண் துணர்பொதுளும்
பணையில் துயில்பொழில் வெங்கை புரேசர் பனிவரையாய்!
பிணையிற் பிறழ்கருங் கண்ணாட்கு நின்னைப் பிரிந்தமலர்
அணையிற் கொடியதுவோ? ஐய நீசெல் அழற்சுரமே?
(திருவெங்கைக் கோவை.)

மதுவார் குவளைக்கு நீர்அன்றி இல்லை; மன் ஆருயிர்க்கு
விதுவார் சடைப்பெருமான் அன்றி இல்லை; வினை உடற்குக்
கதுவார் உயிர் அன்றி இல்லை நலம்; நின் கருணைஅன்றி
எதுவாம் மடக்கொடிக்கு? என்றுரை வேலவர்க்கு ஏந்திழையே!
(தணிகைப் புராணம்)

கடிய காடும் காதலனோடு கூடியிருப்பின் இனிய சோலையாம்; பிரிவு கொடிய தீயாம் எனக் காதலி நிலைமை இவை உணர்த்தியுள்ளன காண்க. நீலமலர்க்கு நீர்போல் சானகிக்கு இராமன் என முன்னம் வந்த வாசகத்தைத் தணிகைப் புராண ஆசிரியரும் பூசித்திருக்கிறார்.

நின் பிரிவினும் சுடுமோ பெருங் காடு?

சீதை தனது நாயகனை இப்படி வினவியிருக்கிறாள். கேள்வியில் அவளது உள்ளப் பதைப்பும் உரிமையும் உருக்கமும் ஒளிவிட்டுள்ளன.

“சுவர்க்கமே ஆயினும் உன்னைப் பிரிந்திருக்க நேரின் அது எனக்கு நரகமேயாகும்; கொடிய காடாயிருந்தாலும் உன் அருகிருக்கப் பெறின் எனக்கு அது பரமபதமே; எனது நிலைமையை அறிந்து நெஞ்சம் இரங்கி அருளுக; வேறு தஞ்சம் இல்லை” என்று உழுவலன்பு கனிந்த இனிய மொழிகளைச் சீதை உரிமையுடன் துணிந்து உரைத்தாள்.

இராமன் மாறு கூற முடியாமல் மறுகி நின்று உருகி உளைந்தான். கண்ணீர் மல்கி அப் புண்ணிய முதல்வன் கரைந்து நின்ற காட்சியும், அதன்பின் நிகழ்ந்த நிலைகளும் பரிதாபங்களாய் விளைந்தன.

இராமன் உருகி நின்றது.

அண்ணல் அன்னசொற் கேட்டனன் அன்றியும்
உண்ணி வந்த கருத்தும் உணர்ந்தனன்
கண்ணின் நீர்க்கடல் கைவிட நேர்கிலன்
எண்ணு கின்றனன் என்செயற் பாற்றெனா. (1)

சீதை சீரம் புனைந்தது.

அனைய வேலை அகன்மனை எய்தினள்
புனையும் சீரம் துணிந்து புனைந்தனள்
நினையும் வள்ளல்பின் வந்தயல் நின்றனள்
பனையின் நீள்கரம் பற்றிய கையினள். (2)

அனைவரும் பதைத்தது.

ஏழை தன்செயல் கண்டவர் யாவரும்
விழு மண்ணிடை வீழ்ந்தனர் ; வீந்திலர் ;
வாழு நாளுள என்றபின் மாள்வரோ ?
ஊழி பேரினும் உய்குநர் உய்வரே. (3)

தாயர் தவ்வையர் தன்துணைச் சேடியர்
ஆயம் மன்னிய அன்பினர் என்றிவர்
தீயின் மூழ்கினர் ஒத்தனர் ; செங்கணன்
தூய தையலை நோக்கினன் சொல்லுவான். (4)

சனகியை நோக்கிச் சொன்னது.

முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்
வெல்லும் வெண்ணகை யாய்விளை வுன்னுவாய்
அல்லல் பாத அமைந்தனை ஆதலின்
எல்லை அற்ற இடர்தரு வாய்என்றான், (5)

கொற்றவன் அது கூறலும் கோகிலம்
செற்ற தன்ன குதலையள் சீறுவாள்
உற்று நின்ற துயரம் இது ஒன்றுமே
எற்றுறந்தபின் இன்பம்கொலாம் ? என்றாள். (6)

பிறிதொர் மாற்றம் பெருந்தகை பேசலன்
மறுகி வீழ்ந்தெழும் மைந்தரும் மாதரும்
செறுவில் வீழ்ந்த நெடுந்தெருச் சென்றனன்.
நெறிபெறுமை அரிதினின் நீங்குவான். (7)

சீரை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை இளையவன் முன்செலக்
காரை ஒத்தவன் போம்படி கண்டஅவ்
ஊரை உற்றது உரைக்கவும் ஒண்ணுமோ ? (8)

(நகர் நீங்கு 227-234)

இந்தப் பாசுரங்களை ஆழ்ந்து பாருங்கள். நேர்ந்த நிகழ்ச்சிகள் யாவும் நேரே தெரிகின்றன. பரிபவக் காட்சிகள் உள்ளங்களையும் உயிர்களையும் உருக்கி உயர் துயர் பெருக்கி வருகின்றன.

சீதை பிரிவாற்றாது உடன் வருவதாக உளந் துணிந்ததை அறிந்ததும் இராமன் யாதும் பதில்கூறாமல் கண்ணீரை அடக்கிக் கொண்டு கவலை மீதூர்ந்து கரைந்து நின்றான்.

கண்ணின் நீர்க்கடல் கைவிட நேர்கிலன்.

என்றமையால் அதுபொழுது அவன் எண்ணி நின்ற பரிபவ நிலைகள் இனிது புலனுகின்றன.

''தோழியர் பலர் ஊழியம் புரிய அரசிளங் குமரியாய் அரண் மனையில் அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இனிது வாழ உரிய தனது அருமை மனைவி தன்னுடன் அடவிக்கு வருகின்றுளே! அந்தக் கொடிய கானகத்தில் சுகதேகியான இவள் எவ்வாறு வாழமுடியும்? ஞானசீலனை சனக மன்னனுடைய அருமைத் திருமகள்; என்னுல் வறுமைக் கோலம் பூண்டு பெருமை குலைந்து சிறுமை அடைய நேர்ந்தாளே!'' என்று இன்னவாறு பல பல நினைந்து இன்னல் மீதூர்ந்தமையால் கண்ணீர் வர நேர்ந்தது.

அவ்விழிநீரை வெளியே புலப்படாமல் அடக்கியிருக்கிறுன்.

உடன் தொடர்ந்த அருமைத் தம்பியின் நிலைமையை நினைந்து முன்னம் அழுதான்; இங்கே உரிமைமனைவிக்கு உள்ளம் உருகி விழிநீர் மல்கி அளிபுரிந்து நின்றுன்.

அருந்திறலுடைய பெரும் போர் வீரன்; தம்பியின்பாலும் மனைவியினிடமும் அன்பு கனிந்து ஆர்வம் நிறைந்துள்ளான்.

வீரத்தில் தலைசிறந்து நிற்றல்போல் காதலும் சகோதர வாஞ்சையும் இவனிடம் மேதகவமைந்து நிற்கின்றன.

எவ்வழியிலும் எத்துறையிலும் எப்பண்பிலும் உத்தம புருடனுய் ஒளி வீசி மிளிர்கின்றுன். அன்பும் ஆதரவும் அடக்கமும் ஆண்மையும் பெருந்தகைமையும் இடங்கள்தோறும் எங்கும் இவன்பால் பெருகி யிருக்கின்றன.

இராமன் இவ்வாறு மறுகி நிற்குங்கால் சீதை உள்ளேபோய் இளவரசிக்கு உரியதாய் அமைந்திருந்த உயர்ந்த கோலங்களை எல்லாம் நீக்கிச் சின்னச் சேலையை உடுத்திக்கொண்டு தன் நாயகன் பின்னே வந்து கானகம் போகும் குறிப்பில் உவந்து நின்றுள்.

புனையும் சீரம் துணிந்து புனைந்தனள்;

நினையும் வள்ளல்பின் வந்தயல் நின்றனள்.

சனகி சீரை சுற்றித் தனது கணவன் அயலே வந்து நின்றுள்ள இந்தப் பரிபவக் காட்சி நமது உள்ளங்களை உருகச் செய்கின்றது.

மரவுரி தரித்துத் துறவுக் கோலம் பூண்டு இராமன் என்ன நிலையில் அமைந்துள்ளானே அன்ன நிலையையே பன்னியும் பன்னி நின்றாள்.

"துணிந்து புனைந்தனள்" என்றது யாரும் நினைந்துகொள்ள முடியாத நிலைமையில் காரியம் நிகழ்ந்துள்ளமையை வியந்து. அரசிளங் குமரியாய்ப் பெருமித நிலையில் மருவியுள்ள தனக்கு ஒரு சிறிதும் இயைபில்லாத கந்தையைப் புனைந்து வந்தது அவளது சிந்தையின் உறுதியை வெளிப்படுத்தி விந்தையாய் விளங்கியது.

உரிய நாயகன் அரசு முடி துறந்து துறவி ஆனமையால் தானும் அவ் வரிசையில் அமைந்து விரசி நின்றாள்.

தான் ஒரு தத்துவ ஞானியின் மகள்; உத்தம வீரன் மனைவி என்பதை உய்த்துணர விளக்கி இத்திறம் துணிந்து மெய்த்தவம் அணிந்து கானகம் போகக் கடுகி எழுந்தாள்.

வாழ்வோ, தாழ்வோ, இன்பமோ, துன்பமோ எவ் வகையிலும் நாயகன் எவ் வழியோ அவ் வழியே உத்தம நாயகி உரிமையுடன் மருவிப் பிரிவின்றி ஒழுகுவாள் என்பது இக் குலமகள் ஒழுக்கத்தால் உலகறிய வந்தது.

"வனம் வருவேன் என்று சும்மா வாயளவில் சொல்லிக் கொண்டிருந்தால் எம் பெருமான் மனம் இசையார். செய்கையில் அமைந்துவிடின், அப்பால் அயல் ஒதுக்கார்; அருள்புரிந்து கொள்வார்" என்று இங்ஙனம் தவவேடம் பூண்டு அவனோடு பின் தொடர மூண்டாள்.

பேரெழிலுடைய அரசகுமரி இவ்வாறு துறவுக் கோலம் கொண்டதைக் கண்டதும் அந்தப்புரத்தில் நின்ற தாய்மார் முதலிய அனைவரும் குலை துடித்துத் தலையில் அடித்துத் தரையில் விழுந்து அலறி அழுதார்.

"வாழுநாள் உள என்றபின் மாள்வரோ ?
ஊழி பேரினும் உய்குநர் உய்வரே "

சீதையின் பரிதாபக் காட்சியைப் பார்த்தவர் யாவரும் உயிர் பதைத்துக் கரணங்கள் திரிந்து மரண வேதனையை அடைந்தார்; அடியோடு இறந்து போகவில்லை என்ற ஒன்றைத் தவிர எல்லாத் துயரங்களையும் மருவி உருகினர் என்பதை இவ்வாறு உணர்த்தியிருக்கிறார்.

அழகிய அரசி இந்தப் பரதேசிக் கோலம் பூண்டதைக் கண்டும் உயிர் வைத்திருக்கின்றோமே! உடனே சாக முடியவில்லையே! பாழும் விதி வாழ்நாளை நீள எழுதியுள்ளதே! என்று நெஞ்சு துடித்திருக்கின்றனர்.

"தீயில் மூழ்கினர் ஒத்தனர்" என்றமையால் அவரது துயர நிலையின் அளவு புலனும்.

இக் குலமகள் பால் உலக மக்கள் கொண்டிருக்கும் உள்ளன்பும் பாசமும் இதனால் உணர வந்தன.

இராமன் மறுகி மொழிந்தது.

கானகம் வரத்துணிந்து எளிய கோலத்துடன் தனது அருகு வந்து நிற்கும் மனைவியை இராமன் மறுகி நோக்கினன். உற்றுள்ள நிலையை நினைந்து உள்ளம் உருகினன். பெருகிய துயருடன் சில சொல்ல நேர்ந்தான்.

"சானகி! நான் உரைத்ததை ஒரு சிறிதும் நீ உணர்ந்து கொள்ளவில்லை; இது எனது வினையின் விளைவு என்றே எண்ணுகின்றேன். என்பாலுள்ள பேரன்பால் என்னைப் பிரிந்திருக்க மாட்டாமல் வருந்துகின்றாய்! உனது உள்ளப் பண்பும் உழுவலன்பும் கெழுதகைமையும் நான் நன்கு அறிவேன்; என் இன்னுயிரினும் இனியளான உன்னை ஈண்டு இரு என்றது உன்னுடைய மென்மையையும் நன்மையையும் உத்தேசித்தேயாம். தீய விலங்குகளும் மாய வேடரும் மருவியுள்ள பொல்லாத காட்டில் மெல்லியளான உன்னை நான் எப்படி அழைத்துப் போவேன்? அதிசுகியான உனக்குக் கொடிய வனவாழ்க்கை ஒரு கணமும் ஒவ்வாதே; அரண்மனையில் உன் மாமிமாரோடு ஆறியிரு; பெற்றோர் இட்ட கட்டளையை முடித்து விரைவில் வந்துவிடுவேன்" என உள்ளங்கனிய உரிமையுடன் இதமாய் இனிது மொழிந்தான்.

## சீதை பதில் உரைத்தது.

இங்ஙனம் மொழியவே சீதை பெருந்துயர் அடைந்தாள். "உங்களைப் பிரிந்தால் உடனே இறந்துபடுவேன்; பிரிவாற்றி என்னால் ஒருவாற்றானும் இருக்க முடியாது. நீர் பிரிந்தபோதே நீர் பிரிந்த மீன் போல் என் ஆருயிர் பிரிந்துபோம். பேரருள்புரிந்து என்னை உடன் கொண்டுபோங்கள்; உங்கள் அருகு இருப்பதால் காட்டு வாழ்க்கை எனக்குப் பேரின்பமாகும். அங்கே உல்லாசமாயிருப்பேன்; வனவாசத்தில் யாதொரு கவலையும் தோன்றாவண்ணம் அருகிருந்து உங்களுக்கு நான் பணிபுரியும் படியான பெருமையை உரிமையோடு அளித்தருளுங்கள்; மாறு வேறு கூறாமல் உடனே புறப்படுங்கள்; போவோம்" என்று விரைந்து நின்றாள்.

அந்நிலைமையை நினைந்து இராமன் வருந்தி உளைந்தான். இறுதியில் கொஞ்சம் நெஞ்சம் கனன்று மொழிந்தான்.

"முல்லை யும்கடல் முத்தும் எதிர்ப்பினும்
வெல்லும் வெண் நகையாய்!"

இங்கே இப்படிச் சொல்லி விளிக்கலாமா? பேசும் போது விளங்கிய பல் அழகில் ஈடுபட்டு மனைவியைப் பார்த்து இங்ஙனம் சொல்ல நேர்ந்தான் போலும்!.

முல்லை அரும்பையும்; முத்தையும் வெல்லும் பல் என்றது அதன் நன்மணத்தையும் வெண்மை நிறத்தையும் எண்ணிவந்தது.

பல்லின் வெற்றியைச் சொல்லியது "நான் சொல்லுவதைக் கேளாமல் மேலும் மேலும் பல்லைக் காட்டுகின்றாயே!" என்று பரிந்து கூறியபடியாயது.

பல்லின் வெண்மைபோல் உன் உள்ளமும் வெள்ளையாயுள்ளதே; நான் சொல்லுகின்றதை உணரவில்லையே! என்ற குறிப்பும் தொனித்திருக்கிறது. காட்டு முல்லையும் கடல் முத்தும் இழிந்துபட நின்ற உயர்ந்த பல்லை அவை காணவேண்டும் என்று கருதியதுபோல் பிரயாணம் உறுதியாயது.

விளைவு உன்னுவாய் அல்லை; போத அமைந்தனை

எவ்வளவு மன வேதனையோடு இந்த வார்த்தை வந்திருக்கின்றது. "விளைவு" என்றது இங்கே பரம ரகசியமாய் உள

வறிய வந்தது, விதியின் விளைவாய் விளைந்திருக்கிறது. என்ன விளைவுகளை உன்னவில்லை? யாதும் வெளிப்படையாகச் சொல்லாமல் கூடமாகக் குறித்திருக்கிருன்.

என்னுடன் வனத்துக்கு வருவதால் விளைகின்ற கொடிய கேடுகளை நீ சிறிதும் உணரவில்லை; உணர்ந்தால் வர அஞ்சுவாய்; உணராமையால் துள்ளிக் குதித்துத் துடுக்காடி நிற்கின்ருய்! என்று எள்ளி மொழிந்தான்.

போத=செல்ல. அல்லல் பல விளைவதை அறியாமல் உடன் செல்ல அமைந்தது தொல்லை வினைப் பயனேயாம் என்று சொல்லி வருந்தினன்.

மனைவியை உடன்கொண்டு சென்ருல் அளவிடலரிய துயரங்கள் அடவியில் விளையும் என இராமன் கருதி யிருக்கிருன். பின்னை நிகழ்வன எல்லாம் அப் புனிதவாக்கில் முன்னுற இவ் வண்ணம் மூண்டு வந்தன.

உத்தம உள்ளத்தில் உண்மை நிகழ்ச்சி ஒளிவீச நேர்ந்தது.

இன்ன விளைவு என்று மனித இயல்பின்படி தெளிவாகத் தெரியாது போயினும் மதியூகத்தால் பல ஏதுக்களைக் கொண்டு யூகிக்க நேர்ந்தான்

சொல்லியும் கேளாமல் பிடிவாதமாய்த் தொடருகின்ருள் ஆதலால் இங்ஙனம் இடர்களைக் குறித்துக் காட்டித் தடைகளை விரித்தான்.

எல்லை அற்ற இடர் தருவாய்!

என இறுதியில் சொல்லியது உடன் வருவதை உறுதியாகத் தடை செய்ய வந்தது. "நீ என்னோடு வனத்துக்கு வரின் எல்லையில்லாத கொடிய துன்பங்கள் எனக்கு உளவாம். அந்தத் துயரங்களை விளைக்கவேண்டும் என்று உனக்கு விருப்பமா?" என்று வெறுப்போடு விளம்பினன்.

இல்லாள் உடன்வரின் எல்லையில்லாத அல்லல்கள் வரும் என எண்ணியது சொல்ல முடியாத மருமமாய்ச் சூழ்ந்திருக்கிறது.

தருவாய் என்னும் வினைச் சொல்லைப் பெயர்ச் சொல்லாக மாற்றின் அசோக வனத்தில் அடையப்போகும் துயர நிலைகளைச் சுட்டிய படியாய்த் தொனித்திருக்கின்றது.

எல்லையற்ற இடர் தருவாய் உனக்கு உளதாம் என வருவூரை உணர்த்தித் தன்னுடன் வருவதைத் தடுத்தபடியாம்.

எதிர்கால விளைவுகளை எண்ணுமேல் தெய்வ நியதியாய் மேலே விளைவன வாக்கில் வெளியாகி யுள்ளன.

மனித சஞ்சாரம்இல்லாத கொடிய அடவிக்கு அழகிய இளவரசியை அழைத்துப் போவது மரியாதை அன்று; அதனால் அவமானங்கள் பல உளவாம்;என எவரும் இயல்பாக எண்ண நேர்வர். அவ்வண்ணமே இவ்வண்ணல் எண்ணிச்சொல்லியிருப்பினும் ஊழ்வினை விளைவுகள் உள்ளே ஆழ் வினைகளாய் அமைந்திருக்கின்றன.

''எனக்கு எல்லையற்ற இடர் தரும்படி உடன் வருதல் உனக்கு நல்லதா?'' என இவ்வள்ளல் உறுத்திச் சொல்லவே சீதை மறுத்துப் பேசியது நுனித்து நோக்கத் தக்கது.

''கோகிலம் செற்றதன்ன குதலையள்'' என்றது சனகியின் இனிய மொழி நிலையை நினைவுறுத்தியது. கோகிலம்—குயில்.

அதிமதுரமான வாசகங்களை யுடைய அவள் பதியினிடம் பேசிய விநயமும் வித்தகமும் வெளியறிய வந்தன.

> ''உற்று நின்ற துயரம் இது ஒன்றுமே!
> எற்று நந்தபின் இன்பம் கொலாம்?''

இந்தப் பேச்சைக் கொஞ்சம் கூர்ந்து நோக்குங்கள். பெண்மை மணம் பெரிதும் வீசுகின்றது.

''நான் ஒருத்தி இருப்பதுதான் உங்களுக்குத் துன்பம். ஒழிந்துபோனால் இன்பம் போலும்'' என்று உரைத்து நின்றாள்.

என்னைத் துறந்தபின்பு நீங்கள் பேரின்பம் பெற்று வாழ்வது எனின் நான் உயிர் வாழ்ந்து இருந்து ஊனம் புரிவது ஈனம்தான் என மனம் நொந்து கூறினாள்.

பிரிய முடியாமல் பிரியம் மீதூர்ந்து மறுகி நின்றவள் இங்ஙனம் கடுமையாகப் பேசியது அவளது மன வுறுதியையும் இன்புரிமையையும் வெளிப்படுத்தி நின்றது.

பெண்மைத் தன்மை பெருகியுள்ள இப் பேச்சில் உண்மைக் காதலும் பிடிவாதமும் ஊடுருவி யிருக்கின்றன.

## இராமன் கானகம் போனது.

அருமை மனைவி இவ்வாறு கூறவே இராமன் மாறு வேறு பேசாமல் வனம் போக நேர்ந்தான். வீதியில் நடந்து செல்லவே ஊர் எல்லாம் கொதித்து உருகித் துடித்தன. சிவிகை யூர்ந்து மதகரி ஏறிக் குவிகை வேந்தர் குழாம் தொழக் கவிகை நீழலில் செல்ல வுரிய செல்ல மகன் கால் நடையாய்க் கானகம் நோக்கி எழுந்ததைக் கண்டு வானகமும் வருந்தி ஊனகம் கரைந்தது.

"சீரை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை இளையவன் முன் செல"

என்றமையால் முன்னும் பின்னும் சென்றவர் நிலைமை தெரிய வந்தது. திருமகள் பின் வர ஒரு மகன் ஏகினன்.

இராமன் முன்னும் சீதை பின்னும் இலக்குவன் இறுதியிலும் மருவிச் சென்றனர். தெரு முழுவதும் மறுகி மயங்கின.

தம்பியும் மனைவியும் தன்னைத் தொடர்ந்து வர இந் நம்பி அன்று நடந்துசென்ற காட்சி பரிதாப நிலையில் பெருகிஎழுந்தது.

காரை ஒத்தவன் போம்படி கண்ட அவ்
ஊரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ?

உரிமையாளரோடு இராமன் வனம் போதலைக் கண்டபொழுது அயோத்தி மக்கள் அடைந்த துயரங்கள் உரையிட லரியன. யாராலும் சொல்ல முடியாத அல்லல்களை யுடையராய் யாவரும் அலமந்து தவித்தனர். தேசம் முழுவதும் அவலஓசைகள் பரவி ஓடின. கவலைகளே எங்கணும் கவித்து நின்றன.

"இன்னுயிர் இழந்த யாக்கை என்னத்
துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்ததும்
பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்
அரசே தஞ்சமென்று அருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும் பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்"

(சிலப்பதிகாரம், 13)

கோவலனை இழந்து வருந்திய காவிரிப்பூம்பட்டினத்துக்கு இராமனைப் பிரிந்த அயோத்தியை இளங்கோவடிகள் இங்ஙனம் உவமை காட்டி யிருக்கிறார். அருந் திறல் என்றது அரிய திறலு

டைய இராமனை. யாராலும் வெல்ல முடியாத அரிய பெரிய போர் வீரன் என்பதைப் பேரால் சுட்டி நீர்மையைத் துலக்கி யருளினர். பெருமகன் = தசரதன். தஞ்சம் = எளிமை.

இராமனது குண நலங்களை விளக்கி அவன் வனம் போன போது உலகம் பட்ட பாட்டை இப்படி உணர்த்தி யுள்ளார். பெரிய பிரிவுத்துயர்கட்கு எல்லாம் இப்பெருமான் பிரிவு அரிய எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.

## தேரில் சென்றது.

நாடு முழுவதும் நைந்து துடிக்க இராமன் இவ்வாறு காடு போகவே ஊரிலுள்ள யாவரும் ஒருங்கே பின் தொடர்ந்தார். அனைவரையும் நின்றருளும்படி நன்றி கூறி வேண்டினன். யாரும் நிற்கவில்லை. "நாங்களும் உடன் வந்து உங்களோடு வனவாசம் செய்வோம்" என உறுதி கொண்டு மாந்தர் எல்லாரும் யாண்டும் தொடர்ந்து அடர்ந்து வரவே இராமன் மறுகினன். இனி நடந்து போக முடியாது என்று தெரிந்து சுமந்திரனை நோக்கி இரதத்தைக் கொண்டு வரும்படி குறித்தான். அவன் கொண்டுவந்தான். மூவரும் ஏறினர். தேர் விரைந்து சென்றது.

"தன்னது ஆருயிர்த் தம்பியும், தாமரைப்
பொன்னும், தானும் ஓர் தேர்மிசைப் போயினன்"

என்றமையால் இம் மானவீரன் அன்று வனம் போன நிலைமை காணலாகும். சனங்களும் தொடர்ந்து வந்தனர்.

## இரவு தங்கியது.

தென்திசை நோக்கி இரண்டு காத வழி இரதம் வந்தது. பொழுது அடைந்தது. அடையவே ஆங்கு ஓர் குளிர்பூஞ்சோலையில் தங்கினர். மந்திரி மறுகி அயலிருக்கத் தம்பியும் மனைவியும் அருகுற இந்நம்பி உவந்திருந்தான்.

உடன் தொடர்ந்த மாந்தர் எல்லாரும் அயலிடம் எங்கணும் புடைசூழ்ந்து வளைந்து இடை வெளியின்றி அடர்ந்து இக் கோமகனை நினைந்து பெருந் துயருடன் வருந்தி யுறைந்தார்.

வட்டம் ஓர் ஓசனை வளைவிற்றாய் நடு
எட்டனை இடவும் ஓர் இடமிலா வகைப்
புட்டகு சோலையின் புறத்துப் போர்த்தென
விட்டது குரிசிலை விடாத சேனையே. (1)

குயின்றிய குலமணி நதியின் கூலத்தில்
பயின்றுயர் வாலுகப் பரப்பில் பைம்புலில்
வயின்தொறும் வைகினர் ஒன்றும் வாய்மடுத்து
அயின்றிலர் ; துயின்றிலர் ; அழுது விம்மினர். (2)
(தைலமாட்டுபடலம்)

இளவரசு தங்கிய இடத்தைச் சூழ்ந்து சனங்கள் அன்று இரவு அடைந்திருந்த துயர நிலைகளை இதனால் அறிந்துகொள்ளலாம். துக்கக் காட்சிகள் பக்கம் எங்கும் படர்ந்திருக்கின்றன.

## மந்திரியிடம் மொழிந்தது.

மாந்தர் யாவரும் இங்ஙனம் மறுகி யிருக்கவே ஏந்தல் இரங்கி நோக்கினன். "இவரை விட்டு எப்படித் தப்பிப் போவது"? என்று எண்ணி உளைந்தான்.

நடுநிசியில் சுமந்திரனை மெல்ல அழைத்தான். எங்களை இங்கிருந்து வெளியே கடத்தி விடவேண்டியது நும் பொறுப்பு. உமது மதியூகத்தை அதிசாதுரியமாக ஈண்டு உபயோகிக்கவேண்டும். தேரைச் சிறிது தூரம் தென்திசை நோக்கி நடத்திப் பின்பு திருவயோத்திக்குக் கொண்டுபோம். அந்தத் தேரின் அடிச்சுவட்டைக் கண்டு நாம் மீண்டு ஊருக்குப்போய்விட்டோம் என்று கருதி எல்லாரும் விரைந்து மீள்வர். இச்சூழ்ச்சியை நீர் தாழ்ச்சியின்றிச் செய்தால் அன்றி நாம் இவரைக் கடந்து போக முடியாது.

"பூண்டபேர் அன்பினுரைப் போக்குவது அரிது ; போக்காது
ஈண்டுநின்று ஏகல் பொல்லாது ; எந்தை நீ இரதம் இன்னே
தூண்டினை மீள நோக்கிச் சுவட்டை ஓர்ந்து என்னை அங்கே
மீண்டனன் என்ன மீள்வர் இதுஇன்னே வேண்டிற்று என்றான்."

ஈண்டு ஓர் வஞ்சனைச் சூழ்ச்சி செய்ய இராமன் மந்திரியை வேண்டியிருக்கிறான். சத்திய சீலனான உத்தமன் இத்திறம் கருதினன். அவனது பெருந்தன்மைக்கு இது பொருந்துமா?

தன்பால் அன்பால் உருகியிருக்கும் மக்களை இதமாகப் பிரிந்து போக விழைந்து காரிய சாதனையில் முனைந்து இப்படி ஒரு உபாயத்தைத் துணிந்து கையாள நேர்ந்தான்.

தாதை பணி செய்யத் துணிந்த தன் கடமைக்கு இடையூறாகத் தொடர்கின்றமையால் அவரை அயல் ஒதுக்கிச் செல்ல இச் செயல் நிகழ்ந்தது

தாயரைத் தேற்றி நிறுத்திவிட்டான்; தம்பியையும் மனைவியையும் தள்ளப் பார்த்தான்; யாதும் முடியவில்லை; எல்லாரையும் தப்பி இருவருடன் ஒருவி வெளியே வந்தான்; ஊரெல்லாம் வளைந்துகொண்டது; பரவியுள்ள இந்தப் பாசத்தளையைக் கடந்து மேலே போகவேண்டும் ஆதலால் இரவில் இந்தக் கரவு செய்யத் துணிந்தான் கருதியதை மந்திரியிடம் குறித்தான்.

இவ்வுரையைக் கேட்டதும் சுமந்திரன் வருந்தினான்.

குடிகளைவிட நான் மட்டும் கொடிய பாவியா? தரும மூர்த்தியான உன்னைக் கொடிய காட்டுக்கு ஓட்டும் பழியை நான் கட்டிக் கொள்ள வேண்டுமா? அப்படியாயின், அந்தப் பாதகி கைகேசியை விட நான் படுபாதகன் அல்லவா? இந்தக் கொடுமையைச் செய்யும்படி எனக்குக் கட்டளை இடலாமா? மந்திரியும் மக்களும் எப்படியும் ஐயனைத் தேற்றிக் கொண்டு வந்து விடுவார் என்று எங்களை வையம் நம்பி யிருக்குமே!

" நாற்றிசை மாந்தரும் நகர மாக்களும்
தேற்றினர் கொணர்வர் உன் சிறுவன் தன்னை என்று
ஆற்றின அரசனை ஐய! வெய்ய என்
கூற்றுறழ் சொல்லினால் கொலைசெய்வேன் கொலோ?"

என்று கண்ணீர் ததும்பக் கரைந்து மொழிந்தான். சுமந்திரனது பரிதாப நிலை இங்கே பெரிதா யுள்ளது. "எனது அருமைத் திருமகன் எங்கே?" என்று சக்கரவர்த்தி ஆவலோடு கேட்பரே! அவர்க்கு யாது பதில் சொல்வேன்? உள்ளதைச் சொன்னால் அவர் உயிர் போய்விடுமே! என் செய்வேன் தெய்வமே! என்று ஏங்கித் தவித்திருக்கிறான்.

இங்ஙனம் அயர்ந்து தவித்த அமைச்சனை இராமன் நயந்து தேற்றினான். மதியூகி யான அவனுக்கு இங்கே ஆறுதலாக அதிமேதையான இவன் உறுதிநலம் கூறியிருப்பது உணர்வு நலம் சுரந்து உரிமை கனிந்துள்ளது.

" அடக்கும் ஐம்பொறியொடு கரணத்து அப்புறம்
கடக்கும் வால் உணர்வினுக்கு அணுகும் காட்சியான்,"

என இராமனது மாட்சியை உணர்த்தியிருக்கும் இவ்வாக்கியம் நுணுகி நோக்க வுரியது. வால் உணர்வு = தத்துவ ஞானம். அரிய தவ ஞானிகளுடைய யோகக் காட்சியில் உலாவும் பொருள் என இவனது பரம நிலையை விளக்கியிருக்கிறார். அவதார மகிமையை அமையம்வாய்த்த போதெல்லாம் அறிவுறுத்தி வருகிறார்.

உலகம் நலமுற இவ்வாறு உதித்திருக்கின்ற இவ்வுத்தமன் மந்திரியை நோக்கிச் சிந்தை தெளியச் சிலமொழிகள் புகன்றான்.

பிறத்தல்என்று உற்றபின் பெறுவ யாவையும்
திறத்துளி உணர்வதோர் செம்மை உள்ளத்தாய்!
புறத்துறு பெரும்பழி பொதுவின்று எய்தலும்
அறத்திறம் மறத்தியோ அவலம் உண்டெனா. (1)

முன்புநின்று இசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின்று உறுதியைப் பயக்கும் பேரறம்
இன்பம்வந்து உறும் எனின், இனியதாய், இடைத்
துன்பம் வந்து உறும் எனில், துறக்க லாகுமோ? (2)

நிறப்பெரும் படைக்கலம் நிறத்தின் நேருற
மறப் பயன் விளைக்குறும் வன்மை அன்றரோ
இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறம்எனல் சூரர் ஆவதே. (3)

கான்புறம் சேறலில் அருமை காண்டலால்
வான்பிறங் கியபுகழ் மன்னர் தொல்குலம்
யான்பிறந்து அறத்தினின்று இழுக்கிற்று என்னவோ
ஊன்துறந்து உயிர்குடித்து உழலும் வேலினாய்! (4)

வினைக்கரு மெய்ம்மையன் வனத்துள் விட்டனன்
மனைக்கரும் புதல்வனை என்றல் மன்னவன்
தனக்கு அருந்தவம்; அது தலைக்கொண்டு ஏகுதல்
எனக்கு அருந்தவம்; இதற்கு இரங்கல் எந்தை நீ. (5)

முந்தினை முனிவனை இறைஞ்சி முற்றும் என்
வந்தனை முதலிய மாற்றம் கூறினை
எந்தையை அவனொடும் எய்தி ஈண்டு என
சிந்தனை உணர்த்துதி என்று செப்புவாய். (6)

முனிவனை எம்பியை முறையில் நின்றரும்
புனித வேதியர்க்கும் மேலுறைபுத் தேளிர்க்கும்
இனியன இழைத்தியென் றியம்பி எற்பிரி
தனிமையும் தீர்த்திஎன் றுரைத்தி தன்மையால். (7)

வெவ்வியது அன்னையால் விளைந்தது ஈண்டொரு
கவ்வை என்று இறையும்தன் கருத்தின் நோக்கலன்
எவ்வருள் என்வயின் வைத்த தின்சொலால்
அவ்வருள் அவன்வயின் அருளு கென்றியால் (8)

வேண்டினன் இவ்வரம் என்று மேலவன்
ஈண்டருள் எம்பிபால் நிறுவி ஏகினை
பூண்டமா தவனெடும் கோயில் புக்கெனது
ஆண்டகை வேந்தனை அவலம் ஆற்றிப்பின். (9)

ஏழிரண் டாண்டு நீத்து ஈண்ட வந்துனைத்
தாழ்குவன் திருவடி தளரல் ஈண்டெனச்
சூழிவெங் கடகளிற் றரசற் சொல்லிப்பின்
வாழிமா தவன் சொலால் மனம் தெருட்டுவாய். (10)

முறைமையால் எற்பயந்து எடுத்த மூவர்க்கும்
குறைவிலா என்னொடு வணக்கம் கூறிப்பின்
இறைமகன் துயர்துடைத்து இருத்தி மாடென்றான்
மறைகளை மறைந்து போய் வனத்துள் வைகுவான். (11)

(தைலமாட்டு படலம், 28-38)

இராம வாசகமாய் வந்துள்ள இந்தப் பாசுரங்களை ஆழ்ந்து படித்துப் பொருள் நலங்களை ஓர்ந்து சிந்திக்கவேண்டும். புனித உள்ளத்திலிருந்து அதிமதுரமான ஆரிய தரும ஊற்றுகள் ஈண்டுப் பொங்கி யிருக்கின்றன. மனித சமூகம் மாந்தி மகிழ என்றும் இவை பரந்து சுரந்து எவ்வழியும் இதம் புரிந்தருள்கின்றன.

1. பிறவியில் சுகமும் துக்கமும் விரவி வரும். பிறந்த உயிர்கள் வினைப்போகங்களை நுகர்ந்து வருகின்றன. அந்நுகர்ச்சித் திறங்களை மதிமானுன நீர் நன்கு உணர்ந்திருக்கிறீர்; யாண்டும் எவ்வழியும் மனிதன் கருதி ஒழுக வேண்டிய இனிய உறுதி நலம் தரும நெறியேயாம். அல்லல் நேர்ந்தபொழுது அஞ்சி அதனை நீக்குவதற்காக முறை கடந்து செல்லல் பழியும் பாவமும் ஆய் இழிவே பயக்கும். அறத் திறம் மறந்தவர் அழிந்து படுவர்.

2. அறம் இம்மையில் புகழையும், மறுமையில் பேரின்பத்தையும் தரும். ஆருயிர்க்கு இனிய அந்த அரிய அமிர்தத்தை யாண்டும் எவ்வகையினும் உரிமையுடன் பேணிவரவேண்டும்.

" முன்பு நின்று இசைநிறீஇ முடிவு முற்றிய
பின்பு நின்று உறுதியைப் பயக்கும் பேரறம். "

இருமையும் தருமம் இன்பம் அருளும் அருமையை இவ்வாறு அறிவுறுத்தி அதனைப் பரிபாலித்துவரும் பான்மையை உணர்த்தினன்.

செல்வம் முதலிய நல்ல நிலைமைகள் அமைந்தபொழுது தருமம் தழுவி ஒழுகுதலும், அல்லல் நேர்ந்த காலத்தில் அதனைக் கைநழுவ விடுதலும் அறிவுடைமை ஆகுமா? நீதி நெறியில் என்றும் நிலையாய் நிற்றலே சிறந்த மனிதத் தன்மையாம். நெறிமுறையில் நிலைத்து நிற்கும் மனிதனே உலகிற்கு இனியனாய்த் தனி மகிமையான தலைமையில் தழைத்து வருகின்றான்.

நாம் செய்துள்ள நல்வினையால் இன்பம் வருகின்றது; தீவினையால் துன்பம் உறுகின்றது. இன்பம் எய்தியபோது விழைந்து மகிழ்கின்ற நாம் துன்பம் வந்த இடத்தும் அவ்வாறே உவந்து அனுபவிக்கவேண்டும். அதுவே நேர்மையாம். விளைத்த வினைப் பயன்கள் எவ்வழியும் அனுபவியாமல் தீரா; நல்லதில் உவந்து, அல்லதில் வருந்தல் அறிவின்மையேயாம் என உறுதி நலங்களை வலியுறுத்தினன்.

* " நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவது எவன். " (குறள் 379)

என்னும் பொய்யாமொழியை இது அடி ஒற்றி வந்துள்ளது. வனம் போகாமல் ஊருக்கு மீண்டு வரும்படி மந்திரி மறுகிவேண்டினமையால் இந்த ஆண்டகை இங்ஙனம் அறிவுநலம் கூறினன்.

பிதுர்வாக்கிய பரிபாலனம் ஆகிய தனது அருமைத் தருமத்தைத் தடைப்படுத்த நேர்ந்தமையால், அறத்தின் பெருமையைச் சிறப்பாக எடுத்துக்காட்டி அதனைத் துறத்தலும் மறத்தலும் பெருங்கேடாம் என உள்ளம்கொள்ள உறுத்தி உரைத்தான்.

* இன்பம் எதிர்ந்தபொழுது உள்ளம் களிப்பவர் துன்பம் நேர்ந்த இடத்து அல்லல் உறுவது புல்லிது என்பதாம். நீ செய்த வினைப் படலை அனுபவித்தற்கு உனக்கு என்ன கொள்ளை? என அடிகள் இடித்துக் கூறியிருக்கும் அழகை இதில் நுனித்து நோக்குக.

*சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு* (குறள், 31)

*அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு.* (குறள், 32)

இந்த அருமைத் திருமொழிகளின் பொருள் நலங்களை மருவி நம் கவிகள் இங்கு மெருகேறி வந்துள்ளன.

தருமமே உயிர்க்கு உறுதித் துணை. அது என்றும் அழியாது நின்று எவ் வழியும் திவ்விய மகிமைகளை விளைத்துப் பேரின்பம் பயந்துவரும்.

இசை நிறீ இ = கீர்த்தியை நிலை நிறுத்தி. பின்பு என்றது எடுத்த உடம்பு மறைந்த பின்னர் அடுத்த நிலையைக் குறித்தது. தன்னைச் செய்த உடம்பு அழிந்து போயினும் அவ்வுயிர் புகுந்த இடம் எல்லாம் தொடர்ந்து நின்று பலவகையான இன்பநலங்களைத் தருமம் அதற்கு உவந்து உதவுகின்றது.

இத்தகைய அரிய அறத்தை மனிதன் யாண்டும் உறுதியாகக் கருதிச் செய்யவேண்டும். என்ன அல்லல்கள் நேர்ந்தாலும் எவ்வளவு சோதனைகள் வந்தாலும் தரும நெறி தவறலாகாது.

3. வீரம் என்பது எது? போரில் ஏறி எதிரிகள் ஏவுகின்ற படைகளுக்கு அஞ்சாது நின்று அடுசமர் ஆற்றி விறுடன் வெற்றி பெறுவதே வீரம் என உலகம் தேறியுள்ளது. உண்மையான வீரம் அது அன்று. பரிபூரணமான உயர்ந்த வீரம் அதனினும் வேறு ஒன்று உள்ளது என இவ் வீர மகன் விளக்கியிருக்கும் நீர்மை நினைந்து சிந்திக்கத் தக்கது.

நிறப்பெரும் படைக்கலம் என்றது வேல் வாள் அம்பு முதலிய ஆயுதங்களை. நிறம் இரண்டனுள் முன்னது ஒளி, பின்னது மார்பு.

"நிறத்தின் நேர் உற மறப்பயன் விளைக்குறும் வன்மை" என்றது வீரத்தின் பான்மையை விளக்கி நின்றது. வேல் அம்பு முதலிய கூரிய படைக்கலங்கள் மார்பு நேரே வரினும் மனம் கலங்காமல் எதிர்த்து போர்புரியும் வீரத்தை வரைந்து காட்டினான்.

இந்தப் போர் வன்மை ஓர் வீரம் அன்று. இதனினும் ஓர் வன்மை உள்ளது. அதுவே உண்மையான உயர்ந்த வீரமாம்.

இறப்பினும் திருஎலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே

சூரர்களுக்கு இலக்கணம் வகுத்திருக்கும் இத்தீரமொழிகள் யாரும் சிந்திக்கத் தக்கன. இவ்வகையில் பேரெடுக்க வேண்டும்.

அறத்தின் பெருமையை வலியுறுத்த வந்த வீர மகன் இப்படிப் பேசியிருக்கிறான். போர் வீரத்திற்கே பிறந்தவன். வீர தேவதையாய் விளங்கியுள்ளவன். தனக்குத் தனி உரிமையான அவ் வீரத்தினும் தருமத்தையே அருமையாக இங்கே அவன் வியந்து கூறி அதன் மகிமையை வெளிப்படுத்தியுள்ளான்.

அவனது வீரம் எல்லாம் எவ்வழியும் அறத்தைப் பாதுகாக்கவே அமைந்திருக்கின்றன. வீரமூர்த்தி என்பதினும் தருமமூர்த்தியாகவே இவன் யாண்டும் நீண்டு ஒளி வீசியுள்ளான்.

தருமத்தை இவன் கருதிப் பேணியிருக்கும் தன்மையும் திண்மையும் கருமங்கள் எங்கணும் கனிந்து நிற்கின்றன.

உயிர் போக வரினும், அரிய பெரிய செல்வங்களை எல்லாம் ஒருங்கே இழக்க நேர்ந்தாலும் கலங்காமல் நின்று அறத்தைப் பாதுகாக்க வேண்டும். அங்ஙனம் காப்பவரே அதிசூரர் என இவ் வீரநாயகன் விதி கூறியுள்ளான். அறத்தை இவன் மதித்திருக்கும் மதிப்பும் ஆர்வமும் இங்கே பார் அறிய வந்தன.

"அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி"
(கிட்கிந் அரசி, 35.)

எனப் பின்னரும் பேசியிருக்கிறான். இன்னவாறே பல இடங்களிலும் தரும நிலையை வலியுறுத்தி இக் கருமவீரன் தரும சீலனாய்த் தழைத்து நிற்கின்றான்.

மனிதனுக்கு உயிரினும் சிறந்த பொருள் யாதும் இல்லை; அது அருமை மிக வுடையது; அந்த அரிய உயிரை இழப்பினும் அறத்தை இழக்கலாகாது என்றமையால் அதன் பெற்றியும் பெருமையும் உய்த்துணரலாகும்.

தருமம் உயிர்க்கு உயிராய் ஒளிசெய்து வருகின்றது; அஃது இல்லையாயின் ஒளி அற்ற விழிபோல் உயிர் இழிவுறுகின்றது. பாவி ஆயபின் ஆவியால் யாதுபயன்? புண்ணியம் படிந்து இறந்து

போயினும் அவ்வுயிர் கண்ணியம் மிகுந்து பேரின்ப நிலையில் பெருகி யிருக்கும்.

உயிரை உயர்த்தி, எவ்வழியும் மதிப்பும் மாண்பும் பெருக்கி, என்றும் இன்ப நலங்களை அருளிப் பண்பு புரிந்து வருதலால் அறம் உயிரினும் சிறந்ததாய் உயர்ந்து நின்றது. உயிர்க்கு இனிமையாய் உதவி அருளுதலால் அறத்தை உயிரினும் ஓம்புக என உணர்த்தி யருளினன்.

அறம் உடையவன் எவனே அவனே தன் உயிர்க்கு உறுதியாய் இனிமை செய்தவனாகின்றான்; அதனை இழந்தவன் எல்லாம் இழந்தவனாய் அல்லலை விளைத்து அழிநிலையை அடைகின்றான்.

தருமம் ஒருவனிடம் இல்லையாயின் அகில உலகங்களையும் உடையனாயினும் அவன் அவமே அழிந்து படுகின்றான்.

"For what is a man profited, if he shall gain the whole world, and lose his own soul?" (Bible.)

"உலகம் முழுவதையும் அடைந்தாலும் தன் உயிரைப் பழுதுபடுத்தின், மனிதனுக்கு அதனால் யாது பயன்?" என ஏசுநாதர் அருளியிருக்கும் இந்த அருமை வாசகம் ஈண்டு அறியத் தக்கது.

இன்னுயிர்க்கு இனிய துணையாய் மன்னியுள்ள அறத்தை என்ன நிலையிலும் மனிதன் இனிது பேண வேண்டும் என்னும் புனித போதனை இங்கே பொலிவு செய்து நின்றது. ஈரம் கனிந்த இந்த தரும உபதேசத்தில் சூரரைச் சுட்டியது, சொல்லியவன் வில்வீரன் ஆதலால் அவ் வுள்ளியல்பு வெளியே துள்ளி வந்தது

போர் வீரனிலும் தரும வீரனே மிகவும் சிறந்தவன்.

மனவலியுடைய அவன் அரும்பாடு பட்டுச் சில வெற்றிகளை அடைவன்; ஆன்ம பலமுடைய இவன் யாதும் வருந்தாமல் எல்லா வெற்றி நலங்களையும் எளிதே பெறுவன்.

அரிய வீர நலங்கள் யாவும் அறத்தில் மருவி யிருக்கின்றன.

"Virtue is bold, and goodness never fearful"

(Measure for Measure, 3-1.)

"தருமமே தைரியம்; நல்லது யாண்டும் அஞ்சாது" என ஆங்கிலக் கவிஞராகிய ஷேக்கிஸ்பியர் இங்ஙனம் கூறி யிருக்கிறார்.

அரிய மகிமைகள் யாவும் உரிமையுடன உதவி மனடமைதக்கு என்றும் இன்பம் புரிந்து வருதலால் அறம் இவ்வாறு வியந்து போற்றப் பெற்றது.

"Virtue was the only path to true glory" (Goldsmith)

"அறம் ஒன்றே உண்மையான மகிமைக்கு வழி" எனக் கோல்டுஸ்மித் என்பவர் சொல்லியுள்ளார்.

எந்நாட்டிலும் எவரும் அறத்தைப் பொன்னே போல் போற்றி வருகின்றனர். இந்நாட்டவர் முன்னுள் இதனைப் பேணி வந்திருக்கும் முறை பெரிதும் வியப்பாய்ப் பேருவகை தருகின்றது. அறத்தைக் கடவுள் ஆகவே கருதி யிருக்கின்றனர்.

தரும நெறியில் நம்மவரின் இந்நாள்நிலை கொடிய பரிதாபமாயுள்ளது. நினைத்தால் நெஞ்சு வேகின்றது. பெரிய மனிதன் என ஒரு உருவையாவது எண்ணி மகிழ இடமில்லாமல் மண்மூடியுள்ளது. எவரும் கண் மூடிகளாய்க் கவிழ்ந்து படுகின்றனர்.

தரும பூமியான இதில் பழைய பண்புகள் சிறிதேனும் படிந்து அருமை மக்கள் பெருமையாகப் பிறக்க வேண்டும்.

"Our age yields no great and perfect persons."

"பூரணமான உயர்ந்த மனிதரை நம்நாளில் காணேம்" என அமெரிக்க நாட்டை நினைந்து எமர்சன் இங்ஙனம் இரங்கி யிருக்கிறார். செல்வ நிலையில் சிறந்து பல்வகை வளங்களும் மலிந்துள்ள அத் தேசத்தில் தரும நலம் கனிந்த உத்தமமான ஒரு மனிதனையே அப்புலவரது சித்தம் துருவித் தேடி மறுகி யுள்ளது.

செல்வம் வலி முதலியவற்றால் மட்டும் ஒரு நாடு சிறந்த மதிப்பை அடைந்து விடாது; தரும வீரரான நல்ல புண்ணிய சீலர்களாலேயே அது கண்ணியம் பெறுகின்றது.

பிறந்த நாட்டுக்கும் பெருமை தருகின்ற அத்தகைய உத்தம தருமத்தை எவ்வழியும் போற்றி ஒழுக வேண்டும் என இராமன் சாற்றி அருளினன். உத்தமன் உரை உறுதி நலமுடையது.

4. வனவாசம் கடினம் என்று கருதி மனம் மாறி நான் தருமநெறி தவறின், பரம்பரையாக உயர்ந்த புகழுடன் விளங்கி வருகின்ற எனது அரச குடிக்குப் பெரிய பழியாம்.

"யான் பிறந்து அறத்தின் நின்று இழுக்கிற்று என்னவோ?"

" அற நெறியில் உயர்ந்து இசை திசை பரப்பி என்றும் ஒளி மிகுந்துள்ள மனுக்குலம் என்னால் இழுக்கடைந்தது என்னும் ஒரு பழியை நான் சுமக்க வேண்டுமோ?" என அமைச்சனிடம் இப்படி வினவி யிருக்கிறான்.

மந்திரச் சூழ்ச்சி மாத்திரம் அன்று; நல்ல வீரத் திறலும் வாய்ந்துள்ள நீர் சூரத்தனம் துறந்து எனது பிரிவு குறித்து வருந்துவது பெரிதும் நகையாகின்றது.

5 சொன்ன சொல் மாறாமல் சத்தியத்தைக் காப்பாற்றும் பொருட்டுத்தான் பெற்ற அருமைப் புதல்வனைக் காட்டுக்கு அனுப்பினான் என்பது உமது மன்னர்பிரானுக்கு அரிய தவமாம்; அந்தக் கட்டளையைத் தலைமேல் கொண்டு நான் கானகம் போகுதல் எனக்கு ஒரு பெரிய தவமாம்; உம்முடைய சக்கரவர்த்தியும், அவ்வுத்தமனுடைய மகனும் சத்தியசீலராய்த் தருமம் பேணி ஒழுகுவதை நினைந்து நீர் உவந்து கொள்ள வேண்டும்.

எந்தை நீ இதற்கு இரங்கல் என மந்திரியைத் தேற்றி யிருக்கும் மாதிரியைப் பார்க்க. எந்தை என்றது மரியாதை வாசகம். தனது அருமைத் தந்தையின் உரிமைத் துணைவன் ஆதலால் உறவு கனிய உரைத்தான்.

இவ் வனவாசம் எனக்குப் புகழும் பெருமையும் தரும்; இதில் மறுகி உளையாமல் உறுதியாய் இரும் என்று உள்ளம் ஆற்றினான். மேலும் சொல்லினான்:

6. இங்கிருந்து திரும்பி நீர் அயோத்தியை அடைந்தவுடன் வசிட்டரை வணங்கி நிலைமையை உரைத்து, அவருடன் சென்று தந்தையாரைக் கண்டு நான் திசைநோக்கி வணங்கியதாகச் சொல்லும். என்னை நினைந்து வருந்தாமல் உறுதிகூறித் தேற்றியருளுக.

7. என் தம்பி பரதனை எல்லாரும் நன்கு கவனித்துக் கொள்ள வேண்டும். வஞ்சமும் சூதும் யாதும் அறியாத புனித நெஞ்சினன். இனிய பண்பினன். அப்பெருந் தகையாளனை யாவரும் உரிமையுடன் உவந்து பேணி வர வேண்டும்.

8. அவனுடைய தாயால் எனக்கு நோய் விளைந்தது என்று எண்ணி யாரும் அவனிடம் மாறுபடலாகாது. என்பால் எப்படி அன்புகொண்டு மதித்து மரியாதை செய்து வருகிறீர்களோ அவ்

வாறே எல்லாரும் ஆர்வத்தோடு அவனை ஆதரித்து அருள வேண்டும். என்னினும் எத்தனையோ மடங்கு உத்தமன். சித்த சுத்தி மிக்கவன். அவனை உள்ளுந்தோறும் என் உள்ளம் உருகு கின்றது. அந்தப் பிள்ளையைப் பேணிக் கொள்ளுங்கள்.

**10.** பதினான்கு வருடங்கள் கழிந்தவுடன் வனவாசம் முடிந்து நான் மீண்டு வந்து தந்தையை வணங்குவேன். எந்தை யின் சிந்தையில் யாதொரு கவலையும் எழாமல் மாதவரும் நீரும் அருகிருந்து ஆதரவு புரிய வேண்டும். முதிய வயதினர். அதிபதி யான அவரை நாளும் துதிசெய்து தொழுது கானகவாழ்க்கையை நான் இனிமையாகக் கழிப்பேன். அம் மானவீரர் யாதும் மனம் நோகாமல் இருக்கும்படி ஞானமுனிவரிடம் கூறி ஆனவரையும் அனைவரும் ஆதரித்து வாருங்கள்.

**11.** பின்பு அந்தப்புரம் போய் என் தாயர் மூவரையும் நான் தொழுது வணங்கியதாகத் தாதியரிடம் சொல்லி ஆறுதல் செய்தருளுக. யாவர்க்கும் தேறுதல் புரிக.

எப்பொழுதும் என் தந்தை அருகு அமர்ந்து எவ் வழியும் இனிமையாக இதம் புரிந்து வரும்படி உம்மைப் பல முறையும் நான் வேண்டிக் கொள்கிறேன்.

இறைமகன் துயர்துடைத்து இருத்தி மாடேன்ருன்
மறைகளை மறைந்துபோய் வனத்துள் வைகுவான்

"என் பிரிவால் வருந்தாதபடி தந்தைக்கு ஆறுதல் கூறி அருகிருந்து நீர் உதவி புரிய வேண்டும்" என மந்திரியிடம் இம் மைந்தன் இவ்வாறு வேண்டி யருளினன். மாடு=பக்கம்.

வேண்டினவன் இன்னன் என்பதை ஈண்டு விளக்கி யிருக்கும் வித்தகம் நோக்குக. வேதங்களை ஒளித்து ஓடிவந்து வனத்துள் வாழ மனத்துள் விழைந்துள்ளவன் என்றது நினைத்து இன்புறற் பாலது. இவனது விழைவும் நுழைவும் விநோதமாயின.

எவர்க்கும் என்றும் மறையாய் உள்ளதனை மறந்து வந்த வன் என்றதனால் கரந்து வினைபுரியும் இவனது கபட நாடகங்கள் காணலாகும். மறை=வேதம் மறைகளுக்கும் எட்டாதவன் காட்டுள் வந்து தங்கியது ஒரு பெரிய வேட்டம் கருதி என்க.

கதாநாயகனது உண்மை நிலையையும், கரும விளைவையும், காரிய சாதனையையும் அருமையாக இவ்வாறு அறிவித்திருக்கிறார்.

தந்தையைத் தேற்றி எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளும்படி மந்திரியிடம் இங்ஙனம் இராமன் கூறவே அவன் உள்ளம் உருகி உளைந்து நொந்து மறுமொழி கூருமல் மறுகி நின்ருன்.

ஊழ்வினை வசத்து உயிர் நிலை என அம் மதி மான் தேறி அதன் பின்பு சீதையை வணங்கினன். நாயகனுடன் காட்டுக்குத் தொடர்கின்ற அப் பெண்ணரசியைத் தொழுது விடை பெறுங்கால் அந்த அமைச்சனிடம் அவள் சில சொல்லி விடுத்தாள். என்ன சொன்னுள்?

அன்னவள் கூறுவாள் அரசர்க்கு அத்தையர்க்கு
என்னுடை வணக்கம்முன் இயம்பி, யானுடைப்
பொன்னிறப் பூவையும் கிளியும் போற்றுகென்று
உன்னும்என் தங்கையர்க்கு உணர்த்து வாய்என்ருள். (1)

தேர்வலான் அவ்வுரை கேட்டுத் தீங்குறின்
யார்வலார் உயிர்துறப்பு எளிதன்றே எனுப்
போர்வலான் தடுக்கவும் பொருமி விம்மினன்
சோர்விலாள் அறிவிலாத் துயர்க்குச் சோர்கின்ருன். (2)

இங்கே ஒரு உருக்கமான உணர்வுக் காட்சி சித்திர வடிவில் விசித்திரமாக விளக்கப் பட்டுள்ளது. அதி நுட்பமான நாடக நிலையில் நிகழ்ச்சிகள் நேர்ந்திருக்கின்றன.

காட்டுக்குப் போகின்ற சீதை நாட்டில் உள்ளவர்களுக்குத் தனது நன்றியறிதலையும் விருப்பத்தையும் உடன் வந்த மந்திரியிடம் சொல்லி விடுகின்ருள். "என் மாமாவையும், மாமிமாரையும் நான் தொழுது வணங்கியதாகச் சொல்லும்" என முதலில் உரைத்தாள். அதன் பின் தான் வளர்த்து வந்த கிளியையும் பூவையையும் இனிது பாதுகாத்து வரும்படி தன் தங்கையரிடம் கூறுமாறு குறித்தருளினள் தங்கையர் என்றது ஊர்மிளை, மாண்டவி, சுருத கீர்த்தி என்னும் மூவரை.

தசரதனை மாமன் என்னமல் அரசர் என்றது மரியாதைக் குறிப்பைக் காட்டியது தன் நாயகனுக்கு வரவுரிய அரசு நிலை திரியாமல் முதியவரிடமே தாயகமாக நிலைத்திருக்கும் நிலைமை தெரிய வந்தது. முதலில் குறித்தது அவனது தலைமை கருதி.

அத்தையர் என்றதில் கோசலை முதலிய மூவரும் அடங்கி யுள்ளனர். தன் கணவனுக்கு இடர் இழைத்தவள் எனக் கைகேசி யிடம் யாதொரு மாறுபாடும் கருதாமல் உரிமை செய்திருப்பது இவளது மனப்பண்பையும் பெருந்தகைமையும் உணர்த்தி நின்றது.

முதலில் உரைத்ததைக் கேட்டபொழுது உவந்து நின்ற மந்திரி இறுதியில் சொன்னதை நினைந்துநினைந்து நெஞ்சம் துடித்தான். இந்த வார்த்தையைக் காதில் கேட்டும் நான் சாகாமல் நிற்கின்றேனே என்று தவித்தான்.

தீங்கு உறின், யார்வலார் உயிர்துறப்பு எளிது அன்றே?

பொறுக்க முடியாத கொடிய துயரம் நேரின் இறந்து விடுதல் நலம் என்று எண்ண வரும்; வரினும் எண்ணியபடியே உயிர் போகாமல் பதைத்து நிற்கும் பரிதாப நிலையை இது உணர்த்தி யுள்ளது. பொருமுதல் = ஏங்கி அழுதல்.

தற்கொலையை விரும்பியும் சாக முடியாமல் மறுகி அலமரு கின்ற கொடிய மறுக்கத்தை மருவி நின்ற மந்திரி பொருமி நொந்து கண்ணீர் சொரிந்து கரைந்து நின்றான்.

இராமன் ஆற்றினான்; சோகத்தின்குறிப்பை யூகித்துணர்ந்த அக்கோமகன் தடுத்தும் அமைச்சன் ஆற்ற முடியாமல் அலறி அழுதான்.

போர்வலான் தடுக்கவும் பொருமி விம்மினான்.

சுமந்திரன் கண்ணீர் சொரிந்து விம்மி விம்மி அழுவதையும், இராமன் அவனைக் கை அமைத்து ஆற்றித் தேற்றும் காட்சியை யும் இங்கே பார்த்துப் பரிவு கூர்கின்றோம்.

தேர்வலான், போர்வலான் எனச் சுமந்திரனுக்கும் இராம னுக்கும் முறையே பேர் வைத்துக் கவி அவர் தம் சீர்துலக்கி யிருக்கிறார். சொல்லிலேயே உள்ளங்கள் உணரப்படுகின்றன.

தேர் ஊர்தலிலும், காரியங்களை ஆராய்ந்து தேர்தலிலும் மிகவும் வல்லவன் என்பதைப் பேரால் அறிகின்றோம்.

அவ் வல்லாளனை இவ்வில்லாளன் ஆற்றியும் அவன் ஆறாமல் அழுதிருக்கிறான். அவ்வளவு பெரிய மதிமான் விம்மி அழும்படி யான துன்பம் இங்கே என்ன நேர்ந்தது? ஓர்ந்து காண்க.

அரசர்க்கும் அத்தையர்க்கும் என் வணக்கத்தைச் சொல்லுக என்ற அளவில் சானகி நிறுத்தியிருந்தால் அமைச்சன் அழுதிரான்; நான் வளர்த்த கிளியை என் தங்கையரைப் பாதுகாத்து வரும்படி சொல்லும் என்ற போதுதான் அவன் உள்ளம் உருகி அழுதான்: அழுகை நுழைபுலனோடு தழுவி எழுந்தது.

தனது நாயகன் மணிமுடி துறந்து அரச பதவியை இழந்து கொடிய கானகம் போக நேர்ந்துள்ளான். எவ்வளவு பெரிய துன்பம் இது! உலகம் எல்லாம் உயிர் போன உடல் போல் துயருழந்து துடிக்கும் இத்தருணத்தில் நிலைமையை ஒன்றும் உணராமல் யாதொரு கவலையும் இன்றி, "பூவையும் கிளியும் போற்றுக" என்றாளே! என்ன பிள்ளைமை உள்ளம்! எத்துணைப் பேதைமை நெஞ்சம்! கள்ளம் கபடு காணுமல் உலகம் யாதும் தெரியாமல் உள்ள மெல்லியலான இந்த இளவரசி பொல்லாத காட்டில்போய் எப்படி வாசம் செய்வாள்? இவ்வுத்தம பத்தினிக்கு இத்துணை இடர் நேர்ந்ததே! என்று இவளது பேதைப் பெண்மைக்கு இரங்கி அம்மேதை விம்மி அழுதான்.

"சோர்விலாள் அறிவு இலாத் துயர்க்குச் சோர்கின்றான்"

தேர்வலான் பொருமி விம்மியதற்குக் காரணம் இறுதி அடியில் இவ்வாறு அறிய வந்தது. அறிவிலாத் துயர் என்றது கணவனுக்கு நேர்ந்துள்ள துன்ப நிலைகளை யாதும் உணராது கிள்ளை மேல் உள்ளம் செலுத்திய அவ் வெள்ளைமையை நினைந்து.

வஞ்சனை சூது யாதும் அறியாத இப்பேதைப் பெண்ணரசிக்கா இத் தீது வர வேண்டும்! தெய்வமே! என்று மந்திரி மனம் கரைந்து உருகியிருக்கிறான். அவன் விம்மி அழும் காரணத்தை நுண்மையாக அறிந்து கொண்டமையால் இராமன் அவனை ஆற்றியருளினான். குறிப்பறிவுகள் ஈண்டு உருக்கமாய் உலாவி யுள்ளன.

அதன் பின் சுமந்திரன் இலட்சுமணனிடம் விடை பெற விழைந்து பரிந்து நோக்கினான். "ஏதாவது சொல்ல வேண்டியதிருந்தால் சொல்லியருளுக" என்னும் குறிப்போடு நோக்கிய அம் மதிமானிடம் இளையவன் பேசியதில் சினமும் வெறுப்பும் செறிந்து நின்றன. நேர்ந்துள்ள நிலைகளை நினைந்து நெஞ்சம் புழுங்கியுள்ளமையால் அப்புழுக்கங்கள் இங்கே வெளிப்படலாயின.

உரைசெய்தெம் கோமகற்கு உறுதி ஆக்கிய
தரைகெழு செல்வத்தைத் தவிர மற்றொரு
விரைசெறி குழலிமாட்டு அளித்த மெய்யனை
அரசன்என்று இன்னம்ஒன் றறையற் பாலதோ? (1)

கானகம் பற்றிநற் புதல்வன் காயுணப்
போனகம் பற்றிய பொய்யின் மன்னர்க்குஇங்கு
ஊனகம் பற்றிய உயிர்கொடு இன்னும் போய்
வானகம் பற்றிலா வலிமை கூறென்றான். (2)

மின்னுடன் பிறந்தவாட் பரத வேந்தற்கு
மன்னுடன் பிறந்திலேன் மண்கொண் டாள்கின்ற
தன்னுடன் பிறந்திலேன் தம்பி முன்னலேன்
என்னுடன் பிறந்த யான் வலியன் என்றியால். (3)

இந்த வார்த்தைகளிலிருந்து இலக்குவனுடைய உள்ளக் கொதிப்புகளை நாம் உணர்ந்து கொள்ளுகின்றோம். தசரதன் மேல் இவன் மூண்டுநிற்கும் கோபதாபங்களும் ஆங்காரமும் மிக நீண்டு நிற்கின்றன. வெறுப்பெல்லாம் துணைவன் குறிப்பில் விளைந்தன.

எம் கோமகனுக்கு உறுதியாக உரிமைசெய்த அரசை மாற்றி வேறொருத்திக்குக் கொடுத்த அந்தப் பெரிய சத்தியவானை ஒரு அரசன் என்று கருதி நான் ஒன்று உரைசெய்ய வேண்டுமோ?

அருமையான இனிய தலைமகன் காட்டில் போய் காய் கிழங்குகளை உண்டு திரியத் தான் அரண்மனையில் அமர்ந்து இராச போகங்களை நுகர்ந்து உல்லாசக் களியாடல்கள் புரிகின்ற அவ் வல்லாளன் இன்னும் உலகில் பல்லாண்டுகள் வாழ வேண்டும்.

புதல்வன் கானகம் போன போதே ஊனகமான உயிர் வானகம் போகாமல் இருப்பது அரிய பெரிய ஒரு அதிசயமே யாகும்.

அமைச்சரே! அந்தப் பரத மகாராசாவுக்கு நான் இனி என்ன சொல்ல வேண்டும்? அவர் பெரிய சக்கரவர்த்தி; சிறியவனான நான் அவருக்கு உரிமையாக உரை செய்ய உரிய அரிய காரியம் யாது உள்ளது? ஆயினும் சில சொல்லுகின்றேன். "நான் ஒருவரோடும் பிறந்திலேன்; தன்னம் தனியாகவே பிறந்திருக்கிறேன். யாரும் எனக்குத் துணையில்லை; ஆயினும், எவரையும் வெல்ல வல்ல பெருவலியுடையேன் என்பதை மட்டும் அவரிடம்

போய் உறுதியாகச் சொல்லும் என்று சொல்லி நின்றான். உள்ளக் கடுப்பும் மறுக்கமும் உரையில் மிடுக்காய்த் துடித்து நிற்கின்றன.

இராமனோடும் நான் பிறக்கவில்லை என்பான் மன் உடன் பிறந்திலேன் என்றான். "உண்மையாகவே நான் கூடப்பிறந்தவனா யிருந்தால் இந்த அண்ணன் இப்படி அவம் அடையப் பார்த் திருப்பேனா? என்னைத் தம்பி என்று அந் நம்பி எண்ணியிருந்தால் உரிமையான எனது பணிவிடைகளை ஏற்றுக்கொள்ளாமல் அடக்கி ஒடுக்கி அயல் விடுத்திருப்பாரா? ஏதோ ஒரு அநாதிப்பயல் என்று அப்பெருமான் என்னைப் பாராமுகம் செய்துள்ளார்; நான் ஒரு பயன் அற்ற பதர்" எனப் பரிதபித்திருக்கிறான்.

இவனது உள்ளமும் உணர்ச்சியும் அண்ணனுக்கு யாதும் உதவி செய்யவில்லையே என ஏங்கி எங்கும் துடித்துள்ளன.

மண் கொண்டு ஆள்கின்ற தன் எனப் பரதனை இகழ்ச்சிக் குறிப்போடு சுட்டியிருக்கிறான். தம்பி என்றது சத்துருக்கனை.

மூன்னவர் இருவர்; பின்னவன் ஒருவன். உடன் பிறப்பாள ராய் உரிமை அமைந்துள்ள இவரை இங்கே இடை ஒதுக்கியது மன வெறுப்பினால் நேர்ந்தது. பண்பு நிறைந்த வாஞ்சைகள் பரிசு குலைந்து வரிசை சிதைந்திருக்கின்றன.

தலைமையான தமையனது நிலைமையிலேயே நெஞ்சு பறி போய் வெஞ்சினமடைந்து இங்ஙனம் நொந்து பேசினான்.

என் உடன் பிறந்த யான் வலியன் என்றது வீர உணர்ச்சி ததும்பித் தன்னம்பிக்கை தழைத்துத் தருக்கு மீறி வந்தது.

"பரதேசிப் பயலாய்த் தனியே காட்டுக்குப்போயிருக்கிறான் என்று எளிதாக எண்ணித் தன் படை பண்டாரங்களுடன் வந்து அங்கே இடையே வளைந்தாலும் நான் ஒருவனே அனைவரையும் அடியோடு வென்று தொலைப்பேன் என்பதைப் பரதன் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்" என இங்ஙனம் உரைத்துவிடுத் தான். சொல் எல்லாம் சோக வேகத்தில் துள்ளி வருகின்றன.

மூத்தவனுக்கு இடையூறு நேர்ந்தது முதல் இளையவன் உள் ளத்தில் கொதிப்பும் கோபமும் மண்டியுள்ளமையால் பேசத்

தொடங்கிய போதெல்லாம் வெறுப்பும் வீராவேசமும் விரைந்து எழுகின்றன. அவனுடைய குறிக்கோள்கள் கூர்ந்து நோக்கத் தக்கன.

இவ்வாறு கூறவே தம்பியை இராமன் அன்புடன் நோக்கினான்; "சீரிய அல்லன செப்பல்" என நீர்மைததும்ப உரைத்தான்; அவன் அடங்கி நின்றான். இனமும் சினமும் மனமும் இங்கே அறிய வுரியன.

சுமந்திரன் வணங்கி விடைபெற்று மூவரையும் மறுகி மறுகி நோக்கி உருகிவந்து தேரில் ஏறி அண்ணன் கூறிய வண்ணமே யாரும் அறியாவகை அதிசாதுரியமாக அதனை ஓட்டிச்சென்றான்.

கூட்டினன் தேர்ப் பொறி, கூட்டிக் கோல்முறை
பூட்டினன் புரவி, அப்புரவி போம்நெறி
காட்டினன், காட்டித்தன் கல்வி மாட்சியால்
ஓட்டினன் ஒருவரும் உணர்வு றாமலே.

அன்றிரவு தேர்வல்லான் ஆண்டிருந்து தேரைமீண்டு கொண்டு போயிருக்கும் சீர்மையை ஈண்டு நாம் கூர்மையாக நோக்கி வியக்கின்றோம். புரவி பூட்டி, விரவி நீட்டிக், கரவு காட்டி, இரதம் ஓட்டிச் சென்றுள்ள விரகினைப் பாட்டில் படித்துப் பார்க்க.

இங்ஙனம் அவன் போகவே இடையாமத்தில் மனைவியையும் தம்பியையும் உடனழைத்துக் கொண்டு யாதொரு அரவமும் கேளாதபடி மெல்ல நடந்து இராமன் கானகம் நோக்கிப் போயினான். போன நிலைமை ஞானமணம் கமழ்ந்து ஊனும் உயிரும் உருகி யுணர உறுதி நலம் பெருகி நின்றது.

தையல்தன் கற்பும் தன் தகவும் தம்பியும்
மையறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேம மாக்கொண்டு
ஐயனும் போயினன் அல்லின் நாப்பணே.

வனம் போனவரை வரைந்து காட்டியிருக்கும் இது எவரையும் நினைந்து சிந்தித்து நிலைமைகளை உணர்ந்து கொள்ளச் செய்கின்றது. கதை நிகழ்ச்சியில் அரிய காட்சிகள் பெருகி மிளிர்கின்றன.

அல்லின் நாப்பண் என்றது நடுச் சாமத்தை. அல் = இரவு.

நாப்பண் = நடு. தொடர்ந்து வந்துள்ள நகர மாந்தரை இடையொதுக்கி அயலே கடந்துபோகக் கருதினமையால் இரவிடையே கரவாக எழுந்து போயினன்.

நேசமும் பாசமும் நிறைந்த நெஞ்சினராய் விழைந்து வந்திருக்கின்ற தேசமக்களைத் தப்பிச் செல்ல வேறு வழியில்லை ஆதலால் இவ்வாறு மோசம் செய்ய நேர்ந்தான். தன்னோடு காட்டுக்கு வந்து அவர் துயரம் அடையலாகாதே என்னும் கருணையினல் இக்கருமம் மருமமாய் நிகழ்ந்தது.

மனைவியும் தம்பியும் தான் இராமனைத் தொடர்ந்து வனம் போயினர் என உலகம் பொதுவாக உணர்ந்திருக்கிறது.

அந்த இருவர் மட்டும் அன்று; இன்னும் ஆறு பேர் ஒருவர் கண்ணுக்கும் தெரியாமல் உரிய துணைகளாய் உடன் போயுள்ளனர். அவ்வுண்மையை நம்கவி நேரே கண்டு நமக்குக் காட்டியிருக்கிறார்.

அத் துணையாளர் யாவர் ?

கற்பு, தகவு, கருணை, உணர்வு, வாய்மை, வில்.

புறத்துணை இரண்டு; அகத்துணை ஆறு; ஆக எண்மருடன் வீரன் வெளி ஏறினன். கரும சாதனங்கள் கருதி உணர வுரியன.

மனைவி எனவோ, சனகி என்றோ பெயர் கூறியாமல் தையல் எனச் சீதையை இங்கே பொதுவாக உரைத்தது, பெண்குலத்திற்கெல்லாம் பெருமைதர நேர்ந்த பெருமாட்டி என்பது கருதி. தையல் = பெண். தன் மானம் காத்துத் தன்னையுடையானை மேன்மைப்படுத்தும் தன்மை உணர வந்தது.

இப் பெண்ணரசியின் பெண்ணீர்மை பெண் இனத்துக்கு உயிர் நீர்மையாய் ஒளி புரிந்து அளி சுரந்திருக்கின்றது.

தன் கற்பு என்றது உயிரோடு உடன்பிறந்துள்ள இயற்கை நிலை நோக்கி. பிறர் கற்பித்து வந்த செயற்கைக் கற்பு அன்று; பூவும் மணமும் போல் பெண்மையோடே பிறந்த உண்மைக் கற்பு என்க. அரிய நிறையினை நிறை தூக்கி நினைவுறுத்தி யிருக்கிறார்.

மாமிக்கும் மாமனுக்கும் பயந்து, கணவனுக்கு அஞ்சி, ஊர் வசைக்கு நாணி உள்ளம் காக்கும் பிற கற்புகளும் உள ஆதலால் அவற்றினும் வேறுபாடு தெரிய " தன் கற்பு " என வந்தது.

இந்தக் கற்பை முதலில் குறித்தது இராமனுடைய அற்புத மகிமைகளுக்கெல்லாம் உயிராதாரமாய் உறுதி பூண்டு எவ்வழியும் ஒளி புரிந்துள்ள அதன் நிலைமையும் தலைமையும் கருதி.

தன்னை ஒரு வெற்றி வீரனாகவும் உத்தம புருடனாகவும் உயர்த்தியருளியது அத்தையல் கற்பே ஆதலால் இவ்வையனுக்கு வாய்த்த உறுதித்துணைகள் எவற்றினும் அஃது உயிர்த்துணையாய் உயர்ந்து நின்றது. உரியவளது அரிய பான்மை உடையவனது பெரிய மேன்மையாய்ப் பெருகியுள்ளது.

தனது காவிய நாயகனுடைய அவதாரமும் வீரப்பாடும் பரிபூரணமாய் எங்கும் என்றும் பரிமளிக்கும்படி புரிய வந்துள்ள அரிய தன்மை முதன்மையாக இங்கே உரிமையோடு பாராட்டப் பட்டது. வைப்பு முறை அரிய நுட்பங்களை யுடையது.

இராம சரிதத்தை உலகமெல்லாம் விழைந்து மகிழ்ந்து வியந்து கற்கும்படி செய்துள்ளது அக் கற்பே ஆதலால் அற்புத மகிமையுடைய அது முற்பட நின்றது.

தன் தகவு என்றது இராமனது பெருந்தகைமையை. நன்மையான தன்மைகள் யாவும் தகவு என்னும் இந்த ஒருசொல்லிலேயே மிகவும் அடங்கியுள்ளன.

உத்தமமான உயர்ந்த நல்லபண்புகள் எல்லாம் இராமனிடம் இயல்பாகவே இனிதமைந்திருக்கும் தனிநலம் தெரியத் "தன் தகவு" என்றார். பிறரைப் பார்த்துப் பயின்று கொண்டது அன்று. இயற்கையுரிமையாய் இசைந்துள்ளமையின் தன்மை தழுவியது.

நடுவுநிலைமை, நெறி முறை வழுவாமை, நேர்மை முதலிய நீர்மைகள் எல்லாம் நிறைந்துள்ளமை புறம் தெரிய வந்தது. அருளும் சத்தியமும் ஞானமும் இவனிடம் குடி கொண்டிருந்தன. வில்லை இறுதியில் வைத்தது எல்லா நலங்களுக்கும் ஆதாரமாய் நிற்கும் அதன் ஆற்றல் தெரிய. தருமநலங்கள் தழுவிய கரும வீரன் என்பது காண நேர்ந்தது. குணசீலனான இராமன் கோதண்டம் கைக்கொண்டு துணைவி தம்பிகளோடு வானகம் வளமுறக் கானகம் ஏகினான். சேமம் = பாதுகாவல்.

பக்கத்துணைகளாய் இத்தகைய பாதுகாப்புகள் புடைசூழ்ந்து வர இக்கோமகன் சென்றான் என்றது இடையே எத்துணை

இடையூறுகள் நேரினும் அத்தனையும் கடந்து முடிவில் வெற்றித் திருவுடன் விளங்கி வருவன் என்பதை விளக்கி நின்றது.

இவ்வாறு செல்லுங்கால் அந்த அல்லிடை நிகழ்ந்த இயற்கை நிலைகளை அறிய வருகின்றோம். செய்யுள்களைக் கவனிக்கவேண்டும்.

பொய்வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரைப் பொருந்தி அன்னார்
செய் வினைக்கு உதவு நட்பால் செல்பவர் தடுப்பது ஏய்க்கும்
மைவிளக்கியதே அன்ன வயங்கிருள் துரக்க வானம்
கைவிளக்கு எடுத்தது என்ன வந்தது கடவுட்டிங்கள். (1)

மருமத்துத் தன்னை யூன்று மறக்கொடும் பாவம் தீர்க்கும்
உருமும் ஒத்த சிலையினானை ஒருப்படுத்து உதவி நின்ற
கருமத்தின் விளைவை எண்ணிக் களிப்பொடு காணவந்த
தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது தனிவெண் திங்கள். (2)

காம்புயர் கானம் செல்லும் கரியவன் வறுமை நோக்கித்
தேம்பின குவிந்த போலும் செங்கழு நீரும் சேரைப்
பாம்பின தலைய வாகிப் பரிந்தன குவிந்து சாய்ந்த
ஆம்பலும் என்றபோது நின்றபோது அலர்வது உண்டோ? (3)

அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும் அழகன் தன்மேல்
எஞ்சலில் பொன்போர்த் தன்ன இளவலும் இந்து என்பான்
வெஞ்சிலைப் புருவத்தாள்தன் மெல்லடிக் கேற்ப வெண்ணூற்
பஞ்சிடைப் படுத்தால் என்ன வெண்ணிலாப் பரப்பப்போனார். (4)

சிறுநிலை மருங்குல் கொங்கை ஏந்திய செல்வம் என்னும்
நெறியிருங் கூந்தல் நங்கை சிறடி நீர்க்கொப் பூழின்
நறியன தொடர்ந்து சென்று நடந்தெனின் நவையினீங்கும்
உறுவலி அன்பின் ஊங்கொன்று உண்டென உணர்வ துண்டோ.

பரிதி வானவனும் கீழ்பால் பருவரை பற்று முன்னம்
திருவின் நாயகனும் தென்பால் யோசனை இரண்டு சென்றான்;
அருவிபாய் கண்ணும் புண்ணாய் அழிகின்ற மனமும் தானும்
துரிதமான் தேரில் போனான் செய்தது சொல்லல் உற்றும். (6)

(தைலமாட்டுபடலம், 49-54)

சரித நாதன் நடந்து சென்ற இடம் காலம் வழி விளைவுகள் விழுமிய நிலையில் இங்கே இன்ப ஆடல்கள் புரிந்து நிற்கின்றன.

இரவு தங்கியிருந்த சோலையை விட்டுத் தென்திசை நோக்கி

ஒருநாழிகை தூரம் வரவும் சந்திரன் உதயமானது. அந்த உதயக் காட்சி வருணிக்கப்படுகின்றது.

அரக்கர்களுக்கும் இருளுக்கும் மிகவும்உறவு உண்டு. திருடர்களுக்கும் பேய்களுக்கும் இரவு வசதியாய் இருத்தல் போல் அவர்க்கு அது இதமாயுள்ளது. இரவு நேரங்களில் உறங்காமல் திரிந்து கொடிய காரியங்களைத் துணிந்து செய்து வருதலால் அரக்கர்க்கு நிசிசரர் என்று ஒரு பெயர். நிசி = இரவு. சரர் = சரிப்பவர். இங்ஙனம் தன்னுடன் என்றும் உறவுரிமையாயுள்ள இராக்கதர் குலத்துக்கு இராமன் எமனாய் வருகின்றான் ஆதலால் இவனை மேலே செல்லவிடலாகாது என்று அல்லிருள் செறிந்து வல்லிதின் வளைந்து மல்லியல் புரிந்து எதிர்ந்து நின்றது.

“ அரக்கர் செய்வினைக்கு உதவும் நட்பால் செல்பவர் தடுப்பது ஏய்க்கும் இருள் ” என்றமையால் இரவின் இயல்பும் செயலும் தெரியலாகும்.

மனிதர் இனிதாய் வழி தெரிந்து நடந்து போதற்கு இடந்தாராத கரிய இருள் இவ்வாறு பொருள் படர்ந்து உரிய தெருள் தெரியவந்தது. ஏய்த்தல் = ஒத்தல்.

இந்த வண்ணம் இடையூறான இருட்டில் அந்த அண்ணல் சிறிது தூரம் நடந்தான்; நிலா உதித்தது. இருள் நீங்கியது. எங்கும் ஒளிபரவி வழி தெளிவானது. ஆகவே சுகமாய் நடக்க வசதியாயிருந்தது ஆதலால் அது புகழ நேர்ந்தது.

கைவிளக்கு எடுத்தது என்ன வந்தது கடவுள் திங்கள்

மான வீரனை இராமன் இனிது நடந்து செல்லுதற்கு அனுகூலமாக ஆகாசமாகிய தருண மங்கை கையில் ஒரு விளக்கை ஏந்தி நின்றது போல் வானில் பிறைச் சந்திரன் பொலிந்து விளங்கினன். அம் மதி விளக்கம் மதிநலங் கனிந்து வந்தது.

இருள் பாவிகளுக்கு உதவியாய்ப் பகைத்து நின்றது; ஒளி புண்ணிய சீலனுக்கு உதவியாய்ப் பொங்கி எழுந்தது. சந்திரனால் இருள் நீங்கியது போல் இராமச்சந்திரனால் இராக்கதர் ஒழிந்து உலகம் இனி ஒளி பெற்று விளங்கும் என்பது இங்கே தொனியாய் ஊடுருவி யுள்ளது. உருவன உய்த்துணர்வில் ஒளிர்கின்றன.

குத்து விளக்கு சரவிளக்கு முதலாக வேறு சிலவும் உள வாகலான் அவற்றினும் வேறுபாடு தெரியக் கைவிளக்கு என்றார்.

"ஏறனுற்கு இருளை நீங்கக் கைவிளக்கு ஏந்தி யாங்கு
வீறுயர் மதியம் தோன்ற" (சிந்தாமணி, 1542)

சீவகன் இரவு தனியே நடந்து செல்லுங்கால் இடையே உதித்த நிலவைக் குறித்துச் சிந்தாமணி ஆசிரியர் இவ்வாறு கூறி யிருக்கிறார். நம் கவியுடன இஃது ஈண்டு எண்ணத்தக்கது.

கடவுள் திங்கள் என்றது தனி டகிமை வாய்ந்த அதன் தெய்வப்பெற்றி கருதி. முழுமுதற் கடவுளின் அருள் மிகப் பெற்று அவன் திருமுடியில் வீற்றிருக்கும் பெருமை பிறை மதிக் கே உண்டு ஆதலால் அஃது இங்கே இறைமையுடன் எண்ண வந்தது.

பொருந்த வானுறை நாள்களை நாள்தொறும் புணர்வோன்
அருந்த வானவர்க்கு ஆரமுது அன்புடன் அளிப்போன்
திருந்த வானவர்க்கு அரியவன் செஞ்சடை முடிமேல்
இருந்த வானவன் பெருமையை யார்கொலோ இசைப்பார்?
(பாரதம்)

திங்கள் இங்ஙனம் கடவுள் தன்மையுடன் எங்கும் போற்றப் பெற்றுள்ளது. வந்தது என்றது இருள் நீக்கவந்த அதன் அருள் நோக்கி. கைவிளக்கு எனத் திங்களை விளக்கிய கவி மேலும் தொடர்ந்து வருணிக்கின்றார்.

2. அரக்கர்கள் செய்துவருகின்ற பாவம் ஆனது தருமத்தை நிலைகுலைத்துத் தலையடக்கி நின்றது. யாதொரு செயலுமின்றித் தளர்ந்து தவித்துக் கிடந்த அது இன்று இராமன் வனத்துக்கு எழுந்து வருவதை அறிந்ததும் பெருமகிழ்ச்சி அடைந்தது; "இனி நம் பகை தொலைந்தது; நாம் இனிது வாழலாம்" என உவகை மீதூர்ந்த அந்தத்தரும தேவதையின் திருமுக மண்டலம் போல் ஆகாயத்தே சந்திரன் சுந்தரமாய்ப் பொலிந்து தோன்றினன்.

"மருமத்துத் தன்னை ஊன்றும் மறக் கொடும்பாவம்"

என்றது தருமத்தை உதைத்துக் கீழே தள்ளி மேல் ஓங்கி நிற்கும் பாவத்தின் வளர்ச்சியும் கிளர்ச்சியும் விளக்கி நின்றது. மருமம் = மார்பு. நெஞ்சில் மிதித்து நிலத்தில் தள்ளியுள்ளது என்பதாம்.

"உரும் ஒத்த சிலையினுரை ஒருப்படுத்து உதவிநின்ற, கருமத்தின் விளைவை எண்ணி" என்றது சக்கரவர்த்தியாய்ச் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்க வேண்டியவனை முடியைப் பறித்துக் காட்டுக்கு அனுப்பியுள்ள விதியின் அதிசய ஆற்றலையும், அரிய பெரிய உதவியையும் நினைந்து நினைந்து உவந்து வந்துள்ளமை உணர. உறுவது தெரியவே தருமம் மிக உவந்தது.

இங்ஙனம் பேருவகையுடன் உள்ளம் களித்துத்துள்ளி வந்திருத்தலால் முகம் எழில் சிறந்து ஒளிமிகுந்து நின்றது.

தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது தனிவெண் திங்கள் சானகி நாயகன் கானகத்துக்கு வருவதைக் கண்டதும் தருமதேவதை இவ்வளவு பெருமகிழ்ச்சி கொண்டது. உருவக அணியில் அரிய பல பொருள்கள் அடங்கியுள்ளன.

இவ் வில்வீரன் எழுந்ததை நோக்கி அறக்கடவுள் மகிழ்ந்தது என்றது மேலே விளையவுள்ள நன்மைகளையெல்லாம் நன்கு புலப்படுத்தி நின்றது.

3. அரசிளங் குமரன் துணைகளுடன் இரவில் நடந்து செல்வதைப்பார்த்துப் பரிதபித்து இரங்குவன போல் செங்கழுநீர், ஆம்பல் முதலிய பூக்கள் யாவும் குவிந்திருந்தன. நிலவில் மலரும் இயல்பினையுடைய குமுதமும் செவ்வையாக மலர்ந்து விரியாமல் கவ்வையாகக் கவிழ்ந்திருந்தமையை உண்மையால் விளக்கித் தலைவன்பால் அகிலமும் அமைந்துள்ள அன்புரிமையை இன்ப நலம் கனிய உணர்த்தினர்.

"ஆம்பலும் என்றபோது நின்றபோது அலர்வது உண்டோ?" அலா வரியதே அலராத போது வேறு மலர்கள் அலருமா? மலர்மகள் நாயகன் கால்நடையாய் வருவதைக் கண்டு பூக்கள் எல்லாம் வாடி வருந்தின. காம்பு = மூங்கில். ஓங்கி வளர்ந்துள்ள மூங்கில்கள் அடர்ந்தது என வனத்தின் பாங்கு தெரிய வந்தது.

கரியவன் வறுமை என்றது அரசதிருவை இழந்து பரதேசிக் கோலமாய் வருவதைக் காட்டி உயிரிரக்கத்தை ஊட்டியது.

ஓரறிவுயிர்களும் உருகி நின்றன என்றமையால் அக்கரியவன் பெருமையும் அருமையும் நேரறிய நேர்ந்தன.

4. வெண்மையான நிலவிலே மூவரும் நடந்துசென்ற காட்சி யாவரும் கண்டு மகிழ அழகு மருவி ஆர்வம் பெருகி வந்தது.

"அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும், அழகன் தன்மேல்
எஞ்சலில் பொன் போர்த்து அன்ன இளவலும்"

இந்தச் சோடிகளை நெஞ்சம் களித்து நேரே காண்கின்றோம். இணையில்லாத துணைவர் இருவரை இணைத்து நிறுத்தி இருவகை நிறத்தில் ஒருமுகமாக ஓர் ஓவியக்காட்சியைப் புதுக்கியிருக்கிறார்.

உருவப் பொலிவிலும், அவயவ அமைதியிலும், சமுதாய சோபையிலும் இலக்குவன் இராமனை நேர் ஒத்தவன். மூத்தவன் பசுமை நிறம்; இளையவன் பொன்மை நிறம்; இவ்வளவே வேற்றுமை. நிற பேதத்தைத் தவிர வேறு யாதொரு பேதமும் ஏதும் இல்லை. அபேத நிலையினர்.

பசிய கோலத் திருமேனியனை இராமன் மீது ஓர் உயர்ந்த ஒளி நிறைந்த தங்க அங்கியைப் புனைந்து பார்த்தால் எப்படி இருக்குமோ அப்படியே இலட்சுமணன் அமைந்துள்ளான்.

உணர்வு நலத்திலும் உருவ நிலையிலும் அழகமைதியிலும் முன்னவனையே பின்னவன் முழுதும் ஒத்துள்ளமையை இன்னவாறு இனிது காட்டினார்.

"வெஞ்சிலைப் புருவத்தாள் தன் மெல்லடிக்கு ஏற்ப வெண்ணூல்
பஞ்சிடைப் படுத்தது என்ன வெண்ணிலாப் பரப்பப் போனார்."

சீதையின் மெல்லிய திருவடி யாதும் வருந்தாமல் இனிது நடந்து செல்லும்படி நல்ல வெண்பஞ்சை வழி முழுவதும் விரித்து வைத்தது போல் சந்திரன் நிலவைப் பரப்பியிருந்தான். சொல்லிய மூவரும் உல்லாசமாய் நடந்து உவந்து போயினர்.

5. இதுவரையும் அரண்மனையை விட்டு வெளியே போய் அறியாத அதிசுகியான சானகியும் நாயகன் பின்னே கானகம் நோக்கி நடந்து சென்றாள். காதல் கனிந்து நின்றபோது நோதல் யாதும் தெரியாது. உள்ளத்தில் உழுவலன்புடையவர் உலக அல்லல்களை மதியார்; எல்லையில்லாத ஆற்றல்களுடன் அவர் தொழில் ஆற்றிக் காதலர்பால் களியூக்கி வருவர்.

"உறுவலி அன்பின் ஊங்கு ஒன்று உண்டு என உணர்வது உண்டோ?" உத்தம நாயகியின் அன்புநிலை இங்ஙனம் வியந்து

போற்ற நின்றது. அன்பின் ஊங்கு வலி உண்டோ? என்றது அன்பைக் காட்டிலும் சிறந்த ஆற்றல் யாண்டும் இல்லை என்றவாறு. ஊங்கு=மிகுதி, சிறப்பு.

அன்பு என்பையும் கொடுக்கும்; உடல் பொருள் ஆவி எவையும் துணிந்து உதவச்செய்யும் ஆதலால் தன்னலம் துறந்து எந்நலமும் உரிய காதலனுக்கே உரிமையாக்கி அவனை எவ்வழியும் பிரியாமல் உருகிச் செல்லும் அரிய காதலியின் பெரிய அன்பு நிலையை இங்ஙனம் புகழ்ந்து பாராட்டினர்.

"பாடகச் சீறடி பரற்கை உழவா
காடிடை இட்ட நாடுநீர் கழிதற்கு
அரிதிவள் செவ்வி அறிகுநர் யாரோ" (சிலப்பதிகாரம்,10)

காட்டிடையே கோவலன் பின் சென்ற கண்ணகிக்கு இரங்கி இப் பாட்டு வந்துள்ளது. உழுவலன்புகள் தொழில் புரிகின்றன.

சீறடி நீர்க் கொப்பூழின் நறியன ஆன பிராட்டி காதலன் பின் ஆதர மீதூர்ந்து போயினள். மெல்ல ஊதினும் நீர்மேல் குமிழி ஒல்லையில் உலைந்து போம்; அத்தகைய மெல்லிய செல்ல அடிகள் கல்வழியில் நடந்து போயினமையால் அந்த அன்புரிமையை வியந்து நண்பின் பண்பை நயந்து போற்றினர்.

"தாதை அனைய திருவெங்கை வாணர் தடஞ் சிலம்பில்
சீதை யொடுவரு மாலனையாய்! இத் திருந்திழையாள்
கோதை வெயிலிடைப் பட்டனையாள்; எம்குடிலில் வைகி
மாதை யுடன்கொண்டு நாளை உன் ஊர்க்கு வழிக்கொள்கவே."

(திருவெங்கைக்கோவை)

காதலரோடு தொடர்ந்து சுரம் போகும் காதலிகளுக்குத் தன் கணவன் பின் கானகம் போன சானகியைக் கோவைத் துறையில் இவ்வாறு உவமை கூறி யிருக்கின்றனர்.

இங்ஙனம் தலைமை அன்புக்கு நிலையமான மனைவியும் தம்பியும் உடன்வர இராமன் தென்திசை நோக்கி இரவு நடந்து வந்தான். இரண்டு யோசனை தூரம் வரவும் சூரியன் உதயமாயினன்.

விடிந்த பின் நடந்தது.

இந்த மூவரையும் பிரிந்து வருந்தி "அருவிபாய் கண்ணும்; புண்ணாய் அழிகின்ற மனமும் உடையனாய்" அலமந்து நொந்து

தேரை நடத்திக் கொண்டுபோன சுமந்திரன் ஊரை அடைந்ததும், உற்றது மொழிந்ததும், கொற்றவன் மடிந்ததும் முதலாயின முன்னமே கூறப்பட்டுள்ளன

## குடிசனங்கள் மீண்டது.

சோலையைப் புடைசூழ்ந்து இரவு அயர்ந்து படுத்திருந்த நகரமாந்தர் பொழுதுவிடியவும் எழுந்தார். இராமனைப் பார்த்தார். காணேம். உள்ளம் கலங்கி அயல் எங்கும் ஓடித் தேடி உருகித் துடித்தார். தேரின் சுவடு சிறிது தூரம் தென்பால் படிந்து பின்பு அயோத்தியை நோக்கிச் சென்றிருந்தமையால் அதனைக் கண்டு நம் ஐயன் ஊருக்கே மீண்டு போயுள்ளான் என்று தேறி அனை வரும் ஒருங்கே திரண்டு மாறி வந்தார். இளவரசை அன்று அவர் பிரிந்து வருந்தியது பெருந்துயரமாயது.

வருந்தா வண்ணம் வருந்திஞர் மறந்தார்
　　தம்மை வள்ளலும் அங்கு
இருந்தான் என்றே இருந்தார்கள் ;
　　எல்லாம் எழுந்தார் அருளிருக்கும்
பெருந்தா மரைக்கட் கருமுகிலைப்
　　பெயர்ந்தார் காணர் பேதுற்ருர்
பொருந்தா நயனம் பொருந்தி நமைப்
　　பொன்றச் சூழ்ந்த தெனப்புரண்டார். (1)

எட்டுத்திசையும் ஓடுவான் எழுவார்
　　விழுவார் ; இடர்க் கடலுள்
விட்டு நீத்தான் நமை என்பார்;
　　வெய்ய ஐயன் வினை என்பார்;
ஒட்டிப் படர்ந்த தண்டகம்இவ்
　　வுலகத் துளதன்ருே உணர்வைச்
சுட்டிச் சேர்தல் ஆற்றுதுமோ
　　தொடர்தும் தேரின் சுவடென்பார். (2)

தேரின் சுவடு நோக்குவார்
　　திருமா நகரின் மிசை திரிய
ஊருந் திகிரிக் குறி ஒற்றி
　　உணர்ந்தார் எல்லாம் உயிர் வந்தார்

ஆரும் அஞ்சல் ஐயன் போய்
அயோத்தி அடைந்தான் என அசனிக்
காரும் கடலும் ஒருவழிக்கொண்
டார்த்த என்னக் கடிதார்த்தார். (3)

மான அரவின் வாய்த்தீய வளைவான்
தொளைவாள் எயிற்றின் வழி
ஆன கடுவுக்கு அருமருந்தா
அருந்தும் அமுதம் பெற்றுய்ந்து
போன பொழுதிற் புகுந்த உயிர்
பொறுத்தார் ஒத்தார் பொருவரிய
வேனில் மதனை மதனழித்தான்
மீண்டான் என்ன ஆண்டையார். (4)

ஆறு செல்லச் செல்லத் தேராழி கண்டார் அயலப்பால்
வேறு சென்ற நெறி காணார் விம்மா நின்ற உவகையராய்
மாறி உலகம் வகுத்த நாள் வரம்பு கடந்து மண் முழுதும்
ஏறி ஒடுங்கும் எறிகடல் போல் எயில்மா நகரம் எய்தினர்.

(தைலமாட்டு, 79-83)

நகர மக்களுடைய அன்பும் ஆர்வமும் இங்ஙனம் பொங்கியிருக்கின்றன. கவிகளில் பொதிந்துள்ள பொருள்களையும் கருத்துக்களையும் குறிப்புக்களையும் கருத்தூன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். உயிர்களின் கவலைகளும் உவகைகளும் செயல்களில் ஒளிர்கின்றன.

பொது சனங்கள் இராமன்பால் பூண்டுள்ள உரிமைகளையும் உயிர்க்காதல்களையும் இடங்கள்தோறும் நாம்கண்டு வருகின்றோம்.

இப் பெருமானுடைய இனிமைப் பண்பும் கலியாண குணங்களும் மனித வுலகத்தை வசப்படுத்திப் புனித நிலையில் எங்கும் பொங்கி நிற்கின்றன.

அருள் இருக்கும் பெருந் தாமரைக்கட் கருமுகிலை என்ற வாசகம் வாசம் மிகவுடையது. பல முறையும் பொருள் உணர்ந்து சிந்திக்க வுரியது.

தன்பால் பேரன்பு மண்டித் தொடர்ந்து வந்து புடைசூழ்ந்திருந்த மன்பதையை இடையே துன்பம் அடையும்படி துறந்து விட்டுக் கரந்து போன கள்ளப்பிரானை கருணைக்கண்ணன் என்ற கா

அவன் உள்ள நிலையை உள்ளே ஊன்றி உணர்ந்து ஆன்ற உண்மையை அறிந்து கொள்ள வந்தது

தன்னுடன் கூட வந்து நகரவாசிகள் காட்டில் அல்லலுற லாகாதே! என்னும் அருளினாலேயே மெல்ல மறைந்து சென்றான் ஆதலால் அந்தச் சிவ காருணியத்தையும் தேவ காரியத்தையும் உணர்ந்து கொள்ளும்படி கவி கிளர்ந்து கூறினார்.

மான வீரன் செயல் ஞானநீர்மை யுடையது; ஆனவரையும் ஆராய்ந்து அமைதி காண வேண்டும்.

வேனில் மீதனை மதன் அழித்தான்

வசந்தகால மன்மதனும் இராமனை ஒருமுறை நேரே கண்டு தான் ஒரு அழகுத் தெய்வம் என்னும் செருக்கு அறவே ஒழிந்து இழிந்து போயுள்ளமையை இது தெளிந்து கொள்ள வந்தது. மதன் = களிப்பு, தருக்கு. பேரழகின் பெருமிதம் தெரிந்தது.

கதாநாயகனுடைய வடிவழகை வெளியே சொல்லி மகிழ்வதில் கவிக்கு ஒரு தனி ஆசை. அந்த அவாக்கள் எழிலில் மூழ்கிப் பலவகை நிலைகளில் ஒளி வீசி வருகின்றன. அழகைக் குறித்து வரும் மொழிகளிலும் அழகு சுரந்திருக்கின்றது. அதனை ஊன்றி நோக்குவார்க்கு உளமகிழ்வு தருகின்றது.

தங்கள் கோமகன் ஊருக்கு மீண்டிருப்பதாக நினைந்து அயோத்தியை அடைந்த மக்கள் அங்கே அவன் இல்லாமை தெரிந்ததும் நெஞ்சம் துடித்தார்; நம்மை வஞ்சனை செய்து அஞ்சன வண்ணன் அகன்று போய் விட்டானே! என ஏங்கி நொந்து எல்லாரும் அல்லலில் உழந்தார். சொல்ல முடியாத துயரங்களில் செயலழிந்து நின்றார்.

பிள்ளைப் பிரிவால் தசரதன் முடிந்தான். தேசம் முழுவதும் உயிர் போன உடல் போல் உலைந்திருந்தது. வசிட்டர் ஆறாத் துயருடன் அரசை மேல்பார்த்துப் பரதனுக்கு ஆள் அனுப்பி விட்டு விதிவலியை நினைந்து வெதும்பி யிருந்தார்.

அங்கே அவ்வாறாக இங்கே வந்த இவர் நிலையை இனி நோக்குவோம். மந்திரி தேருடன் ஊர் ஏக இவர் சீருடன் வனம் நோக்கி எழுந்தார். அடவியை அடைவது அகமகிழ்வாயது.

## உதய காலத்தில் உவந்து சென்றது.

இரவு நிலவில் நடந்துவந்த மூவரும் சூரியனைக் கண்டதும் பேருவகை கொண்டார். மேலும் தொடர்ந்து தென் திசை வந்தார். உதய காலத்தில் இவர் உல்லாசமாய் நடந்து சென்றது ஒரு பெரிய இனிய காட்சியாய் மருவியிருந்தது. அந்தக் காட்சிகளை அயலே வருகின்ற செய்யுள்களில் இயல்பாகக் கண்டு மகிழலாம்.

வெய்யோன்ஒளி தன்மேனியின் விரிசோதியில் மறையப்
பொய்யோஎனும் இடையாளொடும் இளையானொடும் போனான்
மையோமரக தமோமறி கடலோமழை முகிலோ
ஐயோ இவன் வடிவென்பதொர் அழியாஅழ குடையான். (1)

அளியன்னதொர் அரல்துன்னிய குழலாள்; கடல் அமிர்தின்
தெளிவன்னதொர் மொழியாள்; நிறை தவம்அன்னதொர் செயலாள்;
வெளியன்னதொர் இடையாளொடும் விடையன்னதொர் நடையான்
களியன்னமும் மடவன்னமும் நடமாடுவ கண்டான். (2)

அஞ்சம்பையும் ஐயன்தன தலகம்பையும் அளவா
நஞ்சங்களை வெலவாகிய நயனங்களை யுடையாள்
துஞ்சுங்களி வரிவண்டுகள் குழலின்படி சுழலும்
கஞ்சங்களை மஞ்சன்கழல் நகுகின்றது கண்டாள். (3)

மாகந்தமும் மகரந்தமும் அளகம்தரு மதியின்
பாகந்தரு நுதலாளொடு பவளம்தரும் இதழான்
மேகம்தனி வருகின்றது மின்னோடென மிளிர்பூண்
நாகம்தனி வருகின்றது பெடையோடென நடவா, (4)

தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவை அமுதின்
கிளைகட்டிய கருவிக்கிளர் இசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளர் விழிபோல்
களைகட்டவர் தளைவிட்டெறி குவளைத்தொகை கண்டான். (5)

அருப்பேந்திய கலசத்துணை அமுதுஏந்திய மதமா
மருப்பெந்திய எனலாமுலை மழைஏந்திய குழலாள்
கருப்பேந்திர முதலாயின கண்டாள் இடர் காணாள்
பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள். (6)

பன்னந்துகள் தரளந்தொகு படர்பந்திகள் படுநீர்
அன்னந்துயில் வதுதண்டலை அயல்நந்துறை புளினம்
சின்னந்தரு மலர்தந்தன செறிநந்தன வனம்நன்
பொன்னந்திய நதிகண்டுள மகிழ்தந்தனர் போனார். (7)

கால்பாய்வன முதுமேதிகள் கதிர்மேய்வன கடைவாய்
பால்பாய்வன நறைபாய்வன மலர்வாய்அளி படரச்
சேல்பாய்வன கயல்பாய்வன செங்கால் மடவன்னம்
போல்பாய்புனல் மடவார்படி நெடுநாடவை போனார்.

(கங்கைப்படலம், 1-8)

உள்ளே பொதிந்துள்ள மபொருள்நிலைகளை விரும்பி நோக்காமலே வெளியே உல்லாசமாய்ப் பாடி மகிழும்படி இந்தப் பாடல்கள் சந்தச்சுவை பொலிந்து செவிக்கும் சிந்தைக்கும் இன்ப நலம் ததும்பி இருக்கின்றன. மொழிகள் எழில்சுரந்து அதிசய சாதுரியங்களாய்த் தொழில் புரிந்து வருகின்றன. அன்பும் அறிவும் பண்பும் பரவி அரியபொருள் வளங்களை அருளி மிளிர்கின்றன.

"வெய்யோன் ஒளி தன்மேனியின் விரிசோதியில் மறையப்
பொய்யோஎனும் இடையாளொடும் இளையானொடும் போனான்.

அதிகாலையில் நம் மான வீரன் கானகம் நடந்த காட்சியை இங்கே கண்டு வியந்து கருதி மகிழ்ந்து உரிமை கூர்ந்து நிற்கின்றோம். வெய்யோன் = சூரியன். வெம்மையான கிரணங்களையுடையவன் என்னும் காரணத்தால் இந்தப் பெயர் வந்தது.

உதய காலத்தில் இளஞ் சூரியனிடமிருந்து செஞ்சோதி எழுந்தது; அவ் ஒளி இராமன் திருமேனியில் படிந்தது; படியவே ஒரு புதிய பசிய சோதி எதிரே அதிசயமாய் வீசியது; இள வெயில் நிறம் மாறி அயல் எங்கும் பச்சையாய்ப் பசுமைஒளி படர்ந்தது ஆதலால் "தன் மேனியின் விரிசோதியில் வெய்யோன் ஒளி மறைய" என்றார்.

பளிங்கு கண்ணாடி முதலிய ஒளியுடைப் பொருள்களில் வெயில் வந்துபடின் அவற்றிலிருந்து எதிர் ஒளி வீசும்; அந்தப் பிரதி பிம்பநிலை இங்கே அரிய நிலையில் பிரதி பலித்தது.

உயர்ந்த ஒளி நிறைந்த மரகத மணி போன்ற பச்சைத் திருமேனியில் சிவந்த கதிர் ஒளி படவே எழில் மிகுந்த அத் திருமேனியிலிருந்து பசுமை சோதி மிளிர்ந்து கிளர்ந்து வெளி வீசியது; அதனால் அச் சிவந்த வெயில் பசந்து தோன்றியது.

பரமபதநாதன் பசிய ஓர் சூரியன்போல் உதயமாகியுள்ளான்; அவன் எதிரே உலக சூரியன் நிலைமாறி ஒளி மறையலானான்.

பேரெழிலும் பேரொளியும் உடையது என உருவ நிலையில் உள்ளம் உருகி அதனை உலகம் அறியக் கவி இவ்வாறு அழகு மொழியில் வெளியிட்டருளினர்.

''பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே!''

என்றபடி வடிவழகில் நம் கவியரசர் பரவசமாயுள்ளார்.

''மையோ! மரகதமோ! மறிகடலோ! மழைமுகிலோ!
ஐயோ இவன் வடிவு! என்பது ஓர் அழியா அழகுடையான்.''

இந்த விழுமிய மொழி நடை என்றும் அழியா அழகுடைய தாய்ச் சுவை சுரந்து உவகை மலிந்து ஒளி புரிந்து வந்துள்ளது.

நான்கு உவமானங்களை எண்ணி நோக்கி ஆற்றாமை தீராமல் அவமானமாய் அவசமாயிருக்கிறார்.

பொதுவாக முதலில் அஞ்சன வண்ணமே அண்ணல் மேனி என்று கருதினர். நிறப்பண்பில் ஓரளவு ஒப்பாயினும் அருமை இல்லையே! என்று தள்ளி மரகதமணியை அள்ளி நோக்கினர்; அப் பசிய மணி அருமையும் பெருமையும் உடையது ஆயினும் எவரிடமும் விலைமதிப்பில் அடங்கியது ஆகலான் யாராலும் அளவிட லரிய குண நலங்களும் நிலைகாண முடியாத கம்பீரமும் இயல்பாகவே வாய்ந்துள்ள இவ் வுயர் வீரனுக்கு உவமம் ஆகாது என்று ஒதுக்கிக் கடலை எதிரே சீர் தூக்கிப் பார்த்தார். ஆழ்ந்து பரந்து விரிந்து நிறைந்து வரம்பு காண முடியாத வகையில் சிறிது இசைந்திருப்பினும் நீரெல்லாம் உப்பாய் உயிரினங்களுக்கு நேரே பயன் படாமல் நிலை திரிந்து கிடத்தலால் இனிய நீர்மையே யாண்டும் நிறைந்துள்ள இப்புனிதனுக்கு நிகராகாது என மறிகடலை இடைவிடுத்து மழைமுகிலை எடுத்துத் தமது நுழைமதியால் தூக்கி நேரே நோக்கினர்; கைம்மாறு கருதாமல் உலகிற்கு எல்லாம் ஒருங்கே இனிது பயன் படுகின்ற கார்மேகமே சிராமன் மேனிக்கு நேராம் என நினைந்தார். நினைந்தவர், ''குறித்த காலத்தில் மட்டும் மழையைப் பொழிந்துவிட்டு ஓய்ந்து ஒளிந்து போகின்ற மழைமுகிலையா, என்றும் எங்கும் ஓயாது அளிபுரிந்து

வருகின்ற அழகனுக்கு உவமை கூறுவது? '' என உளம் மறுகி நாணினர். இங்ஙனம் எல்லா வகையிலும் எத்தகைய நல்ல பொருள்களும் யாதும் ஒவ்வாத திவ்விய வடிவுடைய இச் சுகுண சுந்தரன் வெவ்விய காட்டுக்குப் போக நேர்ந்தானே! என்று சோகம் மீதூர்ந்தமையால் ஐயோ! என இரங்கி அயர்ந்துழங்கினர்.

அல்லல் அடைந்து அடவிக்குச் செல்ல நேர்ந்தும் யாதொரு கவலையும் இல்லாமல் அரியாசனத்தில் அமர்ந்துள்ளது போலவே பெருமிதமும் பொலிவும் திருமுகத்தில் பெருகி இருந்தமையால் அழியா அழகு உடையான் என விழி யிமையாமல் விழைந்து நோக்கி வழி முழுதும் கண்ணுய் வியந்து நின்றார்.

மனிதன் எவ்வளவு அழகுடையனுயினும் கால வேற்றுமையால் கோலம் திரிவன்; இளமையில் விளங்கி நின்ற அழகு முதுமையில் அழியும்; அங்ஙனம் யாதும் திரியாமல் யாண்டும் குறையாமல் என்றும் ஒருபடியாகவே நின்று நிலவிய திவ்விய சவுந்தரியம் ஆதலால் '' அழியா அழகு '' என அது வழிபாடு செய்ய வந்தது.

அழகன் கானகம் போனன் என்பதை இவ்வளவு அழகாகக் காட்டி யிருக்கிறார். அஞ்சனம் முதலிய நான்கும் உருவ இயல், ஒளி நயன், அரிய வியன், பெரிய பயன்களை முறையே விளக்கின.

'' கார் மலர்ப்பூவை கடலை இருள் மணி
அவை ஐந்தும் உறழும் அணி கிளர் மேனியை. ''

(பரிபாடல், 13)

திருமால் மேனிக்கு ஐந்து உவமைகள் இதில் வந்துள்ளமை அறிக. அக் கரியவன் பசிய கோலத் திருமேனியனுய்ப் புதிய ஒரு அதிசய அழகுடன் அவதரித்து உலகம்உய்ய வெளிஏறினன்.

பொய்யோ எனும் இடையாள் எனச் சீதையைக் குறித்தது '' இல்லை உண்டு என்ன நின்ற இடை '' என முன்னம் சொன்ன அடையாளத்தை அடையாக்கி எழுந்தது. பெண்மைக்குரிய உண்மையான நல்லியல்புகள் யாவும் ஒருங்கே வாய்ந்த இனிய அம் மெல்லியல் வலிய கல்லியல் கானில் காதலன் பின் செல்லும் ஆதரத்தின் அருமைப்பாடும் உரிமையும் அறிய வந்தது.

யாதொரு அடையும் இல்லாமல், நேரே பேரும் சொல்லாமல் இளையான் என்று மட்டும் இலட்சுமணனைச் சுட்டி விட்டது முன்னே செல்லும் அந்த அண்ணனுக்கு என்ன வகையிலும் யாதும் இளையாத உண்மைத் தம்பி என்னும் தன்மையும் தகவும் நுண்மையாக உணர்ந்து கொள்ள

2. இவ்வாறு உரிய துணைகளுடன் இனிது சென்ற இராமன் பல்வகைக் காட்சிகளையும் பார்த்துக் கொண்டு அன்னங்கள் மலிந்த நாட்டு வழியே ஆர்த்தி மீதூர்ந்து போனான்.

3. கண் அழகில் தலைசிறந்துள்ள சீதை தனது நாயகன் பின்னே நடந்து செல்லுங்கால் வழி அயலே தடாகங்களில் பூத்துள்ள தாமரை மலர்களைக் கண்டாள். இதழ் விரிந்து சிவந்து மலர்ந்திருக்கின்ற அந்தச் செங்கமலங்களைப் பார்த்தவள் உடனே தன் கணவன் பாதங்களை விழைந்து நோக்கினாள்; அந்த அருமைத் திருவடிகளில் அமைந்துள்ள அழகும் சோபையும் அவற்றினிடம் இல்லாமையை உணர்ந்தாள்; உடனே தன் உள்ளே பெருமிதமும் பெருமகிழ்ச்சியும் அடைந்தாள்.

கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள்.

அழகுடையன என்று உலகில் மிகவும் புகழ் பெற்றுள்ள அக் கமலங்கள் இக்கழல் எதிரே பொலிவிழந்து நின்றமையால் அம் மெலிவு நோக்கி இவை சிரிக்கலாயின. கஞ்சம் = தாமரை. நீரில் பிறப்பது என்னும் ஏதுப் பெயர். கம் = நீர். சம் = பிறப்பு.

அஞ்சு அம்பு என்றது மன்மதனுடைய ஐந்து பாணங்களை. யாராலும் வெல்ல முடியாத மகா வீரனான இராமனது உள்ளம் முழுவதையும் கொள்ளை கொண்ட வல்லமையுடையன ஆதலால் சீதையின் கண் அழகை இவ்வண்ணம் புகழ்ந்து கூறினார்.

4. மேகம் மின்னலைத் தழுவி மிளிர்வது போலவும், ஒரு விழுமிய மதயானை தனது அழகிய பிடியோடு தொடர்ந்து செல்வது போலவும் இராமன் சானகியுடன் உல்லாசமாய் நடந்து சென்றான். பல்வகை நிலைகளும் பார்க்க நேர்ந்தன.

5. வழி அயலேயுள்ள வயல்களிலிருந்து உழவர்கள் களை பறித்து எறிந்திருந்தனர்; அக்களைகளாகிய குவளை மலர்களை

நோக்கி உடனே தனது மனைவியின் அழகிய விழிகளை விழைந்து பார்த்து இளநகை புரிந்து உளமிக உவந்து வியந்து போனான்.

செவ்விய தாமரை மலர்களைப் பார்த்துத் தன் கணவனுடைய கால் அழகுக்கு ஒவ்வாது என அவள் களித்திருக்கிறாள்; கரிய குவளைப் பூக்களை நோக்கித் தன் மனைவியின் கண் அழகிற்கு இணையாகாது என இவன் மகிழ்ந்திருக்கின்றான்.

வழியில் எதிர்ந்த காட்சிகளைக் கண்டு காதலர் உவந்திருத்தல் ஆதாரம் கனிந்து மாதுரியம் சுரந்திருக்கின்றது. காதலின் சுவைகள் ஓதுந்தோறும் இனியனவாய் உவகை புரிந்து வருகின்றன.

"தொளைகட்டிய கிளை மூட்டிய சுருதிச்சுவை அமுது" என்றது வேணுகானத்தை. கிளை = மூங்கில். மூங்கில் கழியால் செய்யப்பட்ட சிறிய புல்லாங்குழல் இசையையும், யாழின் இனிமையையும், செந்தேனையும், தீம் பாகையும் சுவையில் வென்ற அதிமதுரமான இனிய மொழிகளை யுடையாள் எனச் சீதையை இங்கே எழுதிக் காட்டி யிருக்கிறார். கிளவி = சொல். அதனை யுடையவளைச் சுட்டி நின்றது. சொல்லினிமையை விளக்கி வந்திருக்கும் விசேடணங்கள் பலமுறையும் படித்துச் சுவைத்து மகிழும்படி சுவை சுரந்திருக்கின்றன.

இவ்வாறு பலவகைக் காட்சிகளையும் பார்த்து வழி வருத்தம் தெரியாமல் களி மகிழ்வுடன் நடந்து போயினர்.

நீர்வளம் முதலிய பல செழுமைகள் நிறைந்துள்ள மருத நிலத்திடையே சென்றுள்ளமையால் குளுமையான இனிய காட்சிகள் காண நேர்ந்தன. எங்கும் வெளியே போகாமல் என்றும் அந்தப் புரத்திலேயே இருந்தவள் ஆதலால் இந்த நாட்டுப் புறக் காட்சிகள் சீதைக்குப் போதிசயங்களாய்ப் பெருகி நின்றன.

"கருப்பேந்திரம் முதலாயின கண்டாள் இடர் காணாள்
பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள்."

தன் காதலனோடு களித்து விளையாடிச் சீதை உல்லாசமாய் வழி நடந்து போயிருக்கும் ஒயிலினை இதில் நாம் காண்கின்றோம்.

கருப்பு எந்திரம் என்றது கரும்புகளிலிருந்து சாறு எடுக்கும் கருவியை. பலவகையான யந்திர சாதனங்கள் அந்தக் காலத்தில்

இந்த நாட்டில் நிறைந்திருந்தமையை இதனால் அறிந்து கொள்ளலாம். முந்தைய நிலைகள் சிந்தனைக் குரியன.

இந்திர திருவுடையளாய் அரண்மனையில் இருந்த சுந்தரச் சுகுமாரிக்கு இந்த எந்திரக் காட்சி ஓர் அதிசயமாயது. கானத்தைக் கண்டபோது அது சிறியதாயினும் பெரிய மகிழ்ச்சி உண்டாகின்றது.

உரிய நாயகன் மருவியுள்ளமையால் காட்டு வாழ்க்கையின் கடினத்தை யாதும் கருதாமல் இப்படி உவந்து போனாள். காதலியும் காதலனும் இவ்வாறு ஆதரமீதூர்ந்து செல்லச் சோதரன் அயலே உழுவலன்புடன் தொழுது பின் சென்றான். வன வாசத்தின் வருத்த நிலை ஒன்றும் தெரியாமல் அவர் களித்துச் சென்றது போல் அவர் செலவை விளக்கி வந்துள்ள இக்கவிகளைப் படிக்கும் தோறும் நாமும் களித்து நிற்கின்றோம்.

## தவசிகள் கண்டது.

இங்ஙனம் நடந்து வந்தவர் முற்பகல் பதினொரு நாழிகை அளவில் கங்காநதியை அடைந்தனர். அடையவே அங்கே நதி தீரங்களில் அமர்ந்து தவங்கள் புரிந்து கொண்டிருந்த முனிவர்கள் எல்லாரும் ஒருங்கே திரண்டு வந்து இராமனை எதிர் கொண்டு கண்டு பெருங்களிப்புடையராய்ப் பேணி நின்றார்.

உலகைத்தைத் துறந்த தவசிகள் இவனைக் காணவே உவந்து புகழ்ந்து உருகி நின்ற நிலை பெரிய அதிசயமாய்ப் பெருகி எழுந்தது. அவருடைய அன்பும் ஆவலும் அளவிடலரியன. எங்கும் என்றும் காணாத பேரின்பநிலையைப் பெற்றவர் போல ஆரின்பமுடையராய் அவர் உருகிப் போற்றிப் பருகி நின்றனர்.

கங்கை என்னும் கடவுட் டிருநதி
தங்கி வைகும் தபோதனர் யாவரும்
எங்கள் செல்கதி வந்ததுஎன் றேமுறு
அங்கண் நாயகற் காணவந் தண்பினார். (1)

பெண்ணின் நோக்கும் சுவையிற பிறர் பிறர்க்கு
எண்ணி நோக்கி இயம்பரும் இன்பத்தைப்
பண்ணின் நோக்கும் பராஅமு தைப்பசுங்
கண்ணின் நோக்கினர் உள்ளம் களிக்கின்றார். (2)

எதிர்கொடு ஏததினர் இன்னிசை பாடினர்
வெதிர்கொள் கோலினர் ஆடினர் வீரனைக்
கதிர்கொள் தாமரைக் கண்ணனைக் கண்ணினால்
மதுர வாரி அமுதென மாந்துவார். (3)

மனையின் நீங்கிய மக்களை வைகலும்
நினையும் நெஞ்சினர் கண்டிலர் நேடுவார்
அனையர் வந்துற ஆண்டெதிர்ந் தார்களின்
இனிய மாதவப் பள்ளிகொண் டெய்தினார். (4)

பொழியும் கண்ணிற் புதுப் புனல் ஆட்டினர்;
மொழியும் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்;
அழிவில் அன்பெனும் ஆரமிர்து ஊட்டினர்;
வழியில் வந்த வருத்தத்தை வாட்டினர். (5)

காயும் கானிற் கிழங்கும் கனிகளும்
தூய தேடிக் கொணர்ந்தனர் தோன்றல் நீ
ஆய கங்கை அரும்புனல் ஆடினை
தீயை ஓம்பினை செய்யமுது என்றனர். (6)

(கங்கைப்படலம், 10-15)

கங்கைக் கரையில் வாசம் செய்திருந்த மாதவர்கள் யாவரும் செங்கைச் சிலை இராமன் வந்ததை அறிந்ததும் உள்ளங்களித்து விரைந்து வந்து விழைந்து கண்டு உவந்து கொண்டாடி நின்ற ஆர்வ நிலைகளை நோக்கி இங்கே நாம் ஆனந்தம் அடைகின்றோம்.

எங்கள் செல்கதி வந்தது என்று தவசிகள் அனைவரும் பொங்கிய ஆவலோடு ஓடி வந்திருத்தலால் வந்துள்ளவனது மகிமையும் மாட்சியும் சிந்தனை செய்யநேர்ந்தன. ஏமஉறு=மகிழ்ச்சி மீதூர்ந்து. ஏமம்—மகிழ்ச்சி, இன்பம்.

செல்கதி என்றது பரமபதத்தை. தாங்கள் அரிய தவம் செய்து அடையத்தக்க பெரிய கதி மோட்சம் எளிதே வலிய வந்து தங்கள் கையில் கிடைத்தது என்று முனிவர்கள் நெஞ்சம் களித்து அஞ்சன உருவனை ஆவலித்துள்ளனர்.

தேனை வண்டுகள் மொய்த்தல்போல் இக்கோமகனை மாதவர் விழைந்து மொய்த்தனர். அண்முதல்=நெருங்குதல்.

இராமனை நெருங்கி நேரே கண்டபொழுது மாதவர்கள் கொண்ட உவகைநிலை எல்லையில்லாதது; சொல்லில் அடங்காத அதனை ஓர் உவமையால் கவி சொல்லியிருக்கிறார்.

அழகிய ஒரு பருவமங்கையை விழுமிய குலமகன் ஒருவன் தனியே கண்ட போது அவன் உள்ளங் கொண்ட களிப்பே முனிவர் உள்ளங்களில் அன்று மண்டி நின்றது.

காதல் நலம் கனிந்த அந்த இன்பச் சுவையை இன்னபடி என்று பிறர்க்குத் தெளிவாக ஓதமுடியாது ஆதலால் "பெண்ணின் நோக்கும் சுவையின் இயம்பு அரும் இன்பம்" என்றார்.

கன்னி மாடத்திலிருந்து இராமனைக் கண்டவுடன் சீதை அன்று உள்ளம் உருகி நின்ற உவகைப் பெருக்கையே கங்கைக் கரையிலிருந்த மாதவர்களும் இன்று மருவி நின்றனர் என்பது நுணுகி யுணர வந்தது.

அந்தப் பெண் நோக்கிச் சுவைத்த சுவையையே இந்த ஆண்களும் நோக்கி இங்கே சுவைத்துச் சுகித்தனர்.

உலகக் காதலைத்துறந்து மோட்ச இச்சையராய் மூண்டுள்ள முமூட்சுக்களுக்குத் தாங்கள் யாண்டும் இச்சித்து அருந்தவம் புரிந்து வருகின்ற பரம் பொருள் பச்சை மேனியாய்க் கைச்சிலை ஏந்தி ஈண்டு நேரே வந்து காட்சி தந்து அருளினமையால் அவர் இங்ஙனம் கழிபேருவகையாளராய்க் களிக்கலாயினர்.

காணமுடியாத பேரின்பச் சுவைக்குக் கண்டறிந்த சிற்றின்ப ரசம் ஓரளவில் உவமையாய் நேரளவி நின்றது.

ஐம்புலன்களும் ஆரத்துய்க்கும் ஓர் இன்ப நிலையமாய்ப் பெண்ணின் சுவை மண்ணில் மன்னி இருத்தலால் எண்ணில்லாத இன்பச் சுவையை எண்ணியுணர இனமாய் அமைந்தது.

பண் என்றது வேதத்தை. போதம் கனிந்த வேதங்களால் நோக்கி மகிழும் ஆனந்த உருவன் என்பார் "பண்ணின் நோக்கும் அமுது" என்றார். பண் நோக்க உரியது கண் நோக்க வந்தது.

காதலாகிக் கசிந்து பாடிய ஆழ்வார்களுடைய பாசுரங்களையும் பண் என்னும் சொல் கண்எதிரே குறித்து நின்றது.

"வேதத்தின் முன் செல்க,மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன் முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க, குணம் கடந்த
போதக்கடல் எங்கள் தென்குருகூர்ப் புனிதன் கவி ஓர்
பாதத்தின் முன்செல்லுமோ தொல்லைமூலப் ப்ரஞ்சுடரே."

என்றமையால் வேதம் முதலிய எவற்றினும் ஆதிமூலப் பொருளைத் திருவாய்மொழியால் எளிது நோக்கி இனிது மகிழலாம் என்பது தெளிவாம்.

"எப்பொருளும் தானாய் மரகதக்குன்றம் ஒக்கும்
அப்பொழுதைத் தாமரைப்பூக் கண் பாதம் கை கமலம்
எப்பொழுது நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழி தொறும்
அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆரா அமுதமே."
(திருவாய்மொழி 2-5)

இங்ஙனம் பண்ணின் நோக்கும் பராவமுதம் ஆன இப்பெருமானை முனிவர்கள் கண்ணின் நோக்கிக் களித்தனர். பர = மேலான. பர அமுதம் பராவமுதம் என வந்தது.

பசும் கண் என்றது தண்ணளி நிறைந்த புண்ணியமுடைமை கருதி. உயிர்களுக்கு இரங்கியருளும் கண்ணோட்டமே கண்ணுக்குப் பசுமையாம். அந்த இரக்கம் இல்லையேல் பசையற்ற வன்கண்ணாய்ப் பழிக்கப் படும். அருள்நலங் கனிந்த பசுங்கண்கள் பசிய கோலத் திருமேனியைப் பார்த்து மகிழும் பாக்கியம் பெற்றன.

கருணைக் கண்ணுளருக்கே கருணைக் கடலான பரமன் காட்சி புரிந்தருள்கின்றான்.

ஞானக்கண்ணாலும் காணமுடியாத அரிய பொருளைத் தம் புண்ணியப் பேற்றால் நேரே ஊனக் கண்ணால் கண்டு முனிவர்கள் உவகை பூத்தனர்.

"பெண்ணின் நோக்கும் சுவை, எண்ணி நோக்கி இயம்பரும் இன்பம், பண்ணின் நோக்கும் பரா அமுது" எனக் கண்ணின் நோக்கிய புண்ணியர்கள் கருதி உருகியிருக்கும் கனிவையும் அழகையும் நுணுகி நோக்கி இங்கே நண்ணியுள்ள மூர்த்தியின் மகிமையையும், நிலைமையையும் ஓர்ந்து உணர்ந்து கொள்க.

3. உவகை மீதூர்ந்து விரைந்து வந்தவர் அருகு நெருங்கி ஆவலுடன் பார்த்து ஆனந்தம் அடைந்தனர்.

கதிர்கொள் தாமரைக் கண்ணனைக் கண்ணினால்
மதுரவாரி அமுதுஎன மாந்துவார்.

தபோதனர்கள் இராமனைக் கண்டு களித்திருக்கும் நிலைமையை இதில் கருதி மகிழ்கின்றோம். மாந்துதல் = அள்ளிக்

குடித்தல். நெடிய நீர் வேட்கையுடையவர் இனிய நறுநீரை அருமையாகக் கண்டபோது அவாவி ஓடி வாரிப் பருகுதல் போல் தவசிகள் அவசமாய்ப் பருகியுள்ளனர்.

என்ன ஆர்வம்! எவ்வளவு ஆவல்! எத்துணைக் காதல்!

மதுரவாரி அமுது என்றது இராமனது இனிய நீர்மையும் அரிய பண்புகளும் அளவிடலரியன என்பது அறிய வந்தது.

இந்தச் செந்தாமரைக் கண்ணனைக் கண்டு கண்டு அமுதம் மாந்தினர் போல அருந்தவரனைவரும் பெருங்களி கொண்டு ஒருங்கு திரண்டு உருகி நின்றனர்.

4. நெடு நாளாகக் காணுமையால் மறைந்து போன அருமை மக்களை இடையே எதிர்கண்ட தாய் தந்தையர்களைப் போல் அனைவரும் உள்ளங்களித்து உவந்து துள்ளினர்.

கண்டவர்கள் எல்லாரும் உள்ளடங்காத அன்பின் பெருக்கினுல் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர்; உபசார மொழிகள் புகன்றனர்; பத்திப் பரவசராய்ப் பாராட்டி நின்றனர்.

கண்ணின் புதுப் புனல் ஆட்டினர்; இன்சொல் மலர் சூட்டினர்; அன்பு அமிர்து ஊட்டினர் என்றமையால் அன்று அவர் காட்டியுள்ள அரிய உரிமைகளும் பெரிய உபசாரங்களும் காணலாகும்.

நீர்ஆட்டி, மலர்சூட்டி, அமுது ஊட்டிப் பூசிக்கும் தெய்வ வழிபாட்டின் திவ்விய நிலையை இது காட்டி நின்றது.

"வழியில் வந்த வருத்தத்தை வாட்டினர்" என இறுதியில் குறித்துக் காட்டியது அருந்தவர் புரிந்த ஆர்வ நிலைகளை நோக்கி இப்பெருந்தகை பேருவகையடைந்துள்ளமையை உணர்த்தியது.

பின்பு மூவரையும் தங்கள் தவச் சாலைக்கு மரியாதையுடன் அழைத்துச் சென்றனர். அருமையான இனிய காய் கனி கிழங்குகளைக் கொண்டுவந்து வைத்து உண்டு மகிழும்படி உபசரித்து வேண்டினர்.

நீர் ஆடி நியமம் முடித்த பின் உண்பதாக உறுதி கூறி இராமன் குளிக்கச் சென்றான். நதியில் முழுகிய நிலை அதி நயமுடையது. மதிநலம் தோய்ந்தது.

## கங்கையில் நீர் ஆடியது.

தனது அருமை மனைவியைக் கையில் பிடித்துக் கொண்டு இராமன் கங்கா நதியில் குளித்து நீராடினன். அந் நீர்மையைக் குறித்துவந்துள்ள கவிகள் சீர்மையை விளக்கிச் சிறந்த அறிவு நலங்களை உணர்த்தியிருக்கின்றன.

மங்கையர்க்கு விளக்கன்ன மானையும்
செங்கை பற்றினன் தேவரும் துன்பறப்
பங்கயத் தயன் பண்டுதன் பாதத்தின்
அங்கையிற் றரு கங்கையின் ஆடினன். (1)

கன்னி நீக்கரும் கங்கையும் கைதொழாப்
பன்னி நீக்கரும் பாதகம் பாருளோர்
என்னின் நீக்குவர் யானும் இன்று எற்றந்த
உன்னின் நீக்கினென் உய்ந்தனன் யான்என்றாள். (2)

வெங்கண் நாகக் கரத்தினன் வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன் கற்புடை
மங்கை காணநின்று ஆடுகின்றான் வகிர்த்
திங்கள் சூடிய செல்வனில் தோன்றினன். (3)

தள்ளு நீர்ப்பெருங் கங்கைத் தரங்கத்தால்
வள்ளி நுண்ணிடை மாமல ராளொடும்
வெள்ளி வெண்ணிறப் பாற்கடல் மேலநாள்
பள்ளி நீங்கிய பான்மையில் தோன்றினன். (4)

செய்ய தாமரைத் தாள்பண்டு தீண்டலால்
வெய்ய பாதகம் தீர்த்து விளங்குவாள்
ஐயன் மேனி எலாம்அளைந் தாலினி
வையம் மாநர கத்திடை வைகுமே? (5)

நதியில் இறங்கித் தன் சதியோடு பதி நீராடிய படியை இப்படிப் பாராட்டியிருக்கிறார்.

புண்ணிய தீர்த்தங்களைக் கண்டால் கொண்ட மனைவியைக் கையில் பிடித்துக்கொண்டு கொழுநன் அவற்றுள் உவந்து குளிக்கும் வழக்கம் பண்டைக்காலத்திலும் உண்டு என்பதை இங்கே கண்டு கொள்கின்றோம். இந்நாட்டு வழக்கங்கள் பல இடங்கள்

தோறும் நயமாக இடங்கொண்டு இக்காவியத்துள் சீவியம் பெற்றிருக்கின்றன. இணைபிரியாத மணமக்களின் அன்புரிமை பண்பும் பயனும் படிந்து இன்புறுத்தி வருகின்றன.

தம்பி அயலே குளிக்க இந்நம்பி நங்கையுடன் நன்கு நீராடினான். நதியின் அதிதேவதை பெருமகிழ்வடைந்தது. "உலக மக்களுடைய பாவங்களை நெடிய காலமாக நான் நீக்கி வருகின்றேன்; எனது கொடிய பாவத்தை இன்று உன்னால் நீக்கினேன்" என்று தன்பால் வந்து முழுகுகின்ற இராமனைத் தொழுது கங்கை கைகுவித்து நின்றது.

"உன்னின் நீக்கினன் உய்ந்தனன் யான்" எனக் கங்கா தேவி தொழுது துதித்து உளம் களித்துள்ளமையால் இவனது விழுமிய நிலைமை வெளியாய் வியப்பை விளைக்கின்றது.

கங்கை புண்ணிய தீர்த்தம்; தன்னைத் தொட்டவரைப் பரிசுத்தராக்கி உயர்கதியில் உய்க்கும் இயல்பினை யுடையது; அத்தகைய தெய்வ நதி இந்த ஐயனால் உய்ந்தேன் என அகமகிழ்ந்துள்ளது. உய்தி தருவது உய்வு பெற்றது.

"கடவுட் கங்கை நதிப்படிவான் செல்ல ஒருவன் கருது முனம் இடர் கூர் பாவம் அவனை ஒழிந்து யாண்டுச் செல்வோம் எனக் கருதும்" என்றதனால் அந் நதியினது அரிய மகிமையும், உரிய உதவியும் அறியலாகும்.

"தூயசெழுங் கங்கையலை சுழித்தெரியும் புனலில் ஒரு துளிஉண்டோரும்
தாய்முலைப்பால்மீட்டருந்தாத் தன்மையால்ஆங்குடலந் தனைவிட்டோர்க்கு
வேயனைய தோளிபங்கன் தாரகத்தை வலச்செவியில் விளம்பல் தன்னால்
சேயுயர் விண்ணவர் உலகோ காசிநகர்க்கு இணையாகச் செப்புமாறே."

(காசிகாண்டம்.)

இன்னவாறு கங்கையின் பெருமை குறித்து வந்துள்ளன பல.

தெய்வ நதியாய்ச் சிறந்து புண்ணிய நீர்மையில் பொலிந்து மண்ணவர் பாவங்களைத் தீர்த்துத் தண்ணளி புரிந்துவருங் கங்கை இராமனைத் தீண்டியதால் உய்திபெற்றேன்என உவந்து புகழ்ந்தது.

மரவுரியும் சடைமுடியும் உடையனாய் மங்கையுடன் கங்கையில் நீராடிய இராமன் செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமானை ஒத்து விளங்கினான். ஒப்பு செப்பம் மிக வுடையது.

அவன சடை கங்கையைப் புடை ஊற்றுதல் போல் இவன் சடையிலிருந்தும் இதுபொழுது கங்கை நீர் வடிகின்ற காட்சியை இங்ஙனம் காட்டி யருளினர். சிவகாமி கண்டு மகிழ அவன் கனக சபையில் நின்று ஆடுகின்றான்; சீதை கண்டு களிக்க இவன் கங்கையில் நீர் ஆடுகின்றான்.

திங்கள் சூடிய செல்வனில் தோன்றினன்.

சிவபிரானோடு இராமபிரானை இங்கே வருணித்துக் காட்டியிருக்கும் காட்சியைக் கண்ணூன்றி நோக்குக.

நாகம் = யானை, பாம்பு. மதயானையின் துதிக்கை போல் திரண்டு உருண்டு நீண்ட கையினன் என இராமனையும், பாம்பைக் கங்கணமாகக் கொண்டவன் எனச் சிவனையும் கண்டு கொள்க. சிலேடை என்னும் அணி அமைந்து இப்பாட்டு வந்துள்ளது.

தூய வெள்ளை நிறத்துடன் வெள்ளமாய்ப் பெருகி யுள்ள கங்கை நீரில் இராமன் சீதையோடு முழுகி எழுந்த காட்சி திருமால் இலக்குமியோடு பாற்கடலில் பள்ளிநின்று எழுந்ததுபோல் விளங்கி நின்றது.

வெள்ளி வெண்ணிறப் பாற்கடல் மேலை நாள்
பள்ளி நீங்கிய பான்மையில் தோன்றினன்.

கவி உள்ளி உணர்த்தும் பொருள் நயங்கள் உள்ளுந்தோறும் உவகையை விளைத்துத் தெள்ளமுதாய்த் தித்தித்து வருகின்றன.

மேலை நாள் என்றது இங்கே இன்ன வண்ணம் மானுடனாய் இவன் அவதரித்தற்கு முன்னம் என்றவாறு. பண்டு பாற்கடற் சேக்கையில் பள்ளி கொண்டிருந்த அப் பெருமாளே இன்று இவ் வுருவாய்த் துள்ளி வந்துள்ளது என்பதாம்.

ஆதியில் திருமாலின் பாதத்தைத் தீண்டியதால் கங்கைக்கு இவ்வளவு பெருமை வந்தது; அப் பெருமானின் திருமேனி முழுவதும் இன்று முழுகுவதால் ஒருங்கே தழுவப் பெற்றமையால் இனி இந்நதியின் மகிமையை எவர் அளவிட வல்லார்? தன்னில் தோய்ந்த உயிரினங்கள் யாவும் உயர் கதியில் உய்யுமாறு இந்த மெய்யனால் அருள் மிகப் பெற்றக் கங்கை தெருள் மிகுந்தது.

இராமன் ஆற்று நீரில் முழுகியதைக் கவி இவ்வாறு போற்றிப் புகழ்ந்திருக்கிறார். தமது காவிய நாயகனை இவர் கருதியிருக்கும் உறுதி நிலைகளை உரைகள் தோறும் உணர்ந்து வருகின்றோம்.

## விருந்து அருந்தியது.

இங்ஙனம் நீராடிய பின் இப்புனிதன் துணைகளுடன் முனிவர் பள்ளியை அடைந்தான். அருந்தவர் மகிழ்ந்து இனிய கனி உணவுகளை விருந்து புரிந்தார். இவன் உவந்து உண்டான்.

வருந்தித் தான்தர வந்த அமுதையும்
அருந்தும் நீர்என்று அமரரை ஊட்டினான்  1952
விருந்து மெல்லடகு உண்டு விளங்கினான் [குகப்படலம்]
திருந்தினார் வயின் செய்தன தேயுமோ? (~~கங்கைப்படலம், 27~~)

அருந்தவர்களிடம் அமர்ந்திருந்து இன்று விருந்து உண்டவன் இன்னான் என்பதை உலகம் கண்டு மகிழ உவந்து காட்டுகின்றார். அடகு என்றது பசிய கீரையை.

இங்கே இந்த எளிய உணவை உண்கின்றவன் யாவன்? தெரியுமா? தேவர்கள் யாவருக்கும் முன்பு அரிய ஓர் அமுத விருந்து ஊட்டிய தேவதேவனே எனத் தெளிவுறுத்தினார்.

வருந்தி என்றது பாற்கடலைக் கடைந்து அரிதின் அடைந்த அந்த அமுதின் அருமை அறிய வந்தது.

அத்தகைய அரிய மகிமை வாய்ந்த இனிய அமுதைத்தான் உண்ணாமல் தேவர்களுக்கு ஊட்டிய பேரருளாளன் இன்று முனிவர்களிட்ட எளிய கனிகாய்களை இனிது உண்டு மகிழ்ந்தான்.

அமுதம் அமரர்கட்கு ஈந்த
நிமிர்சுடர் ஆழி நெடுமால்
அமுதிலும் ஆற்ற இனியன்
நிமிர்திரை நீள்கடலானே. (திருவாய்மொழி, 1-6)

அமரர்கள் உய்ய அன்று அங்கு அமுதம் உதவிய அந்த அரிய அமுதன் நமர்கள் உய்ய இங்கு இரங்கி வந்து எளியனாய் இங்ஙனம் அளிபுரிந்து யாவரோடும் அளவளாவி அருளாடல் புரிகின்றான். மூல நிலைமையை மீள உணரவே இவனது கோலங்களையும் சில நீர்மைகளையும் நீள நினைந்து நெஞ்சம் உருகுகின்றோம்.

உணவு உண்டபின் இம்மான வீரன் ஞான சீலர்களுடன் அமர்ந்து உணர்வுரைகள் ஆடி உவந்திருந்தான்.

## குகன் வந்து கண்டது.

அங்ஙனம் இருக்குங்கால் கங்கைக் கரைக்குத் தலைவனான குகன் இக்கோமகன் அங்கே வந்துள்ளதைக் கேள்வியுற்று அரிய கையுறைகளுடன் ஆர்வ மீதூர்ந்து காண வந்தான்.

குகன் என்பவன் கங்கையின் வடகரையில் உள்ள ஒரு குறு நிலமன்னன். பரதவர் மரபினன். சிருங்கிபேரம் என்னும் ஊரினன். சிறந்த போர் வீரன். வஞ்சனை அறியாதவன்; யாண்டும் அஞ்சா நெஞ்சினன். ஆயிரம் தோணிகளுக்குத் தலைவன். நதியின் இரு கரைகளிலும் இருந்து கங்கையைக் கடந்துவரும் பிரயாணிகள் யாவரும் வரி செலுத்திவரும் வரவினை யுடையவன்; வண்மையாளன். திண்மையான படைகள் நிறைந்தவன். உண்மையும் உறுதியும் இயல்பாக வாய்ந்தவன்; திரண்ட தோளினன்; அகன்று பரந்த மார்பினன்; கனன்று நோக்குங் கண்ணினன். செறிந்த புருவத்தன்; படர்ந்த முகத்தினன்; முறுக்கிவிட்ட மீசையன். அரைக் கச்சை கட்டிச் சல்லடம் தரித்து உடைவாள் இறுக்கிப் படைவீரர் புடை சூழ விடை ஏறுபோல் நடந்து முனிவர் குடில்களை அணுகினன். அணுகவே உடன்வந்தவர்களை அயலே நிறுத்திவிட்டுத் தனியே முன்றிலை அடைந்தான்.

“சுற்றம் அப்புறம் நிற்கச், சுடுகணை
விற்றுறந்து, அரைவீக்கியவாள் ஒழித்து,
அற்றம் நீத்த மனத்தினன் அன்பினன்
நற்றவப் பள்ளி வாயிலை நண்ணினன்.”

கணைப்புட்டிலையும் வில்லையும் வாளையும் கீழே ஒதுக்கி வைத்துவிட்டு மிக்க பணிவுடன் குகன் வந்துள்ள அடக்கத்தையும் அமைதியையும் பார்த்து ஆர்த்திமீதூர்ந்து நிற்கின்றோம். யாருக்கும் அஞ்சா நெஞ்சனான அவன் அஞ்சன வண்ணனைக் காண விழைந்து அன்பு கனிந்து இங்ஙனம் அடைந்தான். அடையவே வெளியே நின்ற இளையவன்; “நீ யாவன்? இங்கே யாது காரியம்?” என எதிர் நின்று விரைந்து கேட்டான். கேட்கவே,

"தேவா! நின்கழல் சேவிக்க வந்தனன்
நாவாய் வேட்டுவன் நாயடியேன்"

என்று குகன் வாய்புதைத்து வணங்கி உரைத்தான். இங்கே நுணங்கி நோக்க வேண்டிய குறிப்புக்கள் பிணங்கி நிற்கின்றன. நின்கழல் என்றமையால் வில்லும் கையுமாய் நின்ற இலக்குவனையே இராமன் என்று அவன் கருதி யிருப்பதாகத் தெரிகின்றது. முன்னே யாண்டும் கண்டறியாதவன் ஆதலால் இப் பின்னவனையே முன்னவனாக அவன் எண்ண நேர்ந்தான். தோணிகளை ஓட்டுபவன் எனத் தன் குலமரபை விளக்கி மிக்க பணிவுடன் உரைத்திருப்பதில் அவனுடைய உள்ளப்பண்பு ஒளிவிட்டுள்ளது.

இன்னவண்ணம் சொன்னவுடனே "இங்கே நில்" என்று அவனை வெளியே நிறுத்திவிட்டு இலக்குவன் உள்ளே வந்து அண்ணன் எதிரே வணங்கி நின்றான்; "என்னே!" என்று அக் கண்ணன் கனிந்து நோக்கினான். தம்பி குனிந்து சொன்னான். சொல்லிய முறையும் வகையும் அவனுடைய உள்ளத்தின் தகைமையையும் உரையாடும் திறனையும் வெளிப்படுத்தி யுள்ளன.

நிற்றி ஈண்டு என்றுபுக்கு நெடியவற் றொழுது தம்பி
கொற்றவ! நின்னைக்காணக் குறுகினன் நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும் தானும்உள்ளம் தூயவன்; தாயின் நல்லான்;
எற்றுநீர்க் கங்கை நாவாய்க்கு இறைகுகன்ஒருவன்என்றான்
(கங்கைப் படலம், 39.)

வந்த குகனை நின்ற இலக்குவன் இப்படி அறிமுகப்படுத்தி யிருக்கிறான். அரிய மானச தத்துவங்கள் உரைகளில் பெரிதும் மிளிர்கின்றன.

உள்ளம் தூயவன்; தாயின் நல்லான்; என இவ்வளவு தெளிவாக அவனை இவன் எப்படித் தெரிந்தான்? முன்னம் எவ்வழியும் யாதும் தன்னால் பார்க்கப் படாதவன்; இன்று புதிதாய் வந்தவன்; அவனைக் குறித்து இவ்வாறு துணிந்து உறுதி கூறியது வியப்பாகின்றது. என்ன குறிப்பைக் கொண்டு இன்னவாறு தீர்மானித்தான்? முரட்டு தேகம்; நடை உடை பாவனைகள் யாவும் இனிமையின்றிக் காடு முரடுகளாய் வலிமை மண்டி யுள்ளன. அங்ஙன மிருந்தும் அப் புறக்கோலங்களை யெல்லாம் புறந்தள்ளி அகத் தூய்மையை அறிந்து கொண்டான். அன்பு

கனிந்த சிந்தையனாய் அவாவி வந்துள்ளமையைக் கண்ணினும், முகத்தினும் நுண்மையாக உணர்ந்து உண்மை தெளிந்திருக்கிறான் குறிப்பறியும் திறத்தில் இலக்குவன் தனிச் சிறப்புடையனாய்த் தழைத்து நிற்றலைப் பின்னரும் காணலாம்.

தாயை உவமை கூறியது இயல்பாகவே நேயம் நிறைந்த அவனது தூய அன்பு நிலை கருதி; கங்கைக் கரையினன்; தோணிகளுக்குத் தலைவன்; குகன் என்னும் பேரினன் எனப் புற நிலைகளின் வகை விவரங்களைத் தொகையாகச் சுட்டிச் சொன்னான்

தம்பி இங்ஙனம் நன்கு சொல்லவே அண்ணன் அன்பு கூர்ந்து உடனே " அவனை அழைத்து வா " என்றான்.

அண்ணலும் விரும்பி என்பால் அழைத்தி நீ அவனை என்றான்
பண்ணவன் வருக என்னப் பரிவினன் விரைவிற் புக்கான்
கண்ணனைக் கண்ணின் நோக்கிக் கனிந்தனன் இருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி வளைத்துவாய் புதைத்து நின்றான்.

இருத்தி ஈண்டு என்னலோடும் இருந்திலன் எல்லை நீத்த
அருத்தியன் தேனும் மீனும் அமுதினுக்கு அமைவதாகத்
திருத்தினென் கொணர்ந்தேன் என்கொல் திருவுளம்? என்ன வீரன்
விருத்த மாதவரைநோக்கி முறுவலன் விளம்பல் உற்றான். (2)

அரியதாம் உவப்ப உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால் அமிர்தினும் சீர்த்த வன்றே
பரிவினின் தழீஇய என்னின் பவித்திரம் எம்மனோர்க்கும்
உரியன இனிதின்நாமும் உண்டனெம் அன்றோ என்றான். (3)

சிங்கவேறு அனைய வீரன் பின்னரும் செப்புவான்யாம்
இங்குறைந்து எறிநீர்க் கங்கை ஏறுதும் நாளை யாணர்ப்
பொங்குநின் சுற்றத்தோடும் போயுவந்து இனிதுஉன ஊரில்
தங்கிநீ நாவா யோடுஞ் சாருதி விடிய என்றான். (4)

கார் குலாம் நிறத்தான் கூறக் காதலன் உணர்த்துவான் இப்
பார் குலாம் செல்வ நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான் இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன் ஆனது ஐய! செய்குவன் அடிமை என்றான். (5)

கோதைவிற் குரிசில்அன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் தீராக்
காதலன் ஆகும்என்று கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினும் இனிய நண்ப! இருத்திஈண்டு எம்மொடு என்றான்.

(கங்கைப்படலம் 40-45)

புதிய ஒரு நண்பன் விதி வசமாய் வந்து நம் அதிபதிக்கு வாய்த்துள்ள வாய்ப்பினை இங்கே பார்த்து வியந்து ஆர்த்தி மீக்கூர்ந்து அகம் மிக மகிழ்கின்றோம்.

இலக்குவன் அழைத்தவுடனே குகன் ஆவலோடு உள்ளே வந்தான்; இராமனைக் கண் குளிரக் கண்டு காலில் நெடிது விழுந்து பணிந்து எழுந்து தொழுது உழுவலன்புடன் உடல் குழைந்து வணங்கி நின்றான்.

கண்ணனைக் கண்ணின் நோக்கிக் கனிந்தனன்

என்றதனால் அவன் உள்ளமும் உயிரும் உவந்து நின்ற நிலை உணரலாகும். எண்ணின் நோக்கி வந்தவன் இங்கே நேரே கண்ணின் நோக்கிக் கனிந்தான்.

உள்ளம் உருகிய பேரன்பினன் ஆதலால் பரிவினன் என அரிய ஒரு பேரை மருவினான். பரிவு = அன்பு, அனுதாபம்.

பரிவின் தன்மை உருவு கொண்டனையவன் எனக் கண்ணப்ப நாயனாரைக் கல்லாட தேவர் குறித்தது போல் இங்கே குகன் குறிக்க நேர்ந்தான். சிவன்பால் அவன் பத்திமண்டிப் பரிந்து நின்றது போல் இராமன்பால் இவன் பேரன்பு கொண்டு உருகியிருக்கிறான். உருக்கமும் நிகழ்ச்சியும் வியத்தகு நிலையின.

புதிய இந்த அதிசய அன்பனைக்கண்டதும் இராமன் உவகை மீக்கொண்டு தனது இரண்டு கைகளையும் நீட்டிக் காட்டி எதிரே இருக்கும்படி உரிமையுடன் உபசரித்தான்.

தான் ஒரு சக்கரவர்த்தித் திருமகன் என்னும் பெருமிதம் இவனிடம் என்றும் இருந்திருப்பதாகத் தெரிந்திலது. குடிசனங்களிடமும் எளியவர்கள்பாலும் யாண்டும் இவன் அளி புரிந்தே ஒழுகி வந்திருக்கிறான். காட்சிக்கு எளிமையும் கடுஞ்சொல் இன்மையும் இவனுடைய மாட்சிகளாக மருவி நிற்கின்றன. எளியவர் எவர்க்கும் அதி சுலபனாய் இவன் இதம் புரிந்திருக்கும் இனிய நீர்மை கனிவு மிகவுடைய தாய் மனித சமூகத்தைப் பரவசப்படுத்தி வருகின்றது.

"A great man shows his greatness by the way he treats little men." "எளியவர்களை நடத்துகின்ற முறையில் ஒரு

பெரிய மனிதனது பெருந்தகைமை வெளியாகின்றது'' எனக் கார்லேயில் என்னும் ஆங்கில அறிஞர் கூறியுள்ளது ஈண்டு அறிய உரியது. அரிய பண்புகள் இவனிடம் பெருகி மிளிர்கின்றன.

இவன் இருந்தாங்கேளும்படி உவந்து வேண்டியும் குகன் கீழே உட்காராமல் தொழுதகையனாய்த் தூவண்டு நின்றான்.

"இருந்திலன் எல்லை நீத்த அருத்தியன்'' என்றமையால் அவனது உள்ளக் காதலும் உருக்கமும் பணிவும் உணரலாகும். அருத்தி = ஆசை. பரம பத்தி வரமுயர்ந்துள்ளது.

அளவில்லாத ஆசையுடையனாய் நின்ற அவன் இராமனைக் கனிந்து நோக்கி மெல்லக் கூசி ஒன்று சொல்லத் துணிந்தான்.

"தேனும் மீனும் திருத்திக் கொணர்ந்தேன் திருவுளம் என் கொல்?'' என இங்ஙனம் விநயமாக அவன் வினவினான்.

வந்தவர் பசியுடன் இருப்பர்; நல்லவிருந்து செய்யவேண்டும் என்று விரும்பிச் சிறந்த உணவை ஆயத்தம் செய்து கொண்டு வந்திருக்கிறான்; வந்தவன் இந்தவாறு சிந்தை தெரிய உசாவினான்.

இவ்வுரையைக் கேட்டதும் இராமன் அருகிருந்த அருந்தவர்களை விழைந்து நோக்கிப் புன்னகைபுரிந்து நன்னயமாகப் பதில் நவின்றான்.

"விருத்த மாதவரை நோக்கி முறுவலன் விளம்பல் உற்றான்''

முனிவர்களைப் பார்த்து இளநகை செய்தது ஞானசீலர்களாகிய தவசிகள் முன்னிலையில் ஊனுணவைக் கொண்டு வந்துள்ள பேதைமையை நினைந்து. கள்ளம் கபடு யாதும் இல்லாத வெள்ளை உள்ளமும், தான் உண்ணும் மீன் உணவை எல்லாரும் தின்னுவர் என்னும் நம்பிக்கையும், நல்ல மனத்துணிவும் குகனிடம் அமைந்துள்ளமையை இங்கே அறிந்து கொள்ளுகின்றோம்.

அமுதினுக்கு அமைவது ஆக என்றது தேவரீர் உண்ணுதற்கு இனிமையாக என்றவாறு. தான் நுகர்ந்து வந்துள்ள தனது அனுபவத்தினால் அவ்வுணவை உயர்ந்ததாகக் கருதியிருக்கிறான்.

"கொழுவிய தசைகள் எல்லாம் கோலினில் தெரிந்து கோத்தங்கு
அழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப் படைத்தஇவ் இறைச்சி சால
அழகிது நாயனீரே! அமுது செய்தருளும்'' (பெரியபுராணம்.)

-என இறைவனுக்குக் கண்ணப்பர் உணவு தந்ததும் ஈண்டு எண்ணத்தக்கது. அந்தப் பேரன்பர் போலவே இந்த நேரன்பன் ஆர்வ மீதூர்ந்து அதிசயநிலையில் வந்துள்ளான்.

உலகம் ஒன்றும் தெரியாமல் இங்ஙனம் பத்திப் பரவசனாய் நின்று குகன் கூறிய விருந்து மொழியை நினைந்து அவனுடைய நேர்மையான நெஞ்சின் நிலைமையைக் கூர்மையாக உணர்ந்து நீர் மைகளை வியந்து இராமன் பேருவகையடைந்து ஆர்வமீதூர்ந்தான்.

"அன்பினால் கொணர்ந்தது அமிர்தினும் சீர்த்தது" என அதனைப் புகழ்ந்து பாராட்டினான். "அரிய காதலனை உன் கையால் கொண்டுவந்தது எதுவாயினும் அது பரமபுனிதமானது. அமுதினும் இனியது; அதிமதுரமான அவ்வுணவை நான் உவந்து உண்டதாகவே நீ நினைந்துகொள்ள வேண்டும். இம் முனிவர்கள் உதவிய கனிகளை இப்பொழுதுதான் அருந்தினேன்; பரிசுத்த னை உனது இனிய விருந்து நினைதொறும் எனக்கு இன்பம் தருகின்றது" என அன்புரையாடி நளினமாக இராமன் இங்கே அளவளாவி யுள்ளான்.

குகன் இனியதுஎன்று விழைந்துகொண்டுவந்த மீன் உணவை யாதும் இகழ்ந்து குறியாமல் புகழ்ந்து போற்றி அவனது உள் ளத்தைத் தேற்றியிருக்கும் அமைதியும் நாகரீகமும் நயந்து சிந் திக்கத் தக்கன. எவர் மனமும் புண் படாதபடி நண்பாற்றியரு ளும் இராமனது பண்பாடு யாண்டும் இனிமை சுரந்து உரிமை நிறைந்து, உணர்வு கனிந்து மிளிர்கின்றது.

புலால் உண்டல் இழிந்தது; அவம் மிக உடையது; தவ நிலைக்கு ஆகாதது; உயர்ந்தோரால் அருவருத்து ஒதுக்கப்பட்டது என்னும் குறிப்புகள் இங்கே தொனித்திருக்கின்றன. தொனிகள் எங்கும் நுனித்து உணர வுரியன. தனித்த உண்மைகள் இனித்த நிலையில் இதமாய் யாண்டும் சனித்து வருகின்றன. சுத்த சைவ மான தூய உணவு வாழ்க்கையைக் கைக்கொண்டு நம் கவி வாழ் ந்து வந்துள்ளமை ஈண்டு ஆழ்ந்து தெளியநின்றது.

கொலையால் வருவது ஆதலால் ஊனுணவு புலையாய்இழிக்கப் பட்டது. அருள் நலம் கனிந்த தரும வாழ்வை மனிதர் குழாம் மருவி ஒழுகவேண்டும் என்னும் அறிவு நலங்கள் காவியத்தில் பெருகியிருக்கின்றன. கவியின் இதயம் கருணை ஒளி வீசுகின்றது.

வந்த அன்பனிடம் இங்ஙனம் பண்புரை கூறிய வீரன் பின்பு தனக்கு வேண்டியதைச் செய்து தர வேண்டினன். "இன்று இங்கே தங்கியிருந்து நாளைக் கங்கை கடந்து நாங்கள் தெற்கே செல்லுகின்றோம்; நதியைக் கடத்தி எங்களை நீ அனுப்பியருள வேண்டும்; இப்பொழுது உன் ஊருக்குப் போய் நாளைக் காலையில் ஒரு தோணியோடு ஈண்டு வருக" என்று உரிமையுடன் உரைத்தான்.

இவ்வுரையைக் கேட்டதும் குகன் உள்ளம் உருகினன். கண்ணீர் ததும்ப நின்று இராமனை நோக்கி அவன் கூறிய மொழிகள் அளவிடலரிய ஆர்வக் காதலை உலகறியச் செய்தன.

"பார்குலாம் செல்வ! நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன் யான்" என்ற இதில் அவன் கருதி மறுகியிருக்கும் பரிபவங்கள் தெரிய நின்றன.

"ஏக சக்கராதிபதியாய் உலகம் முழுதும் ஆள உரிய அரசகுமாரனாகிய உன்னை இந்தப் பரதேசிக் கோலத்தில் காணும்படி நேர்ந்த என் கண்களைப் பிடுங்கி எறியாமல் இன்னமும் பார்த்து நிற்கின்றேனே! நான் எவ்வளவு கொடியவன்! என் நெஞ்சம் எத்துணை வஞ்சம் உடையது! அந்தோ தரும மூர்த்தியே!" என்று அலமந்து அலறியிருக்கின்றான்.

கள்வனேன் என்றது உண்மையான அன்பனாயிருந்தால் இதற்கு முன் கண்களை ஈர்ந்திருப்பேன்; கள்ளத் தனமாய் நடிக்கின்றேன் எனத் தன்னை இகழ்ந்து நொந்து ஏங்கி நின்றான். கண்ணை அகழ்ந்து அப்பிய திண்ணனைப்போல் உண்மையான பத்தி இல்லை என உள்ளம் உருகியுள்ளான்

அவனுடைய உள்ளன்பும் உருக்கமும் உயிர்க் கேண்மையும் உரையிடலரியனவாய் உலக நிலையைக் கடந்து நிற்கின்றன.

எல்லையில்லாத பேரன்பால் எழுந்த இச் சொல்லைக் கேட்டதும் இராமன் உள்ளம் உருகினன்; அருகிருந்த மனைவியையும் தம்பியையும் இனிது நோக்கிக் கனிவு மீதூர்ந்தான்.

"சீதையை நோக்கித், தம்பி திருமுகம் நோக்கித், தீராக்
காதலன் ஆகும் என்று கருணையின் மலர்ந்த கண்ணன்"

குகனது அகநிலையை உணர்ந்து இராமன் இங்ஙனம் பரவசமாயிருக்கிறான். உள்ளக்குறிப்பு ஓவியமாய் ஒளி வீசுகின்றது.

சீதையை நோக்கியது, "கொண்ட மனைவியாகிய நீ பண்டு தொட்டே என்பால் பெருங்காதலுடையளாய் உழுவலன்பு மண்டியுள்ளாய்; இன்று கண்ட இவனது கெழுதகைமையைப் பார்த்தாயா?" என்று ஆர்த்தியுடன் வார்த்தையாடியதுபோல் உள்ளது.

தம்பி திருமுகம் நோக்கியது, "உடன் பிறந்த நீ என்னை உயிரினும் இனியனாகக் கருதி யாண்டும் உள்ளம் உருகி வருகின்றாய்; இடையே ஈண்டு வந்துள்ள இவனது உள்ளத்தை ஊன்றிப் பார்" என உரைத்ததுபோல் நேர்ந்தது.

குகனுடைய உரிமையை உணர்ந்து உளம் மகிழ்ந்த இராமன் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசாமல் மனைவியையும் தம்பியையும் வியமாக நோக்கியிருக்கும் இனிய காட்சி இங்கே அரிய மாட்சியாய் நம் கண்முன் நீண்டு களிப்பூட்டுகின்றது.

அதிசயமான புதிய அன்பின் சுவையை நுகர்ந்து ஆனந்தம் அடைந்தான் ஆதலால் அந்த இன்ப நுகர்ச்சியை மனைவிக்கும் தம்பிக்கும் பங்கு செய்து பார்வையில் தந்தான்.

மீனும் தேனும் கொணர்ந்தேன் என்றபோது முனிவரை நோக்கினான்; ஊனும் உயிரும் உருகிவந்த அன்புரையைக்கேட்டவுடன் உரிமையாளரை நோக்கினான்; அழகிய இந்நோக்கங்கள் உணர்வு நலம் கனிந்து உயர்ந்த பண்பாடுகள் சுரந்திருக்கின்றன.

வாய் பேசாத ஊமைப் பார்வைகள் எவ்வளவோ உணர்ச்சி நலங்களை விளைத்து உவகை யூட்டி வருகின்றன. ஆயிரம் வார்த்தைகளாலும் சொல்ல முடியாத அரிய பொருளை ஒரு சிறு மவுன நோக்கம் சொல்லிவிடுகின்றது. நோக்கின் சூக்குமங்கள் நுவலரு நிலையின.

"யாதினும் இனிய நண்ப!" எனக் குகனை உரிமையுடன் தழுவியிருக்கும் இந்த வாசகத்தில் நேசமும் பாசமும் நிறைந்திருக்கின்றன.

யாரினும் இனியன் என்றால் உரிய மனைவியும் உற்ற தம்பியும் உள்ளம் மறுகுவர்; நம்மினும் இன்னான் இனியன் ஆயினானோ? என அவர் துனியுறுவர்; உரிமையாளர் அங்ஙனம் உளம்

மறுகாதபடி யாதினும் என்றான். என் இன்னுயிரினும் இனியனே! என்ற தொனி இவ் ஒரு மொழியில் உள்ளே மருவி யுள்ளது.

அரச திரு, தாய் தந்தை, மனைவி தம்பி முதலிய எவரினும் அருமையாகக் குகனை உரிமை செய்துகொண்டான் என்பது ஒரு பெருமையாகாது; தன் உயிரினும் இனியனாகக் கருதி உருகி யிருக்கிறான்.

பிறப்புரிமையாகவே தொடர்புடைய அவர் அன்பு கொண்டாடுவது இயற்கை; வழி இடையே இன்று வந்த இவன் "இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன்" என்ற இந்த வார்த்தை இராமன் உள்ளத்தை ஈர்த்து உருக்கி யிருக்கிறது. ஆகவே ஆவியினும் இனியனாகப் பாவித்து மகிழ்ந்தான்.

அவனது அன்பு கனிந்த ஆர்வமும், இவனது நண்பு சுரந்த நீர்மையும் பண்பு நிறைந்து மன்பதைக்கு இன்பமாய் எழுந்தன.

* அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. (குறள், 74)

என்னும் அருமைத் திருவாக்கைத் தமக்கு இவர் உரிமை யாக்கியுள்ளனர். அன்பு நண்புகளின் அமைதியை ஆய்க.

இராமனைப் பிரியமாட்டாமல் பிரியம் மீதூர்ந்து நின்ற குகன் அன்று அங்கேயே தங்கியிருந்தான். மாலையில் வெளியே இலக்குவனோடு அளவளாவி இருந்தவன், "அண்ணன் இக்கோலத்தோடு இவ்வண்ணம் வந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்டான். உற்ற உண்மைகளைத் தம்பி உரிமையோடு சொன்னான். அவ்வுரைகள் செவியில் விழவும் குகன் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாக வழிந்து ஓடியது.

"இருகணீர் அருவி சோரக் குகனும் ஆண்டிருந்தான் என்னே!
பெருநிலக் கிழத்தி நோற்றும் பெற்றிலள் போலும் என்னா."

தன்னை உரிமையுடன் பரிபாலித்து வரும்படி சிறந்த அரசை இராமனை அருந்தவம் செய்து பெற்றிருந்தும், அந்தப்

*அன்பால் ஆர்வம் விளைகின்றது; அதனால் நண்பு என்னும் சிறந்த பேறு வருகின்றது. ஆர்வம் = மனம் கனிந்த பிரியம். உள்ளத்தே அன்புடையவனுக்கு உலகம் எல்லாம் நட்பாய் அலகில் இன்பம் அருளும் என்க. எவ்வுயிர்க்கும் அன்பு செய் நீ திவ்விய மகிமை அடைவாய் என்பது கருத்து. உள்ளம் கனிய உயிர் உயர்கின்றது.

பேற்றை முற்றும் அனுபவிக்காமல் பூமிதேவி இழந்துவிட்டாளே! என்று குகன் அகம் வருந்தி மிகவும் உருகியுள்ளான்.

அரச பதவியை இராமன் இழந்து வந்தானே என்று வருந்த வில்லை; இக்குலமகனை அது இழந்துபோயதே என்று இரங்கி யிருக்கிறான்.

அவனது பரிவும் அறிவும் அரிய நீர்மையில் பெருகி யிருக்கின்றன. இவ்வாறு உருகி இருந்தவன் அந்தி அடையவே வந்த படைகளை எல்லாம் அயலே புடைசூழநிறுத்தி நன்கு பாதுகாக்கும்படி பணித்தான்.

ஆதவன் மறையவே மாதவர்களை ஆதரவுடன் அனுப்பிவிட்டு இராமன் எழுந்தான். அந்திக் கடன்களை ஆற்றச் சென்றான்.

## இரவு துயின்றது.

மாலையில் செய்ய வேண்டிய நியமங்களை முடித்துக் கங்கை நீரை மட்டும் பருகி அந் நதியின் கரையில் கனி மரங்கள் அடர்ந்த ஓர் தனியிடத்தில் சீதையுடன் சயனித்திருந்தான்.

இலக்குவன் வில்லை ஏந்தி இரவு முழுவதும் யாதும் கண்ணி மையாமல் அயலே காத்து நின்றான். குகனும் பரிவு மீதூர்ந்து தன் சேனைகளோடு பாங்கே பாதுகாத்திருந்தான்.

மாலைவாய் நியமம் செய்து மரபுளி இயற்றி வைகல்
வேலைவாய் அமுதன் னாளும் வீரனும் விரித்த நாணல்
மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினன் வரிவில் ஏந்திக்
காலைவாய் அளவும் தம்பி இமைப்பிலன் காத்துநின்றான்.

தும்பியின் குழாத்தில் சுற்றும் சுற்றத்தன்; தொடுத்த வில்லன்;
வெம்பிவெந் தழியாநின்ற நெஞ்சினன்; விழித்த கண்ணன்;
தம்பிநின் றானைநோக்கித் தலைமகன் தனிமை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீர் அருவிசோர் குன்றின் நின்றான்.

(கங்கை. 48, 49.)

நாணல் என்னும் ஒருவகைப் புல்லை விரித்துச் சானகியோடு இராமன் தரையில் படுத்திருந்ததும், தம்பியும் குகனும் அயலே காத்து நின்றதும் இங்கே நம் நெஞ்சை உருக்கி நிற்கின்றன.

சீதையை வேலைவாய் அமுது என்றது அவளது மேலை நாள் நிலை அறிய. பண்டு பாற்கடலில் இலட்சுமியுடன் பள்ளிகொண்ட பெருமாள் இன்று நிலத்தில்கிடக்கும்படி புள்ளிகொண்டுவந்தான்.

உயர்ந்த பஞ்சணையிலும் சிறந்த மலரமளியிலும் அமர்ந்து உறங்க வுரிய இராச குமாரன் ஒரு சிறிய பாயும் இன்றி வெறுந் தரையில் படுத்திருந்தான் என்பார் "பாரின் பாயல் வைகினன்" என்றார்.

அண்ணனும் அண்ணியும் இங்ஙனம் படுத்திருப்பதை எண்ணி எண்ணிக் கண்ணீர் மல்கி நெஞ்சம் கரைந்து அம்புபூட்டிய வில்லுடன் தம்பி அதிக எச்சரிக்கையுடன் காவல் புரிந்தான்.

"வரிவில் ஏந்திக், காலைவாய் அளவும் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான்." இலட்சுமணன் காத்துநின்ற நிலையை இதில் பார்த்து நிற்கின்றோம். அயலான தனி இடம்; ஏதேனும் இடையூறு நேர்ந்து விடலாகாதே! என்று கவலைமீதூர்ந்து கண்ணும் கருத்துமாய் இரவு முழுவதும் இமை கொட்டாமல் காத்திருக்கிறான்.

விடியும் வரையும் இமை மூடவில்லை என்றமையால் தமையன் மேல் இவன் கொண்டுள்ள உயிருருக்கமும் உறுதி நிலையும் உணர வந்தன.

அதிக கவனமான அரிய பாதுகாப்பைக் குறித்துப் பேசும் பொழுது "கண்ணை இமை காப்பதுபோல்" என இமையை உவமை காட்டுவர். கண்ணினைக்காக்கின்ற இமை என முன்னம் வந்துள்ளதும் எண்ணுக. அந்த இமைக் காவலும் இவன் கண் அமையாது போயது.

தன் கண்ணினும் உயிரினும் அருமையாக அண்ணனை இவன் எண்ணிப் பேணி யிருக்கிறான். இத் தம்பியின் அன்புரிமை அளவிடலரியது; அதிசய நிலையது.

உறக்கம் எவரையும் மயக்கவல்லது; "துறக்கம் துறப்பினும் உறக்கம் துறவேன்" என்றமையால் அது உயிர்களைப் பிணித்திருக்கும் நிலைமை புலனும்.

அத்தகைய அரிய உறக்கத்தை அறவே துறந்து அண்ணனை உரிமையோடு இவன் புரந்திருக்கிறான்.

சிலை ஏந்திய கையனாய் நிலையிலேயே நின்று விழி யிமையாமல் எவ் வழியும் எதிர் நோக்கி இருளில் இவன் காப்புச் செய்திருக்கும் காட்சி கழிபேரிரக்கமாய் உளம் உருக்கி நிற்கின்றது.

இவன் இங்ஙனம் நிற்கக் குகன் என்ன செய்தான் ?

தன்னுடைய படைகளை அந்த இடத்தை வட்டமாகச்சூழ்ந்து நிற்கச் செய்தான். அரையில் உடைவாளும் கையில் வில்லும் அம்பும் கொண்டு நான்கு பக்கங்களையும் நன்கு நோக்கி அங்கு அவன் ஊடாடி நின்றான்.

யானைத் திரள்களைப்போல் அப்படை வீரர்களும் இடையறாது எங்கும் சுற்றி வந்தனர். தும்பி=யானை. குழாம்=கூட்டம்.

அம்பு தொடுத்த வில்லனாய் அயலேநின்ற குகன் இராமனது நிலைமையை நினைந்து நினைந்து நெஞ்சம் உருகினான்.

“வெம்பி வெந்து அழியா நின்ற நெஞ்சினன்; விழித்த கண்ணன்.” என்றமையால் அவனது அகமும் முகமும் அறியலாகும். வெம்புதல் வேதல் அழிதல் என்னும் தொழில்களால் உள நிலைகளை ஊன்றி உணர்ந்துகொள்க. முழுதும் எழுதிக்காட்ட இயலா. அழுத கண்ணனாய் அஞ்சனவண்ணனையே நினைந்து நெஞ்சம் கரைந்து அவ்வுழுவலன்பன் உருகி யிருக்கிறான்.

உள்ளே இருக்கும் பொருள்களுக்கு இருளில் ஏதேனும் தீங்கு நேர்ந்துவிடலாகாதே என்ற கவலையினால் யாதும் உறங்காமல் யாண்டும் பார்வையைச் செலுத்தி அதி கூர்மையாகக் காத்திருந்தமை விழித்த கண்ணன் என்றதனால் விளங்கி நின்றது.

அம்பியின் தலைவன் கண்ணீர் அருவி சோர்குன்றின் நின்றான் இந்தக் காட்சியைக் கொஞ்சம் கண்ணூன்றிப் பாருங்கள். கண்ணீர் மாலை மாலையாய் மார்பில் வழிந்தோட அருவி நீரைச் சொரிகின்ற ஒரு நீல மலைபோலக் குகன் நெடிது நின்றான்.

அம்பி=தோணி, தெப்பம். உள்ளன்பும் உயிருருக்கமும் வெளியே வெள்ளமாய்ப் பொங்கிவழிய இங்ஙனம் அன்று அவன் நின்ற நிலை என்றும் நிலையான ஓர் ஆர்வக் காட்சியாய் நெடிதோங்கி யுள்ளது. என்ன அன்பு! எவ்வளவு உரிமை! “தம்பி நின்றானை நோக்கித் தலைமகன் தனிமை நோக்கி” என்றதில் நேரான நிலைமையைத் தவிர மாறான வேறு சில நினைவுகளையும் கூர்மையாகக் குறித்து நோக்க வுள்ளது.

இராமன் இப்பொழுது அரசிழந்து வந்திருக்கிறான் ; அங்கே உள்ள தம்பியர்களுள் ஒருவனால் விளைந்த கேடு இது ; இங்கே

ஒரு தம்பி தொடர்ந்து வந்திருக்கிறான்; இவனையும் எப்படி நம்புவது? நம் நம்பிக்கு ஏதேனும் இடர் எண்ணவும் நேருமே? என்னும் ஓர் ஐயம் அந்த அம்பித் தலைவனுக்கு நேர்ந்துள்ளமையால் இந்தத் தம்பியையும் கவனித்து விழித்த கண்ணனாய் ஒளித்துக் காத்து நின்றான்.

தம்பியின் குழாத்தில் சுற்றும் சுற்றம் என அவனது படைவீரர்கள் குறிக்கப்பட்டுள்ளனர். அவ்வீரர்கள் தம் தலைவனையும் தம்பியையும் கூட நம்பாமல் நம்பிபால் பேரன்பாளராய் யாதும் உறங்காமல் அயலெங்கும் சுற்றி அதிகூர்மையாய்ப் பாதுகாத்து உறுதி சூழ்ந்து வந்துள்ளமையைச் சுற்றம் சுற்ற என்றமையால் உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

இன்று இடையே வந்தவன்; உடல் வலியோடு படைகளும் உடையனாய்ப் புடை வளைந்துள்ளான்; இவனை முழுதும் நம்பி விடுவது இழுதை நீரதாம் எனக் கருதி இடதுகையில் வளைத்த வில்லும் வலது கையில் எடுத்து அம்புமாய் இலக்குவன் அடுத்து இலக்காய் நின்றிருக்கின்றான்.

எல்லாருடைய உள்ளங்களும் இராமனையே கருதி எவ்வழியும் உரிமையுடன் தலைமையன்பு தழைத்துநிலைமை செய்துள்ளன.

இந்த வள்ளலை ஒரு நாள் ஒருமுறை பார்த்தவரும் உள்ளம் எல்லாம் உருகி உயிரையும் உதவும் நிலையில் பரவசராகின்றனர்.

சீவகோடிகளுக்கெல்லாம் ஓர் அதிசயமான அரிய இனிய தேவ அமுதமாய்ப் பூவுலகில் இவன் மேவியிருக்கிறான்.

கங்கையின் வடகரையில் இங்ஙனம் இக்கோமகன் துயிலமர்ந்திருந்தான். இரவு கழிந்தது. உதயம் ஆயது. அவ்வுதய நிலை உணர்வு நலம் சுரந்து இங்கே உதயம் ஆகின்றது.

துறக்கமே முதல வாய தூயன யாவை யேனும்
மறக்குமா நினையல் அம்மா வரம்பில தோற்றுமாக்கள்
இறக்குமா றிதுஎன்பான் போல் முன்னைநாள் இறந்தான்; பின்னாள்
பிறக்குமாறு இதுஎன்பான் போல் பிறந்தனன் பிறவா வெய்யோன்.

செஞ்செவே சேற்றில் தோன்றும் தாமரை தேரில் தோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன்மேனி நோக்கின விரிந்த; வேறோர்
அஞ்சன நாயி றன்ன ஐயனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதனம் என்னும் தாமரை மலர்ந்த தன்றே.

(கங்கைப் படலம், 50, 51)

பொழுது அடைவதையும் உதயம் ஆவதையும் குறித்து வரும் கவிகளில் அரிய கருத்துக்கள் பல மருவி வருகின்றன. தலைமையான புலமையிலிருந்து விளைந்து வருதலால் உயர்ந்த கலா விநோதங்களும் உறுதி நலங்களும் சுவை சுரந்து உவகை நிலையங்களாய் ஓங்கி நிற்கின்றன. கதைத் தொடர்பில் இடையிடையே உயிரினங்களுக்கு உயர் போதனைகள் இனிமையாகவும். எளிமையாகவும் பெரிதும் நளினமாக ஒளி செய்தருள்கின்றன.

அன்று உதித்த கதிரவன் உலக மக்களுக்கு ஓர் உறுதி உண்மையைத் தெளிவுறுத்தினன் : " அறிவுடையமானுடங்காள்! நீங்கள் அரிய பிறவியைப் பெற்றிருக்கிறீர்கள் ; இந்தப் பிறவிக்குரிய பெரிய பயன் இனிமேல் வேறு ஒரு பிறவியை அடையாதிருத்தலேயாம்; பிறந்தனயாவும் இறந்துபோம்; சுவர்க்க முதலிய சிறந்த தெய்வ பதவிகளும் அழிந்துபடும் ; ஆதலால் என்றும் அழியாத பேரின்ப வீட்டையே பெற முயலுங்கள் ; தேவர்களுள் ஒருவனான நானும்கூட நேற்று மாலையில் இறந்தேன் ; இன்று காலையில் பிறந்தேன் ; இன்னும் கொஞ்ச நேரத்தில் மீளவும் இறந்துபடுவேன் ; என்னுடைய நிலைமையைக் கண்டாவது நிலையாமையை நீங்கள் தெளிந்து கொள்ளவேண்டும் ; அழியும் பதவிகளை யாண்டும் விரும்பாதீர்கள் ; பிறவியை ஒழியுங்கள், பிறவா இன்பம் பெறுங்கள் " என்று சீரிய ஒரு தத்துவ உபதேசம் செய்வதுபோல் சூரியன் தோன்றினன்.

பிறவா வெய்யோன் பிறந்தனன் என்றது அவனது உண்மை நிலையை ஊன்றி உணர்ந்து கொள்ள. என்றும் ஒருபடியாய் அவன் நின்ற நிலையிலேயே நிற்கின்றான். நில மண்டலத்தின் சுழற்சியால் அக் கதிர் மண்டலம் கரந்தும் திறந்தும் காணப்படுகின்றது. அந்த மாயக்காட்சி மாயப்பிறப்பிற்கு உவமையாய் வந்து என்றும் மாயாத தூய உறுதிப்பேற்றை உணர்த்தி நின்றது.

உதய காலத்துச் சூரியனைக் கண்டு தாமரைகள் மலர்ந்தன; இராமனைப் பார்த்துச் சீதை முகம் மலர்ந்தது. அவளது உள்ளத் தாமரையும் வதனம்புயமும் யாண்டும் மகிழ்ந்து அலர்ந்திருத்தற்கு உரிய அழகிய இனிய பொருள் உலகம் அறிய வந்தது.

செஞ்ஞாயிறு எழுமுன் கருஞாயிறு எழுந்தது; அந்த எழுச்சியில் மகிழ்ச்சி நலங்கள் விளைந்தன.

பிரம சிருட்டியில் அமையாத ஓர் அதிசயமான புதிய சூரி பன் புவியில் உதயம் ஆயது; அது இங்கே கவியில் உதயமாகிக் கலை ஒளிவீசிக் களிப்பூட்டி வருகின்றது.

வெய்யோன் ஒளியும் தன் மேனியின் விரி சோதியில் மறை யும்எழிலுடையன் ஆதலால் அஞ்சன நாயிறு அன்ன ஐயன்என்றார்.

ஆதவன் உதயம் எவரினும் முந்துற அம்புயத்திற்கே இன் பம் ஆதல்போல் இவன் சீதைக்கு இன்பம் ஆயினான்.

செய்ய வஞ்சி என்றது சிவந்த திருமேனியும் பூங்கொம்பு போல் ஒல்கி ஒசியும் மெல்லிய நல்லியல்பும் உடையள் ஆதலால் இச் செல்வியின் செவ்வி தெரியவந்தது.

விழித்து எழும்பொழுது தன் கணவனைக் கண்டு மகிழ்வது இவளது வழக்கம் என்று தெரிகின்றது.

அதிகாலையில் தம் பதி முகத்தை முதலில் பார்ப்பதைப் பதி விரதைகள் ஒரு நல்ல மங்கலமாகக் கருதி வருகின்றனர்.

கங்கை கடந்தது.

இங்ஙனம் விழிமலர்ந்தெழுந்த இராமன் காலை நியமங்களை முடித்து மேலே செல்ல விரைந்து குகனை நோக்கித் தோணியைக் கொண்டுவரும்படி சொன்னான். இவனது பிரிவை நினைந்து அவன் மறுகி உருகினான். கண்ணீர் ததும்ப அருகு வந்து வணங்கி வாய் புதைத்து "தேவரீரது வனவாசத்தை அடியே னது ஊரிலிருந்தே கழிக்கலாம்; பல வசதிகளும் உள்ளன; ஏவியன யாவும் செய்ய ஊழியர் பலர் உளர்; பொய்சொல்லோம்; வஞ்சம் அறியோம்; தஞ்சம் என்று வந்தவரைத் தம் தமரினும் பேணுவோம்; அஞ்சா நெஞ்சினம்; அமரர் திரண்டு வரினும் அமராட வல்லோம்; எமர்கள் யாவரும் உங்களை உயிரினும் இனியராகக் கருதியுள்ளனர். எம் குடிலில் நீங்கள் ஒரு நாள் தங்கி இருக்கப்பெறின், அதைவிட நாங்கள் அடையும் பேரின் பம் யாதும் இல்லை. தருமமூர்த்தியே! கடையேன் வேண்டு கோளைக் கருணை புரிந்து கதிதரவேண்டும்" என இவ்வாறு தொழுத கையனாய் உழுவல் அன்புடன் உருகி வேண்டினான்.

அவனது மனநிலையை வியந்து இக்குலமகன் உவந்து "நான் வனவாசம் புரிந்து புண்ணிய தீர்த்தங்கள் ஆடி மீண்டு வரும்

பொழுது ஈண்டு உன்பால் தங்கி மகிழ்வேன் ; இன்று எனக்கு விடை தந்தருள் " என இனிது கூறினன். கூறவே அவன் வேறு பேசாமல் உடனே சிறந்த அலங்காரங்களையுடைய ஒரு உயர்ந்த தோணியைக் கொண்டு வந்தான்.

அதில் மூவரும் ஏறினர். குகனே அதனை நடத்தினன். கரையில் குழுமிய மாதவர்கள் எல்லாரும் கைகளை உயர்த்தி ஆசி வழங்கி ஆதரமீதூர்ந்து அகம் உருகி நின்றார். அன்னம் நீந்துவதுபோல் ஓடம் நன்னயமாக ஊர்ந்து சென்றது. கங்கை நீரைக் கைகளில் அள்ளி வீசி மங்கையோடு இராமன் மகிழ்ந்து சென்றான். தென்கரை சேரவே மூவரும் தோணியை விட்டு இறங்கினர். குகனும் உடன் தொடர நேர்ந்தான்.

அவனது ஆர்வ நிலையை நோக்கி இராமன் மறுகினன். அவன் உருகி நின்று உரைகள் பல கூறினன். " இரகுநாதா ! தங்களைப் பிரிந்து நிற்க என்றால் முடியவில்லை. நானும் உடன் வருவேன்; காட்டு வாழ்க்கைக்கு இந்த வேட்டுவன் மிகவும் துணையாவன். அடவியின் நிலைகளை முழுதும் அறிவேன். நல்ல வழிகளைக் காட்டுவேன் ; இனிய கனி காய்களை விரைவில் கொணர்வேன் ; அரியன எவையும் எளிதில் புரிவேன். கொடிய மிருகங்களைக் கடிதில் நீக்குவேன்; நெடியமலைகளில் நொடியில்ஏறுவேன். செந்தேனும் தினைமாவும் சுனை நீரும் எங்கணும் கொண்டு வந்து தருவேன். இரவு நேரங்களில் யாதும் கண்ணுறங்காமல் காத்து நிற்பேன். திருவுளம் சம்மதிக்குமானால் படைகள் முழுவதையும் உடன் வரச் செய்வேன் ; வன வேடர்கள் அரக்கர்கள் திருடர்கள் எவரேனும் இடையூறு செய்ய நேர்ந்தால் அவரனைவரையும் அடியோடு தொலைத் தொழிப்பேன். உறுவது செய்யவேண்டின் உயிரையும் விடுத்து உதவுவேன். எவ்வகையினும் என்னை இடை ஒதுக்காமல் உடன் வந்து பணி புரியும்படி உறுதியாக ஏற்றருளவேண்டும் " என இவ்வாறுபோற்றி நின்றான்.

அவனுடைய உள்ளன்பையும் உணர்ச்சி யுண்மையையும் உயிர்க்கேண்மையையும் நினைந்து நினைந்து இராமன் நெஞ்சம் உருகினன். அவனைப் பரவசத்தோடு பார்த்து அருகணைத்து உரிமை மீதூர்ந்து சில உரைகள் பகர்ந்தான். அவை உள்ளன்பு சுரந்து உவகை நிலையில் ஊறி வந்தன.

இன்னுயிர்த் துணைவனு அவனை இவன் அணைத்திருக்கும் முறை அதி விநயமாய் நினைத்தபோ தெல்லாம் நெடுங்களிப்பை விளைத்து நெஞ்சம் கனியச் செய்கின்றது.

அன்னவன் உரைகேளா அமலனும் உரைநேர்வான்,
என்உயிர் அனையாய்நீ; இளவல்உன் இளையான்; இந்
நன்னுதலவள் நின்கேள்; நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடையது; நான்உன் தொழிலுரிமையின் உள்ளேன். (1)

துன்புளது எனின்அன்றோ சுகம்உளது; அதுவன்றிப்
பின்புளது இடைமன்னும் பிரிவுளதென உன்னேல்
முன்புளெம் ஒருநால்வேம் முடிவுளதென முன்னு
அன்புள இனிநாம் ஓர் ஐவர்கள் உளராளோம். (2)

படருற உளன்உம்பி கானுறை பகல்எல்லாம்
இடருறு பகையாய்போ யானென உரியாய் நீ
சுடருறு வடிவேலாய் சொன்முறை கடவேல்யான்
வடதிசை வரும்அந்நாள் நின்னுழை வருகின்றேன். (3)

அங்குள கிளைகாவற்கு அமைதியின் உளன்உம்பி
இங்குள கிளைகாவற்கு யாருளர்? உரைசெய்யாய்!
உன்கிளை எனதன்றோ? உறுதுயர் உறலாமோ?
என்கிளை இதுகாஎன் ஏவலின் இனிதென்றான். (4)

பணிமொழி கடவாதான் பருவரல் இகலாதான்.
பிணியுடையவன் என்னும் பிரிவினன் விடைகொண்டான்
அணியிழை மயிலோடும் ஐயனும் இளையோனும்
திணிமர நிறைகானிற் சேணுற நெறி சென்றார். (5)

(கங்கைப் படலம், 68-72)

சரிதம் நடந்து செல்லும் துரிதத்தில் அரிய விளைவுகள் பல இடையிடையே பெருகி மிளிர்கின்றன. அன்பு நலங்கள் இன்ப நிலையங்களாய்ச் சுரந்து மன்பதையை இன்புறுத்தி வருகின்றன.

குகனை நோக்கி இராமன் பேசியிருக்கும் இந்தப் பேசசுகள் உள்ளச் செவிகளில் ஒலித்துத் தெள்ளிய அமுதத் துளிகளாய்ச் செழித்து நிற்கின்றன. புறக்கண்களுக்கும் புறக் காதுகளுக்கும் புலனாகாத அரிய பெரிய அறப்பண்புகள் அகக் கண்களுக்கும் அகச் செவிகளுக்கும் எளிது தெளிவாய் இன்பம் புரிகின்றன. இராமனை இங்கே அமலன் என்றது அநாதிமல முத்தன் என்னும் பழைய நிலைமையும், மனத்தூயன் என்னும் புதிய தகைமையும்

கருதி யுணர. புனிதன் வாயிலிருந்து கனிவு மீதூர்ந்து இனிய மொழிகள் தனியே ஒளிவீசி அளிமீதூர்ந்து வெளிவரலாயின.

யாதினும் இனியாய் என முன்னம் பொதுவாகச் சொன்ஞன்; ஈண்டு என் உயிர் அனையாய்! என்று கண்ணீர் மல்கி உருகி யுள்ளான். தன் அளவில் இங்ஙனம் தழுவி நில்லாமல் பின்னரும் அன்பு பொங்கி எழுந்தது

என் தம்பியான இந்த இலட்சுமணன் உன்னுடைய உரிமைத் தம்பி என்பான், இளவல் உன் இளையான் என்ருன்.

" இந் நன்னுதலவள் நின் கேள் " என்றதுதான் பெரிதும் உன்னி உணர வுரியது. அருகே நிற்கின்ற தன் மனைவியைச் சுட்டிக்காட்டி உற்றவனிடம் இப்படி உரையாடி யிருக்கிருன்.

நுதல் = நெற்றி. நுதலழகில் முதலழகன் ஈடுபட்டு நுதலலாஞன்.

இவள் உன் கொழுந்தி என்று அன்று அங்கே இராமன் வாய் திறந்து உவந்து சொன்ன சொல்லைக் கவி இங்கே வரைந்து சொல்லைக் கூசி வேறுவிதமாய்ப் பூசியிருக்கிருர்.

அரச மரபுகளின் மரியாதை முறைமைகளை நன்கு தெரிந்து நேரில் அனுபவித்தவராதலால் அவற்றைப் பண்புடன் எங்கும் பாராட்டிப் பழமைகளை விளக்கிக்கிழமை துலக்கி வருகிருர்.

அரசர்கள் எவ்வளவு பழகினவராயினும் அந்தப்புரத்தில் அதிக கவனமுடையவர். யாருக்கும் அதனை அறிமுகப்படுத்தார். தங்கள் பெண்களைப் பிறர் கண்கள் யாதும் பாராவகை என்றும் பாதுகாத்து நன்கு பேணி வருவர்.

கிழமை மீதூர்ந்து பழமை பாராட்டி எத்துணை உரிமையோடு பேசினும் மனைவியரை எவரிடமும் அவர் கிளைமுறை சொல்ல மாட்டார்.

அத்தகைய அரச குலத்தில் தலைமைச் சக்கரவர்த்தியாய் நிலவியுள்ள இக் குலமகன் தனது அருமை மனைவியை ஒரு வேடனிடம் இங்ஙனம் உரிமை காட்டியிருக்கிருன்.

இந்த அன்புரிமை அரிய நிலையது. பண்பு மிக வுடையது. இராமனுடைய குணகணங்களுள் நண்பு நலங்கனிந்த இப் பெருந் தகைமை உலகையும் பரவசப்படுத்தி யுள்ளது.

ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு எம்பிநின் தம்பி; நீ
தோழன்; மங்கை கொழுந்தி எனச்சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்.

தன் கணவனைப் பிரிந்து அசோக வனத்தில் தனியே இருக்குங்கால் சீதை இவ்வாறு நினைந்து உருகி யிருக்கிறாள். எண்ணங்கள் கண்ணெதிர் மிளிர்ந்து கருத்துக்களை விளக்கிக் கருதி நோக்கும் நெஞ்சங்களைப் பெரிதும் உருகச் செய்கின்றன.

ஏழைஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து
மாழைமான்மட நோக்கிஉன் தோழி
உம்பிஎம்பிஎன்று ஒழிந்திலை உகந்து
தோழன்நீ எனக்கு இங்குஒழி என்ற
சொற்கள்வந்து அடியேன்மனத் திருந்திட
ஆழிவண்ணநின் அடியிணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே.

(பெரியதிருமொழி-5-8)

இங்கே நிகழ்ந்த சரிதத்தைத் திருமங்கைஆழ்வார் இங்ஙனம் பாராட்டியுள்ளார். இந்தப் பாசுரத்தில் பதிந்துள்ள சொல்லும் பொருளும் நம் பாடலில் பயின்றிருத்தலை நாடிக்காண்க. உயர்ந்த சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்துள்ள நீ இழிந்த ஒரு செம்படவனிடம் நண்புகொண்டு கூறிய அன்பு மொழிகள் என் உள்ளத்தையும் உயிரையும் பிணித்து நிற்றலால் நான் உன்பால் மீளா அடிமையாய் ஆளாயினேன் என ஆழ்வார் வாய் விட்டுப் பேசியிருக்கும் அழகினை ஆழ்ந்து நோக்குக.

ஒரு நாள் பழகிய குகனிடம் இராமன் கிழமை புரிந்துள்ள கெழுதகைமை எல்லாருடைய உள்ளங்களையும் பண்படுத்தி அன்பு நலங்களை விளைத்து உயிரினங்களுக்கு இனிய அமுதமாய் உணர்வு சுரந்து உறுதி பயந்துள்ளது.

"நீ என் உயிர் அனையாய்; என் இளவல் உன் தம்பி; என் மனைவி உன் கொழுந்தி; என் நிலம் எல்லாம் உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்" என்று உள்ளம் உருகி இவ் வள்ளல் உரை செய்திருக்கும் உரிமைகள் உணருந்

தோறும் அதிசயங்களாய்ப் பெருகி எழுகின்றன. ஐந்து படி முறைகளையும் ஆழ்ந்து சிந்தனை செய்யுங்கள்.

கருவிலே திருவுடைய இக் கோமகனுக்கு உரியனயாவும குகனுடையன என்றதனோடு அமையாமல் தன்னையும் அவனுடைய தொழிலாளன் என்றது எண்ணி உருக நின்றது.

அரசு முழுவதையும் இது பொழுது இழந்து வந்துள்ள இவன் "நளிர் கடல் நிலம் எல்லாம் உன்னுடையது" என்று குகனுக்கு உரிமை செய்தது என்னை? எனின், பதினன்கு வருடங்கள் கழித்துப் பின்னல் வந்து பெறுவதை முன்னல் எண்ணி மொழிந்தபடியாம்.

எனது ஆவி முதல் யாவும் உனது உடைமைகள்; யான் உன் ஏவலில் உள்ளேன் என நட்புரிமையில் இவன் ஒப்படைத்திருக்கும் அற்புத நிலை யாரும் எளிதில் அளந்தறிய அரியது

பத்தி வலையில் பரமன் எளிமையாய் அமைதல்போல் உத்தம பத்தனை குகன்பால் இராமன் உருகி இங்கே உருமாறி பிருக்கிறன்.

"பத்துடை அடியவர்க்கு எளியவன்; பிறர்களுக்கு அரிய
வித்தகன்; மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்,"
(திருவாய்மொழி)

என்னும் பரம்பொருள் நிலை இங்கே உய்த்துஉணர உரியது.

ஆன்மா அன்பு நிறைந்த பொழுது அது பரமான்மாவாய்ப் பரிணமிக்கின்றது. உள்ளம் உருகிப் புனிதம் ஆகவே உயிர் இன்ப வெள்ளமாய்ப் பெருகி உயர்ந்து எழுகின்றது.

எளிய வேடனது அன்பு அரிய வேந்தையும் நட்பாய்ப் பிணித்து நயமாகத் தன் வசமாக்கிக் கொண்டது. உயர்ந்த பண்பு படிந்த நண்பு ஆதலால் அது சிறந்த நிலையில் தேசுமிகுந்து உலகம் எல்லாம் உவந்து காண வியனுகி நின்றது.

"The essence of friendship is entireness, a total magnanimity and trust. It treats its object as a god, that it may deify both."

"பரிபூரணமான உயர்ந்த பெருந்தகைமையும் உறுதியும் நட்பின் உயிர் நிலையாம்; அது இரு வகையிலும் தெய்வம்போல்

திவ்விய மகிமையை ஆக்குகின்றது'' என எமர்சன் என்னும் அமெரிக்கப் பெரியார் கூறியுள்ளார்.

இங்ஙனம் உத்தம நட்புரிமைக்கு ஒளிபுரிந்து நின்ற இராமன் மீண்டும் தன் நண்பனை நோக்கிப் பண்புரைகள் ஆடினான்.

2. உன் பிரியத்தால் என்னைப் பிரிந்து நிற்கமாட்டாமல் வருந்துகின்றாய்; அங்ஙனம் வருந்தலாகாது; காரிய நிலைகளைக் கருதவேண்டும்; வனவாசம் புரிந்து உரிய கருமங்களை முடித்து நான் விரைவில் வந்துவிடுவேன்; பிரிவினால் நேரும் சிறிய துன்பத்தை இது பொழுது பொறுத்துக் கொண்டால் பின்பு என்றும் நாம் இன்பமாய் மருவி இருக்கலாம் என உறுதிமொழிகள் கூறினான்.

துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது

மனித வாழ்க்கையில் மருவியுள்ள இயற்கை நிலைகளை இங்ஙனம் விளக்கியிருக்கிறான். வருந்தி உழைத்தால் பின்பு இருந்து உண்ணலாம் முதலில் துக்கத்தைச் சகித்து நின்றால் பின்னர்ச் சுகத்தை அனுபவிக்கலாம். இச் சிறு பிரிவு பெரிய இன்பமாய்ப் பெருகி வரும் ஆதலால் அதனை அறிந்து அடங்கி இரு என அருள் புரிந்தான்.

'' துன்பம் உற்றவர்க்கு அலால்
இன்பம் இல்லை ஆதலின்
அன்ப மற்றி யான்நினைத்
துன்பத்தால் தொடக்கினேன்,'' (சிந்தாமணி, 579)

என்னும் இதனை ஈண்டு எண்ணி நோக்கிக் கருத்தின் வண்ணங்களையும் திருத்தங்களையும் நுனித்து உணர்ந்து கொள்க.

துன்பமும் சுகமும் மாறுபாடான பொருள்கள் ஆதலால் அவற்றை இணைத்துக் காட்டி எதிர்வதை உணர்த்தினான்.

'' உள்ளத்தின் முடிமேலே இல்லாமை வீற்றிருக்கும்; உலகில் என்றும்
தெள்ளூற்ற நல்லறத்தின் சிரத்திலே எப்பொழுதும் தீமைவாழும்;
எள்ளற்ற இன்பத்தின் தலைமேலே துன்பங்கள் இருக்கும் என்றால்
கொள்ளத் தக்கனவான குற்றமிலாப் பொருள் ஏது? குறிப்புளேற்கே.''
(ஞானவாசிட்டம்)

நிலையற்ற உலகப் பொருள்களின் நிலைமைகளைக் குறித்துச் சனகன் இங்ஙனம் ஞான நோக்குடன் கருதியிருக்கிறான்.

சுகமும் துக்கமும் பகலும் இரவும் போல் சுற்றி வருவன; அவ்வரவு செலவுகளில் களிப்பும் கவலையும் விரவி எழுகின்றன.

பிரிவினால் வரும் ஊதியத்தைப் பெருக்கிக் காட்டியது உரியவனது உள்ளம் தேற்ற. அந்த நட்பாளனைப் பலவகையிலும் ஆற்றியருளினான். முன்பு எனக்கு மூன்று தம்பியர் உளர்; இன்று உன்னோடு சேர்ந்து நால்வராயினர்; ஆகவே நாம் ஐந்து பேரும் நம் தந்தைக்கு அருமை மைந்தர்களாயினோம்.

"அன்புள இனி நாம் ஓர் ஐவர்கள் உளராளேம்"

கிளை தழுவியுள்ள இதில் கெழுதகைமை வெளியே ஒளி வீசுகின்றது. உள்ளம் உருகவே உரை கனிந்து வந்தது.

3. வனத்தில் வந்து உடன் அமர்ந்து எனக்கு உதவி புரிதற்கு உன் தம்பி இலக்குவன் இருக்கின்றான். நீ ஊரில் போயிரு. நான் மீண்டு வந்து உன்னைப் பார்ப்பேன்.

4. "திருவயோத்தியில் உள்ள கிளைஞரைப் பாதுகாத்தற்குத் தம்பி பரதன் அங்கே இருக்கிறான்; இங்கே சிருங்கி பேரத்தில் இருக்கின்ற நம் கிளைகளைப் பரிபாலித்தற்கு உன்னைத் தவிர வேறு யார் உள்ளார்? நீ என்னோடு வருவாயானால் அவர் நிலை என்னாம்? நம் குடும்பத்தைத் தவிக்கவிடலாமா? பரதனைப்போல் என் பொருட்டு நம் உறவினரை நீ பேணி வரவேண்டும். என் பிரிவில் நீ மறுகுவது போல் உன் பிரிவிலும் என்உள்ளம் உருகுகின்றது; நமது சுகத்தையும் நலத்தையும் கவனித்தால் நம்முடைய குடும்பம் என்னாம்? தாம் வருந்தியும் பிறர்க்கு இதம் புரிவதே நம் மரபினர் இயற்கை; எல்லாவற்றையும் கவனித்து எனக்காக நீ இங்கே நிற்கவேண்டும் தம்பி!" என அன்பு ததும்ப மொழிந்தான்.

குகனுடைய அக நிலைகளில் உள்ளம் பறிபோய்த் தன்னை மறந்து இராமன் ஈண்டு உருகி யிருக்கும் நிலை உரைகளால் உணரலாகும். தன்னைக் கண்ணினும் உயிரினும் அரியனாக எண்ணி உருகுகின்ற குடிசனங்களைத் துறந்துவிட்டுக் காட்டுக்குவந்தான்; இடையே வந்து கண்ட வேடன் உழுவலன்புடையனாய் உயிர் உருகலானான். அவனது ஆர்வப்பெருக்கில் பரவசனாய் யாதொரு வேறுபாடும் கருதாமல் ஓருயிராகவே உருகித் தழுவியிருக்கிறான்.

வேந்தும் வேடும் ஈண்டு மருவியுள்ளமை யாண்டும் இனிய நீர்மையாய் நீண்டு நிலவுகின்றது நேச நெஞ்சங்கள் பாசம் மீதூர்ந்து பசைந்திருக்கின்றன. மேல் கீழ் என்னும் மாசுகள் அங்கே மடிந்துபோகின்றன.

அன்பு மனிதனை இனியனுக்கிப் புனிதப்படுத்திவிடுகின்றது.

மனிதத் திரள்கள் ஒருங்கே குழுமி யிருந்தாலும் உள்ளே அன்பு இல்லையாயின் அக் கூட்டம் உயிர்அற்ற உடல்போல் ஒளி யற்று இழிந்துபடுகின்றது.

"A crowd is not company, and faces are but a gallery of pictures, and talk but a tinkling cymbal, where there is no love." (Bacon.)

"எங்கே அன்பு இல்லையோ அங்கே மனிதக் கூட்டம் நண்புடையதாகாது; முகங்கள் பொம்மைத் தோற்றங்களே; உரைகள் வெறும் ஒலிகளே" என பேக்கன் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறியுள்ளது ஈண்டு அறியத் தக்கது. அன்புரிமையும் நண்பு நலங்களும் மன்பதைக்கு எங்கணும் இன்பம் புரிந்து வருகின்றன.

தம்பி என அன்புரிமைபாராட்டி இராமன்உரைத்த அருமை மொழிகளைக் கேட்டு நயனங்கள் நீர்மல்க நாணி நின்று மாறு வேறு பேசாமல் கூறிய படியே குகன் விடைபெற்று மீண்டான். கங்கையின் தென்கரையில் நின்று கண் மறையும்வரையும் பார்த்து விட்டு உருகிய நெஞ்சனுய்த் தோணியைநடத்திச்சென்ருன். மூவரும் தென்பால் நோக்கி வந்தார். குகனுடைய அன்பு நிலையை மனைவியிடமும் தம்பியிடமும் விழைந்து கூறி இராமன் உவந்து நடந்தான். அன்று வழி நடையில் வச்சதேசம் கடந்தது; மறுநாள் நெடிய வனம் ஒன்று தாண்டி மாலையில் பரத்துவாச முனிவரது ஆச்சிரமத்தை அடைந்தார்.

அம்மாதவர் இவரைக் கண்டதும் பெருமகிழ்ச்சி யடைந்து சிறந்த உபசாரங்கள் செய்து விருந்து புரிந்தார். பின்பு அரசைத் துறந்து வந்துள்ள விவரம்தெரிந்து பெரிதும் வருந்தி விதிவலியை நினைந்து தேறி ஆறுதல் கூறி யருளினர்.

அன்று இரவு அங்கே தங்கி இருந்து மறுநாள் காலையில் எழுந்து முனிவரிடம் விடைபெற்று மேலே நடந்தார்; உச்சிப் பொழுதில் யமுனை நதியை அடைந்தார். அதில் நீராடி நியமம்

முடித்துக் கனிகள் அருந்தி யிருந்தார். பிற்பகலில் ஒரு தெப்பத்தால் அந் நதியைக் கடந்து பின்பு வழிநடந்து வந்தார். இடையே ஒரு பாலைவனத்துள் புகுந்தார். கடுங் கோடையாய்க் காய்ந்து கிடந்த அக் கொடிய சுரம் இவர் அடையவும் இனிய வளங்கள் சுரந்து வசந்தகாலத்துப் பசிய பூஞ்சோலையாய் இசைந்துநின்றது.

நீங்க லாற்றலள் சனகிஎன்று அண்ணலும் நினைய
ஓங்கு வெய்யவன் உடுபதி எனக் கதிர் உகுத்தான்;
தாங்கு வேங்கடத் துலவைகள் தழைகொண்டு தழைத்த
பாங்கு வெங்கனல் பங்கய வனங்களாய்ப் பரந்த. (1)

குழுமி மேகங்கள் குமிறனகுளிர்துளி கொணர்ந்த;
முழுவில் வேடரும் முனிவரின் முனிகிலர்; உயிரைத்
தழுவி நின்றன பசியில, பகையில தணிந்த;
உழுவையின்முலை மானிளங் கன்றுகள் உண்ட. (2)

காலமின்றியும் கனிந்தன கனிநெடும் கந்தம்
மூலமின்றியும் முகிழ்த்தன நிலனுற முழுதும்
கோலமங்கையர் ஒத்தன கொம்பர்கள் இன்பச்
சீலமன்றியும் செய்தவம் வேறும் ஒன்றுளதோ. (3)

வனம் புகு படலம்,)

பாலை நிலத்தைக் காணவும் தனது அருமை மனைவி அதில் நடக்க முடியாதே! என்று இராமன் மறுகினன். மறுகவே சூரிய வெப்பம் சந்திர கிரணங்கள் போல் இனிமையாயது. உடு=நட்சத்திரம். உடுக்களுக்குத் தலைவன் ஆதலால் சந்திரன் உடுபதி என நின்றான்.

காய்ந்து உலர்ந்து நின்ற மரங்கள் தழைத்துச் செழித்துக் குளிர் நிழல்களை விளைத்தன; கனல் பரந்த இடம் எல்லாம் புனல் நிறைந்து தாமரைத் தடாகங்கள் ஆயின; கொடிய வேடரும் கொடுமையின்றி இனிய மாதவர் போல் இன்னருள் புரிந்தனர். பசி பகை நீங்கி எல்லா உயிர்களும் இன்புற்று நின்றன. புலிகளிடம் போய் மான்கன்றுகள் பால் குடித்தன. தருக்கள் யாவும் பூத்துக் காய்த்துக் கனிகள் கனிந்து எங்கணும் இனிது பொலிந்து குளிர் நிழல் மலிந்து குலாவி நின்றன.

கொடிய பாலையும் இங்ஙனம் இனிய சோலையாயது இந்தப் புண்ணிய சீலர்கள் புகுந்தமையினாலேயாம். புனித ஆன்மாக்

கள் நண்ணிய இடம் கண்ணியம் அடைந்து கவின் மிகப் பெறும் என்பது புவி அறிய வந்தது.

சீலம் அன்றியும் செய்தவம் வேறும் ஒன்று உளதோ ?

இங்கே கவியின் இருதயத்தைக் காண்கின்றோம். சீலத்தைக் கைக்கொண்டு ஞாலம் உய்யவேண்டும் என்று நயந்து நிற்கின்றார். நெறிமுறை வழுவாத சீரிய ஒழுக்கத்தையே சீலம் என்னும் அருமை மொழியில் குறித்திருக்கிறார்.

மகாபதிவிரதையான சீதையும், தரும குணசீலரான இராம இலக்குவரும் வரவே வறண்ட காடும் வளம் சுரந்து சிறந்த தேசுடன் விளங்கி நின்றது என உளங்கனிந்து கூறி ஒழுக்க நிலையை நினைவுறுத்தியருளினர்.

வாய்த்த இடங்களிலெல்லாம் உயிர்க்கு உறுதியான உண்மை நெறிகளை உணர்த்தி வருகிறார். உலக மக்களுக்கு நன்மைகளை அறிவுறுத்துவது கவிஞர்களிடம் சிறந்த தன்மையாய் அமைந்திருக்கிறது.

கந்தமாதனகிரியிலிருந்து முருகப்பெருமான் தென் திசை நோக்கி வந்தபொழுது இடையே எதிர்ப்பட்ட கொடிய சுரமும் குளிர் பொழிலாய் நிலவிய நிலைமை இங்கே சிந்திக்க உரியது.

ஆற்றருந் திறல் அங்கிதன் அரசியல் முறையை
மாற்றி எம்பிரான் வருணற்கு வழங்கினன் என்ன
ஏற்ற மாகிய வெம்மைபோய் நீங்கியே எவரும்
போற்று நீரொடு தண்ணளி பெற்றதப் புவியே. (1)

காதல் நீங்கலாது அலமரும் ஆருயிர்க் கரணம்
ஆதி ஈசனது அருளினுல் அவனது ஆகியபோல்
ஏதும் நீரிலாது அழல்படு வெய்யகான் இளையோன்
போதலால் குளிர் கொண்டது நறுமலர்ப் பொழிலாய். (2)

புறநெறிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால்
அறிவும் ஆற்றலும் குறிகளும் வேறுபட்டன போல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரலால்
நறிய தண்மலர்ச் சோலையாய் உவகைநல்கியதே. (3)

(கந்தபுராணம்)

அறுமுகப் பரமன் புகவே அழல்படு சுரம் நறுமலர்ச்சோலையாய நிலையை நூலாசிரியர் இவ்வாறு வருணித்திருக்கிறார். கவி

நிலைத்துறை என்னும் யாப்பு முறையிலேயே இருதிறக் கவிகளும் அமைந்திருக்கின்றன. பொருளமைதிகளும் உணர்வு நலங்களும் புலவர்களின் உள நிலைகளைத் தழுவி எழுந்து வெளியே ஒளி செய்கின்றன. தத்தம் காவிய நாயகர்களை எத்திறத்தும் அவர் உரிமையோடு ஏத்திப் போற்றி வருகின்றார். சரித்திரப் போக்கில் உலகிற்கு இதமான பொதுக் கருத்துக்களைத் திருத்தமாக உரைத்தருள்கின்றார். சீலம் தவங்களை ஞாபகப்படுத்தி ஞாலம் உயர நலம் புரிந்து வருதலால் என்றும் இதமான உலக பரிபாலகராய்க் கவிஞர் ஒளிபெற்று மிளிர்கின்றார்.

## சித்திரகூடம் சேர்ந்தது

இவ்வாறு பல நாடுகளையும் காடுகளையும் கடந்து முடிவில் சித்திரகூடமலையை அடைந்தார். அது குளிர்ந்த தருக்கள் அடர்ந்தது. சிறந்த வளங்கள் நிறைந்தது. உயர்ந்த சிகரங்கள் உடையது. விசித்திரமான பல காட்சிகள் அமைந்தது. தவ வாழ்க்கைக்குத் தனி நிலையமானது. அதன் இயல்புகளையெல்லாம் முனிவர்களிடம் முன்னமே வினவி அறிந்திருந்தமையால் அம்மலைவாசத்தைவிரும்பி இக்குலமகன் வந்து சேர்ந்தான்.

அதன் குளிர் நிழல்களையும் எழில் நிலைகளையும் நோக்கி உளம் மிக மகிழ்ந்தான். தனது அருமை மனைவிக்கு அம்மலைக் காட்சிகளை விழைந்து மொழிந்தான்.

வெளிறு நீங்கிய பாலையை மெல்லெனப் போனார்
குளிறு வான்மதிக் குழவிதன் சூல்வயிற்று ஒளிப்பப்
பிளிறு மேகத்தைப் பிடி எனப் பெரும்பனைத் தடக்கைக்
களிறு நீட்டும்அச் சித்திர கூடத்தைக் கண்டார்.

நினையும் தேவர்க்கும் நமக்கும்ஒத்து ஒருநெறி நின்ற
அனகன் அங்கணன் ஆயிரம் பெயருடை அமலன்
சனகன் மாமட மயிற்கு அந்தச் சந்தனம் செறிந்த
கனக மால்வரை இயல்பெலாம் தெரிவுறக் காட்டும்.
(சித்திரகூடப் படலம்)

மலையை அடைந்து, அதன் காட்சிகளைத் தன் நாயகிக்குக் கதாநாயகன் காட்டிய நிலையைக் கவி நமக்கு இப்படிக் காட்டியிருக்கிறார். பாட்டுகளில் தோன்றும் மானசக் காட்சிகள் நுணுகி நோக்குவார்க்கு அதிசய ஆனந்தங்களை அருளி வருகின்றன. அறிவு விழி அரிய ஒளிகளுடையது.

கரிய மேகத்தைத் தனது பிடி என்று நினைந்து மதயானை துதிக்கையை நீட்டிப் பிடிக்கும் என்றமையால் அம்மலை மேக மண்டலத்தை அளாவி ஓங்கியுள்ளமை உணரலாகும். விசித்திர மான அழகிய சிகரங்களை வளமாக உடைமையால் அவ்வரைக்குச் சித்திரகூடம் என்று பெயர் வந்தது.

அதன் சாரல்வழியே நடந்து செல்லும்பொழுதே பலவகை நிலைகளையும் மனைவிக்குக் காட்டினன்.

தேவர்க்கும் நமக்கும் ஒத்து ஒரு நெறி நின்ற அனகன்

என இராமனை இங்கே நினைவுறுத்தினர். ஆதிநாதனாய் நின்றபொழுது தேவர்கள் மட்டும் காணலாம்; இப்போது மனி தரும் காணும்படி மண்ணுலகில் இறங்கி வந்துள்ளமையால் இரு நிலையாரும் ஒரு முகமாய்த் தரிசிக்க நேர்ந்தான். மண்ணும் விண்ணும் நலமுற வந்த புண்ணிய மூர்த்தி என எண்ணி ஏத்தி னர். பரம புனிதன் எவர்க்கும் இனியனாய் எளிது மருவினன்.

தான் கண்ணில் கண்ட நல்ல காட்சிகளைத் தன் காதலிக்கும் உவந்து காட்டியதால் அவளது உள்ளம் களிக்க யாண்டும் ஆதரவு செய்துவரும் அருமையும் உரிமையும் அறிய வந்தன. உவகை நிலையை உரிமையாளரிடம் உரைக்குங்கால் அது அதிக இன்ப மாய்ப் பெருகி எழுகின்றது. "It redoubleth joys" "இன்பச் செய்தியை நண்பனிடம் சொல்லும்போது இருமடங்கு இன்பமாகின்றது" என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

சனகன் மகள் என்னாது மயில் என்றது இந்த மலையில் வசிக்க வந்திருக்கும் நிலைமை கருதி. கடலில் பிறந்தவள் தரை யில் தோன்றி வரையில் தங்க வந்துள்ளாள். இன்று தனக்கு நிலையமான மலையின் இயல்பு கலையின் இயல்போடு தலைவனிடம் காண நேர்ந்தாள். அக்காட்சிகள் உலகிற்கும் உரிமையாயின.

வனம் மலைகளின் நிலைகளைக் குறித்துத் தன் மனைவியிடம் கூறியுள்ள இராம வாசகங்களில் அன்புநலம் சுரந்து அறிவு வளம் நிறைந்து இன்பவுரிமைகள் பல பெருகி இருக்கின்றன. இயற்கை வளங்கள் இனிய காட்சிகள் ஆகின்றன. விரிவான அவற்றிலி ருந்து மாதிரிக்குச் சில ஈண்டு அறிந்துகொள்ள வருகின்றோம்.

### இராமன் சானகிக்கு வரைக் காட்சி கூறுதல்

ஒருவில் பெண்மைஎன் றுரைக்கின்ற உடலினுக்கு உயிரே!
மருவு காதலின் இனிதுடன் ஆடிய மந்தி
அருவி நீர் கொடு வீசத்தான் அப்புறத் தேறிக்
கருவி மாமழை உதிர்ப்பதோர் கடுவனைக் காணாய்! (1)

சலந்தலைக் கொண்ட சீயத்தால் தனிமதக் கதமா
உலந்து வீழ்தலின் சிந்தின உதிரத்தில் மடவார்
புலந்த காலை அற் றுக்கன குங்குமப் பொதியில்
கலந்த முத்தென வேழமுத்து இமைப்பன காணாய்! (2)

நீண்ட மால்வரை மதியுற நெடுமுடி நிவந்த
தூண்டு மாமணிச் சுடர தன் கற்றையில் சொருக
மாண்ட வானிற அருவி அம் மழவிடைப் பாகன்
காண்ட குஞ்சடைக் கங்கையை நிகர்ப்பன காணாய் (3)

சீலம் இன்னதென் றருந்ததிக்கு அருளிய திருவே!
நீல வண்டினம் படிந்தெழ வளைந்துடன் நிமிர்வ
சோலை வேங்கையின் கொம்பர்கள் பொன்மலர் தூவிக்
காலில் நிற்றெழுது எழுவன நிகர்ப்பன காணாய்! (4)

வளைகள் காந்தளில் பெய்தன அனையகைம் மயிலே!
தொளைகொள் தாழ்தடக் கைநெடுந் துருத்தியில் தூக்கி
அளவில் மூப்பினர் அருந்தவர்க்கு அருவிநீர் கொணர்ந்து
களப மால்கரி குண்டிகை சொரிவன் காணாய்! (5)

வடுவின் மாவகிர் இவைஎனப் பொலிந்தகண் மயிலே!
இடுகு கண்ணினர் இடருறு மூப்பினர் ஏக
நெடுகு கூனல்வால் நீட்டின உருகுறு நெஞ்சக்
கடுவன் மாதவர்க்கு அருநெறி காட்டுவ காணாய்! (6)

தெரிவை மார்க்கு ஒரு கட்டளை எனச் செய்த திருவே!
பெரிய மாக்களில் பலாக்களில் பிறங்கிய வாழை
அரிய மாக்கனி கடுவன்கள் அன்புகொண்டு அளிப்பக்
கரியமாகிழங்கு அகழ்ந்தன கொணர்வன் காணாய்! (7)

இடிகொள் வேழத்தை எயிற்றொடும் எடுத்துடன் விழுங்கும்
கடிய மாசுணம் கற்றறிந் தவர்என அடங்கிச்
சடைகொள் சென்னியர் தாபதர் தாமிதித்து ஏறப்
படிகள் தாம் எனத் தாழ்வரை கிடப்பன பாராய்! (8)

அசும்பு பாய்வரை அருந்தவம் முடித்தவர் துணைக்கண்
தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர் தமக்குவிண் தருவான்
விசும்பு தூர்ப்பன வாமென வெயிலென விளங்கும்
பசும்பொன் மானங்கள் போவன வருவன பாராய்! (9)

இனைய யாவையும் ஏந்திழைக்கு இயம்பினன் காட்டி
அனைய மால்வரை அருந்தவர் எதிர்வர வணங்கி
வினையின் நீங்கிய வேதியர் விருந்தினன் ஆனான்
மனையின் மெய்யெனும் மாதவம் புரிந்தவன் மைந்தன். (10)

(சித்திரகூடப்படலம்)

மலையின் நிலைகளை இவ்வாறு தலைவிக்குத் தலைவன் காட்டியிருக்கிறான். பாட்டுக்களை ஊன்றி நோக்கினால் காட்சிகளை ஓர்ந்து கொள்ளலாம். இயற்கை வளங்கள் வியப்பை விளைக்கின்றன.

மந்தி அருவி நீரை வீச அதன் ஆண் ஆகிய கடுவன் உடனே சிகரத்தில் தாவி அங்கே படிந்துள்ள மேகங்களில் நீரை அள்ளி மாறி வீசுகின்றது. சிங்கம் பாய்ந்து கொன்ற யானையின் உதிரத்தில் அதன் முத்துக்கள் தோய்ந்து கிடக்கின்றன; ஊடலில் மகளிர் அவிழ்த்து எறிந்த முத்துமாலைகள் குங்குமச் சேற்றில் விழுந்து கிடத்தல் போல் அவை விளங்கியிருக்கின்றன. இளம் பிறை தழுவி மாணிக்கச் சுடர்கள் பாவி அருவிநீர் மருவி நிற்கின்ற அம்மலை திங்கள் சூடிக் கங்கை நீடிய செஞ்சடைக் கடவுளை ஒத்து நிற்கின்றது.

வண்டுகள் வந்து படிந்த உடனே பூங்கொம்புகள் வளைந்து மலர்களைச் சொரிந்து மீண்டு நிமிர்தல் சீதையின் பாதங்களில் பூக்களைத் தூவி வணங்கி எழுவன போல்றன.

அருவி நீரைத் துதிக்கைகளால் வாரிக் கொணர்ந்து வயது முதிர்ந்த மாதவர் கமண்டலங்களில் யானைகள் வார்த்துச் செல்லுகின்றன. குரங்குகள் தமது நெடிய வால்களை நீட்டிக் குருடர்களுக்கும் கிழவர்களுக்கும் வழிகாட்டியருள்கின்றன. மா பலா வாழை முதலிய கனிகளையும் கிழங்குகளையும் முனிவர்களுக்கு இனிதாகக் கொண்டு வந்து கொடுத்து அவை உதவி புரிகின்றன.

பெரிய மலைப்பாம்புகள் சாரல்களில் வளைந்து விரிந்து கிடக்கின்றன. அவற்றைப் படிகள் என்று கருதி அடிகள் ஊன்றி மிதித்துத் தவசிகள் மேலே ஏறிப் போகின்றனர்.

இடிகள்போல் முழங்கும் பெரிய மதயானைகளைக் கொம்புகளுடனேயே வாயுள் விழுங்கும் என்றதனால் அந்தப் பாம்புகளின் பருமையும் வலிமையும் அறியலாகும். பசி அடங்கிய பின் சிறிதும் அசையாமல் யாதொரு தீதும் செய்யாமல் அவை நெடிது கிடக்கும் ஆதலால் படிகள் என அமைந்தன. அவற்றின் அடக்கத்திற்குக் கொடுத்திருக்கும் ஒப்பு நுனித்து நோக்கத் தக்கது.

கற்று அறிந்தவர் என அடங்கி

இடிகொள் வேழத்தை எயிற்றுடன் விழுங்குற் கடிய மாசுணத்தின் அமைதிக்கு இது உவமையாய் வந்தது. சிறந்த செல்வத்தால் உயர்ந்த பெரிய குடியையும், அரிய வலியினரையும் தம் சொல்லால் எளிதே ஒரு நொடியில் தொலைத் தொழிக்க வல்ல ஆற்றல் அமைந்திருந்தும் கற்றறிந்தவர் யாதும் இடர் புரியாமல் யாண்டும் பொறுமையாளராய் அமைதியுற்றிருப்பர் ஆதலால் அவரது அடக்கம் ஈண்டு மலைப் பாம்புக்கு உரிமையாயது.

சாந்தமானவர் என நினைந்து சான்றோரை இகழ்ந்துவிடாதே அவர் வெகுண்டால் உன் குடி அடியோடு அழிந்து போம் என அறிவுறுத்திய படியாம்.

உவமானத்துள்ளும் உறுதி நலனை நுணுகி உணரும்படி உணர்த்தியிருக்கின்றார். அந்த மலையில் அமர்ந்து தவம்புரிகின்ற ஞானசீலர்களையும் பரமனை நினைந்து கண்ணீர் பெருக்கி உருகியிருக்கும் பத்தர்களையும் மேலுலகங்களுக்குக் கொண்டு போகும் பொருட்டுத் தெய்வ விமானங்கள் வெயில்என மின்என ஒளிவீசி அடிக்கடி வந்து போகின்றன.

இந்தவாறு அந்த மலையில் நிகழுகின்ற பலவகை நிலைகளையும் நலமாகச் சானகிக்குக் காட்டி வந்து முடிவில் குளிர் தருக்கள் நிறைந்த இனிய ஒரு தனி இடத்தை இராமன் அடைந்தான். பொழுதும் போயது. ஆகவே மாலையில் செய்யவேண்டிய நியமங்களுக்காக அயலே உள்ள ஆற்றுக்குப்போனான். அந்நதிக்கு மாலதி என்று பேர். அந்த அந்தி நேரத்தில் மலை மருங்கு எங்கணும் அழகிய காட்சிகள் பங்கி பங்கியாய் உலாவி எழுந்தன.

மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின;
தந்தியும் பிடிகளும் தடங்கள் நோக்கின;
நிந்தையில் சகுந்தங்கள் நீளம் நோக்கின;
அந்தியை நோக்கினன் அறிவை நோக்கினன்.

(சித்திரகூடப் படலம் 43)

இந்தக் கவிப் படத்தைக் கொஞ்சம் கண்ணூன்றி நோக்குங்கள்.

அன்று சித்திரகூடத்தில் நேர்ந்த அந்திக் காட்சியை இங்கு நேரே கண்டு நெஞ்சம் களிக்கின்றோம். மாலைக் காலத்தில் வேலைகளிலிருந்து மக்கள் தங்கள் வீடுகளை நோக்கி வருதல்போல் விலங்கினங்களும் பறவைக்கூட்டங்களும் இரைத் தேட்டம் நீங்கித் தம் இருப்பிடங்களுக்குத் திரும்பிவரும் ஆதலால் அந்த வரவு நிலைகள் தெரியவந்தன. மந்திகள் மரங்களில் உறங்கும் இயல்பின ஆதலின் அவற்றை நோக்கி அடைந்தன.

"கலைதாய உயர்சிமையத்து
மயில்அகவு மலிபொங்கர்
மந்திஆட மாவிசும்புகந்து" (மதுரைக்காஞ்சி)

"வெயில்நுழைபு அறியாக் குயில்நுழை பொதும்பர்
மயிலாடரங்கின் மந்தி காண்பன காண்" (மணிமேகலை 4)

மரங்கள் மந்திக்கு நிலையம் என்பதை இவற்றான் அறியலாம். "மழைக்கால் இருட்டானாலும் மந்தி கொம்பிழக்கப் பாயாது" என்னும் பழமொழியாலும் அதன் இடநிலை புலனும்.

சகுந்தம்=பறவைகள். நீளம்=கூடு. தடங்கள்=மலைச் சாரல்கள். தந்தியும் பிடியும் என்றது ஆணும் பெண்ணும் சோடி சோடியாய்க் கூடிவந்த அமைதி தெரிய. மந்தி=பெண்குரங்கு. மிருகம் பறவை முதலிய எவையும் காதல் நலமுடையன என்பது காண வந்தது. உரிமைகள் தழுவி ஒரு முகமாய் வந்தன

காலையில் பறந்து போனவை பிரிந்து மேயினும் மாலையில் துணையோடு கலந்தே இணை பிரியாது வரும்.

ஆதவன் மறைந்த அந்திப்பொழுதில் உயிரினங்கள் புகலிடம் நாடிவரும் இயற்கைக்காட்சிகளை நாள்தோறும் நாம் பார்த்து வருகின்றோம். ஆயினும் கவியின் வார்த்தைகளை நோக்கி நோக்கி இங்கே ஆர்த்திமீதூர்ந்து நிற்கின்றோம். அவரது மொழிகளில் அதிசயமான பல வசீகர சத்திகள் தனி அமைந்திருக்கின்றன.

"The Sun descending in the west,
The evening star does shine;
The birds are silent in their nest
And I must seek for mine." (Night.)

"சூரியன் மேல்பால் இறங்கி மறைகின்றான்; மாலை உடுக்கள் மருவி மிளிர்கின்றன; பறவைகள் தம் கூடுகளில் அமைதியாய் அமர்கின்றன; எனக்குப் புகலிடம் நான் தேடவேண்டும்" என (William Blake) வில்லியம் பிளாக் என்னும் ஆங்கிலக் கவிஞர் தம் நூலில் இங்ஙனம் கூறியிருக்கிறார். கவிஞர்கள் எங்கே பிறந்தாலும், காலம் இடங்களால் எவ்வளவு தூரம் அகன்றிருந்தாலும் அவர்தம் மானசக் காட்சிகள் ஒருமுகமாய் ஒன்றி ஒளிர்கின்றன. உலகில் நிகழுகின்ற இயற்கைத் தோற்றங்கள் கவிகள் நோக்கில் புதுமை நலங்கள் பொலிந்து திகழ்தலால் அவருடைய வாக்குகளில் அவை சுவை சுரந்து வருகின்றன.

அந்தியை நோக்கினன் அறிவை நோக்கினன்.

முந்திய மூன்று அடிகளிலுள்ள நோக்குக்கும் இந்த நோக்கிற்கும் உள்ள வேற்றுமையை நுனித்து நோக்குக. ஐந்து நோக்குகள் அமைந்துள்ள இந்த இனிய பாசுரத்தைச் சிந்திக்கும் தோறும் உவகை சுரந்து உள்ளம் மலர்கின்றது.

அந்தியை நோக்குதலாவது அந்திப்பொழுதில் செய்ய வேண்டிய சந்தியா வந்தனங்களைக் கருதுதல்.

அறிவை நோக்கினன் என்றது மெய்ஞ்ஞான சீலன் என்பது தெரியவந்தது. வேத விதிகளை ஓர்ந்து ஆன்ம தத்துவங்களை உணர்ந்து மெய்யுணர்விலேயே திளைத்து நிற்பவன் வையம் உய்யும்படி செய்வினைகளை உரிய காலங்களில் செய்ய நேர்ந்தான்.

அறிவு நோக்கம் யாதுமின்றித் தேகபோகங்களையே பெரிதும் நோக்கி உலக மோகிகளாய் வாழ்நாளை வறிதாக்கி மறுகி உழலும் மானிடங்கள் உறுதி நோக்கி உய்ய இவன் உணர்வை ஊக்கியுள்ளான். இயலும் செயலும் உயர்நிலைகளில் ஒளிர்கின்றன.

அறிவை நோக்காமல் அவல நோக்கராய் வறிதே அலமந்து திரிவார்க்கு ஈண்டு இவனது அறிவு நோக்கம் அறிவின் ஆக்கமாயுள்ளது. வெளியே உருவ நிலையில் சாதிபேதம் முதலிய ஏதங்கள் எதையும் நோக்காமல் எவரிடமும் இவன் அறிவையே நோக்கி வருதலால் குகனது அகநிலையில் உள்ளம் பறிபோய் அவனிடம் உயிர்க்கேண்மை பூண்டு உயர் உரிமை கொண்டான்.

அறிவு நோக்கு இன்றேல் பருவகாலங்களில் உரிய கருமங்களைப் புரிய இயலாது ஆதலால் அந்தி நோக்கிற்கு அறிவுநோக்கு ஏதுவாயது. கால நியமங்கள் கதி நலம் புரிகின்றன.

காலம் அறிந்து இடம் தெரிந்து கடமைகளை வழுவாது செய்யும் அறிவுடைமை இயலுடைமையாய் இவனிடம் புகலடைந்துள்ளது.

இன்று இங்கு அறிவை நோக்கி நிற்பவன் என்றும் எங்கும் மெய் யறிவாலேயே நோக்க உள்ளவன் என்பதையும் நோக்கிக் கொள்க. கதாநாயகனது அந்தி நோக்கில் கவி நமக்குப் பல சிந்தனைகளை உந்தி நோக்க உரிமைகூர்ந்து தந்திருக்கின்றார்.

## தம்பி சாலை சமைத்தது.

மாலை நியமம் செய்ய இராமன் நதிக்குப் போகவே இலக்குவன் குளிர்ந்த சோலை சூழ்ந்த இனிய இடத்தில் அழகிய ஒரு குடிசை அமைத்தான். அக் குடில் நிலையை அடியில் காண்க.

நெடுங்கழைக் குறுந்துணி நிறுவி மேனிரைத்து
ஒடுங்கலில் நெடுமுகடு ஒழுக்கி ஊழுற
இடுங்கலில் கைவிசித் தேற்றி எங்கணும்
முடங்கலில் வரிச்சுமேல் விரிச்சு மூட்டியே, (1)

தேக்கடைப் படலையில் கூரை செய்துபின்
பூக்கிளர் நாணலில் புல்லு வேய்ந்து கீழ்த்
தூக்கிய வேய்களில் சுவரும் சுற்றுறப்
போக்கிமண் எறிந்தவை புனலில் தீற்றியே. (2)

வேறிடம் வீரற்கும் மிதிலை நாடிக்கும்
கூறின நெறிமுறை குயிற்றிக் குங்குமச்
சேறுகொண்டு அழகுறத் திருத்தித் திண்சுவர்
ஆறிடு மணியொடும் தரளம் அப்பியே. (3)

மயிலுடைப் பீலியின் விதானம் மேல்வகுத்து
அயிலுடைச் சுரிகையால் அருகு தூக்கறுத்து
எயிலிளங் கழைகளால் இயற்றி யாறிடு
செயலுடைப் புதுமலர் பொற்பச் சிந்தியே. (4)

தம்பியின் அற்புதக் கைத்தொழில் இப்படி அமைந்திருக்கிறது.

வலிய மூங்கில்கழிகளை தூண்களாக நட்டி, சட்டம் கோத்து, முகடு கூட்டி, வரிச்சுகள் வரிந்து, தேக்கின் இலைகளைப் பரப்பி மேலே நாணல் புல்லால் வேய்ந்து, கீழே தூண்களிடையே செம் மண் அப்பிச் சுவர் எழுப்பித் தளம் அழுத்திச், சீதைக்குத் தனி யிடம் ஒன்று இனிது அமைத்து, மயில் பீலிகளையும் அன்னத் தூவிகளையும் தொங்க விட்டு, முன்னே குளிர்ந்த பந்தலிட்டு, இள மூங்கில்களால் நாலுபுறமும் சூழ வளைந்து, குறுமணல் பரப்பி, நறுமலர் எங்கும் விரித்து, எதிரே இனிய குளிர் கொடிகளை வகுத்து வைத்து அண்ணனது வரவை எதிர்பார்த்திருந்தான்.

இவ்வளவு வேலைகளும் ஐந்து நாழிகைகளுக்குள் முடிந்திருக் கின்றன. அனுட்டானங்களை முடித்துக்கொண்டு ஆற்றிலிருந்து உல்லாசமாய் மனைவியுடன் இனிய வுரைகளாடி இராமன் மெல்லவந்தான்.

மாலைவந் தகன்றபின் மருங்கிலாளொடும்
வேலைவந் துறைவிடம் மேய தாமெனக்
கோலைவந் துமிழ்சிலைத் தம்பி கோலிய
சாலைவந்து எய்தினன் தவத்தின் எய்தினன்.

## குடிசையில் குடி புகுந்தது.

இங்ஙனம் வந்தவன் தம்பி செய்துள்ள அந்தப் பர்ணசாலை யைக் கண்டதும் அதிசய பரவசனாய்த் தன் மனைவியை நோக்கி னன். அப்பதிவிரதை மனம் மிக உருகி மறுகி நின்றாள். அக் குலமகளுடன் இத்தலைமகன் அக்குடிசையுள் புகுந்தான்.

இன்னணம் இளையவன் இழைத்த சாலையில்
பொன்னிறத் திருவொடும் குடிபுக் கானரோ
நன்னெடுந் திசைமுகன் அகத்தும் நம்மனோர்க்கு
உன்னரும் உயிருளும் ஒக்க வைகுவான்.

(சித்திரகூடப்படலம், 50)

இந்த எளிய இலைக்குடிசையில் இங்கே குடிபுகுந்தவன் இன் னன் என்பதைக் குறித்துக் காட்டியிருக்கும் காட்சி கருத்தூன்றி நோக்கற்பாலது. திசைமுகன் என்றது நான்கு முகங்களையுடைய பிரமனை.

நான்முகன் அகத்தும் உயிர்கள் உள்ளும் ஒக்க வைகுவான் இக்குடிலில் இன்று புக்கு வைகினன். இடம் நிகழ்ச்சிகளுக்கு

ஏற்ற பொருட் குறிப்புகள் அருட் குறிப்போடு அமைந்து வருகின்றன. யாவும் உறுதி நலனை உதவியருள்கின்றன.

சகல சீவகோடிகளிடத்தும், அவற்றைப் படைக்கும் பிரமன் அகத்தும் ஒருங்கே உறைவான என்றமையால் இவனது உண்மை நிலையை உணர்ந்து கொள்ளலாம்.

உயிர்க்கு உயிராய் எங்கும் தங்கியிருப்பவன் உலகம் நலமுற இங்கு இலைக்குடிலில் இப்படி நுழைந்திருந்தான். அந்தக் குடிசையைக் குறித்துக் கவி எவ்வளவு ஆசையோடு பேசுகின்றார்!

மாயம் நீங்கிய சிந்தனை, மாமறை,
தூய பாற்கடல், வைகுந்தம் சொல்லலாம;
ஆய சாலை அரும்பெறல் அன்பினன்
நேய நெஞ்சின் விரும்பி நிரப்பினான். (சித்திரகூடப்படலம், 51)

அஞ்ஞானம் நீங்கிப் பரிசுத்த அன்பரான மெய்ஞ்ஞானிகள் உள்ளத்தையே எல்லாவற்றினும் முதன்மையாகப் பரமன் கருதிக் கொள்வன் ஆதலால் மாயம் நீங்கிய சிந்தனை முதலில் வந்தது.

"O Spirit! that dost prefer before all temples the upright heart and pure" (Paradise lost)

"நேர்மையான தூய இதயத்தையே எல்லாக் கோவில்களினும் முன்னதாக உவந்து குடிகொள்ளும் ஓ தெய்வமே!" என ஆங்கில மகாகவியாகிய மில்ட்டன் தமது நூலில் கடவுள் வணக்கம் கூறியிருத்தல் ஈண்டு அறியத்தக்கது.

மாயம் நீங்கிய தூய சிந்தை மாயவனுக்கு நேய மனையாயது. அன்பு கனிந்த ஆன்ம ஒளியது ஆதலால் வேதம் முதலியவற்றினும் பரமான்மாவுக்கு அது இன்ப நிலையமாய்த் தலைமை எய்தி நின்றது. மனிதன் உள்ளம் புனிதமாயின் அது தெய்வக் கோவிலாகின்றது.

அரும்பெறல் அன்பினன் என இலக்குவனைக் குறித்தது யாரும் பெறலரிய பேரன்பு பெருகி யிருக்கும் நிலைமை அறிய. இராமனிடம் பிறர் எவ்வளவு அன்பராயினும் இயல்பான பிறப்புரிமையில் அமைந்த இவனது ஆர்வம் உயர்நிலையில் ஒளிமிகுந்துள்ளது. "இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்" எனப் பரதனும் ஏங்கி உருகி ஏத்தி வாழ்த்தும்படியன்றோ இவனது அன்புரிமை எங்கும் ஓங்கி நிற்கின்றது!

உழுவலன்புடைய தம்பி தன் கையினலேயே உரிமையுடன் செய்துள்ள அக்குடிசை அண்ணனுக்கு இன்ன வகையில் புதிய பேருவகையாய் அதிசயம் அருளியது.

இனிய அந்தப் பன்னசாலையுள் புகுந்தவன் தனது கமலக் கண்களால் அதன் அமைதி முழுவதையும் ஆய்ந்து நோக்கினன். உடனே நிலைமைகளை நினைந்து நெஞ்சம் உருகினன். பரிவின் வண்ணங்களாய்ப் பெருகி வந்துள்ள அந்த எண்ணங்கள் அரிய பண்புகளுடையன. ஆர்வ வுரிமைகள் நிறைந்தன.

மேவு கானம் மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவில் எம்பிகை சாலை சமைத்தன
யாவை யாதும் இலார்க்கியை யாதவே. (1)

என்று சிந்தித்து இளையவற் பார்த்திரு
குன்று போலக் குவவிய தோளினய்!
என்று கற்றனை நீஇது போல்? என்றுன்
துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றுன். (2)

அடரும் செல்வம் அளித்தவன் ஆணையால்
படரும் நல்லறம் பாலித்து இரவியிற்
சுடரும் மெய்ப்புகழ் சூடினன் என்பதென் ?
இடருனக் கிழைத் தேனெடு நாள் என்றுன். (3)
(சித்திரகூடப்படலம், 52-54)

உருக்கமான உள்ளுணர்ச்சிகள் இங்கே உயிர்கொண்டுலாவ கின்றன. தம்பி செய்துள்ள குடிசையைக் கண்டு முதலில் மகிழ் தவன் அடுத்த நிமிடத்தில் நெஞ்சம் குழைந்தான். வசித்தற்கு தனக்கு இதமாக இனிது அமைத்திருக்க வருத்தம் உற்றது ஏன்

உயர்ந்த அரசகுடியில் பிறந்து சிறந்த செல்லமாய் அமர் திருக்க உரிய அருமைத் திருவுருவங்கள் தன் பொருட்டுக் காட் டில் வந்து அல்லல் உறுகின்றனவே என்று தலைவனது உள்ளப் உருகியுள்ளது. அவ்வுருக்கம் மறுக்கமாய் மருவியது.

மேவு கானம் என்றது விரதம் பூண்டு தான் விழைந்து வ துள்ள கானகத்தை. விலங்கினங்கள் மேவிய என அதன் வெம்மை தெரியவும் நின்றது. வந்த நிலைமை சிந்தனைக்கு வந்தது.

"சனக மன்னன் மகளுடைய பூவினும் மெல்லிய இனிய பாதங்கள் காட்டில் நடந்து வந்தன; எனது அருமைத் தம்பியின் செல்லக் கைகள் இந்தக் குடிசையைக் கட்டின; அந்தோ! வறுமை நேர்ந்தால் யார்தான் எதைச் செய்யார்?" என இராமன் சிந்தை நொந்திருக்கும் நிலை சிந்திக்குந்தோறும் நெஞ்சம் கரைகின்றது. காதல் உரிமையும், சகோதர வாஞ்சையும், ஆதரம் கனிந்து அயல் அறிய நின்றன

இந்திர பவனம் போன்ற சிறந்த அரண்மனைகளில் அமர்ந்து உயர்ந்த போகங்களை நுகர்ந்து உல்லாசமாய்க் களித்திருக்க வேண்டிய அரச குலக் கொழுந்துகள் வரிசை குலைந்து வந்து அடவியில் சிறுமைப்படுகின்றனவே என்று மறுகி மயங்கி உருகி உளைந்துள்ளான்.

குடிசை கட்டிய கைகளை நினைக்கவே காட்டில் நடந்த கால்களும் உடன்தோன்றின. வழியில் வரும்பொழுதே அப்பாதங்களை நோக்கிப் பரிந்து வந்தான் ஆதலால் அவை முந்துறக்குறிக்க நேர்ந்தன. ஒருவன் உரையாடுகின்ற உரையிலேயே அவனுடைய உள்ளத்தில் ஊறிக்கிடந்தன மீறி வெளி வருகின்றன. நினைவில் நிலைத்திருந்தன மொழியில் முதலில் வந்தன.

செங்கோல் ஏந்தவும், வில்லேந்தி வீரர்களை வெல்லவும் உரிய என் தம்பி கை இன்று ஒரு ஏழைத் தொழிலாளனது கூலித்தொழிலைச் செய்ததே!

யாவை யாதும் இலார்க்கு இயையாதவே?

முதல் மூன்று அடிகளிலும் நினைந்து மறுகிய மறுக்கம் இந்த இறுதி அடியை இப்படி உருக்கி வார்த்தது.

எவ்வளவு சுகபோகிகளாய் உயர்ந்த நிலையில் இருந்தாலும் வறுமை நேர்ந்தால், பசி துயரங்களைப் பொறுக்கவும் வெயில் முதலியவற்றில் நடக்கவும் அவர் வலியராகின்றார்.

அழகிய விதான நீழலில் மலர் பரப்பிய பட்டுவிரிப்பில் நடப்பினும் பனிக்கும்படியான அனிச்சப்பூ அனைய மிருதுவான கால்களையுடைய சானகி கடினமான காட்டில் நெடுந்தூரம் நடக்க நேர்ந்தாள்; சுகுமாரனான இலட்சுமணன் தன் கைகளால் மண்ணைக் குழைத்துச் சுவர் அமைத்து யாண்டும் கண்டறியாத தழைக் குடிசையை ஈண்டு இங்ஙனம் உழைத்துக் கட்டினான்.

யாதும் இல்லாதபோது மனிதர் எதையும் செய்துகொள்ள நேர்கின்றனர். புதிய ஊக்கம் அவர்க்கு அதிசயமா யமைகின்றது.

"யாதும் இலார்க்கு இயையாதன யாவையே?" என்ற வினா யாவும் அவர்க்கு இயையும் என்பதை உணர்த்தி நின்றது. இல்லாமையால் எல்லாம் வரும். சுகபோகியாய்ச் சுகித்து வந்தவன் பட்டினி தோய்ந்து பசி அறிய நேர்வன்; பாலையே நாளும் பருகி வந்தவன் கூழையும் குடிப்பன். சிவிகையில் ஊர்ந்தவன் சுமை தூக்கி வெயிலிலும் நடப்பன். செல்வ நிலையில் தெரியாதன எல்லாம் அல்லல் நிலையில் அறிய அமையும்.

அவசியம் நேர்ந்தால் எவரும் எதையும் பழக நேர்கின்றார். "Necessity is the mother of invention" "வறுமை புதுமைக்குத் தாய்" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈண்டு அறிய உரியது.

சுகுமாரனை நனது தப்பி குடிசை கட்டிய நிலையை நினைந்து நெஞ்சம் உருகிய இராமன் பின்பு அவன் முகத்தை நோக்கி, "இதுபோல் நீ என்று கற்றனை?" என்று இரங்கிக் கேட்டான்.

பிறந்த நாள் முதல் உடனிருந்து, உடன் உலாவி, உடன் உண்டு அயல் யாதும் பிரியாமல் நிழல்போல் நிலைத்து வந்தவன் ஆதலால் இந்தச் செயல் எப்படித் தெரிந்தது? எப்பொழுது கற்றான்? யாரிடம் பழகினான்? எனப் பேரன்பு பிடர் பிடித்து உந்தப் பெரியவன் இப்படிக் கருதி வியந்து உருகி மறுகினான்.

எந்தத் தொழிலும் நெடுநாள் பழகினவர்க்கே எளிதாய் அமையும்; அரசகுமாரனை இவன் ஒரு நாளும் பழகாத, யாண்டும் காணாத புல்லிய வலிய கைத் தொழிலை இன்று புதிதாய் இவ்வளவு அழகாக எவ்வாறு செய்தான்? நதிக்குப் போய் வருமுன் இந்தச் சிறிய நேரத்தில் அரியசாலையை அமைத்தது பெரிய அதிசயமாயது: பல நாளும் பயின்று தேர்ந்த வேலையாளனும் வியந்து நோக்கும்படி அப்பன்னசாலை அமைந்துள்ளமையால் இங்ஙனம் விழைந்து வினவினான்.

அங்ஙனம் வினவும் பொழுது அவன் நிலை எப்படி இருந்தது?

துன்று தாமரைக் கண்பனி சோர்கின்றான்

ஐயா! இதை என்று படித்தாய்? எனத் தம்பியை நோக்கி இராமன் வினவியபோது அவன் நின்ற நிலையை இங்கே நேரே காண்கின்றோம். காட்சி அவன் கருத்தைக் காட்டுகின்றது.

கண்களி லிருந்து தாரை தாரையாக நீர்வழிந் தோடத் தழுதழுத்த குரலோடு இளவலைப் பார்த்து உளமுருகி நின்றான்.

இந்த அழுகைக்குப் பொருள் என்ன? ஈண்டு அழுதது ஏன்? தான சுகமாக இருந்து வசித்தற்கு அழகாகக் குடிசை அமைத் திருக்கிறான்; அதனைக் கண்டு மகிழ்ந்து தம்பியைப் புகழ்ந்து தட்டிக்கொடுத்து உற்சாகப்படுத்தவேண்டிய இந்த இடத்திலே அண்ணன் உள்ளம் கரைந்து கண்ணீரை வெள்ளமாகப் பெருக்கி யிருக்கிறான்.

உலகத்தில் வேறு அண்ணன்களாயின் மேலும் சில செய்யத் தூண்டித் தம்பியை நன்கு வேலை வாங்கிக்கொள்வர்; எவ்வளவு செய்தாலும் குறையும் கூறுவர். பிறர் வருந்தி உழைக்க, அவ் வுழைப்பில் தாம் இருந்து சுகிக்கவே பெரும்பாலும் மனிதக் குழாங்கள் யாண்டும் விரும்பி நிற்கின்றன. தந்நலமே என்றும் கருதிப் பிறர் நலம் யாதும் பேணுமல் புன்மை நிறைந்து புலைப் பட்டுள்ள அப்பொல்லா மனிதருக்கும் இப்புனிதத் திருமகனுக் கும் உள்ள அரிய வேற்றுமையை எண்ணுந்தோறும் நமக்கும் கண்ணீர் வருகின்றது. கருத்தும் உருகுகின்றது.

தனக்காக இளையவன் பணிவிடை புரிந்து வருவதை நினைந்து நினைந்து மூத்தவன் கரைந்து வருகின்றான்.

பிதிர் வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு அரசைத் துற ந்து மரவுரி தரித்துத் தவவேடம் பூண்டு வந்தேன். இவ்வரவால் புகழும் புண்ணியமும் விளைத்தேன் என்பது தவறு; என் அரு மைத் தம்பிக்குச் சிறுமையும் கவலையும் துயரமுமே விளைத்தேன் என இந்நம்பி இன்னல் மீதூர்ந்து தன்னையே நொந்திருக்கிறான்.

உனக்கு நெடுநாள் இடர் இழைத்தேன்

இலக்குவனை நோக்கி இராமன் இப்படி வருந்தி மொழிந்தான்.

நெடுநாள் என்றது வனவாச காலம் முழுவதையும் நினைந்து. 'ஒரு நாள் இருநாள் அல்ல; பதினன்கு ஆண்டுகள் தொடர்பாக இடர் இழைத்து வைத்துள்ளேன்; என் அருமைத் தம்பியே!

உனக்கு நான்செய்திருக்கும் உதவி யிது!" என மனக்கவலையோடு மூத்தவன் கூறவே இளையவன் விழிநீர் ததும்ப எதிர்மொழி பகர்ந்தான்.

அந்த வாய்மொழி ஐயன் இயம்பலும்
நொந்த சிந்தை இளையவன் நோக்கினன்
எந்தை காண்டி இடரினுக்கு அங்குரம்
முந்தி வந்து முளைத்ததன்றோ என்றான்.

முன்னம் அண்ணன் சொன்னதற்குத் தம்பி வாயிலிருந்து இன்னவண்ணம் பதில் வந்துள்ளது. எண்ணங்களைக் கண்ணூன்றி நோக்குங்கள். அங்குரம்=முளை.

எனக்கு இடர் இழைத்தவன் திருவயோத்தியிலிருக்கும் அந்தக்கிழவனே என்பான் "எந்தை காண்டி!" என்றான்.

தான் குடிசை கட்டியதை எண்ணியே அண்ணா இவ்வண்ணம் வருந்துகிறார்; இப் புண்ணிய சீலன் அரசு முடி புனைந்து அயோத்தியிலேயே அமர்ந்திருந்தால் இங்ஙனம் நேர்ந்திராதே; அங்ஙனம் இருக்க ஒட்டாமல் காட்டுக்கு ஓட்டிய அந்தப் பெரிய மகானே இந்த இடர்களுக்கு எல்லாம் காரணம் என மனம் கடுத்து ஆதி ஏதுவான மூல நிலையைக் குறித்துக் காட்டினன்.

தான் ஏவல் செய்வதைக் குறித்து யாதும் வருந்தவில்லை; அதனை ஒரு பெரிய பாக்கியமாகவே கருதி யிருக்கிறான்; அண்ணன் வனவாசம் செய்ய வந்ததையே "இடர்" என்று கவன்று கூறினன். அரிய இன்ப நிலைகளில் இருக்க உரியவன் கொடிய துன்பங்களைப் பொறுத்துள்ளானே! என்று வெம்பி வெதும்பி இரவும் பகலும் மறுகி யுள்ளவன் இவ்வாறு உருகி உரைத்தான்.

தம்பி இங்ஙனம் கவலவே இராமன் உறுதிகூற நேர்ந்தான். தனது பரிவுரை அவனது உள்ளத்தில் கவலையை விளைத்ததை நினைந்து மறுகி இவ்வள்ளல் உடனே உரையை மாற்றி அவனை ஆற்றித் தேற்றியிருக்கும் அருமை போற்றி மகிழத்தக்கது.

பின்னும் தம்பியை நோக்கிப் பெரியவன்
மன்னும் செல்வத்திற்கு உண்டு வரம்பு; இதற்கு
என்ன கேடு உண்டு? இவ்எல்லையில் இன்பத்தை
உன்னு மேல்வரும் ஊதியத் தோடென்றான்.

(சித்திரகூடப்படலம், 57

இலக்குவனுக்கு இராமன் இதில் உரைத்திருக்கும் உறுதி யுண்மைகள் உணர்வு நலஞ்சுரந்து அவனது புனித மன நிலையை இனிது வெளிப்படுத்தியுள்ளன.

அரச பதவியை இழந்து வறுமையாய்க் காட்டிற்கு வந்து இந்தச் சிறிய குடிசையில் இருக்க நேர்ந்ததே! என்று தனது நிலைமையை நினைந்து தம்பி மனம் மறுகுவதை அறிந்ததும் இந் நம்பி இங்ஙனம் உணர்வுபதேசம் புரிந்தான்.

"அப்பா! அரிய பெரிய அரச செல்வங்கள் உலகநிலையில் உயர்ந்தனவாயினும் நிலையில்லாதன; அவலம் மிக வுடையன; அகங்காரம் மமதை முதலிய இழி குணங்களை வளர்த்துப் பழி துயரங்களை விளைப்பன. துறவு நிலையில் அமைந்த இந்தத் தவ வாழ்க்கையோ புனிதம் உடையது; புகழ் புண்ணியங்கள் மருவியது; என்றும் அழிவில்லாத பேரின்ப நலனைத் தருவது" என ஆதரவுடன் கூறி அறிவமைதியை ஊட்டினான்.

இதற்கு என்ன கேடு உண்டு? என்றது தூய இந்தத் தவ வாழ்வு யாதொரு கேடும் இல்லாதது; எல்லா நலங்களும் உடையது; என்றும் குன்றாத இன்பநலம் அருள்வது என்றவாறு.

மேல்வரும் ஊதியம் என்றது மறுமையில் அடைகின்ற மோட்ச இன்பத்தை. இருமையும் நமக்குப் பெருமை தருகின்ற அரிய தவ வாழ்வை அடைந்திருக்கின்றோம்; இதனை உரிமையுடன் நாம் உவந்துகொள்ளவேண்டும் தம்பி! என அன்பு நலம் கனிய நம்பி உணர்த்தி யருளினான்.

அரிய அரச திருவை இழந்து வறிய நிலையில் துறவியாய் வந்திருக்கிற இப் பெரியவன் இளையவனுக்கு உறுதியுண்மைகளைக் கூறியுள்ள இது தத்துவ நோக்கை உய்த்துணரச் செய்கின்றது.

தனக்கு நேர்ந்துள்ள வனவாசத்தை இங்ஙனம் விழைந்து வியந்து நயந்து கொண்டாடியது தம்பி மனந்திருந்தி உவந்து கொள்ள. இளையவன் உளையாவகை இதம் புரிந்துள்ளான்.

செல்வத் திருமகன் வறுமை நலனை வரைந்து காட்டி வனவாசத்தைப் புகழ்ந்து பேசியது மன மாட்சியை விளக்கியுள்ளது.

“Sweet are the uses of adversity.
And this our life, exempt from public haunt,
Finds tongues in trees, books in the running brooks,
Sermons in stones, and good in every thing:
I would not change it.” (As you like it 2-1)

“வறுமையில் இனிய உறுதி நலங்கள் உள்ளன; இந்த நமது வனவாழ்க்கை உலகத் தொல்லையிலிருந்து ஒதுங்கியிருக்கிறது; இங்கே மரங்களிலும் மலைகளிலும் அருவிகளிலும் நதிகளிலும் அரிய பல அறிவு நலங்களைக் காண்கின்றோம்; எங்கணும் நன்மையே தோன்றுகின்றது; இதனை யான் யாதும் நீங்கேன்” என வனத்தில் துரத்தப்பட்ட ஓர் அரசன் தன் துணைவரிடம் கூறியுள்ள இது ஈண்டு இணைத்து எண்ணத்தக்கது. மேல்நாட்டுக் கவிஞரும் துறவு மார்க்கத்தை உயர்வாகவே கருதியிருக்கின்றனர். ஒதுங்கிய பவுனத்தில் உயிரின்பம் விளைகின்றது.

சரித்திர நிகழ்ச்சிகளில் இடையே தத்துவக் காட்சிகளைத் தகவுடன் அமைத்துக் கவிகள் சுவைமிகச் செய்கின்றனர்.

உலக பாசங்கள் நீங்கிய அளவே உயிர் ஒளி மிகப்பெறுகின்றது. பற்றுக்களை ஒழித்தபொழுது மனிதன் புனிதனாய்ப் பொலிந்து விளங்குகின்றான். ஆன்மா ஒன்றே என்றும் நித்தியம்; மற்றவையாவும் அநித்தியம் என அவன் அறிந்து கொள்கின்றான். நிலையற்ற பொருள்களின் நிலைமை தெரியவே அவற்றைப் புலையாகத் தள்ளி நிலையான தன்னையே தலையாகத் தரிசித்து மகிழ்கின்றான்.

“The man who renounces himself, comes to himself.” “பொய்களைத் துறந்த மனிதன் மெய்யான தன்னிடமே வருகிறான்” என அமெரிக்க அறிஞராகிய எமர்சனும் கூறியுள்ளார்.

எல்லாம் துறந்த துறவுவாழ்க்கையை எல்லையில் இன்பம் என இங்கே சொல்லியுள்ளமை சூழ்ந்து சிந்திக்கற்பாலது.

அரியணை அமர்ந்துள்ள அரிய அரசபதவியினும் துறவியான தனது வனவாசமே உயர்நிலையுடையது எனத் தம்பியைத் தேற்றி அன்பு நலம் பெருக இந்நம்பி அருள் புரிந்திருந்தான்.

சித்திர கூடமலையின் வடகீழ்ச் சாரலில் இனிய குளிர் சோலையிடையே இலக்குவன் அமைத்த பர்ணசாலையில் துணைவியுடன் தங்கி இராமன் தவ வாழ்வு நடத்திவந்தான்.

தேற்றித் தம்பியைத் தேவரும் கைதொழ
நோற்றிருந்தனன் நோன்சிலையோன் இப்பால்
ஆற்றல் மாதவன் ஆணையிற் போனவர்
கூற்றின் உற்றது கூறலுற் ருமரோ. (சித்திரகூட, 58)

இதிலிருந்து கவி பரதன் கதையைத் தொடங்குகின்றார். சரிதையை நடத்திச் செல்லும் திறனும், சொல்லும் முறையும், யாண்டும் சுவை சுரந்து வருகின்றன. உரைகள் உள்ளே பொதிந்துள்ள உணர்வு நலங்களை ஊன்றி உணர்ந்துகொள்ளுக.

இப்பால் இவன் இங்ஙனம் இருக்க அப்பால் அவன் வருவதைப் பார்ப்போம்.

## பரதன் வந்து கண்டது.

கேகய தேசத்திலிருந்து பரதன் தம்பியுடன் திருவயோத்தியை அடைந்தான். நிகழ்ந்ததை அறிந்து உள்ளம் துடித்து உயிர் பதைத்து அழுதான். தந்தையின் கருமக் கடன்கள் முடிந்ததும் அண்ணனை அழைத்து வர விரைந்து படைகளுடன் எழுந்து வழி முழுவதும் கால் நடையாகவே நடந்து வந்தான். கங்கையை அடையவே குகன் முதலில் மாறுபாடாக நினைந்து பின்பு தேறி உழுவலன்புடன் அவனை உயிருறத் தழுவி உவந்து பாராட்டிச் சேனைகளையெல்லாம் தோணிகளில் ஏற்றித் தென்கரை விடுத்தான். அவனிடம் விடை பெற்றுப் பரத்துவாசனைக் கண்டு பணிந்து அன்றிரவு அங்கே தங்கி இருநாள் நடந்து மூன்றும் நாள் சித்திரகூடமலையை அணுகினன். நான்கு நாழிகை வழி தூரத்தில் வரும்பொழுதே படைகளின் இடை எழுந்த ஆரவார ஒலிகள் அம்மலைக்குக் கேட்டன.

இலக்குவன் திகைத்தான். ஒலிவரும் திசையை நுணுகி ஓர்ந்தான். அங்கே ஒரு குன்றின்மேல் ஏறி வடதிசையை நோக்கினன்; படைகள் வருவதைக் கண்டான். பரதன் தான் சேனைகளைத் திரட்டிக்கொண்டு அண்ணனை வெல்ல வருகின்றான் என மாறாக எண்ணிச் சீறிக் குதித்து இராமனது அடியில்போய் விழுந்து "ஐயனே! பரதன் நம்மீது படை எடுத்து வருகின்றான்;

அவனை ஒரு நொடியில் தொலைத்து விடுகின்றேன்" என்று கடிது கூறி அயலே ஓடி உடை வரிந்து கட்டிப் படைக்கலங்கள் எடுத்து யுத்த சன்னத்தனாய் உருத்து வந்து பல வீரவாதங்கள் ஆடினான். போர் மூண்டு நின்ற அந்த ஆரவாரங்கள் அவனுடைய வீர நீர்மைகளை விளக்கி யாரையும் வியப்புறச் செய்கின்றன.

பரதன்இப் படைகொடு பார்கொண் டாள்மறம்
கருதியுட் கிடந்ததோர் கறுவு காதலான்
விரதமுற் றிருந்தவன் மேல்வந் தானிது
சரதம் மற்றிலதெனத் தழங்கு சீற்றத்தான். (1)

குதித்தனன் பாரிடைக் குவடு நீறெழ
மிதித்தனன் இராமனை விரைவின் எய்தினான்
மதித்திலன் பரதன்நின் மேல்வந்தான் மதிப்
பதிப்பெருஞ் சேனையின் பரப்பினான் என்றான். (2)

கட்டினன் சுரிகையும் கழலும் பல்கணைப்
புட்டிலும் பொறுத்தனன் கவசம் பூட்டமைத்து
இட்டனன் எடுத்தனன் வரிவில் ஏந்தலைத்
தொட்டடி வணங்கிநின்று இனைய சொல்லினான். (3)

இருமையும் இழந்தஅப் பரதன் ஏந்து தோட்
பருமையும், அன்னவன் படைத்த சேனையின்
பெருமையும், நின்னொரு பின்பு வந்த என்
ஒருமையும் கண்டினி உவத்தி உள்ளம் நீ. (4)

படரெலாம் படப்படும் பருமயானையின்
திடரெலாம் உருட்டின தேரும் ஈர்த்தன
குடரெலாம் திரைத்தன குருதி யாறுகள்
கடரெலாம் மடுப்பன பலவும் காண்டியால். (5)

கருவியும் கைகளும் கவச மார்பமும்
உருவின உயிரினோடு உதிரந் தோய்வில
திரிவன சுடர்க்கணை திசைக்கை யானைகள்
வெருவரச் செய்வன காண்டி வீரநீ. (6)

ஆள் அற, அலங்குதேர் அழிய, ஆடவர்
வாளற, வரிசிலை துணிய, மாக்கரி
தாளறத் தலையறப் புரவி தாளொடும்
தோளற வடிக்கணை தொடுப்பக் காண்டியால். (7)

ஒருமகள் காதலின் உலகை நோய் செய்த
பெருமகன் ஏவலிற் பரதன் தான்பெறும்
இருநிலம் ஆள்கைவிட்டு இன்றுஎன் ஏவலால்
அருநர காள்வது காண்டி ஆழியாய்! (8)

வையகம் துறந்துவந்து அடவி வைகுதல்
எய்தியது உனக்கென நின்னை ஈன்றவள்
நைதல்கண் டுவந்தவள் நவையின் ஓங்கிய
கைகயன் மகள்விழுந்து அரற்றக் காண்டியால், (9)

அரஞ்சுட அழல்நிமிர் அலங்கல் வேலினாய்!
விரைஞ்சொரு நொடியில் இவ் அனிக வேலையை
உரஞ்சுடு வடிக்கணை ஒன்றில் வென்றுமுப்
புரஞ்சுடும் ஒருவனிற் பொலிவன் யான் என்றான். (10)

(கிளைகண்டு நீங்குபடலம்)

இளையவனது மனநிலையும் சினநிலையும் வீரப்பாடுகளும் தீம மொழிகளும் வியத்தகு நிலையின. கவிகளைக் கருத்தூன்றி நோக்கின் அவனுடைய உள்ளத்திறல்களும் உணர்ச்சி வேகங்களும் நேரே காணலாம். பேச்சுகளில் எவ்வளவு நினைப்புகள் பெருகி வெளி வருகின்றன! சீற்றம் தோன்றிய போதெல்லாம் இலக்குவனைக் கவி நமக்குக் காட்டிவரும் திறம் கருதும் தோறும் பெரிதும் அதிசயமாகின்றது.

பெரிய அண்ணன்மேல் கொண்டுள்ள பேரன்பால் சின்ன அண்ணனை இன்னவண்ணம் மாறாக எண்ணிப் பகையுணர்ச்சி மண்டிப் படுமொழிகளாடி இவன் துடி துடித்து நின்றான். துடிப்பெல்லாம் உரியவன்பால் மருவிய பிரிய நிலைகளை வெளிப்படுத்துகின்றன. சித்தத்தின் வேகம் சத்திரியத் தன்மையில் தழைத்து யுத்த வீரத்தில் ஓங்கி மிளிர்கின்றது.

இடைவரிந்து கட்டி, மார்பில் கவசம் அணிந்து, தோளில் அம்புப் புட்டில் மாட்டிக் கையில் வில் எடுத்து அண்ணன் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டு ஆத்திரமும் ஆங்காரமும் பொங்கி ஓங்க வீராவேசமாய் இளையவன் பேசியிருக்கிறான்.

"பரதன் கொண்டு வருகின்ற பெரிய சேனைக்கடலையும் உங்கள் பின்னே வந்துள்ள இந்த ஒரு சிறு பயலையும் அந்தத் தாமரைக் கண்களால் தேவரீர் நேரே கண்டு இன்று மகிழலாம்"

என்று அன்று அவன் நின்ற நிலை இங்கே நம் கண்முன் தோன்று கின்றது. பகைப்படைகள் வருகின்றன; திகைப்புறவேண்டா; நான் ஒருவனே அனைத்தையும் நீறு செய்து ஒழிப்பேன் எனத் தமையனுக்குத் தம்பி ஆறுதலாக இங்ஙனம் நெஞ்சுறுதி கூறினன். தனிமை கருதித் தளர்ந்து படாமல் கிளர்ந்து துள்ளினன்.

"இருமையும் இழந்த அப்பரதன்" என அந்தத் தரும குணசீலனை அநியாயமாக வைதிருக்கிறான். அரசைக் கவர்ந்து கொண்டு அண்ணனை அடவிக்கு ஓட்டிய படுபாதகத்தால் அடு நரகம் உண்டாம் எனக் கொடுமை கூறி நின்றான். இராமத் துரோகம் செய்தவர் எவராயினும் அவர் அதோ கதி அடைவார் என்பது இலட்சுமணனது சித்தாந்தம்.

கோபம் மூண்டு போர்வெறி மண்டியுள்ளமையால் நேர்வன வற்றை நெடுந்திறலோடு நிலைசெய்து பேசினன்.

யானைகளைக் கொன்று குதிரைகளை உருட்டி தேர்களை உடைத்துச் சேனைகளை அழித்து இன்று இங்கே பல பிணமலைகளை உண்டாக்குவேன். எனது வில்லிலிருந்து விடுபட்ட கணைகள் படைகளை ஊடுருவிப்போய்த் திசைகள் தோறும் பாய்ந்து திக்கு யானைகளை நடுங்கச் செய்யும். வீரர்கள் எனத் திரண்டு வந்தவர் வாளும் தோளும் தாளும் தலையும் இழந்து தரையில் ஓடும் உதிர வெள்ளத்தில் உருண்டு புரண்டு உழந்து மடிவர்.

ஒருத்திமேல் காம மோகிதனய்த் தனது அருமைத் தலை மகனுக்குத் துயர் செய்த அந்தக் கிழவன் ஏவலைப் பெற்ற இவன் ஆவலோடு அரசாள்வதை இழந்துபோய் நரகம் ஆளச்செய்வேன்.

நீங்கள் முடி துறந்து காட்டுக்கு வந்துள்ளதை நினைந்து நொந்து நெஞ்சம் துடித்து அழுத உங்கள் தாயாரைப் பார்த்து நகைத்த அந்தக் கைகேசி இன்று வயிற்றில் அடித்துத் துடித்து வாய்விட்டலறி நோய்பட்டு அழும்படி புரிவேன்.

திரிபுரங்களைச் சிரித்து எரித்த பரமனைப் போல இன்று நான் இச் சேனைத்திரள்கள் முழுவதையும் ஒரே கணையால் அடியோடு அழித்துப் பொடியாக்கி விடுவேன். முப்புரம் சுடும் ஒருவனிற் போலிவன் என ஒப்பற்ற அவ் ஒருவனோடு தன்னை ஒப்புரைத்தது வீரகம்பீரத்தால் விளைந்தது.

## இராமன் அடக்கி அருளியது.

**இவ்வாறு இலக்குவன் வீரக் களிப்போடு கூறிய தீரமொழிகளைக் கேட்டு இராமன் பரிவுமீதூர்ந்து குறுநகை புரிந்து அறிவுரைகள் பகர்ந்தான். அவனை உரிமையோடு நோக்கி உரைத்த உரைகள் உள்ளன்பு ததும்பி உணர்ச்சி மிகுந்துள்ளன.**

இலக்குவ! உலகம்ஓர் ஏழும் ஏழும்நீ
கலக்குவன் என்பது கருதினால் அது
விலக்குவது அரிது; அது விளம்பல் வேண்டுமோ?
புலக் குரித்து ஒரு பொருள் புகலக் கேட்டியால். (1)

நங்குலத் துதித்தவர் நவையுள் நீங்கினர்
எங்குலப் புறுவர்கள் எண்ணில் யாவரே
தங்குலத் தொருவரும் தருமம் நீங்கினர்
பொங்குலத் திரளொடும் பொருத தோளினாய்! (2)

எனைத்துள மறையவை இயம்பற் பாலன
பனைத்திரள் கரக்கரிப் பரதன் செய்கையே
அனைத்திற் மல்லன அல்ல அன்னது
நினைத்திலை என்வயின் நேய நெஞ்சினால். (3)

பெருமகன் என்வயின் பிறந்த காதலின்
வரும்என நினைகையும், மண்ணை என்வயின்
தரும்என நினைகையும் தவிரத் தானையால்
பொரும்என நினைகையும் புலமைப் பாலதோ? (4)

பொன்னெடும் பொருகழற் பரதன் போந்தனன்
நன்னெடும் பெரும்படை நல்கல் அன்றியே
என்னெடும் பொரும்என இயம்பற் பாலதோ
மின்னெடும் பொருவுற விளங்கும் வேலினாய்! (5)

சேணுயர் தருமத்தின் தேவைச் செம்மையின்
ஆணியை அன்னது நினைக்கல் ஆகுமோ?
பூணியல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டுஎனைக்
காணிய நீஇது பின்னும் காண்டியால். (6)

(~~கிளைகண்டு நீங்கு படலம்~~, 42-47)
திருவடி சூட்டு படலம்

இலட்சுமணனைப் பார்த்து இராமன் கூறியுள்ள இந்த அமுத வசனங்கள் அன்பு நலம் சுரந்து அறிவு மணம் கமழ்ந்து சீவகளை ததும்பி இருக்கின்றன. இந்தத் திவ்விய புருடன் வாயிலிருந்து

வெளி வருகின்ற ஒவ்வொரு மொழியும் உணர்வொளிவீசி உயர் நிலையில் மிளிர்கின்றது.

உரைகள் மனிதனது உள்ளப் பண்புகளைத் தெள்ளத்தெளிய வெளிப்படுத்துகின்றன.

பரதன் கொணர்கின்ற படைத் திரள்களை ஒழித்துவிடுவதாக வீரவாதம் கூறி உருத்து நிற்கின்ற தம்பியை அன்புடன் நோக்கி, "இலக்குவ! நீ அகில உலகங்களையும் அடங்க வெல்ல வல்லவனே; அதனை வெளியே சொல்லவேண்டுமா? எதனையும் ஆழ்ந்து சிந்திக்கவேண்டும் படபடப்பு ஆகாது. நான் சொல்வதைக் கொஞ்சம் கவனி" என அவனது கோபவெறி தணியக் குணமொழி கூறினான்.

புலக்கு உரித்து ஒரு பொருள் என்றது ஓர்ந்து உணர்ந்து சிந்தித்துத் தேர்ந்துகொள்ளத்தக்கது என்றவாறு.

புலம் = அறிவு. அறிய உரிய பெரிய பொருள் என்றமையால் அறியாமையால் மயங்கி இருள் மிகுந்த மனத்தனாய் மருளுடன் பேசுகின்றாய் என்பது உள்ளே மருவியுள்ளது.

நமது மரபில் பிறந்தவர் எவரும் தவறு புரிந்திலர்; எப்பொழுதும் தரும சீலர்களாகவே யாண்டும் ஒழுகி வந்துள்ளனர்.

அந்தப் புண்ணிய மரபினரெல்லார்க்கும் ஒருகண்ணியமாகப் பரதன் பிறந்திருக்கிறான்; அவனுடைய குண ஒழுக்கங்களை வேதங்கள் விழைந்து நிற்கின்றன. நீதி நிலையமான அவன்மீது நீ ஏதங்களை நினைக்க நேர்ந்தாய்! என்மீது கொண்டுள்ள பேரன்பினால் மாறாய்ப் பிழைபடுகின்றாய்! உன் உள்ளப் பாசம் மாசற்றவனிடமும் மாசு காணச் செய்கின்றது. தன்னை மறந்து பேசுகின்றாய்; உன் அண்ணன் இங்கே வருவது என்னைக் காணவே; அவனது பாச நேசங்கள் அளவிடலரியன; என்னை அழைத்துக் கொண்டுபோய் அரசு முடி சூட்டவேண்டும் என்னும் அவாவினாலேயே உள்ளமும் உயிரும் உருகி வருகின்றான். அந்த அன்புருவத்தின் பண்புநிலை தெரியாமல பதறித் துடிக்கின்றாய்!

"போரும் என நினைகையும் புலமைப் பாலதோ"?

சண்டை செய்ய வருகின்றான் என நீ நினைத்தது எனக்கு நகைப்பாகின்றது. வருபவனது நிலைமையை ஒரு சிறிதும் உண

ராமல் வறிதுரை பகர்வது அறிவுடைமையாகுமா? குல நிலையை நினையாமல், வழி முறை கருதாமல், பிறப்புரிமையையும் தெரியாமல் மனம் போனபடி சினந்து பேசுதல் பெரிதும் பிழையாம்.

"சேண் உயர் தருமத்தின் தேவைச்; செம்மையின்
ஆணியை அன்னது நினைக்கல் ஆகுமோ?"

பரதனைக் குறித்து இராமன் கருதியுள்ள கருத்துக்கள் இங்ஙனம் உருக்கொண்டு வெளி வந்துள்ளன. இந்த அருமை வாக்கியங்களை உரிமையுடன் ஊன்றி நோக்கவேண்டும். கெழுதகைமை நிறைந்த விழுமிய நெஞ்சம் எழுமையும் இன்பமான இனிய எண்ணங்களை எண்ணி வருகின்றது.

சேண்=ஆகாயம், உயரம். தன்னையுடையானைச் சீவகோடிகளினின்றும் உயர்த்தி வானவன் ஆக்கிப் பரம பதத்தையும் அருள வல்லது ஆதலால் தருமம் இன்னவாறு அடைபெற்று வந்தது. உருவில் மனிதன் ஆயினும் பரதன் தருமதேவதை என அருமை பாராட்டினான்.

செம்மை=நேர்மை. மனக் கோட்டம் இன்றி யாண்டும் நடுவு நிலைமையாய்த் திருந்தியிருக்கும் செவ்விய தன்மைக்குச் செம்மை என்று பெயர். இந்தப் பண்பாட்டில் பரதன் தலை சிறந்து உள்ளமையால் செம்மையின் ஆணி என்றான். வண்டிக்கு அச்சாணி போல் செம்மைக்கு இவன் உயிராணி என்பது குறிப்பு.

அருமையான எல்லாப் பெருமைகளுக்கும் மூல ஆதாரமாய் மருவியுள்ள இந்த உள்ளப் பண்பு பரதனிடம் தனியுரிமையாய்த் தழைத்து நிற்கின்றது. அந்நேர்மையே எல்லாச் சீர்மைக்கும் தாயகமாயுள்ளமையால் அதனை வாயார வியந்து கொண்டாடினான்.

" Both wit and understanding are trifles, without integrity; it is that which gives value to every character. "

(Goldsmith)

"மனச்செம்மை இல்லையேல் கல்வி அறிவு யாவும் புல்லியனவே; அதுதான் ஒழுக்கங்களுக்கெல்லாம் உயிர் நிலையமாய் நின்று உயர் மதிப்பை உதவுகின்றது" என நேர்மையைக் குறித்துக் கோல்டுஸ்மித் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறியுள்ளது ஈண்டு அறியத்தக்கது. செம்மையால் இம்மையும் அம்மையும் ஆம்.

நேர்மையின் நீர்மை கூர்மையாக ஓர்ந்துகொள்ள உரியது.

இலக்குவன் முன்னம் சொன்னதைத் தன் வாயால்சொல்லக் கூசி அன்னது என்று சுட்டினன். தன்னை உயிரினும் இனியனாக யாண்டும் கருதி உருகுகின்ற பரதனைத் தன்மேல் சண்டைக்கு வருகின்றான் என்று கூறியது கொடிய மடமையாம் என நெடிது வருந்தி நெஞ்சம் மறுகியிருக்கிறான்.

நினைக்கல் ஆகுமோ? என்றது எண்ணினாலும் பாவமாம என்றவாறு. மனத்தால் நினைத்தாலும் பாவம் ஆகின்ற அதனை வாய் திறந்து துணிந்து சொல்லவும் செய்தாயே! என்று அல்லல் உழந்துள்ளான்.

செவ்விய அறத் தருமதேவதை இன்று இங்கே வருவது என்னைக் காணும் பொருட்டே என்பான், "போந்தது ஈண்டு எனைக் காணிய" என்றான். செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினை எச்சம் பின்னே நிகழும் காட்சியின் கனிவுகளை யெல்லாம் முன்னே கருதி நோக்க வந்தது.

இராமனது தெளிவான தீர்மானங்கள் உழுவலன்பு தழுவி இங்கே ஒளிவீசி நிற்கின்றன. மொழிகள் அன்பு மணம் கமழ்ந்து பண்பு சுரந்து அமைதிமீதூர்ந்து உயர் நிலையில் மிளிர்கின்றன.

வீரவெறியால் இலக்குவன் மனம் திரிந்து சினந்து சீறி வீறுகொண்டு வில் ஏந்தி மாறுபாடு கூறியதும்; அதனை மறுத்து இப்பெருந்தகை வேறுபாடுகளை விளக்கி உறுதி கூறியிருக்கும் முறையும் உருக்கம் நிறைந்துள்ளமையால் உணரும் தோறும் உள்ளங்கள் உருக நேர்கின்றன.

பரதனைக் குறித்து நான் சொன்ன இந்த உண்மையை நீயே இப்பொழுது நேரே காண்பாய் என்பான், "நீ இது பின்னும் காண்டியால்" என்றான். காதால் கேட்டதைக் கண்ணால் கண்டு விரைவில் தெளிவாய் என்பதாம்.

## பரதன் வரும் காட்சி.

இங்ஙனம் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே பரதன் அங்கே வருகின்றான். சித்திரகூட மலைக்கு மூன்று மைல் தூரத்தில் வரும்போதே அண்ணனைக் காணவேண்டும் என்னும் ஆவல் பெருகி ஓங்கினமையால் சேனைகளுக்கு முன்னதாகச் சத்துருக்

கனை மட்டும் அழைத்துக்கொண்டு ஓடி வருகின்றான். "என் உயிர் எங்கே! என் தெய்வம் எங்கே?" என்று சாரல் எங்கும் கண்ணுய்த் தலைமேல் கூப்பிய கையனாய் அக்குலமகன் தம்பியோடு தவித்து வருகின்ற நிலையைக் கவி முழுவதும் எழுதித்தருகின்றார்.

தொழுதுயர் கையினன்; துவண்ட மேனியன்;
அழுதழி கண்ணினன்; அவலம் ஈது என
எழுதிய படிவம்ஒத்து எய்துவான் தனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான். (கிளைகண்டு, 49)

பாதனது உருவ நிலையையும் உள்ளக் கனிவையும் இங்கே கண்டு நாம் உள்ளம் உருகுகின்றோம். சொல்லால் எழுதிய சித்திரம் மனக்கண் எதிரே எல்லாவற்றையும் தெளிவாக இனிது காட்டியருள்கின்றது. காண்பவரது காட்சியின் மாட்சி அளவு கருத்துக்கள் புலனாகின்றன.

இரண்டு கைகளையும் தலைமேல் குவித்துத் திசை நோக்கித் தொழுது உடல் குழைந்து உயிர் பரிந்து விழி நீர் சொரிந்து வருகின்றான். துவளல் = குழைதல். "துவண்ட மேனியன்" என்றது இராச கம்பீரமான ஆண்மைத் திருவுருவம் எழில் சிதைந்து பொலிவிழந்து மெலிந்து அலமந்து வருதல் அறிய வந்தது.

ஓயாமல் அழுது அழுது இமைகள் வீங்கிக் கண்களின் அழகு குலைந்திருந்தமையால் அழுது அழி கண்ணினன் என்றார்.

"அவலம் ஈது என எழுதிய படிவம் ஒத்து எய்துவான்" என்றது பிரிவுத்துயரமே ஒரு உருவமாக மருவியபடியாய் அவன் உருகி வந்துள்ளமை உணர வந்தது.

அவலம் = துன்பம். மனக் கவலையால் விளைந்த கொடிய துன்பமே வடிவமாகி என்றமையால் அதன் முடிவு தெரியலாகும்.

இந்த நிலையில் அவன் வந்தபொழுது இராமன் பன்னசாலை அயலே ஒரு மகிழ மரத்தின் அடியில் அமர்ந்திருந்தான். தூர வரும்போதே பார்த்தான்; கண்ணீர் ததும்பியது; அடக்கிக் கொண்டு இலக்குவனை நோக்கி, "ஐயா! சண்டைக்கு வருகின்ற ஆளைப்பார்!" என்று அழுதகண்ணனைப் பரிந்து கூறித் தலையைக் கவிழ்ந்து கொண்டான். அப்பொழுது இலக்குவன் அடைந்த துக்கத்தையும் வெட்கத்தையும் அவன் அன்றி யார் அறிவார்?

இராமன் சொன்ன முறை.

கார்ப்பொரு மேனிஅக் கண்ணன் காட்டினன்
ஆர்ப்புறு வரிசிலை இளைய ஐயநீ
தேர்ப்பெருந் தானையப் பரதன் சீறிய
போர்ப் பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கென. (1)

இலக்குவன் நின்ற நிலை.

எல்ஒடுங்கிய முகத்து இளவல் நின்றனன்
மல் ஒடுங்கிய புயத் தவனை வைதெழும்
சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர
வில்லொடும் கண்ணநீர் நிலத்து வீழவே. (2)

(இளைகண்டு, 50, 51)

இந்தச் சொல் ஓவியங்கள் காட்டியுள்ள காட்சிகள் அற்புத நிலையின. அதி தீரமான வீரமக்களுடைய நீர்மை நிலைகளை நேரே காண்கின்றோம். சொற்களும் செயல்களும் உணர்ச்சிகளும் உயர்ந்த குடிப்பிறப்பினை விளக்கி அரிய படிப்பினைகளைப் பார் அறிந்து பரிவு கூர்ந்து சீர்மையுறச் செய்திருக்கின்றன.

வரிசிலை இளைய ஐய! என்னும் இந்த விளிஅழகை விழியால் காணுங்கள். உடைவாள் இறுக்கி அம்புகள் அமைத்து, வில் எடுத்துப் போருக்கு மூண்டு ஆரவாரமாய் வீரப்பாடு காட்டி நிற்கும் இலக்குவனை நோக்கி, “தம்பி! நீ அமராட எதிர்பார்த்துள்ள பகைவன் வருகிற கோலத்தைப் பார்!” என இந் நம்பி சொல்லியிருக்கும் நயத்தைப் பார்த்து இங்கே நாம் திகைத்து நிற்கின்றோம். உரைகளில் அறிவும் பரிவும் பெருகி ஒளிர்கின்றன.

போர்ப்பெரும் கோலத்தைப் பொருந்த நோக்கு

இளையவன் முன்னம் கூறிய வார்த்தைகளையெல்லாம் வரைந்து கொண்டு இந்த வாக்கு எழுந்தது. பரிதாப நிலையிலும் அதிவிநயமான பரிகாசம் உள்ளே மருவியுள்ளது.

உழுவலன்பே உருவமாய்த் துன்பம் தோய்ந்து புழுதி முழுதும் படிந்து அழுதழி கண்ணனாய் மெலிந்து தளர்ந்து தொழுத கையனாய்த் துவண்டு காதல் மண்டி ஆவலோடு அலமந்து வருகின்ற பரதன் கோலத்தை இவ்வாதன் போர்ப் பெருங் கோலம் என்று கிண்டலாகக் குறிக்கும் போதே கண்கள் நீர் மல்கிக் கரைந்திருக்கிறான். இளையவன் பிழையை உளைய உணர்த்தினன்.

உன்னைப் போல் கவசம் அணிந்து, வாள் மடுத்து, வில் எடுத்து, அம்பு ஏந்தி நம்மைக் கொல்லவும் வெல்லவும் குறிக்கொண்டு சேனைகளோடு முன்னே சீறிவருகின்ற போர் வீரனைப் பார் அப்பா! என்று பரிந்து காட்டினன். உன்னுடைய போர்க்கோலத்திற்கும் அவன் கோலத்திற்கும் உள்ள உயர்வு தாழ்வுகளை ஓர்ந்து வெற்றி யார் பக்கமாம்? என்பதைத் தேர்ந்து கொள்க.

பெருங்கோலம் என்றது வருங்கோலத்தை வரைந்து காண.

கண் இமையாமல் நன்றாக நேரே விழி திறந்து பார் ஐயா! என்பான் "பொருந்த நோக்கு" என்றான். பொருந்தா மொழிகள் பல முன்னே வருந்த மொழிந்திருத்தலால் இங்கே பொருந்த நோக்கித்திருந்தும்படி கூறினன்.

போருக்கு நீ எதிர்பார்த்தபடியெல்லாம் எதிரியிடம் பொருந்தியிருக்கிறதா? நேருக்கு நேரே பார்த்துக்கொள் தம்பி! என்று இந்நம்பி விநயமாக நயமொழி பகர்ந்தான்.

இந்த அண்ணன் சொல் காதில் விழு முன்னமே வருகின்ற அந்த அண்ணனைக் கண்ணால் நேரே இலக்குவன் கண்டான். காணவே நாணம் மீதூர்ந்து நைந்து நடுங்கினன். தான் எண்ணிய பிழைபாடுகளையெல்லாம் இகழ்ந்துவருந்திக்கண்ணீர்சொரிந்தான்.

கண்ணிலிருந்து நீர் நிலத்தில் விழுமுன்னரே கையிலிருந்த வில் கீழே விழுந்தது. செயலழிந்து உயிர் அலமந்திருக்கிறது.

"எல் ஒடுங்கிய முகத்து இளவல்" என்றமையால் அது பொழுது அவன் உள்ளம் அடைந்த துயர நிலைமையை உணர்ந்து கொள்ளலாம். குலமகன் ஆதலால் தவறு தெரிந்ததும் குலை துடித்தான்.

வெட்கமும் துக்கமும் அகத்துள் புகுந்தமையால் முகம் பொலிவிழந்து மழுங்கியது. எழில் பரந்து தேசு மிகுந்திருந்தவன் விழிநீர் சொரிந்து அயர்ந்து ஒளி குறைந்து நின்றான்.

மல் ஒடுங்கிய புயத்தவன் என்றது பாதனை. வீரம் குடிபுகுந்துள்ள அத்திண்டோள் அண்ணனது பிரிவுத் துயரால் இது பொழுது மெலிந்து போயிருத்தலால் ஒடுங்கிய என வந்தது.

அவ்வுருவ நிலையைக் கண்டதும் இலக்குவன் உள்ளம் உருகினன். தான் கருதியது கொடிய பாவமாம் என நெடிது நொந்து நாணி வருந்தி நாவடங்கி யாதொரு செயலுமின்றி அயர்ந்தான்.

சொல்லும், சினமும், உணர்வும் சோர, வில்லும் கண்ணீரும் நிலத்தில் வீழ அல்லல் உழந்து அலமந்து நின்றான்.

இங்ஙனம் அவன் நிற்கவே பரதன் அங்கே உருகி வந்தான்.

கோதறத் தவம்செய்து குறிப்பின் எய்திய
நாதனைப் பிரிந்தனள் நலத்து நீங்கினாள்
வேதனைத் திருமகள் மெலிகின்றாள் விடு
தூதெனப் பரதனும் தொழுது தோன்றினான். (1)

அறந்தனை நினைந்திலை அருளை நீத்தனை
துறந்தனை முறைமையை என்னும் சொல்லினான்
மறந்தனன் மலரடி வந்து வீழ்ந்தனன்
இறந்தனன் தாதையை எதிர்கண் டென்னவே. (2)

உண்டுகொல் உயிரென ஒடுங்கினான் உருக்
கண்டனன் நின்றனன் கண்ணன் கண்எனும்
புண்டரீகம் பொழி புனல் அவன்சடா
மண்டலம் நிறைந்து போய் வழிந்து சோரவே. (3)

அயாவுயிர்த் தழுகணீர் அருவி மார்பிடை
உயாவுறத் திருவுளம் உருகப் புல்லினான்
நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்
தயாமுதல் அறத்தினைத் தழுவி என்னவே. (4)

புல்லினன் நின்றவன் புனைந்த வேடத்தைப்
பல்முறை நோக்கினான் பலவும் உன்னினான்
அல்லலின் அழுங்கினை ஐய! வாளுடை
மல்லுயர் தோளினான் வலியனோ ? என்றான். (5)

அரியவன் உரைசெயப் பரதன் ஐய ! நின்
பிரிவெனும் பிணியினால், என்னைப் பெற்ற அக்
கரியவள் வரம்எனும் காலனால் தனக்கு
உரியமெய் நிறுவிப்போய் உம்பரான் என்றான். (6)

விண்ணிடை அடைந்தனன் என்ற வெய்யசொல்
புண்ணிடை அயிலெனச் செவி புகாமுனம்
கண்ணொடு மனம்சுழல் கறங்கு போலவாய்
மண்ணிடை விழுந்தனன் வானின் உம்பரான். (7)

இருநிலம் சேர்ந்தனன் இறை உயிர்த்திலன்
உருமினை அரவென உணர்வின் நீங்கினன்
அருமையின் உயிர்வர அயாவுயிர்த்தகம்
பொருமினன் பன்முறை புலம்பினனரோ. (8)

(கிளைகண்டு நீங்குபடலம்)

பரதன் வந்து பணிந்ததும், அவனைத் தழுவி எடுத்து இராமன் உருகி நின்றதும், அதன்பின் தந்தை இறந்துபோனமை தெரிந்து இம்மைந்தன் மயங்கி விழுந்ததும், மறுகிப் புலம்பியதும் பரிபவமான சோகங்களாய் இங்கே பெருகி யிருக்கின்றன. அருமைத் தம்பியைத் தழுவி உரிமைத் தமையன் நிற்கும் நிலை உலக உள்ளங்களை என்றும் உருக்கி வருகின்றது.

இராமனை அழைத்து வரும்படி அரசதிரு விடுத்த தூதன் போலப் பரதன் தோன்றினன். வேதனைத் திருமகள் என்றது தனது நாதனைப் பிரிந்து அவள் நைந்து மெலிந்திருக்கும் நிலை தெரிய வந்தது.

இராமன் சக்கரவர்த்தியாய் அரியணை அமர்ந்திருந்தால் அரசதிரு பெருமிதமாய்ப் பொலிவெய்தி உலகமெங்கும் ஒளி சிறந்து நிற்கும். அந் நிலை குலைந்து போயமையால் அத்திரு தலை கவிழ்ந்து தளர்ந்து தவிக்க நேர்ந்தது.

அந்தத் திருவின் தூதுபோல் பரிவு மீதூர்ந்து வந்த பரதன் அண்ணனைக் காணவே கண்ணீர் பொங்க ஓடி வந்து காலில் விழுந்து மேல் ஒன்று பேசாமல் மெய்ம் மறந்து கிடந்தான். அவனை வாரி எடுத்து மார்போடு அணைத்துக் கண்ணீர் சொரிந்து இராமன் கரைந்து நின்றான். அவனது உருவ நிலையை நோக்கி உள்ளம் உருகினன்.

உயிர் உண்டோ இல்லையோ என்னும்படி உடல் மெலிந்து படருழந்து வந்துள்ள அவனது நிலைமையை நினைந்து நினைந்து நெஞ்சம் கரையக் கண்கள் நீர் சொரிய யாதும் பேசாமல் தம்பியைத்தழுவி இந்த அண்ணன் நின்ற நிலை பரிவின் உருவமாய்ப் பெருகியுள்ளது. இவன் அழுத கண்ணீர் அவன் சடைமுழுதும் நனைந்து உடல் வழிந்து தரை இழிந்து ஓடியது.

“அயாவுயிர்த்து அழுகணீர் அருவி மார்பிடை
உயாவுறத் திருவுளம் உருகப் புல்லினன்.”

தன் இரு கைகளாலும் தம்பியைத் தழுவி இங்ஙம்பி நிற்கும் நிலை ஒரு பெரிய அன்புக்காட்சியாய் அருள் சுரந்துள்ளது. வெளியே மார்பிறுகப் புல்லி உள்ளே உயிர் உருகி யிருக்கிறான்.

நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்

தரும நீதி அரச நீதி முதலிய பலவகை நீதிகளுக்கும் இராமன் இனிய ஓர் நிலைக்களமாய் நிலவியிருக்கிறான் என்றமையால் அவனது நிலைமையும் தலைமையும் நேரே தெரியலாகும்.

நதிகளுக்கு எல்லாம் கடல் நிலயம் ஆதல்போல் நீதிகளுக்கெல்லாம் இராமன் நிலயமாயுள்ளான். அந்த நீதிக் கடல் தயை நிறைந்த ஒரு தரும நதியைத் தழுவி நின்றது எனப் பரதனை உழுவலன்புடன் மருவி நின்றான்.

இங்ஙனம் நின்றவன் தம்பியின் உருவக் கோலத்தை நோக்கி நோக்கி உள்ளம் கரைந்தான். சடைமுடியனாய்ப் புழுதிபடிந்த மெய்யனாய் நிலை குலைந்து அவலமே வடிவமாய் அலமந்துவந்திருக்கின்ற நிலைமையை நினைந்து நெடிது சிந்தித்து முடிவில் "தந்தை சேமமா?" என்று தயங்கிக்கேட்டான்.

இந்தக் கேள்விக்குப் பரதன் பதில் உரைத்தான். அவ்வுரை உள்ளுருக்கமும் உயிரிரக்கமும் மருவிப் பரிவில் எழுந்தது.

தேவரீரது பிரிவினாலும் படுபாதகியாகிய என் தாய் செய்த கொடுமையாலும் நம் தந்தையார் மாண்டுபோயினார் என அம்மதிமான் அதிவிநயமாக விளிவு நிலையை விளக்கி யருளினான்.

"தனக்கு உரிய மெய் நிறுவிப் போய் உம்பரான்" என்றது உரு உடம்பையும் புகழுடம்பையும் இவ்வுலகத்தில்நிறுத்திவிட்டுப் பரமபதத்தை அடைந்தான் என்றவாறு. உம்பர் = மேலுலகம்.

## இராமனது சோகம்.

இந்த உரையைக் கேட்டதும் இராமன் உள்ளம் கலங்கி உயிர் பதைத்துச் செயலிழந்து தரையில் விழுந்தான்.

மண்ணிடை விழுந்தனன் வானின் உம்பரான்

கண்ணும் மனமும் சுழல மண்ணில் விழுந்தான் என்றமையால் தந்தைமீது இந்த அண்ணல் கொண்டுள்ள அன்பும் ஆர்வமும் அவசமும் அறியலாகும். விழுதல் அழுதலுக்கு முந்தியது.

பிறந்த கோலத்திற்கு இசையப் பெற்றவனிடம் பெரும் பாசம் உடையனாய் உளம் மறுகி அலமந்திருக்கிறான்.

தந்தையின் பிரிவு குறித்து இதுபொழுது இங்கே மண்ணிடை விழுந்தவன் என்றும் எல்லார்க்கும் தந்தையாய் உயர்ந்த விண்ணிடை விளங்கியுள்ளவன் என்னும் உண்மையை எண்ணிடை விளக்கிக் கண்ணிடை நமக்கு இனம் துலக்கி யருளினார்.

இந்திர பதவி முதலிய எல்லாப் பதங்களுக்கும் மேலான வைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் பரமபதநாதன் என்பார் "வானின் உம்பரான்" என்றார்.

மண்ணில் விழுந்தவன் விண்ணில் உயர்ந்தவன் என்பதாம். தன்னை மறந்து ஈண்டு அவன் இன்னலுழந்து அழுதாலும் அவனது உண்மையை நாம் மறந்துபோகாமல் கவி வரைந்து காட்டி வருகிறார்.

நேர்ந்த வேடத்திற்கு இயைய நடிப்பதில் மிகவும் தேர்ந்த நடிகன் என்பதை யாண்டும் ஓர்ந்து வருகின்றோம்.

இவ்வாறு மறுகி விழுந்தவன் பின்பு தந்தையின் அரிய பண்புகளை யெல்லாம் நினைந்து உருகி அழுதான். அந்த அழுகை நிலை சோகம் தோய்ந்தது ஆயினும் அதில் விளைந்துள்ள விழுமிய விளைவுகள் விவேகம் மிகவுடையன.

நந்தா விளக்கனைய நாயகனே! நானிலத்தோர்
தந்தாய்! தனி அறத்தின் தாயே! தயா நிலையே!
எந்தாய்! இகல்வேந்தர் ஏறே! இறந்தனையே!
அந்தோ இனிவாய்மைக்கு யாருளரே மற்றென்றான். (1)

சொற்பெற்ற நோன்பின் துறையோன் அருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி நவைநீங்க நீ இயற்றி
எற்பெற்று நீபெற்றது இன்னுயிர்போய் நீங்கவோ?
கொற்பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய்! (2)

மன்னுயிர்க்கு நல்குரிமை மண்பாரம் நான் சுமக்கப்
பொன்னுயிர்க்கும் தாரோய்! பொறை உயிர்த்த வாறிதுவோ?
உன்னுயிர்க்கும் கூற்றாய் உலகாள உற்றேனோ?
மின்னுயிர்க்கும் தீவாய் வெயில்உயிர்க்கும் வெள்வேலோய்! (3)

என்பரத்த தாக்கி அரசுரிமை இந்தியங்கள்
வெம்பவத்தின் வீயத் தவம்விளைத்த வாறிதுவோ
சம்பரப்போர்த் தானவனைத் தள்ளிச் சதமகன்தன்
அம்பரத்தின் நீங்கா அரசளித்த ஆழியாய்! (4)

வேண்டுந் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டிவ் வுலகுக்கு இடர்கொடுத்த புல்லனேன்
மாண்டு முடிவதல்லால் மாயா உடம்பிது கொண்டு
ஆண்டு வருவதினி யார் முகத்தே நோக்கவோ? (5)

தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கான்அடைந்தேன் என்னத் தரியாது காவலநீ
வான்அடைந்தாய்! இன்னம் இருந்தேன்நான் வாழ்வுகந்தே
ஊன்அடைந்த தெவ்வர் உயிரடைந்த ஒள்வேலாய்! (6)

வண்மைஇயும் மானமும்மேல் வானவர்க்கும் போக்கிலாத்
திண்மைஇயும் செங்கோல் நெறியும் திறம்பாத
உண்மைஇயும் எல்லாம் உடனேகொண்டு ஏகினையே!
தண்மைஇ தகைமதிக்கும் ஈந்த தனிக்குடையோய்! (7)

என்றெடுத்துப் பற்பலவும் பன்னி இடருழக்கும்
குன்றெடுத்த ஒக்கும் குவவுத்தோட் கோளரியை
வன்றடக்கைத் தம்பியரும் மற்றுள்ள மன்னவரும்
சென்றெடுத்துத் தாங்கினர் மாவதிட்டன் தேற்றினன். (8)

(கிளைகண்டு நீங்கு படலம், 60-67)

தாதை இறந்து போனதைத் தம்பி வாயிலாக அறிந்ததும் இராமன் இங்ஙனம் பரிந்து வருந்திப் பதைத்துப் புலம்பியிருக்கிறான். பெருந்தகைமைநிறைந்த குலமகன் வாயிலிருந்து உயர்ந்த எண்ணங்களும் கெழுதகைமைகளும் கிளையுரிமைகளும் பொங்கி வழிந்திருக்கின்றன.

இறந்தவன் சிறந்த சக்கரவர்த்தி ஆதலால் அவனுடைய நிலைமைகள் யாவும் தலைமைப் பண்பில் தழைத்து எழுந்தன.

“என்றும் குன்றாத மணிவிளக்கே! எவர்க்கும் நாயகனே! உலக மக்கள் யாவர்க்கும் தந்தையே! தருமத்தின் தாயே! தயா நிலையமே! என் அப்பனே! பகைவேந்தர்க்குச் சிங்க ஏறே! வீர தேவதையே! நீ இறந்து போயினையே! சத்தியத்திற்கு இனி இவ் வுலகில் யார் உளர்? நெடுங்காலமாக மலடிருந்து வருந்தி

அருந்தவக் குரிசிலாகிய கலைக்கோட்டு முனிவர் அருளால் அரிய வேள்வி செய்து பெரிய நோன்பு நோற்று என்னைப் பெற்றாயே! என்னால் நீ அடைந்த பயன் என்னே ஐயா? அன்னோ! உன் இன்னுயிரை நீக்கவோ நான் உனக்குப் பிள்ளையாய்ப் பிறந்தேன்! உரிய பருவத்தில் நான் அரசாள நீ அரிய தவசியாய்த் துறவு கொள்ளத் துணிந்து முடிவில் இறவு கொள்ளவே நேர்ந்தாய்! சம்பரன் முதலிய அசுரர் பலரையும் வென்று அமரர் கோனுக்கு வாழ்வளித்த ஓ அருந்திறல் அரசே! உனது சிறந்த பெருந்தகைமைகளை யெல்லாம் இனி நான் எங்கே காண்பேன்? எப்படித் தேறுவேன்? பதினான்கு வருடங்கள் கழித்து வனவாசம் முடித்து மீண்டு வந்து உன் திருமுகத்தைக் கண்டு களிக்கலாம் என்று காதல் கொண்டிருந்தேன்; அந்தோ! இந்தவாறு முடிவு வந்ததே! இனி ஆண்டு வந்து யார் முகத்தைக் காண்பேன்? ஈண்டே மாண்டு போவதே எனக்கு இனிமேல் இனிதாம். நான் கானகம் போனேன் எனக்கேள்வியுற்றவுடனே என் பிரிவு ஆற்றாமல் உடனே உன் உயிரை விடுத்தாய்! நீ இறந்துபட்டாய் என்று தெரிந்தும் இன்னமும் நான் சாகாமல் கள்ள அழுகை அழுது உள்ளன்புடையவன் போல் உலகம் காண நடிக்கின்றேன். பிள்ளைக்குச் செய்ய வேண்டிய உரிமைகளில் எவ்வளவோ கோடி அதிகமாக நீ எனக்குச் செய்திருக்கிறாய்! பெற்ற தந்தைக்கு ஆற்றும் பணியில் யான் உனக்கு யாதும் புரியாமல் அவமே நிற்கின்றேனே! பிள்ளைப் பாசத்தில் நீ பெருகியுள்ள நிலையை உள்ளுந்தோறும் என் உள்ளம் உருகுகின்றதே! உன்னைத் தந்தையாகப் பெறுதற்கு நான் எவ்வளவு தவம் செய்திருக்கவேண்டும்? எந்தையே! உன்னுடைய கொடை நீதி வீரம் மானம் மேன்மை சத்தியம் கம்பீரம் செங்கோல் முறைமை யாவும் பூவுலகில் இல்லாமல் உன்னோடே மேவி வந்துள்ளனவே! உன்னைப் பிரிந்து ஆவியில்லா உடல்போல் பாவி நான் இங்கு அலமர நேர்ந்ததே!" என இன்னவாறு பல பல புலம்பிப் பரிதபித்து நின்றான்.

மகாவீரனாகிய இராமன் தந்தையின் பிரிவில் இப்படி உருகி மறுகியிருக்கிறான். இவன் பரிபூரணமான ஒரு குல மகன். உயர்ந்த பிள்ளைமைக்குரிய தலைமைக் குணங்கள் எல்லாம் இவனிடம் இயல்பாகவே நிலை பெற்றுள்ளன. உலகில் தோன்றிய உத்தம புத்திரர்களுக்குள் பல வகையிலும் இவன் தலை சிறந்து

நிற்கின்றான். பெற்றவர்பால் பேரன்பு மண்டிப் பெரிய மரியாதைகளுடன் இவன் பேணி வந்திருக்கும் முறைகள் உலகமக்களுக்கு இனிய உறுதி நலங்களாய் ஒளி செய்து நிற்கின்றன. அன்புரிமைகள் உள்ளங்களைப் பண்படுத்தி உயிரினங்களை உயர் நிலைகளில் நிறுத்தி யாண்டும் இன்புறுத்தி வருகின்றன.

தம்பியை அன்புருக்கமாய்த் தழுவி நின்றவன் தந்தையின் பிரிவு தெரியவே இந்தவாறு அலறித் துடித்தான். அங்ஙனம் பரிதபித்து அலமருங்கால் பரதன் பின் வந்த படைகளும் அடைந்தன.

பரத்துவாசர் சாபாலி முதலிய இருடி கணங்களும், அரசத் திரள்களும், மந்திரிகளும், பிரதானிகளும், தானைத்தலைவர்களும் சேனைகளும் தொடர்ந்து வந்து சேர்ந்தனர். அனைவரும் இராமனைக்கண்டு மனமுருகி நின்றனர்.

## வசிட்டர் இராமனைத் தேற்றியது.

மூன்று தம்பிமாரும் அழுத கண்ணராய் உழுவலன்போடு தழுவி நிற்க வசிட்ட முனிவர் இராமனை ஆற்றி அருளினார். ஆறுதலாக அம்மாதவர் கூறிய உறுதிமொழிகள் அரிய போதனைகளாய்ப் பெருகி எழுந்தன. பெரிய மதிமான் ஆயினும் பிரிவுத் துயரால் மனம் கலங்கி மறுகியிருத்தலால் உரிய குரு உபதேச முறையில் உள்ளம் தெளிய உணர்வுரைகள் பகர்ந்தார். உரைத்த முறைகளில் அறத்துறைகள் மலிந்து அறிவு நலம் பொலிந்து அரிய உண்மைகள் பல மருவி வந்தன.

துறத்தலும் நல்லறத் துறையும் அல்லது
புறத்தொரு துணையிலை பொருந்து மன்னுயிர்க்கு
இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ. (1)

உண்மையில் பிறவிகள் உலப்பில் கோடிகள்
தண்மையில் வெம்மையில் தழுவினவ்வெனும்
வண்மையை நோக்கியவ் வறிய கூற்றின்பால்
கண்மையும் உளதெனக் கருத லாகுமோ? (2)

பெறுவதன் முன்னுயிர் பிரிதல் காண்டியால்
மறுவறு கற்பினில் வையம் யாவையும்
அறுபதி னாயிரம் ஆண்டும் ஆண்டவன்
இறுவது கண்டுஅவற்கு இரங்கல் வேண்டுமோ? (3)

சீலமும் தருமமும் சிதைவில் செய்கையும்
சூலமும் திகிரியும் சொல்லும் தாங்கிய
மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்
காலம் என்று ஒருவலை கடக்கலாகுமோ ? (4)

கண்முதல் காட்சிய கரையில் நீளத்த
உண்முதற் பொருட்கெலாம் ஊற்றம் ஆவன
மண்முதற் பூதங்கள் மாயும் என்றபோது
எண்முதல் உயிர்க்குநீ இரங்கல் வேண்டுமோ ? (5)

புண்ணிய நறுநெயில் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதியென் தீயினில்
எண்ணிய விளக்கவை இரண்டும் எஞ்சினால்
அண்ணலே அவிவதற்கு ஐயம் ஆவதோ ? (6)

இவ்வுலகத்தினும் இடரினே கிடந்து
அவ்வுலகத்தினும் நரகின் ஆழ்ந்துபின்
வெவ்வினை துய்ப்பன விரிந்த யோனிகள்
எவ்வளவிற்சொல எண்ண லாகுமோ ? (7)

உண்டுகொல் இதுவலது உதவி நீசெய்வது
எண்டகு குணத்தினாய் தாதை என்றலால்
புண்டரீகத்தனி முதற்கும் போக்கரு
விண்டுவின் உலகிடை விளங்கினானரோ. (8)

ஐயநீ யாதொன்றும் அவலிப் பாயலை
உய்திறம் அவற்கினி இதனின் ஊங்குண்டோ ?
செய்வன வரன்முறை திருத்திச் சேந்தநின்
கையினால் ஒழுக்குதி கடனெலாம் என்றான். (9)

விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணிநீ அழுங்குதல் இழுதைப் பாலதால்
கண்ணின்நீர் உகுத்தலில் கண்டதில்லைபோய்
மண்ணுநீர் உகுத்திதா மரைக்கையால் என்றான். (10)

(கிளைகண்டு நீங்கு படலம், 70-79)

அநித்தியமான நிலைமைகளை அறிவுறுத்தி உறுதி உண்மைகளைத் தெளிவுபடுத்திப் பரிவுடன் உரை செய்திருக்கும் இந்தப் பாசுரங்கள் பல முறையும் ஊன்றி நோக்கி உணரத்தக்கன.

எந்தப் பாத்திரத்தின் மூலம் எதை விளக்க வேண்டுமோ அதனை அழகாக விளக்கியருள்கின்றார். தாம் மறைந்து நின்று

கொண்டு மறைமுடிவுகளை முறையாகக் கவி வெளிப்படுத்தி வருவது வியயம் மிக வுடையது. உரைகளில் அவருடைய உள்ளக் கிடக்கைகள் ஒளிவிட்டு நிலவுகின்றன.

நிலையில்லாத உலக வாழ்க்கைகளை நிலையாக எண்ணுதல் புலையாம் என்பதைக் கலை நலங் கனியப் பல இடங்களிலும் இதமாகக் காட்டி வருகின்றார். உண்மை யுணர்ச்சிகள் ஒளிமிகுந்து சுவை சுரந்து உவகை புரிந்து மிளிர்கின்றன. சரித நிகழ்ச்சியில் தத்துவ நிலைகள் உய்த்துணர்வுடன் தழைத்து வருகின்றன.

1. உயிர்க்கு உறுதித்துணை துறவும் அறமுமே என்றது இல்லறம் துறவறம் என்னும் இருவகை நிலைகளையும் கருதி. மனை வாழ்க்கையில் தருமநெறி தழுவி வாழ்; பக்குவமும் பருவமும் வந்தால் அதனைத் துறந்து துறவியாய் நின்று அரிய தவ வாழ்வில் அமர் என்பதாம். அறமும் துறவும் ஆருயிர்க்குப் பேருரிமைத் துணைகள் என்பதை ஓர்மையாக உணர்த்தி யிருக்கிறார்.

துறவை முதலில் குறித்தது உயிர்க்கு உறுதியான அதன் தலைமையும் நிலைமையும் தெரிய. பாச பந்தங்களால் பிறவித் துயரங்கள் பெருகி வருகின்றன ஆதலால் அவற்றை அறவே துறந்தபோது தான் உயிர் அல்லல் நீங்கி ஆனந்தம் அடைகின்றது. ஆகவே துறவு பிறவி நீக்கத்திற்கு உறவாய் அமைந்தது.

பற்றி விடாஅ இடும்பைகள்; பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. (குறள், 347)

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். (குறள் 348)

இந்த அருமைத் திருவாக்குகள் ஈண்டு உரிமையாய் ஓர்ந்து சிந்திக்கத்தக்கன.

தீரத்துறத்தலாவது உலக பாசங்களை அடியோடு ஒழித்துப் போதல். அங்ஙனம் ஒழித்தவரே முற்றத்துறந்த முனிவராய் முத்தியில் முதன்மை இன்பம் எய்துகின்றனர்.

விட்டவர் பேரின்ப வீட்டை அடைந்து மகிழ்கின்றனர்; விடாதவர் பிறவிக் காட்டில் இழிந்து உழல்கின்றனர்.

துறவா வழியும் அறநெறியில் ஒழுகின் அவர் புண்ணிய சீலராய் உயர்ந்து எண்ணிய இன்பப்பேற்றை எய்திமகிழ்கின்றார்.

இங்ஙனம் துறத்தலும் அறத்துறையும் உயிர்க்கு இதத்தைச் செய்து வருதலால் அவை அதற்குத் துணை என வந்தன.

தந்தை தாய் மனைவி மக்கள் ஒக்கல் முதலிய பக்கச்சூழல்களைத் துணை என நம்பி மயங்காதே; அறமே உனக்கு இனிய உறுதித் துணையாம்; அதனையே உரிமையோடு பேணிக்கொள்க என உணர்த்திய படியிது.

ஈட்டிய ஒண்பொருளும் இல்லொழியும் சுற்றத்தார்
காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர்—மூட்டும்
எரியின் உடம்பொழியும் ஈர்ங்குன்ற நாட
தெரியின் அறமே துணை. (அறநெறிச்சாரம்)

தருமமே இணையில்பொருள் தரையிடைத் தகைசால்
ஒருமை இன்பினை உதவி விண்ணுலகினும் உடன்போய்
அருமை இன்பம் உய்த்து அந்தகற் செறும் எனில் அறமே
இருமையும் துணை ஆகுவ தன்றி மற்றில்லை.
(திருக்கூவப்புராணம்)

எளிதென இகழாது அரிதென உரையாது
நுமக்குநீர் நல்குதிர் ஆயின் மனத்திடை
நினைப்பினும் பிறக்கும் மொழியினும் வளரும்
தொழிற்படின் சினைவிடுஉப் பயக்கும் உணர்த்தின்
இவணும் உம்பரும் துணையே; அதனால்,
துறைதொறும் துறைதொறும் நோக்கி
அறமே நிறுத்துமின் அறிந்திசி னோரே. (ஆசிரியமாலை)

மன்னுயிர்க்கு மன்னிய துணை அறமே; அதனை எவ்வழியும் ஈட்டுக என இன்னவாறு நூல்கள் பல கூறியுள்ளன.

இந்த அகத்துணையே அன்றி உயிர்க்கு வேறு புறத்துணை நேரேயாரும் இலர் என்பார் "புறத்து ஒரு துணை இலை" என்றார். தேக பந்துக்களைத் துணைகள் என நம்பி மோகம் அடையாதே என்பதாம்.

" தந்தைதாய் தமர் தாரம் மகவென்னும் இவைஎலாம்
சந்தையில் கூட்டம்; இதில் ஓர்
சந்தேகம் இல்லை; மணி மாடமாளிகை மேடை
சதுரங்க சேனை யுடனே
வந்ததோர் வாழ்வும் ஓர் இந்திரசாலக்கோலம்;
வஞ்சனை பொறாமை லோபம்
வைத்த மனமாம் கிருமி சேர்ந்த மலபாண்டமோ
வாஞ்சனை இலாத கனவே. " (தாயுமானவர்)

உற்ற பந்துக்கள், உரிய செல்வங்கள், பெரிய வாழ்வுகள், பெற்ற உடம்பு யாவும் பொய்யான மாயத்தோற்றங்களே ; மெய் யான உயிர்க்கு ஐயோ இவற்றால் யாதும் பயன் இல்லை என இது அறிவுறுத்தியிருக்கும் அழகைப் பார்க்க.

உயிர்க்கு உண்மையான உறுதி நலனை இங்ஙனம் குறித்துக் காட்டிப் பின்பு அது உடலோடு கூடிவாழும் வாழ்க்கை நிலையை உணர்த்துகின்றார்.

" இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ ? மறைகளின் வரம்பு கண்ட நீ !

வேத வேதாந்தங்களை யெல்லாம் நன்கு தெளிந்த இராம நாதா! உறக்கமும் விழிப்பும் போல் உயிர் வாழ்க்கையில் இறப்பும் பிறப்பும் இயற்கையாக நிகழ்கின்றன ; இதற்கு நீ வருந்தலாகுமா? நில்லா உலகில் யாதும் நிலையில்லை ; எல்லாம் தெளிந்த உனக்கு நான் சொல்லவேண்டியது ஒன்றும் இல்லை. சிறந்த மதிமான் ; உண்மையை மறந்துள்ளமையால் தந்தையார் இறந்து போனார் என இரங்கி ஏங்குகின்றாய் ! அந்தப் பேராளன் பெற்றுள்ள பேற்றினை நினைந்து நீ ஆற்றியிருஎன்று தேற்றியருளினார்.

துறத்தலையும் அறத்துறையையும் முதலில் குறித்துக் காட்டியது இறந்துபோனவன் அடைந்துள்ள சிறந்த துணை நிலையை உணர்ந்துகொள்ள.

தசரதன் துறவடையாது போயினும் நல்ல அறத்துறையில் என்றும் நிறைவெய்தி நின்றான். அந்தப் புண்ணியத் துணையால் அவன் கண்ணியம் மிகப் பெற்று விண்ணவரும் புகழ மேலான பேரின்ப நலனை அடைந்துள்ளான். அவ்வுண்மையை அறிந்து உவந்து கொள்க என்பதாம்.

2. அளவிடமுடியாத சீவகோடிகள் பலபல தோன்றி மறைந்து போகின்றன ; பிறந்தன இறந்திடாது இன்று வரை நிலையாய் இருந்தன யாதும் இலை. அரசராயினும் அமரராயினும் எவரையும் எமன் விடான். விண்ணாட்டவரையும் மண்ணாட்டவரையும் எண்ணாட்டமுடன் கவர்ந்து வருதலால் கண்ணோட்டம் இல்லாதவன் என அவனை இகழ்ந்து சொல்லுவர். உண்மையில் அவன் நடுவு நிலைமையுடையவன். மேலோர், கீழோர், அரசு, ஏழை என யாதும் பாராமல் காலமுடிவறிந்து கருமம் புரிந்து வருகிறான்.

3. சில உயிர்கள் கருவில் அழிந்து போகின்றன; சில பிறந்தவுடன் இறந்துபடுகின்றன. குழவி பாலன் என்னும் பருவங்கள் அடையுமுன்னரே பல மடிந்து மறைகின்றன. இளமை மரணங்கள் இவ்வாறு இருக்க அறுபதினுயிரம் ஆண்டுகள் வரையும் உலகை ஆண்டு உயர்ந்த போகங்களை நுகர்ந்து உவந்திருந்த பெரியவன் இறந்துபோனதை நினைந்து நீ மறுகி வருந்தலாமா? எல்லா நலங்களையும் அனுபவித்து இவ்வளவுகாலம் இனிது வாழ்ந்திருந்த அந்தச் செவ்விய நிலைமையை வியந்து ஆறுதலடைக.

4. சூலபாணியாகிய உருத்திரனும், சக்கரதரனை திருமாலும், வேதநாதனை பிரமனும் சாதலினின்று நீங்க முடியா. படைத்துக் காத்துத் துடைக்கும் இயல்புடைய இம்மூம்மூர்த்திகளுமே முடிந்து போவார்கள் என்ருல் வேறு மானுடர் முடிவதைக் குறித்து நான் ஈண்டு மேலும் பேச வேண்டுமோ?

;ாரிய நிமித்தம் கருமதேவதைகளாய் மருவியுள்ளமையால் உரிய பருவத்தில் அவர்களும் உருவம் மறைய நேர்கின்றனர்.

5. பூவுலகம் முதலிய அகில அண்டகோடிகளும் யுகாந்தத்தில் அழிந்து போகின்றன. தோன்றின மறையும் என்றபடி யாவும் மாய்ந்து படுகின்றன. நெடிய தோற்றங்களையுடைய எவையும் அழியும் என்ருல் சிறிய வாழ் நாளையுடைய மனித அழிவைப்பற்றி மதிமானை நீ இரங்கலாகுமா?

நிலையாமையின் நிலைமையைக் குறித்து இங்ஙனம் பலவாறு பேசி வந்த முனிவர் பின்பு சில உவமானங்களை எடுத்துக் காட்டி உறுதிநலம் ஊட்டுகின்ருர்.

"புண்ணிய நறுநெயில், பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில், விதிஎன் தீயினில்
எண்ணிய விளக்கு"

என உயிர் வாழ்க்கை நிலையை உருவகமாக்கி இங்ஙனம் விளக்கி இருக்கிருர். மூன்று உபகரணங்கள் தோன்றி யிருக்கின்றன.

ஒரு குத்து விளக்கு; அதன் அகலில் எண்ணெயை நிறைத்துத் திரிஇட்டுத் தீபம் ஏற்றினல் அவ்விளக்கூத் துலக்கமாய் எரியும். அந்த எண்ணெயும் திரியும் தீர்ந்துபோனல் விளக்கு

அவிந்துபோம்; அதுபோல் நல்வினையாகிய நெய்யும், வாழ்நாள் ஆகிய திரியும், ஊழ் ஆகிய தீயும் முடிந்தபொழுது உயிர் வாழ்வும் ஒழிந்து போகின்றது.

உருவகங்களில் மருவியுள்ள பொருள் நலங்கள் நுணுகி உணரவுரியன. நறுநெய் என்றது நல்ல பசுவின் நெய்யை. எள், ஆமணக்கு, வேம்பு முதலியவற்றின் வேறு தைலங்களைக் குறியாமல் நறுநெய் என்று ஈண்டுக் குறித்தது தசரத மன்னனுடைய வாழ்க்கைச் சிறப்பும் செழிப்பும் சீர்மையும் நீர்மையும் கருதி.

நல்ல நெய்யில் தோய்ந்து எரியும் நெய்த்தீபம் போல் அவன் வாழ்வு இன்பமும் மணமும் பொங்கி எங்கும் பிரகாசமாய் என்றும் செல்லம் பொழிந்து சீர்த்தி மீதூர்ந்து செழித்து விளங்கியுள்ளது. தானும் விளங்கி உலகை விளக்கியிருக்கிறான்.

திண்ணிய திரி என்றது நெடிய ஆயுளை நினைந்து வந்தது. நறுநெய் அமையினும் திரி சிறியதாயின் ஒளி நெடிது தோன்றாது. பெரிய திரியேல் நீண்ட ஒளியாய் நிலைத்து விளங்கும். திண்மை பருமை மேலது. நெடுமையும் கருதுக. திரி இறுக்கமாயின் எண்ணெயை விரைவில் ஈர்க்காது. அவ்வுண்மையை நுண்மையாக ஓர்ந்து பொருள் நிலையைத் தேர்ந்துகொள்க.

அறுபதினாயிரம் ஆண்டுகள் அரிய போகங்களை நுகர்ந்து பெரிய தேசுடன் இனிது வாழ்ந்து வந்த புனித வாழ்வை நினைவில் நிறுத்தி நெடிது சிந்திக்கச் செய்கின்றார்.

பொதுவாக மனித வாழ்க்கையைக் குறித்திருப்பினும் ஈண்டுச் சிறப்பாக மன்னர்பிரான்மேல் மன்னி நின்றது.

விதியைத் தீ என்றது ஒருவன் இங்கே பிறந்து தோன்றுதற்குச் சிறந்த மூலகாரணம் பழவினையே ஆதலால் அந்நிலைமை தெரியவந்தது.

உடம்பும் கரணங்களும் போகங்களும் வினை அளவுக்குத் தக்கபடியே விளைந்து வருகின்றன. திரி நெய்கள்போல் யாவும் கருவுறும்போதே மேவத்தீபம் போல் உயிர்மருவி மிளிர்கின்றது.

முகந்து வந்த வினைப்போகங்கள் முற்றும் அற்றவுடன் உயிர் ஒளி மறைந்து விடுகின்றது. நெய்வற்றித் திரிதேய்ந்து தீபம் அவிகின்றது; வினை நுகர்வு அற்று ஆயுள் மாய்ந்து ஆன்மா ஒழிகின்றது. சீவன் விளங்கி மறைகின்ற வித்தகம் உய்த்துணரற்பாலது.

இந்த விளக்கு உவமையைப் பண்டை நூலாசிரியரும் எடுத்துக்காட்டி நிலையாமையை அறிவுறுத்தியிருக்கிறார்.

புரிமுத்த மாலைப் பொற்கோல் விளக்கினுள் பெய்த நெய்யும்
திரியும் சென்று அற்றபோழ்தே திருச்சுடர் தேம்பின் அல்லால்
எரிமொய்த்துப் பெருகல் உண்டோ ? இருவினை சென்று தேய்ந்தால்
பரிவுற்றுக் கெடாமல் செல்வம் பற்றி யார் அதனை வைப்பார் ?
(சீவக சிந்தாமணி, 2316)

நெய்யும் திரியும் அற்ற பொழுது அழகிய விளக்கு அவிதல் போல் பெரிய நல்வினை தீர்ந்தபோது அரிய செல்வம் அறவே மாய்ந்துபோம் என இஃது உணர்த்தியுள்ளது.

இங்கே செல்வ நிலையாமைக்கு வந்த உவமை நம் கவியுள் உருவகமாகி யாக்கை நிலையாமையை உணர்த்தியிருக்கின்றது.

புண்ணிய நறுநெய் என்று தொடங்கியிருக்கும் கண்ணியத்தையும் கம்பீரத்தையும் கருத்து அமைதியையும் நுனித்துணரின் இனித்த உண்மைகள் பல சனித்து வருதலை அறியலாகும்.

விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே அறுமே அவரன்பும்
கையற்ற கண்ணே அறும். (நாலடி, 371)

விளக்கு இதில் இவ்வாறு விளக்கி இருக்கிறது.

"திரியும் நெய்யும் ஒருவயிற் செல்லிய
எரிவிளக்கு அற்ற இருள்பரந் தாங்கு" (பெருங்கதை, 3-1)

"கடுங்கால் நெடுவெளி இடுஞ்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்"
(சிலப்பதிகாரம், 10)

கடிய காற்று எதிர் இட்ட விளக்கைப்போல உயிர்கள் உருவற ஒழிகின்றன என முனிவர் வாக்கா இளங்கோவடிகளும் இங்ஙனம் வழங்கி யிருக்கிறார்.

உயிர் ஒளிமயமானது; உடலில் மருவியுள்ள பொழுது இனிது திகழ்கின்றது; ஒழியுங்கால் சென்ற இடமும் தெரியாமல் மறைந்து போகின்றது; ஆகவே விளக்கு உவமை யாயது.

அநித்திய நிலைமையைப் பலவகையிலும் தெளிவுறுத்தி யிருக்கிறார். உரைகள் ஒளி வளர்ந்து வந்துள்ளன.

"மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்
காலம் என்று ஒரு வலை கடக்கல் ஆகுமோ?"

என்றது சாலவும் சிந்திக்கத்தக்கது. காலத்தின் அற்புத ஆற்றலை நன்கு அறிவுறுத்தி யிருக்கிறார். வலைஎன்றது தப்பாமல் அகப்படுத்தும் தன்மை தெரிய வந்தது.

தேவதேவர்களே இவ்வாறு ஆயின் நாம் எம்மாத்திரம்! என அழிவு நிலையில் ஆறுதல் அடைய வழி செய்த படியிது.

அருவினை உலகம் எல்லாம் படைத்தளித்து அழிக்கும் காலம்;
கருவுறும் எவையும் கால வயத்தவாம்; காலம் தான் மற்று
ஒருபொருள் வயத்த தன்றால்; உந்தியோன் கற்பத்து ஈரேழ்
பொருவில் இந்திரர்கள் மாய்வர்; பொன்றுவர் மனுக்கள் தாமும்.

ஓதும்இக் கற்பம் வேதற்கு ஒருதினம்; அந்நாள் முப்பது
ஆதல்ஓர் மதியாம்; திங்கள் ஆறிரண்டாயின் ஆண்டாம்;
ஏதமில் வருடம் நூறேல் இருவகைப் பரார்த்தம் ஆகப்
போதரும் போதில் அன்னான் பொன்றுவன் மன்ற மாதோ. (2)

அம்மலர்க் கிழவன் காலம் அரிக்கு ஒரு தினம்; அன்னோனும்
அம்முறைத் திங்கள் கூடும் ஆண்டு நூறு எய்தில் பொன்றும்;
அம்மவோ சீசீ இந்த அநித்திய வாழ்வு வேண்டேன்
அம்மையில் வீடு பேற்றிற்கு உபாயமே அறிதல் வேண்டும். (3)
(காஞ்சிப் புராணம்)

காலத்தின் பெருமையும் யாவரையும் அது விழுங்கி நிற்கும் நிலைமையும் இங்கே தெரிகின்றோம். கால வலையை எவரும் கடக்க முடியாது என மேலே குறித்த நம் கவிக்கு இது ஒரு விரிவுரை போல் விளைந்து வந்துள்ளது.

7. வெவ்வினை துய்ப்பன விரிந்த யோனிகள்

சீவகோடிகள் அளவிட லரியனவாய் வினைவயப் பட்டு ஓரிடத்திலும் நிலையின்றி யாண்டும் உழந்து சுழன்று திரிந்து வருதலை இங்ஙனம் பரிந்து காட்டினார்.

நல்வினைப் பயனைச் சுவர்க்கத்திலும், தீவினைப்பயனை நரகத்திலும், இருவகை வினைப்பயன்களையும் ஒருமுகமாகப் பூதலத்திலும் நுகர்ந்து புலையாடி வருகின்றன.

சொல்லவும் எண்ணவும் முடியாதபடி எல்லையில்லாத பிறவிகளில் படிந்து உயிரினங்கள் அல்லல் உறுகின்றன.

இவ்வாறு துன்பம் அடைந்து துடித்து உழல்கின்ற மன்பதைகளுக்குள் இதுவரையும் யாரும் அடையாத இன்ப நிலையை உன் தந்தை அடைந்திருக்கிறான்.

உன்னைப் பிள்ளையாகப் பெற்ற பாக்கியத்தால் அப்பெருமான் பெற்றுள்ள பேற்றை வியந்து பிரமாவும் போற்றி நிற்கின்றான்.

''புண்டரீகத் தனி முதற்கும் போக்கரு
விண்டுவின் உலகிடை விளங்கினான்''

எனத் தந்தை அடைந்திருக்கும் அரிய பதவியைத் தெரியவுணர்த்தினான். புண்டரீகம் = தாமரை. தனிமுதல் என்றது பிரமனை.

அங்கே பரம பதவியை அடைந்திருக்கின்ற பிதாவுக்கு இங்கே நீ செய்ய வேண்டிய நீர்க் கடனைச் செய். அழுவதை விடு. முழுவதும் தெரிந்த நீ பிறவிப் பாசத்தால் இங்ஙனம் பேதுறுகின்றாய்! உறுதியுண்மைகளைக் கருதி யுணர்ந்து பொறுதியாயிரு.

நீர்மேல் குமிழி போல் நிலையில்லாத வாழ்க்கை; அது நிலை குலைந்ததே! என்று நீ குலை குலையலாமா? கலையறிவில் தலை சிறந்து தத்துவ சீலனா யுள்ள உனக்கு நான் இத்துணை விரித்துச் சொல்ல வேண்டுமா? எழுந்து போய்த் தந்தைக்கு உரிய அந்திமக் கருமம் செய்! என்று பெரியவர் பெரிதும் வேண்டினர்.

''கண்ணின் நீர் உகுத்தலில் கண்டதில்லை; போய்
மண்ணு நீர் உகுத்தி தாமரைக் கையால்''

இந்த வாசக ஓசையை எண்ணி நோக்குங்கள். அரிய அரச குமரன் அருகே பெரிய தவசி உரிமையுடன் அமர்ந்து உறுதி கூறித் தேற்றும் பரிவுக் காட்சி அறிவுக் காட்சியில் அதிசயம் அருள்கின்றது.

முனிவர் எவ்வளவு ஆறுதல் கூறினும் தந்தையை நினைந்து நினைந்து நெஞ்சம் நெக்குருகி அழுத கண்ணனாய் இராமன் உருகி இருந்தான் என்பது மேலே குறித்த உரையால் தெரிகின்றது.

பெற்ற தந்தைபால் இக் குலமகன் கொண்டுள்ள பேரன்பு யாண்டும் வற்றாத வெள்ளமாய்ப் பெருகி யுள்ளது.

விழி நீர் மாருமல் அழுது கொண்டிருந்தமையால் இறுதியில் மாதவர் அறுதியாக உறுதி மொழி கூறினர்.

ஓயாமல் இருந்து அழுவதால் யாதும் பயன் இல்லை என்பார் கண்ணின் நீர் உகுத்தலில் கண்டது இல்லை என்ருர்.

போனது மீண்டு வாராது; அதனை நினைந்து வருந்தலாகாது; இனிமேல் ஆக வேண்டியதைச் செய்க என உலக வழக்கில் சோகம் தீர்க்கும் முறைமை இங்கே துலங்கி நிற்கின்றது.

ஆண்டு ஆண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்! — வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்குஎன்என்று இட்டுண்டு இரும். (நல்வழி)

உலகிலுள்ள அனைவரையும் பரிவு கூர்ந்து நோக்கி ஒளவையார் இப்படி ஞான உபதேசம் செய்திருக்கிருர்.

உறுதி யுண்மைகளை இங்ஙனம் உரிமையுடன் போதித்து உயிரினங்களுக்கு அருள் புரிந்து வருதலால் கவிகள் உலக போதகராய் ஒளி மிகுந்துள்ளனர்.

"விண்ணின்நீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணிநீ அழுங்குதல் இழுதைப் பாலது"

இந்தப் புண்ணிய புருடனுக்கும் இங்ஙனம் போதிக்க நேர்ந்தது. இழுதை=பேதைமை. எல்லாம் நன்கு தெளிந்த மகா மேதையாகிய நீ தாதையின் பிரிவில் இப்படி உள்ளம் குலைந்து உணர்வழிந்து அழுது புலம்புதல் தகாது; ஆறித்தேறி ஆவதைச் செய் என்பதாம்.

ஞான்குரு என்னும் முறையில் இம்மான வீரனுக்கு இவ்வாறு உரிமையுடன் வசிட்டர் உணர்வுறுதி கூறினர்.

கையால் மண்ணு நீர் உகுத்தி என்றது இறந்து போன உயிர் உயர்ந்த பதவியை அடைய வேண்டும் என்று இருகைகளாலும் நீரை எடுத்துச் சூரியனை நோக்கி விடுதல். எள்ளும் தண்ணீரும் இறைக்கப் பிள்ளை ஒன்று பிறந்தது என்னும் வழக்கால் பெற்ருேர்க்கு இறுதியில் செய்யும் புத்திரக் கடமை புலனும். மண்ணுநீர்=பாவம் கழியப் பாவித்து விடுவது

அருமைத் தந்தையை நினைந்து உருகி அழுத இராமன் தவசி மொழியால் ஆறுதல் அடைந்து தம்பிமார்களோடு எழுந்து

போய் நதியில் மூழ்கி அந்திமக் கிரியைகள் யாவும் செய்து முடித்துத் தனது தழைக் குடிசைக்கு வந்தான்.

புக்கனன் புனலிடை முழுகிப் போந்தனன்
தக்கநன் மறையவன் சடங்கு காட்டத் தான்
முக்கையின் நீர் விதி முறையின் ஈந்தனன்
ஒக்கநின்று உயிர்தொறும் உணர்வு நல்குவான். (81)
ஆனவன் பிறவுள யாவும் ஆற்றிப் பின்
மானமந் திரத்தவர் மன்னர் மாதவர்
ஏனையர் பிறர்களும் சுற்ற ஏகினன்
சானகி இருந்தஅச் சாலை எய்தினான். (82)

இராமன் நீரில் மூழ்கிப் பிதாவுக்குரிய நியமங்களைச் செய்து முடித்து மாதவ மன்னவர்களோடு சீதை யிருந்த இடத்துக்கு வந்தான். வந்தவன் எந்த நிலையினன்?

ஒக்க நின்று உயிர் தோறும் உணர்வு நல்குவான்

கண்ணுக்குக் கதிரொளி போல ஆன்மாக்களுக்கு அறிவொளி அருளும் பரமன் தனது அரிய நிலைமையை மறந்து உரிய பிறவிக்கு ஏற்ப உற்றவர்களுடன் கலந்து பற்றுடையனாய் ஒழுகி நின்றான் என்பதை இவ் விழுமிய மொழியால் விளக்கி யருளினார்.

பரதன் வரும் பொழுது தவச்சாலைக்கு அயலே தருவின் நீழலில் இருந்தான் ஆதலால் இதுபொழுது இராமன் இருப்பிடத்திற்கு வரலாயினான். வரவே அக் குடிசையையும் சீதையையும் கண்டு கதறித் துடித்து முகத்தில் அறைந்து கொண்டு அண்ணியின் பாதங்களில் விழுந்து பரதன் அலறி அழுதான்.

எய்திய வேலையில் தமியள் எய்திய
தையலை நோக்கினன் சாலை நோக்கினான்
கைகளில் கண்மலர் புடைத்துக் கால்மிசை
ஐயன்அப் பரதன் வீழ்ந்து அரற்றினனரோ.

உயர்ந்த அரண்மனையில் சிறந்த இன்பநிலையில் அமர்ந்திருக்க வேண்டிய உத்தமி காட்டில் வந்து இந்தச் சிறிய குடிசையில் தங்கியுள்ளாளே! என்று உள்ளம் துடித்துக்கண்களில் அடித்துக் காலில் நெடிது விழுந்து கதறி அழுது கரைந்து நின்றான்.

மதினியின் பாதங்களில் வீழ்ந்து தொழுது அலறி அழுதிருத்தலால் அந்த அண்ணியை இவன் எண்ணிப் போற்றியிருக்கும் மதிப்பும் மாட்சியும் அறியலாகும்.

இந்த இராச குடும்பத்தின் மரியாதைகளும் மருங்கு முறைமைகளும் பெருந்தகைமைகளும் உலகு உயிர்களுக்கு அரிய அமுத தாரைகளாய் அமைந்திருக்கின்றன.

அண்ணனும் அண்ணியும் தம்பியும் நாட்டைவிட்டுக் காட்டில் வந்து இன்னவாறு இன்னலுழந்திருப்பது தன்னாலேயே நேர்ந்தது என்று இப் புண்ணிய உருவன் எண்ணி யுருகிக் கண்ணீர் பெருக்கி யிருக்கிறான்.

தனது மனைவி காலில்விழுந்து அழுகின்ற தம்பியை இராமன் வாரி எடுத்து மார்போடு அணைத்து ஆற்றி அருளித் தாதை பிரிந்ததை அக்கோதையிடம் கூறினான். அதைக் கேட்டதும் அப்பதிவிரதை பதைத்து அழுதாள். அவ்வமயம் பரதன் பின் வந்த யாவரும் அங்கு மேவி அடைந்தனர்.

கோசலைத் தாயைக் கண்டதும் அடியில் நெடிது விழுந்து இராமன் அலறி அழுதான். தந்தையைக் குறித்து வினவித் தவித்துப் புலம்பினான்.

எந்தை யாண்டையான்? இயம்புவீர் எனா
வந்த தாயர்தம் வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன் சேந்த கண்ணினீர்
முந்தை நான்முகத் தவற்கு முந்தையான். (1)

தாயரும் தலைப் பெய்து தாம்தழீஇ
ஓய்வில் அன்பினால் உரறல் ஓங்கினார்
ஆய சேனையும் அணங்கனார்களும்
தீயில் வீழ்ந்துதீ மெழுகில் தேம்பினார். (2)

பின்னவ் வீரரைப் பெற்ற பெற்றியப்
பொன்னனார்களும் சனகன் பூவையைத்
துன்னி மார்புறத் தொடர்ந்து புல்லினார்
இன்னல் வேலைபுக்கு இழிந்தழுந்துவார். (3)

சேனை வீரரும் திருநன் மாநகர்
மான மாந்தரும் மற்றுளோர்களும்
ஏனை வேந்தரும் பிறரும் யாவரும்
கோனை எய்தினார் குறையும் சிந்தையார். (4)

படஞ்செய் நாகணைப் பள்ளி நீங்கினன்
இடஞ்செய் தொல்குலத்து இறைவன் ஆதலால்
தடஞ்செய் தேரினன் தானும் நீரினல்
கடஞ்செய் வான்எனக் கடலில் மூழ்கினன். (5)

தாயின் பாதத்தில் பணிந்து "அம்மா! ஐயா எங்கே!" என்று இராமன் கதறி அழுதிருக்கும் நிலை மனித வுலகத்தின் இயற்கையான துயரக்காட்சியை உயர்ச்சியாக வெளி செய்திருக்கின்றது. அவல நிலைகள் அனுபவங்களாய் எழுகின்றன.

இழந்து போன பொருள் இருவருக்கும் அருமையான உரிமையுடையது ஆதலால் இரண்டு உள்ளங்களும் ஒருமுகமாய் உருகி யிருக்கின்றன.

முந்தை நான்முகத் தவற்கும் முந்தையான்

இந்தவாறு தந்தையை நினைந்து தளர்ந்து தவித்தான். அந்தமும் ஆதியும் இல்லாதான் வந்த பிறவியின் வகைமைக்கு உரிமையாய்ச் சிந்தை கலங்கி அழுதான். செந்தாமரை மலர் போன்ற அழகிய கண்கள் அழுது அழுது செயற்கையாகவும் சிவந்து போயின. தனது உந்தியந் தாமரையிலிருந்து பிரமனைத் தந்தவன் ஒருவனுக்கு மைந்தனுய் மருவி வந்து மறுகி அழுதது உலகம் நலமுற உறுதி தந்தது.

இங்ஙனம் அழுத மைந்தனைத் தழுவி நின்று தாய் முதல் அனைவரும் வாய்விட்டலறித்தீயின் மெழுகுபோல் மனம் உருகி மறுகினர். துயர் அறியா உயர் குடும்பம் துயரில் துடித்தது.

அதன்பின் மருகியை மார்புற அணைத்துக் கோசலை சுமித்திரை முதலிய யாவரும் அலறினர்.

அயோத்தியிலிருந்து வந்த மாந்தர் எல்லாரும் இராமனைத் தொழுது உழுவலன்புடன் சூழ்ந்து உருகி நின்றார். பொழுதும் அடைந்தது.

சூரியன் இராமனது குலமுதல்வன் ஆதலால் தானும் உரிமையோடு கருமக்கடன் புரிபவன்போல் மேலைக் கடலில் மூழ்கினன்.

இங்கே துயரக் கடலில் மூழ்கி யிருந்தவரெல்லாரும் ஒருவாறு தேறி உரிமை கூர்ந்திருந்தனர். இரவு கழிந்தது.

மறுநாள் காலை நியமங்கள் முடிந்ததும் பன்னகசாலை எதிரே அடர்ந்திருந்த குளிர்பூஞ்சோலை இடையே வசிட்டர் முதலிய மாதவர்களும் மன்னவர்களும் மந்திரிகளும் இராமனைப் புடை சூழ்ந்து நிறைந்தனர். தம்பிமார் மூவரும் இந்நம்பி அருகே அன்பு வடிவங்களாய் அமர்ந்திருந்தனர்.

## இராமனும் பரதனும்

தன்னை வளைந்து சூழ்ந்துள்ள அரச குழாத்தை உவந்து நோக்கிப் பின்பு அயல் அமர்ந்திருக்கின்ற பரதனை இராமன் பரிந்து பார்த்தான். துணி உடுத்துச் சடை முடித்து உடல் மெலிந்திருக்கும் அவனது உருவக் கோலத்தையும் கருதி வந்துள்ள கருத்தையும் உணர்ந்து மறுகி உருக்கமுடன் சில உரைகள் பகர்ந்தான். "தம்பி பரதா! நமது தந்தையார் பரமபதம் அடைந்தார்; நாடு அரசிழந்துள்ளது; நீ மணி முடி புனைந்து அரசாளாமல் மரவுரி தரித்து இந்த விரத வேடத்தை ஏன் பூண்டாய்? தாய்மாரை ஆதரித்துக் குடிசனங்களைப் பாதுகாத்துப் பெரியோர்களைத் தழுவி அரசை இனிது பரிபாலிக்கவேண்டிய நீ பரிதாப நிலையில் இங்கு வறிதே வந்திருக்கிறாய்! இங்ஙனம் ஏன் வந்தாய்?" என இவ்வாறு கூறவே பரதன் உள்ளம் பதைத்துக் கண்ணீர் ததும்பக் கைகுவித்து நின்று பரிந்து பதில் மொழிந்தான்.

"அருமைத் தெய்வமே! கருணையின்றி என்னைக் கடிந்து தள்ளலாகாது. கணவனைக் கொன்ற கொலைகாரியின் பிள்ளை என்று புலையாக எள்ளிப் புறம் ஒதுக்காமல் தலையளிபுரிந்து தாங்கி அருளவேண்டும் ஐயனே!" என அபயமிட்டு நெஞ்சம் கரைந்து மேலும் பலபேசினன்.

நோவ தாகஇவ் வுலகை நோய்செய்த
பாவ காரியிற் பிறந்த பாவியேன்
சாவது ஓர்கிலேன்; தவம் செய்வேன் அலேன்;
யாவ னாகி இப் பழி நின்று ஏறுவேன்? (1)

நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்,
பொறையின் நீங்கிய தவமும், பொங்கருள்
துறையின் நீங்கிய அறமும், தொல்லையோர்
முறையின் நீங்கிய அரசின் முந்துமோ? (2)

தொகையில் அன்பினுல் இறைவன் துஞ்ச நீ
புகையும் வெஞ்சுரம் புகுதப் புந்தியால்
வகையில் வஞ்சனுய் அரசு வவ்வயான்
பகைவனேகொலாம் இறவு பார்க்கின்றேன். (3)

உந்தை தீமையும் உலகுருத நோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை நீங்கமீண்டு அரசு செய்கெனுச்
சிந்தை யாவதும் தெரியக் கூறினுன். (4)

அன்புருகு சிந்தையனுய் என்புருகி நிற்கும் பரதன் அண்ணன் எதிரே இவ்வண்ணம் பேசியுள்ளான். உரைகளுள்ளே உணர்வு நலங்களும் விநயமுறைகளும் விதிவாதங்களும் பெருகியுள்ளன. வாய்ச் சொற்கள் உள்ளங்களை உணர்த்துகின்றன.

இக்குலமகனுடைய நிலைமைகள் முழுவதும் தனியே நுணுகி ஆராய உரியன ஆதலால் யாதும் விரியாமல் ஆங்காங்கு ஒதுங்கி வர நேர்ந்தது. இந்தப் பாத்திரத்தை விரிக்க நேரின் தலைமைப் பாத்திரத்தின் பார்வை சிறிது விலக நேருமே என்று கருதி விரைந்து வருகிறேன். ஆயினும் ஈங்கு வேண்டிய அளவு சிறிது வரைந்துள்ளேன்.

மேலே குறித்த கவிப்படங்களிலிருந்து இவனது வாக்கு வன்மையும் மன நிலைமையும் ஒருவாறு யூகித்துக் கொள்ளலாம்.

தாய் செய்த கொடுமையை நினைந்து நினைந்து இவன் நோயுழந்து வருகின்றுன். அவள் வயிற்றில் பிறந்ததே ஒரு பெரிய பாதகமாகக்கருதி மறுகுகின்றுன். கைகேசியைப் பாவகாரி என்று பழித்து அவள் மகன் என்னும்படி நேர்ந்ததே என்று தன்னை இழித்திருக்கின்றுன். தன் பிறப்புப் பழிபட்டது; தான் உயிர் வைத்திருக்கலாகாது; இறந்து ஒழியவேண்டும்; அல்லது துறந்து தவம்புரிந்து பாவத்தைத் தொலைக்கவேண்டும் என யாண்டும் துடித்து நிற்கின்றுன்.

"சாவது ஓர்கிலேன்; தவம் செய்வேனலேன்;
யாவதாகி இப்பழி நின்று ஏறுவேன்?"

தனக்கு நேர்ந்துள்ள பழியை நினைந்து இவன் பதைத்துப் பரிதபித்திருக்கும் நிலை இதனுல் அறியலாகும். தன்னுல் அண்ணன் இடர் அடைய வந்ததே என எண்ணி எண்ணி ஏங்கியுள்ளமை எங்கும் பரிதாபமாய் ஓங்கி வருகின்றது. தனது உயிர்

வாழ்க்கையை அருவருத்து வெறுத்திருக்கின்றான். உலகபோகங்கள் யாவும் இவன் எதிரே கசந்து போயின.

"மணிமகுடம் புனைந்து மன்னர் மன்னவனாய் அரசுபுரிய உரிய முன்னவன் என்னால் இன்னலுற நேர்ந்தானே!" என்று இப் பின்னவன் மறுகி யுருகி மயங்கி உயங்கி உறுதி ஒன்றும் காணாமல் உள்ளம் தியங்கி உழல்கின்றான்.

குல பரம்பரையாய் வருகின்ற அரசுரிமை மூத்தவனுக்கே உரியது. அம்முறை தவறலாகாது; தவறின் நிறை இழந்த மங்கைபோல் அந்த அரசு நிலை இழிந்து கெடும்.

பெண்ணுக்குக் கற்பைப்போல் அரசுக்கு முறை என இக் குரிசில் குறித்தது கூர்ந்து ஓர்ந்துகொள்ளற்பாலது.

உனக்கு உரிய அரசை எனக்கு அளிப்பது ஓர் உத்தம பத்தினியைக் கற்பழித்தது போலாம் என அண்ணன் முன்னிலையில் விநயமாக இவன் விண்ணப்பித்திருக்கிறான். எண்ணங்கள் நுண்ணிய நிலையன; கருத்தூன்றி உணரும் குறிப்பு நலங்களுடையன.

அரசைப் பருவமங்கையோடு ஒப்பவைத்தது அரிய பெரிய போகங்களுக்கு உரிய நிலையமா யிருக்கும் இனிமை கருதி.

யாண்டும் என்றும் எல்லாரும் நிறை காத்து வரும்படி இறை காக்கும் நீ ஈண்டு முறைகாக்க வேண்டும் என்பது குறிப்பு.

மகளிர்க்கு நிறை; தவத்திற்குப் பொறுமை; அறத்திற்கு அருள்; அரசுக்கு முறை உயிர் நிலையமாம்.

அரசுமுறையை விளக்க இவ்வரிசைகள் வந்தன.

கற்பு, பொறை, கருணைகளை எடுத்துக்காட்டி முறையைக் குறித்துள்ளமையால் அதன் நிறையும் நீர்மையும் அறியலாகும்.

அருள் இல்லாத அறம், பொறை இல்லாத தவம், நிறையில்லாத மகளிர், முறை இல்லாத அரசு, உயிர் இல்லாத உடல்போல் இழிந்து ஒழிந்துபோம் என்பதாம்.

இதனைத் தெளிந்து அருள்புரிய வேண்டும் என்பது கருத்து.

*நீதி மன்னர் நெறிபுரி யாரெனில்,*
*மாதர் கற்பிலர்; மாதவர் நோன்பிலர்;*
*சாது மாந்தர் தருமம் தழைத்திலர்;*
*ஓத நீர்நிலம் ஊனம் அடையுமே!*

என்றமையால் அரசுமுறை நிறை முதலியவற்றிற்கு உயிராதார மாயுள்ளமை உணரலாகும்.

நீ முறை துறந்தால் உலகம் நிலை குலைந்து பல துயரங்களை அடையும்; அங்ஙனம் குலையாதபடி தலையளிசெய்து அரசை ஏற்று ஆதரித்தருள் என ஆதரவுடன் வேண்டினான்.

தருமம் தவம் அருள் பொறுமைகளை உரிமையாக உவந்து பேசியிருத்தலால் இவனுடைய உள்ளப் பண்பும் உணர்வும் சீலமும் உலகறிய வந்தன. உயிரின் பரிபக்குவ நிலையை உரைகள் உணர்த்தி வருகின்றன.

எனக்குத் தனியே ஒரு தகுதியும் இல்லையாயினும் உங்களோடு உடன்பிறந்த அந்தப் புண்ணியப் பேற்றின் கண்ணியம் என்னை அடையாமல் போகாது. ஒரு பாதகியின் குடல் கிடந்த இழிவு என் உடல் கிடந்தாலும் உயிர் உமது தொடர்பினால் புனிதம் மிக வுடையது.

அரிய நும் அரசைச் சிறிய நான் அடைவது ஒரு வீரச் சிங்கத்திற்கு உரியதை வீண நரி விழைந்தது போலாம்.

"உந்தை தீமையும், உலகுறு தநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்"

தீர அயோத்தி வந்து அரசு புரிந்தருள் என இறுதியில் பரசி வேண்டினான். தகப்பன் செய்த தீமையைப் பிள்ளை தீர்க்க வேண்டும்என்று கடமை யுணர்ச்சியைக் கருத்துடன் காட்டினான்.

உனது புண்ணியத் தந்தையும், எனது பாதகத் தாயும் சேர்ந்து செய்துள்ள படுபாவத்தைத் தரும மூர்த்தியாகிய நீ கருணை செய்து கடிந்து கதி புரிந்தருள்.

உந்தை என இராமனுக்கு மட்டும் சொந்தமாக்கித் தன்னை அயல் ஒதுக்கியது முன்னம் தசரதன் சொல்லியிருக்கும் சூழ்வினைப் பாதுகாக்க. அவன் என்ன சொன்னான்?

கைகேசி மேலுள்ள வெறுப்பினால், "பரதனையும் மகன் என்று உன்னேன்" என அம் மன்னர் பிரான் மனமறுகி உரைத்திருத்தல் இவன் நினைவில் உறுத்தி வருகிறது. உரிமையை மீண்டு பெறும் வரையும் அந்தத் தந்தை மொழியைத் தவறாது போற்றி வருகிறான்.

என் தாய் செய்த தீமைக்கு நான் பரதேசியாகிக் காடு போக வேண்டும்; நீ அயோத்தியை அடைந்து அரசு புரிய வேண்டும் என்கின்றான்.

தீவினைத் தாய் என்றதனால் அவளது பாவச் செயலை நினைந்து பதைத்துள்ளமை புலனும். அண்ணனுக்கு இடர்செய்திருத்தலால் கடிய கொடிய படுபாவி எனத் தாயை இவன் கடுத்து வெறுத்திருக்கிறான்.

இராமனது பிரிவில் உலகம் முழுவதும் என்றும் அடையாத கொடிய துயரத்தை அடைந்து மறுகி இருத்தலால், "உலகு உறாத நோய் தந்த தாய்" என்றான். அவளது நிந்தனை நெடிது நீண்டுள்ளது.

உற்ற உலகும் பெற்ற பிள்ளையும் அவளைப் பெரும் பாவி என்று வெறுத்து யாண்டும் இகழ்ந்து பேசுகின்றன.

உலகிற்கு உயிர் நிலையமான இராமனுக்குக் கலகம் செய்து கடும் பிழை புரிந்திருத்தலால் உலகம் யாவும் அவளை நிந்திக்க நேர்ந்தன.

"யச்ச ராமம் நபச்யேத்து யம்சராமோ நபச்யதி
நிந்தித : ஸர்வலோகேஷு ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே"
(வால்மீகி இராமாயணம், அயோத்தி, 17-14)

"இராமனை எவன் விரும்பிநோக்கவில்லையோ, எவனைநோக்கி இராமனும் அருள்புரியவில்லையோ அவன் எவ்வளவு சிறந்தவனாயினும் உலகம் எங்கணும் நிந்திக்கப் படுகின்றான்; தன் சொந்த ஆன்மாவும் அவனை உள்ளே இகழ்ந்து வெறுக்கின்றது" என்பது இந்தச் சுலோகத்தின் பொருள். ஆகவே இராமனது அற்புத மகிமையும் அகில வுரிமையும் ஆன்ம நேயமும் அறியலாகும்.

இத்தகைய உலக முதல்வனுக்கு இடர் இழைத்தமையால் ஊரும் நாடும் கைகேசியை நிந்தித்து வைதன; உரிய பிள்ளையும் பெரிய பாவி என்று வெறுத்து இகழப் பிழை மிகுந்து நின்றாள்.

என் தாய் தீயவளாயினும் தூயவனான உன்னையே சிந்தித்துக் கொண்டிருக்கின்றேன்; என் பொருட்டு இரங்கியருள் என்று இராமனைப் பரதன் கும்பிட்டு வேண்டினான்.

தம்பியின் உள்ளக்கிடக்கைகளை முன்னமே உணர்ந்திருந்தான்

ஆயினும் உரைகளால் தெளியவே அவனைப் பரிவுடன் நோக்கி இவன் அறிவுரை பகர்ந்தான்.

" தம்பி பரதா! நீ நமது தாய்தந்தைகளை இகழ்ந்து பேசுகின்றாய். அப்படிப் பேசலாகாது. என்பால் அன்பு மண்டி மரியாதையுடன் என்னை மதித்துப் போற்றுகின்றாய். தமையனை விட மாதா பிதாக்கள் எவ்வளவு பெரியவர்கள்! அந்த அன்புத் தெய்வங்களை மக்கள் என்றும் தொழுது வணங்கி வழிபாடு செய்ய வேண்டும். அவர் இட்ட கட்டளை எதுவாயினும் அதனைத் தட்டாமல் நடக்கவேண்டும். அவரது உரை கடவாமல் ஒழுகவே இருமையும் இதமாம்" என உரிமை யுணர வுரைத்து மேலும் கூறினன்.

### இராமன் உரைத்தது.

*முறையும் வாய்மையும் முயலும் நீதியும்*
*அறையும் மேன்மையோடு அறனும் ஆதியாம்*
*துறையும் யாவையும் சுருதி நூல்விடா*
*இறைவர் ஏவலால் இயைவ காண்டியால்!* (1)

*பரவு கேள்வியும் பழுதில் ஞானமும்*
*விரவு சீலமும் வினையின் மேன்மையும்*
*உரவிலோய்! தொழற்கு உரிய தேவரும்*
*குரவரே எனப் பெரிது கோடியால்!* (2)

*அந்த நற்பெருங் குரவர் ஆர்? எனச்*
*சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்*
*தந்தை தாயர் என்று இவர்கள் தாமலால்*
*எந்தை கூறவேறு எவரும் இல்லையால்* (3)

*தாய் வரங்கொளத் தந்தை ஏவலால்*
*மேய நம்குலத் தருமம் மேவினேன்*
*நீவரங் கொளத் தவிர்தல் நீர்மையோ?*
*ஆய்வரும் புலத்து அறிவு மேவினய்!* (4)

*தனையர் ஆயினர் தந்தை தாயரை*
*வினையின் நல்லதோர் இசையை வேய்தலோ?*
*நினையலோ விடா நெடிய வன்பழி*
*புனைதலோ ஐய புதல்வராதல்தான்,* (5)

இம்மை பொய்யுரைத்து இவறி எந்தையார்
அம்மை வெம்மைசேர் நரகம் ஆள யான்
கொம்மை வெம்முலைக் குவையின் வைகிவாழ்
செம்மை சேர்நிலத்து அரசு செய்வெனோ? (6)

வரனில் உந்தைசொல் மரபி னாலுடைத்
தரணி நின்னதென்று இயைந்த தன்மையால்
உரனில் நீபிறந்து உரிமை ஆதலால்
அரசு நின்னதே ஆள்க என்னவே. (7)

(கிளைகண்டு, 105-111)

இராமனுடைய இந்த அருமை வசனங்கள் சிந்தனைக்கு உரி யன. என்புருகி மறுகும் அன்புடைத் தம்பியின் உள்ளம்தேற உணர்வுறுதிகள் கூறியுள்ளான்.

கல்வி கேள்வி அறிவு ஒழுக்கம் தருமம் சத்தியம் முதலிய உயர்நலங்கள் எல்லாம் தந்தை தாயர்களின் வடிவங்களே. அவர் உள்ளம் உவகையுறப் புரிதலே பிள்ளையின் பிறவிப்பேறும். விழி எதிரே தோன்றி எவ்வழியும் அளிபுரிந்தருள்கின்ற விழுமிய தெய்வங்கள் மாதாவும் பிதாவுமே. அத்தகைய திவ்விய மகிமை யுடைய தாயும் தந்தையும் ஒன்று சேர்ந்து உரிமையுடன் ஏவிய பணியையே நான் தலைமேல் ஏந்தி நிற்கின்றேன். நீ இடையே வந்து அதனைத் தடைசெய்ய முயல்கின்றாய்! இது நலமா?

புதல்வர்கள் எந்த வகையிலும் கீர்த்தியை வளர்த்துத் தந்தை தாயர்க்கு உயர்ச்சியையும் மகிழ்ச்சியையும் விளைக்கவேண்டும் புகழ் புனிதமான அரிய செயலால் விளைவது. அந்த அருமைப் பாடுகளுக்கு அஞ்சி இனிய சுகபோகங்களை விழைந்து எளிய வழிகளில் இழிந்தால் பழியும் சிறுமைகளுமேயாம்; புகழும் பெருமையும் போம். நீ சொல்லுகின்றபடி அரசபோகத்தை விரும்பி நான் அயோத்திக்கு வந்து இப்பொழுது ஆளுகையை மேற்கொள்வேன் ஆனால் நம் தந்தையை நரகத்தில் தள்ளினவனா வேன். அந்தத் தரும குணசீலன் நரகம் ஆள நான் அரசு ஆள வேண்டுமா? தம்பி! கவனித்துப் பார்!

"பரதன் உலகம் ஆள; நீ வனம் போயிருந்து பதினான்கு ஆண்டுகள் கழித்து வா!" என்று எனக்கு அளித்த உத்தரவை

நான் அழித்து வந்தால், என் கதி என்னும்? நம் தந்தை நிலை யா தாம்? சிந்தனை செய்!

இம்மை பொய் உரைத்து இவறி எந்தையார்
அம்மை வெம்மைசேர் நரகம் ஆள.''

என்றது தான் அரசாள நேர்ந்தால் தன் தந்தைக்கு நேரும், கொடிய துயர நிலையைக் குறித்துக் காட்டியவாறும்.

தாதை சொன்னபடி நான் நடக்கவில்லையானல் அவர்பொய் யர் ஆவர்; ஆகவே பொய் பேசும் பாதகர் அடைகின்ற வெய்ய நரகம் அவர் அடைய நேர்வர், பெற்ற தந்தை இங்ஙனம் நரக துன்பத்தை அடைந்து வருந்த, பிள்ளை அரச இன்பத்தை நுகர்ந்து மகிழ்ந்தான் என்னும் பழியை நான் சுமக்கவேண்டுமா? நீ புத்தி சொல்லும் வழியை உய்த்து உணர்க.

இவறி என்றது வாக்குமாறி வன்பழியில் ஏறி என்றவாறு.

குறித்தபடி தான் செய்யாது போயினும் அது தந்தையைப் பொய்யனுக்கிப் புலைப்படுத்திவிடும் என இம் மைந்தன் மறுகி யிருக்கிறுன்.

பிள்ளை செய்த பிழை பெற்றேனைப் பற்றி வருத்தும் என் பது உய்த்துணரத்தக்கது. பழிபுரியா மக்கட் பெறின், பெற் ரோர்க்கு எழுமையும் இன்பமாம் என்றது போதுமறை ஆதலால் பழிபுரியின் அவர்க்கு அழி துயராம் என்பது அறியலாகும்.

எவ்வழியும் புகழ்புரிந்து என் தந்தைக்கு வேண்டியமேன்மை இன்பங்களை விளைப்பனேயன்றி யாண்டும் யாதும் அவம் புரி யேன் என இக் குலமகன் உறுதி செய்திருக்கும் நிலை உரைகள் தோறும் ஒளி வீசி வருகின்றது.

தன் சுகபோகங்களைத் துறப்பது மட்டும் அன்று எத்துணைத் துன்பங்களையும் பொறுத்து எவ்வாற்றானும் அப்பனுக்கு இதம் புரிவதையே தனது சிறந்த பிறவிப்பேருக இவன் கருதியிருக் கிறுன்.

''கொம்மை வெம்முலைக் குவையின் வைகிவாழ்
செம்மை சேர்நிலத்து அரசுசெய்வெனே?''

தான் சக்கரவர்த்தியாயிருந்தால் அனுபவித்துச் சுகிக்கின்ற

அரிய இன்ப நலங்களை உரிமையாக இங்ஙனம் கிளர்ந்து கூறினான். தன் குறிக்கோளை வலியுறுத்த அரச இச்சையைக் கொச்சையாகக் குறித்தான்.

மூலக் குவையில் வைகிய சுவையே தசரதன் நிலைக்கு முடிவாய நிலைமையும் இதில் தொனியாய் நின்றது.

நம் தந்தையார் நமது தாய் மூலம் எனக்கும் உனக்கும் ஒருங்கே ஒரு பணியை இட்டிருக்கின்றார். நான் காடு ஆள, நீ நாடு ஆளவேண்டும் என்பது அந்த உத்தரவு. அக்கட்டளைப்படியே நாம் இருவரும் யாதும் தவறாமல் நடக்கவேண்டும்.

மூத்தவனுக்கே அரசுஉரியது என்று நீ கருதி மறுகலாகாது. தந்தையிடம் வரம் பெற்றுத் தாய் தந்துள்ளமையால் அரசு உன்னுடையதே. நீயே ஆட்சிக்கு உரியவன். நானும் இசைந்து உறுதியாகச் சொல்லுகின்றேன்.

பெற்றோர் இட்ட பணியை நாம் இருவரும் ஒரு முகமாய்த் தனித்தனியே நின்று நிறைவேற்றின் நமக்கு எழுமையும்புகழாம்.

மாதா பிதாக்களின் வாக்கியங்களைப் பரிபாலனம்செய்த குல மக்கள் என்பதைவிடத் தலைமையான கீர்த்தி உலகில் வேறு யாதும் இல்லை. அதுவே பிறவிப் பேறும்

எனக்கு வனவாசம் விதித்து உனக்கு யாதொரு பணியும் விதியாது இருந்தாலும் அரசை நீயே ஆள உரியவன். எனக்கு அடுத்த தம்பி நீ தானே? உன் தம்பியர் இருவருக்கும் நீ மூத்தவன் அல்லவா? எவ்வகையிலும் எல்லாப் பொறுப்பும் உன்னதாகவே உள்ளது. அத்துடன் பெற்றோர் கட்டளையும் உறுதியாயிருத்தலால் நீ மாறு வேறு கூறலாகாது.

அரசு நின்னதே ஆள்க

எனப் பரதனை நோக்கி இவ்வாறு இங்ஙனம் இறுதியாக உறுதி கூறினான். தனது வன வாசத்திற்கு உதவியாக விரைவு நாடினான்

"நின்னதே" எனத் தேற்றமான ஏகாரம் இட்டுத் தெளிவாக வலியுறுத்தியது என்னதாக யாதும் எண்ணாதே என்பதாம்.

இந்நம்பி வார்த்தைகள் அத்தம்பியின் உள்ளத்தில் அம்புகள் போல் பாய்ந்தன. மாறு வேறு பேசாமல் பலவகைகளிலும் அரண் கோலி உரஞ் செய்திருத்தலை நினைந்து நெஞ்சம் கலங்கினான். நெடிது சூழ்ந்து கடிது தேர்ந்தான்

முடிவில் அவன் துணிந்து பேசினுன்; அது அதிமதி நுட்ப மான விநயம் மிகவுடையது. அந்தப் பேச்சின் கனத்தைக் கொஞ்சம் கருதிப்பாருங்கள்.

முன்னர் வந்துதித்து உலகம் மூன்றினும்
நின்னை ஒப்பிலா நீபிறந்த பார்
என்னது ஆகில்யான் இன்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடம் சூடு எனு; (1)

மலங்கி வையகம் வருந்தி வைகநீ
உலங்கொள் தோளுனக்கு உறுவ செய்தியோ?
கலங்குரு வணம் காத்தி போந்தெனுப்
பொலங்குலாவுதாள் பூண்டு வேண்டினுன். (2)
(கிளைகண்டு 112-113)

இராமன் இதுவரையும் கூறிய எதிர்வாதத்திற்குப் பரதன் இப்படி அதி சாதுரியமாகப் பதில் உரைத்து மேலே யாதும் மறுக்காதபடி அவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டான்.

இந்தச் சொல்லாளனை மாறு வேறு பேசினுல் யாண்டும் வெல்லமுடியாது என்று கருதி அவன் சொன்னதை ஏற்றுக் கொண்டு அதனையே உபயோகித்தான்.

தாயும் தந்தையும் உதவியது போல ''அரசு நின்னதே'' என நீயும் இவ்வாறு தந்தாய்; எனக்குப் பூரணமான உரிமை கிடைத்தது. என்னுடைய அரசைச் சருவ சுதந்தரமாக உனக்கு இன்று நான் முழு மனதுடன் உவந்து தந்தேன்; நீ வந்து உலகை ஆண்டு அருள் எனத் தன் கைகளால் அண்ணன் கால்களைப்பற்றிக் கொண்டு தொழுது வேண்டினுன்.

பேச்சு வன்மையில் அந்தத் தமையனுக்கு ஏற்ற தம்பி என்பதைப் பரதன் இங்கே நன்கு விளக்கியிருக்கிறுன். உருவிலும் அறிவிலும் உரையிலும் பொறையிலும் முன்னவனை நிறை செய்துள்ளமையை இப்பின்னவனிடம் என்ன நிலையிலும் காணலாம்.

மூன்று உலகங்களிலும் இராமனுக்கு ஒப்பாக ஒருவரும் இலர் எனப்பரதன் கருதியுள்ளது அவன் உரையில் வெளிவந்தது.

அழகு அறிவு வீரம் கொடை சத்தியம் சீலம் முதலிய வற்றில் ஞாலம் எங்கணும் எவரும் தனக்கு நிகர் இல்லாதவன் என்று அண்ணனை இவன் எண்ணியிருக்கிறுன்.

இங்ஙனம் ஒப்பற்ற அற்புத மூர்த்தியாய் உதித்திருக்கின்ற உனக்கு என்றும் தனியுரிமையான அரசை அயல் ஒருவன் தாங்க இயலுமோ? என்பது குறிப்பு.

"பார் என்னது ஆகில்" என்றது முன்னவன் சொன்னதை அனுமதித்தது. தன் கைக்கு வந்ததை உடனே தானம் கொடுத்த படியாய் ஞான நோக்குடன் நல்கினன். தந்தேன் வந்தருள் என வந்தனை புரிந்தான்.

மன்ன போந்து நீ மகுடம் சூடு!

தன் அரசுரிமையைத் தந்திருத்தலால் மன்ன என்னும் பட்டப் பெயரை மகிழ்ந்து சூட்டினன்.

அண்ணு என்னுமல் அரசர் பெருமானே! என்று ஆர்வ மீதூர்ந்து பேசியது அப்பொழுதே மணிமுடி புனைந்து அரியணை அமர்ந்து சக்கரவர்த்தியாய் அமைந்து விட்டதாக உவந்து கொண்டாடிய படியாயது. அவனது அவாவின் வேகம் அறிய வந்தது.

எப்படியும் தவக்கோலத்தை நீக்கி விரைந்து கொண்டுபோய் அண்ணனை அரச கோலம் ஆக்கிப் பார்க்கவேண்டும் என்னும் ஆவல் உள்ளம் உந்தி ஓங்கி நிற்கின்றது.

இராமனைப் பிரிந்து உலகம் வருந்தி அயர்ந்திருக்கும் நிலையைக் கிளர்ந்து காட்டினன்.

"மலங்கி வையகம் வருந்தி வைகநீ
உலங்கொள் தோள் உனக்கு உறுவ செய்தியோ?"

அண்ணனை நோக்கிப் பேசி யிருக்கும் இந்த வாசகத்தில் பரதனது உள்ளத்துணிவும் உரையாடும் திறனும் உரிமையும் ஒளி வீசி நிற்கின்றன.

மலங்கி என்றது உயிரினங்கள் உள்ளங் கலங்கிச் செயலிழந்து மயங்கி மறுகியிருக்கும் நிலைதெரிய. மலங்கல் = கலங்கல்.

உயிரிழந்த உடல்போல், ஒளியிழந்த விழிபோல் நீர் இழந்த மீன் போல் உன்னைப் பிரிந்து உலகம் இழிந்து கழிந்து பரிந்து பதைத்து வருந்தியுழல நீ மனம்போன படியே வனம் புகுந்து உல்லாசமாய்த் திரிந்து வரத் துணிந்து கொண்டது நீதி ஆகுமா?

"உலம் கொள் தோள்" என்றது அருந்திறலாண்மை கருதி.

உலம் = திரண்டு உருண்டகல்.

திண்ணிய தோள் வலி யுடையன் ஆதலால் எண்ணியபடியே செய்யலாம் போலும்? எனத் தனது நுண்ணிய நெஞ்சின் நோவைக் கண்ணியமாகக் காட்டினான்.

அண்ணனிடம் தனக்குள்ள தனியுரிமை இங்கே தன்னை யறியாமல் பொங்கி யிருக்கின்றது.

கலங்குருவணம் காத்தி போந்து என்றது உலகம் நிலை குலைந்து துயர் உறாமல் விரைந்து வந்து காத்தருள் என்றவாறு. அன்புரிமை ஆற்றல் மிகவுடையது ஆதலால் அது இங்ஙனம் துணிந்து ஏவியது.

உள்ளமும் உரையும் இவ்வண்ணமாக இறுதியில் நிகழ்ந்த செயல் என்ன?

"பொலம் குலாவுதாள் பூண்டு வேண்டினான்"

மேலே குறித்தபடி பேசி வந்தவன் முடிவில் அண்ணன் அடிகளைத் தழுவிக் கண்ணீர் மல்கி இவ்வாறு உருகி வேண்டினான்.

பொலம் = அழகு. பேரெழில் தவழ்வது என அத்தாள்களின் சவுந்தரிய நிலை காண வந்தது.

விரத சீலனான பரதன் கைபட அவ்வரதன் கால் அழகு மேலும் பொலிந்தது.

பூண்டு என்றதனால் தன் கைகளுக்கு அணியாய் உழுவலன்புடன் அவற்றைத் தழுவியிருக்கும் தகைமை புலனாம்.

## இராமன் மறுத்து மொழிந்தது.

இங்ஙனம் பூண்டு வேண்டிய போது இவ் ஆண்டகை இசைந்தானா? யாதும் இசைந்திலன். மேலும் பல நீதிகள் கூறினான்.

அசையா உள்ளத்தனாய் வலிந்து நின்று தம்பியை நோக்கி மொழிந்த மொழிகள் இந்நம்பியின் நெஞ்சத் திண்மையை வெளிப்படுத்தியுள்ளன.

பசைந்த சிந்தைநீ பரிவின் வையம் என்
வசம்செய் தால்அது முறைமையோ? வசைக்கு
அசைந்த எந்தையார் அருள அன்றுநான்
இசைந்த ஆண்டெலாம் இன்றொடு ஏறுமோ? (1)

வாய்மை என்னும்ஈ தன்றி வையகம்
தூய்மை என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ?
தீய்மைதான் அதில் தீர்தல் அன்றியே
ஆய்மெய் யாகவேறு அறைய லாவதே. (2)

எந்தை ஏவஆண்டு ஏழொடு ஏழ்எனு
வந்த காலம்நான் வனத்துள் வைகநீ
தந்த பாரகம் தன்னை மெய்ம்மையால்
அந்த நாளெலாம் ஆள்என் ஆணையால். (3)

மன்னவன் இருக்கவேயும் மணியணி மகுடம் சூடு
கென்ன யான் இயைந்தது அன்னான் ஏயது மறுக்க அஞ்சி
அன்னது நினைந்து நீ என் ஆணையை மறுக்கலாமோ?
சொன்னது செய்தி ஐய துயருழந் தயரல் என்றான். (4)
(திருவடி சூட்டுப் படலம்? — கிளைகண்டு 114-117)

பின்னவனிடம் முன்னவன் இன்னவாறு மொழிந்திருக்கிறான்.

பாதம் பணிந்து பரதன் பரிந்துவேண்டியும் இராமன் யாதும் இசையாமல் நீதி வாதமாய் நெறிமுறை கூறினான்.

"தம்பி நீ அரசை உரிமையாக உவந்து தந்தாலும் தந்தை இட்ட கட்டளையை நான் நிறைவேற்ற வேண்டாமா? பதினான்கு வருடம் வனவாசம் செய்துவா என்று அவர் பணித்திருக்கும் பணியை நான் மறுத்து வரலாமா? தந்தை சொல்லைத்தவறி நடப்பது எவ்வளவு நிந்தை! எத்துணைப் பாவம்! ஒரு கடமையை ஒத்துக்கொண்டு அதனை முடியாமல் இடையே நழுவ விடுவது பழியும் இழிவும் ஆம்.

சத்தியத்தைக் காப்பாற்றுகிறவன் எவனோ அவனே உத்தம புருடன். உண்மையே தெய்வத் தன்மை. அதனையுடையவன் பரிசுத்தனாய்ப் பரம நிலையை அடைகின்றான். புண்ணியங்கள் யாவும் அதில் பொருந்தி யிருக்கின்றன.

தரும நிலையமாய்த் திவ்விய மகிமை வாய்ந்துள்ள சத்தியத்தை ஒருவன் தவறுவானாயின் அவன் படுபாவியாய் அடுநரகில் ஆழ்கின்றான்.

இத்தகைய கொடிய பாதகத்தைத் தருமகுணசீலனான உன் அண்ணன் அணுகலாகுமா? நம் தாயிடம் சொல்லிய ஒரு வார்த்தையைத் தவற அஞ்சியே நம்தந்தையார் உயிரைவிடுத்தார்.

அந்தச் சத்திய சீலனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்திருந்தும் ஐயோ! நான் பொய்யனாய்ப் புலைப்படலாமா? அப்பா குறித்த பதினான்கு ஆண்டுகள் கழிந்தால் அன்றி நான் அயோத்தியை அடையேன். அதுவரையும் அரசை நீயே ஆளவேண்டும். உனக்கு விருப்பம் இல்லை ஆயினும் எனக்காகச் செய். நீ எனக்குத் தந்த அரசை நான் உனக்குத் திருப்பித் தந்திருக்கிறேன். தந்தை சொல்லை நான் தழுவி நிற்றல்போல் என் சொல்லை நீ வழுவாது நட; யாதும் மறுகி அயராதே!'' என அறிவு நலம் அருளினான்.

இருவருடைய உரைகளும் எதிர்வாதம் உடையனவாயினும் உரிமை தழுவி உள்ளன்பு சுரந்து உணர்வு நலம் பெருகியுள்ளன. உலக போதனைகளாய் நிலவி மிளிர்கின்றன.

வாய்மையே தூய்மை என்றதனால் சித்த சுத்தியையும் சத்தியத்தையும் இவ்வுத்தமன் எவ்வளவு உறுதியுடன் பேணி வந்துள்ளான் என்பது உணரலாகும்.

உரையிலே வாய்மையாளன் உள்ளம் தூய்மையாளனாய் உயர்ந்து திகழ்கின்றான்.

புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை
வாய்மையால் காணப் படும். (குறள், 298)

உடம்பு நீரால் சுத்தம் ஆதல்போல் உள்ளம் சத்தியத்தால் புனிதமாம் என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

செய்மை அண்மையில் உயிர்க்கு ஒரு துணைஎனச் சிறந்த
வாய்மையால் அகம் தூய்மையாம் மற்றிலை புறத்தைத்
தூய்மைசெய்வது நீரலால் சொல்லின் வேறுஉளதோ
நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பு எமக்கறிதி.
(அரிச்சந்திரன் சரிதை)

அரிச்சந்திரன் கோசிகரிடம் கூறியபடியிது. சத்தியத்தை அவன் பாதுகாத்திருக்கும் நிலைமை இதனால் அறியலாகும்.

தன் முன்னோர் எல்லாரும் இங்ஙனம் உரிமையாகப் பேணி வந்துள்ள வாய்மையை இராமன் யாண்டும் வழுவாது தழுவி நின்று உறுதி பூண்டு ஒளி மிகச் செய்தான்.

சத்தியத்திலும் கருதியதைக் கடைபோகச் செய்யும் உறுதி நிலையிலும் இக்குலமகன் என்றும் தலை சிறந்து நின்றுள்ளான்.

"ஸத்ய வாக்யோத்ரடவ்ரத:" என இவனது மன நிலையையும் குண நலனையும் வியந்து முனிவர்கள் புகழ்ந்திருக்கின்றனர்.

மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினும் பரம புனிதனுய் யாண்டும் உண்மையையே உறுதியாக ஓம்பி வந்துள்ளமையால் சத்திய சீலன் என எத்திசையிலும் இவன் இசை பரவி யுள்ளது.

உயிரைத் தூய்மையாக்கி ஒளிமிகச் செய்தலால் குணங்களுள் வாய்மை யாண்டும் மேன்மையாகப் போற்றப் படுகின்றது.

"There is a truthfulness in action as well as in words, which is essential to uprightness of character" (Samuel Smiles)

"சொல்லிலும் செயலிலும் உண்மையாயிருத்தலே செம்மையான சீலத்தின் தன்மையாம்" என்று ஸ்மைல்ஸ் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

தீய்மைதான் அதில் தீர்தல் என்றது வாய்மையை விட்டுச் சிறிது விலகினும் கொடிய தீமையாம் என்றவாறு.

வாய்மை தப்பி னர்கள் இந்த மானிலத்தில் ஈனராய்த்
தீய்மை யுற்று மேலுளோர் பழிக்கவே திரிந்துபின்
தூய்மை யற்ற கும்பியுள் துளைந்தழுங்கு வாரென
ஆய்மனுப் பகர்ந்தவேத சாகைமுற்றும் அறையுமே.

(பிரமோத்தரகாண்டம்)

எடுத்த சன்மத்து மேன்மை எவ்வள விருந்தபோதும்
கடுத்தவை மாற்றல் அன்றிக் கழிந்தசன் மத்தும் செய்ய
அடுத்த புண்ணியங்கள் எல்லாம் அழித்திடும் பொய்மைஎன்னின்
தொடுத்தமேற்பிறப்பின் ஆற்றும் தொழிலினை உரைப்பது என்னே.

(காசி ரகசியம்)

இம்மை நலன்அழிக்கும் எச்சம் குறைபடுக்கும்
அம்மை அருநரகத்து ஆழ்விக்கும்—மெய்ம்மை
அறந்தேயும் பின்னும் அலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய். (சிறுபஞ்சமூலம்.)

பொய்யின் தீமை இவற்றால் அறியலாகும்.

மனிதனைத் தீயனாக்கிப் பொய் இருமையும் கெடுக்கும்; அதனைச் சிறிதும் மருவலாகாது, எவ்வழியும் அஞ்சி ஒதுங்குக. எல்லா நன்மைகளையும் ஒருங்கே பயக்கும் என்னும் குன்றாக இன்

பம் அருளுகின்ற மெய்யையே யாண்டும் பேணி வரவேண்டும் என இந்த ஐயன் அறிவுறுத்தி வருகிறான்.

தருமத்தையும் சத்தியத்தையும் கண்ணினும் உயிரினும் அருமையாக எண்ணிப்போற்றி இவ் அண்ணல் ஒழுகி யிருக்கிறான்.

இவனுடைய குணகணங்கள் கருதும்தோறும் அமுத தாரைகளாய் உயிரினங்களுக்கு உணர்வு சுரந்து வருகின்றன.

புனிதமான நல்ல இயல்புகளையுடைய மனிதன் தெய்வத் தன்மையை அடைந்து இப் பிறவியிலேயே திவ்விய போகங்களை நுகர்கின்றான்.

" Certainly it is heaven upon earth to have a man's mind move in charity, rest in providence, and turn upon the poles of truth. " (Bacon)

" மனிதனது மனம் சத்தியத்தில் நிலைத்து, அருளில் அமர்ந்து, தருமத்தில் உலாவுமாயின் அவன் இவ்வுலகிலேயே உண்மையாகச் சுவர்க்கத்தை காண்கின்றான் " என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

இங்ஙனம் வாய்மை தூய்மைகளை வலியுறுத்தித் தந்தையார் குறித்த காலம் வரையும் தான் வனத்தில் இருந்து வருவதாக உறுதி கூறித் தம்பியை அணைத்து ஆறுதல் செய்து அரசை ஆண்டுவரும்படி அண்ணன் பணித்தான். அவன் கண்ணீர் சொரிந்து கரைந்து நின்றான். அந்த இளவலது உள நிலையை நினைந்து இவனும் உருகினான். இறுதியில் அறுதியிட்டு உறுதி மொழிந்தான்.

" அரசு என்னுடையது என்று கருதி மறுகுகின்றாய்! உன் எண்ணப்படி என்னதே; அதனை முழு உரிமையுடன் உனக்கு இன்று நான் உதவியிருக்கிறேன்; என் சொல்லை மறாமல் போய் ஆட்சி செய்; தாதை பணியை நான் கேட்டதுபோல் எனது நீதி மொழியை நீ கேட்டு நடக்கவேண்டும் " என நயந்து வேண்டினான்.

சொன்னது செய்தி ஐய! துயர் உழந்து அயரல்

என முடிவாக முடிவுரை கூறினான். தான் உரைத்தபடி மீண்டுபோய் அயோத்தியை அடைந்து அரசை ஆண்டு வருக என்பான் " சொன்னது செய்தி " என்றான். அயரல் என்ற

தனால் அந்த இளவல் துயர்மிகுந்து அலமந்திருக்கும் நிலைமை புலனும். அவனது அவலக் கவலைகள் அளவிடலரியன

இராமன் இவ்வாறு பல அறிவுரை கூறி ஆற்றியும் பரதன் மனம் கேளாமல் மறுகி உளைந்து உருகி நொந்தான்.

அவனது கண்கலக்கத்தை நோக்கிச் சாபாலி, பரத்துவாசர் முதலிய மாதவர்களும் இராமனை அயோத்தி வந்தருளும்படி வேண்டினர். யாவரும் பரதனுக்கே பரிந்து நின்றனர்.

மதிநலம் பெருக அதிசாதுரியமாய் மொழிந்த முனிவர்கள் எல்லாருக்கும் இனிது பதில் உரைத்து மேமேல மறுமொழி பேசா வகை இவ்வீரன் எதிர்மொழி ஆடினான்.

அனைவரையும் கை அமைத்து நிறுத்திவிட்டு இறுதியில் வசிட்ட முனிவர் புகுந்தார். தமது வார்த்தையை யாதும் தட்டி விடாதபடி பல தத்துவ நிலைகளை விரித்துப்பேசி முடிவில் குருவின் பெருமையைக் குறித்துச் சுட்டினர்.

"மாதா பிதா குரு தெய்வம் என்னும் இவ் வைப்புமுறை படிப்படியே உயர்வை உணர்த்தியுள்ளது. உற்ற ஒரு பிறப்பின் தேக காரணமாதலால் தாயும் தந்தையும் முந்துற நின்றனர். என்றும் அநாதி நித்தியமாய் ஆன்ம வுரிமை அமைந்துள்ளமை யால் அந்தப் பழமையின் கிழமை தெரியத் தெய்வம் இறுதியில் நின்றது. தேக பந்தங்களையும் ஆன்ம தத்துவங்களையும் உணர் த்தி உண்மையைத் தெளிவுறுத்தி உயிரை உயர்த்தி யருளுதலால் குருவை நடுவில் வைத்து வேதம் வழிபாடு காட்டி யருளியது. ஒன்றினும் ஒன்று அருமையாக உரிமையும் உயர்வும் பெருகி யுள்ளமையை நுணுகி யுணர்ந்து கொள்ளவேண்டும்.

இந்த முறையில் தந்தை தாயரினும் மேலாகக் குருவின் வார்த்தையை உத்தம புத்திரனாகிய நீ மதித்து நடப்பாய் என்று நம்புகின்றேன். ஆதியிலிருந்து வேதம் முதலிய கலைகளை யெல் லாம் என்பால் அன்பாய் நீ படித்திருக்கின்றாய்! யாவும்தெளிந்த அதிமேதை நீ. உன்னைப் பிரிந்து உலகம் பரிதாப நிலையில் பரிந்திருக்கின்றது. தம்பி பரதன் உருகி மறுகுகின்றான். அந்த அன்புருவத்தைப் பார்த்தாவது நீ அருள்புரியவேண்டும். எப்படியும் நீ மீண்டு வந்து ஆண்டால் அன்றி வேறு ஆதரவு

யாதும் இல்லை. வையம் உய்ய வந்தருள் ஐயனே!" என்று வசிட்டர் அதிவிநயமாய் வேண்டி நின்றார்.

அவ்வுரைகளைக் கேட்டும் இவன் உளவுறுதி குன்றாமல் இளமுறுவல் புரிந்தான். தனது இரு கைகளாலும் அவரை உரிமையுடன் தொழுது தான் ஊன்றி நிற்கும் உறுதி நிலை தோன்ற உரைத்தான்.

சான்றவர் ஆக,தன் குரவர் ஆக, தாய்
போன்றவர் ஆக,மெய்ப் புதல்வர் ஆக,தான்
தேன்தரு மலருளான் சிறுவ! செய்வென்என்று
என்றபின் அவ்வுரை மறுக்கும் ஈட்டதோ? (1)

தாய்பணித் துவந்தன தந்தை செய்கென
ஏயஎப் பொருள்களும் இறைஞ்சி மேற்கொளாத்
தீயஅப் புலையினின் செய்கை தேர்கிலா
நாய்எனத் திரிவது நல்லது அல்லதோ? (2)

முன்னுறப் பணித்தவர் மொழியை யான்என
சென்னியிற் கொண்டது செய்வென் என்றதின்
பின்னுறப் பணித்தனை பெருமையோ? எனக்கு
என்னினிச் செய்வதை உரைசெய் ஈங்கென்றான். (3)

(கிளைகண்டு, 126-128)

இராமனது அதி உன்னதமான இராச கம்பீரத்தை இங்கு நேரே காண்கின்றோம். தான் கருதி இறங்கிய குறிக்கோளி லிருந்து எவ்வழியும் யாதும் நிலை திரியாத அரிய பெரிய மன வுறுதி இந்த ஆண்டகையிடம் இயல்பாகவே அமைந்திருக்கிறது.

ஒன்றைச் செய்வேன் என்று ஏற்றுக்கொண்டபின் இடையே தடையாய் எவர் வந்து எப்படித் தடுத்தாலும் யாதும் தளர்ந்து நில்லான் என்பதை இவ்வல்லான் வாக்கு ஈண்டு வலியுறுத்தி யுள்ளது.

சான்றவர் என்றது ஆன்ற தவநலமுடைய பெரியோர்களை. சிறந்த மேலோர்கள், உயர்ந்த குருக்கள், பெற்ற தாயார், பிறந்த பிள்ளைகள் என்னும் இவரை ஈண்டு வரைந்து காட்டியது அருமையும் உரிமையும் உடைய இவரது உரைகளை எவரும் எளிதில் தட்டார் ஆதலால் அத்தகைய கிழமையும் பழமையும் வளமையும் முறைமையும் அறியவந்தன.

இத்தகைய உரிமையாளரும் தனது விரதமாகிய பிதிர்வாக்கிய பரிபாலனத்தைத் தடுத்துவிட முடியாதென்பதைக் கடுத்து உணர்த்தினான்.

தேன்தரு மலர் உளான் சிறுவ! என்று வசிட்டரை இப்படி விளித்திருக்கிறான். இனிய தேன் தருகின்ற நறிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமபுத்திரனே! இன்னது வறிய மொழிகளை வீணே பேசுகின்றாயே என்றவாறு.

அரிய கலையும் பெரிய தவமும் பருவ முதிர்ச்சியும் உடையவரைச் சிறுவ! என்றது எரிவு தோன்ற வந்தது. தம்பியிடமும், சாபாலி முதலிய மாதவர்களிடமும் வாதாடி வருந்தியுள்ளமையால் மனம் சலித்துப் பேச நேர்ந்தது.

அரிய தத்துவங்களையெல்லாம் நன்கு உணர்ந்தும் உரிய மாணவன் நிலைமையை ஒரு சிறிதும் உணராமல் கடமையுணர்ச்சி குன்றிச் சிறு பிள்ளைப் புத்தியாய்ப் பேசுகின்றீரே! என்பது குறிப்பு.

ஆசாரிய பத்தி எவ்வளவுதான் நிறைந்திருந்தாலும் அவர் வரன்முறை தவறி வார்த்தையாட நேர்ந்தால் மாணாக்கனிடமிருந்து சிறுமையான மறுமொழி சீறி எழும் என்பது இதனால் தெரிய நேர்ந்தது.

பெற்ற தாயும் உற்ற தம்பியும் உருகி வேண்டியும் சிறிதும் இசையாமல் உறுதி பூண்டு நின்றவன் தன் உள்ளத் துணிவைக் குருவினிடம் ஈண்டுத் தெள்ளத் தெளிய உணர்த்தினான்.

பேச்சில் சத்திரிய வீறு தழைத்துத் தான் ஒரு சக்கரவர்த்தித் திருமகன் என்பதை விளக்கி நிற்கின்றது.

மடுத்தவாய் எல்லாம் பிடித்தபிடி நழுவாத பேராளன் என இவ்வீர மகனை அடுத்து அடுத்து நாம் அறிந்து வருகின்றோம்.

வாழ்க்கையின் குறிக்கோளும் கடமையும் திருந்திய பண்பும் சீர்மையும் உடையனவாய் இவனிடம் நேர்மை எய்தி நிற்கின்றன.

தன் மனச்சான்று துணிந்ததே வேத முடிவாக இக்குலமகன் முடிவு செய்திருத்தலால் உலக நிலைகளை மதியாமல் சில சமயம் இவன் தலைமையோடு கடமை ஒன்றையே கருதிச் செல்கின்றான்.

"My life is for itself and not for a spectacle. I cannot consent to pay for a privilege where I have intrinsic right" (Self-Reliance)

"என் உயிர் வாழ்க்கை உயர்ந்த குறிக்கோளுக்கே அன்றி வெளியார் பார்த்து வியப்பதற்காக அன்று. எனக்கு இயல்பாக வாய்ந்துள்ள உரிமையை நான் விலை கொடுத்து வாங்கவேண்டிய தில்லை" என்னும் இவ்வாக்கியங்கள் இராமன் நோக்கோடு இணைந் திருக்கின்றன.

இவனது வாழ்வும் சூழ்வும் யாண்டும் தலைமைத் தன்மையில் நிலவி வருகின்றன. இந்நிலைமை இவனது கோக்குடிப் பிறப்பை நோக்கச் செய்கின்றது.

எளியவர் எவரிடமும் அதி சுலபனாய்ப் பழகி அளிநிறைந்த கண்ணனாய்க் கருணைபுரிந்து வருகின்றான். காரியம் கடமைகளில் கரும வீரனாய் இவன் வருமம் மீறி நிற்கின்றான்.

"What I must do is all that concerns me, not what the people think." (Emerson)

'நான் செய்யவேண்டிய கடமையே என் கருத்து; உலகம் கருதுவது எனக்குப் பொருள் அன்று" என்னும் இந் நிலைமை இத் தலைமகனிடம் ஈண்டு வெளியாயுள்ளது.

தாய் அழுது வேண்டியும், தம்பி தொழுது உருகியும், மாதவர்கள் மறுகியுரைத்தும், குடி சனங்கள் அடிபணிந்து போற்றியும் நகர்வர இசையாமல் தான்கொண்ட கொள்கையே குறியாய் இவன் உறுதி பூண்டு நின்றான்.

தான் கைக்கொண்டுள்ளது தந்தை வாக்கிய பரிபாலனம் என அதன் பெருமையைச் சிந்தை உவந்து கொண்டாடுகின்றான்.

தாயும் தந்தையும் ஏவிய பணியைச் செய்யாத பிள்ளைகள் நீச மக்கள் ஆவர் என நிட்டூரமாக வைகின்றான்.

"தீய அப் புலையனின் செய்கை தேர்கிலா
நாய்எனத் திரிவது நல்லது அல்லதோ?"

மாதா பிதாக்கள் சொல்லியபடி நடவாத அப்புல்லிய மகன் பொல்லாப் புலையன் ஆவன்; அவன் பிறப்பிலும் நாய்ப் பிறப்பு நல்லது என இச் செல்லமகன் திருவாயால் இப்படிச் சீறிப் பேசி யிருக்கிறான். உள்ளத்தின் பிடிமானம் உரையில் ஒளிர்கின்றது.

தாய் தந்தையரைத் தெய்வமாகக் கருதி ஒழுகும் உத்தம புத்திரன் ஆதலால் பெற்றவர் பேச்சைக் கேளாத பேதைமக்களை நினைக்கும் போது இங்ஙனம் இவன் சித்தம் கொதித்தான். தன் உள்ளம்போல் எல்லாரையும் எண்ணி எதிர் பார்க்கிருன். அதற்கு மாறுபாடு கண்ட பொழுது மறுகித் துடிக்கின்றான்.

அருமையாகப் பரிந்து பெற்று வருந்தி வளர்த்து வாலிபம் செய்துவிட்ட அந்த அன்புத் தெய்வங்களை வணங்கி வழிபடாமல் பிணங்கி நிமிர்ந்து அவர் தம் மனம் கோண நடப்பது கொடிய நீசச் செயலாம்; நன்றி கெட்ட அந்தக் கரும சண்டாளனினும் நன்றியுடைய நாய் பெருமையுடையது என்பான் நாய் எனத் திரிவது நல்லது என்றான்.

அறிவுடைய மனிதப் பிறப்பை அடைந்தும் அறிவு கேடராய் வறிது பாழ்பட்டமையால் அறிவில்லாத ஈன மிருகத்தினும் இழிவாக அவர் எண்ணப்பட்டார்.

ஒருநாள் இட்ட எச்சில் சோற்றுக்கும் நெடுவால் குழைப்பது ஆதலின் பலஆண்டுகள் பரிந்துபேணியும் பாழான மகனுக்கு அந்நாய் மேலாக மதிக்கப்பட்டது.

பெற்றவரைப் பேணி ஒழுகுவோரே பெரியவராய்ப் பேரின்பம் பெறுகின்றனர் என நேரன்பை நிலை நாட்டினான்.

உதித்த குடல் உவந்தால் உலகம் எல்லாம் உவந்தபமயாம். ஆகவே உடலெடுத்த பயனை அக்குடலிலிருந்து பிறந்தவர் உடனடைந்து கொள்கின்றார்.

> "ஐயிரண்டு திங்களா அங்கமெலாம் நொந்துபெற்றுப்
> பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்ய இரு
> கைத்தலத்தில் ஏந்திக் கனகமுலை தந்தாளை
> எப்பிறப்பில் காண்பேன் இனி."

என முற்றத் துறந்த பட்டினத்தடிகளும் பெற்ற தாயை நினைந்து இங்ஙனம் உருகியிருக்கிறார்.

தாய் உவந்து பணித்தன எனத்தந்தையினும் தாயை இங்கே முந்துறக் குறித்தது, தனக்கு வரம்வந்த வரவுநிலை உணரநின்றது.

தாய் தந்தையர் பணியை நான் தலையில் ஏந்தியிருக்கிறேன்; இந்த நிலையில் நீங்கள் மாறு வேறு பேசுவது நீதியாகுமா? எனது

நன்மையிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கின்ற தாங்கள் எனக்குப் புன்மை போதிக்கலாகாது.

"தம்பியை அழைத்துக்கொண்டு மீண்டு போய் அரசுக்கு வேண்டியதைச் செய்யுங்கள்; வனவாசத்தில் நான்நடந்துகொள்ள வேண்டிய தவ ஒழுங்குகள் ஏதேனும் இருந்தால் அதனைச் சொல்லுங்கள்; வேறு மாறாக ஒன்றும் பேசாதருளுக" என இங்ஙனம் தனது மன உறுதியை இராமன் முடிவாக உரை செய்யவே முனிவர் மறுத்து யாதும் பேசாமல் மறுகி அடங்கினர்.

### பரதனுக்குப் பாதுகை தந்தது.

அருகே மறுகியிருந்த பரதன் அண்ணன் அடியில் நெடிது விழுந்து "நானும் காட்டுக்குக் கூடவே வருவேன்; என்னையாதும் தடைசெய்யலாகாது; இந்த அருளை எனக்கு முழுமனதுடன் புரியவேண்டும்" என உழுவலன்புடன் உருகிவேண்டினன்.

"ஐயோ! அரசை ஆள்வது யார்? நாடு என்னும்? தாய்மார்க்கு ஆதரவு எவர்?" என்று இராமன் அலமந்து மறுகினன். அதுபொழுது வானிலிருந்து ஒரு இனிய ஒலி எழுந்தது.

### தேவர் திரண்டது.

அவ்வழி இமையவர் அறிந்து கூடினர்
இவ்வழி இராமனை இவன்கொண்டு ஏகுமேல்
செவ்வழித் தன்றுநம் செயல்என்று எண்ணினர்
கவ்வையர் விசும்பிடைக் கழறல் மேயினர்: (1)

### விசும்பில் மொழிந்தது

ஏத்தரும் பெருங்குணத்து இராமன் இவ்வழி
போத்தரும் தாதை சொல் புரக்கும் பூட்சியான்
ஆத்த ஆண்டு ஏழிரேடு ஏழும் அங்கிலம்
காத்தல் உன்கடன் இவை கடமை என்றனர். (2)

### இராமன் உவந்தது

வானவர் உரைத்தலும் மறுக்கற் பாலதன்று
யான்உனை இரந்தனன் இனிஎன் ஆணையால்
ஆனதோர் அமைதியின் அளித்தி பார்எனாத்
தான் அவன் துணைமலர்த் தடக்கை பற்றினன். (3)

இங்கே சரிதம் இவ்வாறு அதிசய நிலையில் நிகழ்ந்திருக்கிறது.

பரதன் விரதசீலன்; சத்திய நெறியினன்; உத்தம குணக் குரிசில்; உள்ளம் உருகி உயிர் மறுகித் தொடர்கின்றமையால் இராமனை அழைத்துக்கொண்டுபோய் விடலாகாதே என்று அமரர் இரண்டு அசரீரியாய் நின்று, "பரதா! தரும மூர்த்தியாகிய இராமன் பிதிர்வாக்கிய பரிபாலனம் பேணிப் பதினுன்கு வருடம் வனவாசம் செய்து வருதலே நல்லது; அதனால் உனக்கும் உலகிற்கும் அளவிடலரிய நன்மைகள் உளவாம்; அவன் சொல்லிய படியே நீ மீண்டுபோய் அயோத்தி வேந்தனாய் அமர்ந்து அரசு புரிந்தாள்; அதுவே இது பொழுது நீ செய்யவேண்டிய கடமையாம்" என இனிது மொழிந்தனர். மோனமான அந்த வான ஒலிகளைக் கேட்டு பரதன் வியந்து திகைத்தான்.

இராமன் அவனை அருகணைத்து, "தம்பி தெய்வ சம்மதம் இவ்வாறு அமைந்துள்ளது; யாவும் விதி நியமமாய் நடைபெறுகின்றன; நாமும் நெறி முறை பிறழாமல் ஒழுகி வரவேண்டும்; நீ ஊரில் போயிருந்து எல்லாருக்கும் ஆதாரவாய் ஆட்சிபுரிந்தருள்; யாதும் கவலாதே; நம் தாய்மார் முதலிய யாவரையும் அழைத்துக்கொண்டு போ" என்று கைகளைப் பிடித்துக்கொண்டு கண்ணீர் ததும்ப வேண்டினன்.

பரதன் பரிந்து உருகினன். தெய்வ நியதியை நினைந்து குழைந்தான். இனி வேறு உய்தி யில்லை என்று உள்ளம் துணிந்தான். அண்ணனை நோக்கினன். "ஐயனே! குறித்தபடி பதினுன்கு வருடத்தில் வாவில்லையானல், அடுத்த நிமிடத்தில் நான் உயிர் வைத்திரேன்; தீயில் விழுந்து மாய்ந்தே போவேன்; இது உண்மை; உன்மீது ஆணையாய் உறுதி செய்திருக்கிறேன்" என்று இறுதியை அறுதியிட்டுத்தன்னை மறந்து பேசித் தவித்துநின்றான்.

அவன் உள்ள நிலைமையை நினைந்து இராமன் உயிர் உருகினன். "சொல்லியபடி வந்து விடுவேன்; மறந்து நில்லேன்" எனத் தம்பியை முகம் தடவி அகம் கரைந்து மொழிந்தான்.

பின்பு இராமனது பாதுகைகளைத் தந்தருளும்படி பரதன் வேண்டினன். அவ்வாறே அண்ணன் தந்தான். அவற்றைக் கண்களில் ஒற்றிக் கைகளில் தாங்கினன்.

விம்மினன் பரதனும் வேறு செய்வதுஒன்று
இன்மையின் அரிதென எண்ணி ஏங்குவான்
செம்மையின் திருவடித் தலந்தந்து ஈகென
எம்மையும் தருவன இரண்டும் நல்கினன். (1)

அடித்தலம் இரண்டையும் அழுத கண்ணினன்
முடித்தலம் இவைஎன முறையில் சூடினன்
படித்தலத்து இறைஞ்சினன் பரதன் போயினன்
பொடித்தலம் இலங்குறு பொலங்கொள் மேனியான். (2)

ஈன்றவர் முதலிய எண்ணில் சுற்றமும்
சான்றவர் குழுவொடு தவத்து ளோர்களும்
வான்தரு சேனையும் மற்றும் சுற்றுற
மூன்றுநூல் கிடந்ததோள் முனியும் போயினன். (3)

(கிளைகண்டு நீங்கு 135-137)

அண்ணனை அழைத்துப்போக வேண்டும் என்று சேனைகளுடன் விரைந்து வந்த பரதன் முடிவில் அவனுடைய பாதுகைகளைப் பெற்று அடியில் விழுந்து தொழுது எழுந்து முகத்தை நெடிது நோக்கி உழுவலன்பினல் அழுதகண்ணனாய் மீண்டு வழி கூடிப் போன பரிதாப நிலைகளை இங்கே பார்த்து உருகுகின்றோம்.

இராமனது மனவுறுதியையும் தெய்வநியதியையும் தெளிந்த பரதன் இறுதியில் அவனுடைய பிதியடிகளை விதியடியா விழைந்து பெற்றது நுழைந்து சிந்திக்கத் தக்கது.

"வனவாச காலம் முடியும் அளவும் நாட்டுக்கு வரேன்; அதுவரையும் நீயே அரசன்; தேசத்தைப் பாதுகாக்க வேண்டியது உன் பொறுப்பு" என அண்ணன் இட்ட கட்டளையை யாதும் தட்ட முடியாமையால் அதற்கு உடன் பட்டான். உடனே ஓர் உறுதியையும் உபாயத்தையும் உரிமையுடன் நாடிக்கொண்டான்.

தன்னை அரசன் என்பதை என்ன வகையிலும் ஏற்றுக் கொள்ளாமல்முன்னவனது திருவடிகளையே மன்னவனாகக்கருதிப் பின்னவன் சிறிது மன அமைதி யடைந்து அவற்றைத் தந்தருளும்படிவந்தனை செய்து வேண்டினன்.

அடித்தலம் என்றது பாதம்வைத்து நடக்கும் பாதுகையை. பாதங்களுக்கு இனிய பாது காவலாக அமைந்த இவை மரத்தால் செய்யப்பட்டன. தோலால் செய்தது செருப்பு எனப்படும்.

தொடுதோல் கழலிவை தோற்செருப் பாகும்;
பாதுகை மிதியடி பாவலும் ஆகும். (பிங்கலந்தை)

பெரும்பாலும் துறவிகள் உரிமையாய் உபயோகிப்பது பாதுகையேயாம். அங்கிலேயிலுள்ள இராமன் பாதம் தோய்ந்த சாதனங்களை பரதன் ஆதரவாக உவந்து கொண்டான்.

எம்மையும் தருவன என அப்பாதுகையை அறிவித்திருக்கிறார். இம்மை மறுமை அம்மைகளில் அடையத்தக்க எல்லா நன்மைகளையும் அருள வல்லன என்றதனால் அப்பொருளின் மகிமை புலன் கொளலாகும்.

''கடிமல ரடியிணை கருதினர் பெறுகென
அடிநடு முடிவற அருள்பர கதியினை''

எனத் துதிகொண்டுள்ள திருமாலே இப் பெருமானாய் வந்திருத்தலால் இம்மிதியடி இங்ஙனம் வியந்து போற்றப்பட்டது.

'' அடித் தலம் இரண்டையும் அழுத கண்ணினன்
முடித்தலம் இவைஎன முறையில் சூடினான் ''

அண்ணனிடமிருந்து பெற்ற பாதுகையைப் பரதன் போற்றிப் புனைந்து சீராட்டிப் பாராட்டியிருக்கும் நிலைமையை இங்கே பார்த்து நிற்கின்றோம். பார்வை பரிவுக் காட்சியாகின்றது.

முன்னவன்பால் இவன் கொண்டுள்ள ஆர்வ நிலைகளை அளவு கண்டு கூறவல்லார் யார்?

## பரதன் மீண்டது

உருகிய நெஞ்சனாய் விழி நீர் பொழிய அண்ணனது அடியில் விழுந்து தொழுது எழுந்து நெடிது பொழுது கனிந்து நோக்கிப் பாதுகையை அரசு முடி சூடியதுபோல் தலையில் வைத்துக்கொண்டு பரதன் அயோத்தியை நோக்கிப்போயினான். படைகளும் உடன் போயின.

பிள்ளைப் பாசத்தால் உள்ளம் கரைந்து நிற்கும் கோசலை சுமித்திரைகளை வணங்கித் தேற்றி இராமன் போற்றி அனுப்பினான். குடி சனங்கள் யாவரும் இவனை அடி தொழுது போயினார்.

மூன்று தினங்கள் கழிந்தன. ஈண்டு இருந்தால் மீண்டும் வந்து பந்து சனங்கள் பந்தம் செய்வரே! என இந்த ஆண்டகை நினைந்தான்.

## இராமன் தண்டக வனம் புகுந்தது

சிறந்த வளங்கள் நிறைந்து வசிக்க இனிதாய் இருந்த அந்தச் சித்திரகூடமலையை விட்டுத் தெற்கே செல்லத் துணிந்தான்.

குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால்
நின்றவர் நலிவரால் நேயத்தால் எனுத்
தன்துணைத் தம்பியும் தானும் தையலும்
தென்திசை நெறியினைச் சேறல் மேயினன்.

ஒரு முறை பழகித் தெரிந்துகொண்டமையால் தேசத்தவர் அடிக்கடி வந்து பாசத்தை விளைப்பரே என இக்கோமகன் கருதியுள்ளமையால் துறவு நிலையில் மருவி நிற்கும் நிறைவு தெரிந்தது. இவ்வாறு உறுதிபூண்டு துணைகளுடன் தென் திசை நோக்கி நடந்தான்.

இவ்வளவில் அயோத்தியா காண்டம் முடிகின்றது.

மேலே ஆரணிய காண்டம் ஆரம்பம் ஆகின்றது.

இதிலிருந்துதான் கதை நிகழ்ச்சிகள் விசித்திர கதிகளை அடைந்திருக்கின்றன. சரித்திர விளைவுகள் ஆரா அமுதங்களாய்ப் பேரொளி வீசிப் பெருகி மிளிர்கின்றன.

உணர்வுக் காட்சிகள் உறுதி நலங்களை விளைத்து, உயிரினங்களுக்கு உயர் பேரின்பங்களாய் ஓங்கி இயல் புரிந்தருள்கின்றன.

இராமனது அவதார இரகசியமும், அதிசய மகிமைகளும், சீவியச் செழுமைகளும், காவியச் சுவைகளும் தேவியல்புகளாய்த் திகழ்ந்து பூவியல் வளமுறப் பொலிந்து வருகின்றன.

## அத்திரி முனிவரை அடைந்தது.

சித்திர கூட மலையிலிருந்து புறப்பட்டுப் பத்தினியையும் இளையவனையும் அழைத்துக் கொண்டு இராமன் தென்திசை நோக்கி வந்தான். சிறிது தூரம் வரவே அயலே குளிர் பூஞ்சோலை ஒன்று கண்டான். அங்கே அத்திரி என்னும் அருந்தவர் வாசம் செய்வதை அறிந்து அவரைத் தரிசிக்க விழைந்து உள்ளே சென்றான். புனிதமான அந்த ஆச்சிரமத்தில் தனியே தவ

வாழ்விலிருந்த முனிவர் இக் கோமகனைக் கண்டதும் பெருமகிழ்வுடன் வியந்து வெளியே வந்தார். அவரது அடியில் விழுந்து மூவரும் தொழுதனர். இவரை உரிமையுடன் அவர் உவந்து கொண்டுபோய்ப் புகழ்ந்து உபசரித்தார்.

குமரர் நீர் இவண் அடைந்துதவு கொள்கை எளிதோ?
அமரர் யாவரொடும் எவ்வுலகும் வந்த அளவே;
எமரின் யார் தவம் முயன்றவர்கள்? என்று உருகினன்
தமரெலாம் வர வுகந்தனைய தான முனிவன்.

இந்த மான வீரனைக் கண்டு மகிழ்ந்து அந்த ஞான முனிவரர் இங்ஙனம் கொண்டாடி யிருக்கிறார்.

அமரர் முதலாக அகில வுலகங்களும் தம்பால் வந்த நிலையினும் பெரியது என இவனது வரவைப் புகழ்ந்து போற்றி அன்பால் உருகி யுள்ளனர். அயோத்திவேந்தனுடைய அருமைத் திருமகன் என்ற அளவில் நில்லாமல் அரிய தத்துவ நிலையை முனிவர் மொழி உய்த்துணரச் செய்கின்றது.

ஒரு இராச குமாரன் தங்கள் ஆச்சிரமத்திற்கு வந்தால் அவனை அதிக ஆதரவுடன் மாதவர்கள் மதித்துப் போற்றுவர். அந்த உலக மரியாதைகளைக் கடந்து இவ்வுபசாரம் உயர்ந்தோங்கி யுள்ளது.

“எமரின்யார் தவம்முயன்றவர்கள்?” என மனம் மிக மகிழ்ந்து முனிவர் உருகி யிருத்தலால் வந்தவனது தலைமையும் நிலைமையும் சிந்தனை செய்ய நேர்ந்தன.

எமர் என்றது தமது முன்னோரையும், தம்மை ஒத்த தவசிகளையும் குறித்து நின்றது. அரிய பெரிய தவங்களின் பயனாகவே காணக்கூடிய பொருள் எனக் காட்சியைவியந்து துதித்திருக்கிறார்.

அத்திரிமுனிவர் தவசிகளுள் சிறந்தவர். அப்பெரியவர் இவ்வுத்தமனைக் கண்டு இவ்வாறு உவந்து களித்துளார்

## அநசூயை சனகிக்கு உதவியது.

அம்முனிவரது மனைவி பெயர் அநசூயை. மகா பதிவிரதை. பொறாமை என்னும் இழிகுணம் எவ்வழியும் யாதும் இல்லாத திவ்விய நிலையினள் ஆதலால் அநசூயை என்பது காரண இடுகுறியாயமைந்தது. அசூயை = பொறாமை. அஃது இல்லாதவள்

என்னும் ஏதுப் பெயரால் ஏத்தப் பெற்றாள். தவமகிமை வாய்ந்த அந்தத் தருமபத்தினி சீதையைக் கண்டு உவந்து பேணினாள். பல நீதிநெறிகளையும் கணவனைக் கருதிஒழுகும் கற்பு நலங்களையும் போதித்தாள்.

சானகியினுடைய குணகணங்களை வியந்து தனக்குத் தெய்வீகமாய்க் கிடைத்துள்ள மணியணிகளையும் பட்டாடைகளையும் கொடுத்தாள். விலைமதிக்க முடியாத அணிகலன்களை அப்பெரியவள் வாரி வழங்கிய பொழுது இப் பெண்ணரசி தன் நாயகனை நயந்து நோக்கினாள். "தவ மூதாட்டி தருவதை விரைந்து பெற்றுக் கொள்க" என்று இக் கோமகன் குறிப்பித்தான். அக் குலமகள் வணங்கி வாங்கிக் கொண்டாள்.

"செல்வச் சீமாட்டி ஆதலால் காட்டில் வந்தாலும் அரிய பொருள்கள் வலிய வந்து சேருகின்றன" என்று இராமன் குறு நகையுடன் மனைவியிடம் பரிகாசம் புரிந்தான்.

"உரியவளை அடைந்து உடைமைகள் பெருமை அடைகின்றன" என முனிவர் பதில் மொழி பகர்ந்தார்.

உறவுரிமையுடன் இவ்வாறு உணர்வுரைகளாடி அனைவரும் உவந்திருந்தார். அன்று அங்கே தங்கி யிருந்து மறுநாள் எழுந்து மாதவரிடம் விடைபெற்று இராமன் தென்பால் வந்தான்.

அன்ன மா முனியொடு அன்றவண் உறைந்து அவன் அரும்
பன்னி கற்பின் அநசூயை பணியால் அணிகலன்
துன்னு தூசினொடு சந்திவை சுமந்த சனகன்
பொன்னொடேகி உயர் தண்டக வனம் புகுதலும்.

எல்லார்க்கும் பொன்னையும் பொருளையும் அள்ளிக் கொடுக்கும் அரசகுமரி இங்கே முனிவர் மனைவியிடம் அணிஆடைகளைப் பணிவுடன் பெற்றுள்ளாள். சனகன் பொன் எனச் சீதையைக் குறித்திருக்கும் வாசகம் வாசம் கமழ்ந்து தேசு மிகுந்துள்ளது.

நல்ல ஞான சீலனான அம் மான மன்னன் கண்மணி எனப் பொன் உயிர் எனப் போற்றி வளர்த்த அருமை மகள் கணவன் பின்னே இன்று கானகம் நடக்கும் கரும நிலையை நினைந்து உரிமை தெரிய உரைத்தார்.

அந்தத் தவபத்தினியின் குணநலங்களையும் மன நிலைகளையும்

வியந்து புகழ்ந்து இந்த இராம பத்தினி நாயகன்பின் உவந்து நடந்தாள். யாவரும் தண்டகாரணியத்தின் வட பகுதியை அடைந்தனர்.

## தண்டகவனம்.

இது விந்திய மலைக்குத் தென்பால் விரிந்து பரந்துள்ளது. பண்டு சிறந்த வளமுடையதாய் உயர்ந்திருந்த தேசம்; தண்டன் என்னும் அரசன் மதுமந்தம் என்னும் தலைநகரிலிருந்து அந் நில மண்டலம் முழுவதையும் ஆண்டு வந்தான். அவன் பெரிய போகி. நீதிமுறை பிறழ்ந்து மாதர் பலரையும் மருவிக் களித்தான். ஒரு நாள் அரசை என்னும் இளங்கன்னியைக் காதலித்து வலிந்து கற்பழித்தான். அதனால் அவனது அரசு பாழாயது. நாடு காடாய்ப் பீடழிந்து போயது. அந்த நிலமண்டலம் மதிகேடனை அம் மன்னன் பெயரால் தண்டகவனம் என நிலவி நின்றது.

நீர்வளம் நிறைந்து செழிப்பாய் இருந்த நிலப்பகுதி ஆதலால் எங்கும் உயர்ந்த மரங்கள் வளர்ந்தோங்கிக் குளிர் நிழல் விரிந்து தழை செறிந்திருந்தன. அரிய தவசிகளும் பெரிய யோகி களும் அங்கே பல இடங்களிலும்வசித்து வந்தனர். பயங்கரமான மிருகங்கள் நிறைந்த காடுகளும்இடையிடையே மிடைந்திருந்தன.

அந்த வனத்தில் இராமன் கம்பீரமாய்ப் புகுந்தான். தனது அருமை நாயகன் அருகே வருதலால் யாதொரு பயமும் இன்றிச் சீதை உல்லாசமாக மகிழ்ந்து சென்றாள்.

"கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம்வா வ்யாக்ரம்வா வநம் ஆச்ரிதா
ந ஆஹாரயதி ஸம்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா"

(வால்மீகி)

"யானை சிங்கம் புலிகளை நேரே பார்த்தும் யாதும் அஞ்சாமல் இராமனுடைய கைகளைப் பற்றினவளாய்ச் சீதை நடந்து சென்றாள்" என வால்மீகி முனிவரும் குறித்திருக்கிறார். இதனால் அவளது நெஞ்சு நிலையும் காதலன் பாலுள்ள ஆதாரமும் அறிய லாகும். அழகிலும் மிருதுத் தன்மையிலும் எத்துணை மெல்லிய ளாயினும் சுத்த வீரனை மணந்த சத்திரிய மங்கை ஆதலால் அவள் சித்தத்தில் தீர தைரியங்கள் இயல்பாகவே செழித்திருந்தன.

## விராதன் எதிர்ந்தது.

உல்லாச உரைகளாடிச் சல்லாபமாய் இவ்வாறு செல்லுங்கால் இடையே பொல்லாத அல்லல் புகுந்தது. விராதன் என்னும் கொடிய அரக்கன் கடிது எதிர்ப்பட்டான். அவன் கோர வடிவினன். ஈரம் யாதும் இல்லாத பாவ நெஞ்சினன். யாவரும் அஞ்சும் தீவினையாளன். இலட்சத்து இருபத்தையாயிரம் யானை பலம் உடையவன். "கங்கு பூசி வருகின்ற கலிகாலம்" என அவனது கொடிய வடிவ நிலையைக் கவி வருணித்திருக்கிறார்.

பூதம் அத்தனையும் ஓர் வடிவு கொண்டு புதிது என்று
ஓத ஒத்த உருவத்தன்; உரும் ஒத்த குரலன்
காதலித்து அயன் அளித்த கடையிட்ட கணிதப்
பாத லக்கமத வெற்பிடை படைத்த வலியான்.

நில்லும் நில்லும் என வந்து நிணம் உண்ட நெடுவெண்
பல்லும் வல்லெயிறும் மின்னுபகு வாய்முழை திறந்து
அல்லி புல்லும் மலர் அன்னமனையாளை ஒருகைச்
சொல்லும் எல்லையில் முகந்து உயர் விசும்பு தொடர,

(விராதன் வதைப்படலம்)

அப் பொல்லாத விராதன் ஒல்லையில் ஓடிவந்து சானகியைத் தூக்கிக் கொண்டு வான வழி செல்லவே இராம இலக்குவர் வில்லுகளை வளைத்து "அடே! நில்லடா!" என்று வெகுண்டு தொடர்ந்து விரைந்து ஓடி அடர்ந்து வந்தார்.

அவன் இவரை நோக்கி இகழ்ந்து சிரித்தான்.

"ஆதி நான்முகன் வரத்தின் எனது ஆவி அகலேன்;
ஏதி யாவதுவும் இன்றி உலகு யாவும் இகலின்
சாதியாதனவும் இல்லை; உயிர் தந்தனன் அடா
போதிர் மாதிவளை உந்தி இனிதென்று புகல."

"நான் பிரமதேவனுடைய வரத்தைப் பெற்றுள்ளேன்; என் உயிர் எளிதில் நீங்காது; என்னை யாரும் வெல்ல முடியாது; உலகம் முழுவதும் எதிர்ந்தாலும் கையில் யாதொரு ஆயுதமும் இல்லாமலே எல்லாரையும் கொன்று தொலைப்பேன்; என்னால் முடியாத காரியம் யாதும் இல்லை. வீணே நீங்கள் ஈண்டு மாண்டு

மடியாதீர்கள் ; இந்தப் பெண்ணை என்னிடம் விட்டு ஓடிப் போய் விடுங்கள் ; உங்களுக்கு உயிர்ப் பிச்சை தந்திருக்கிறேன் ; ஓ மனிதப் பதர்களே ! இனி இந்தப் பக்கம் திரும்பிப் பாராதீர் ! சீக்கிரம் ஓடிப் போங்களடா '' என்று அவன் ஊக்கி வெருட்டி உருத்து உரைத்தான்.

கொடிய பூனை வாயில் அகப்பட்ட இனிய பசுங்கிளி போல் சீதை பதறித் துடித்துப் பரிதாபமாய்க் கதறினாள்.

அத்தீயவன் புகுந்து செய்த மாயவேலையை வியந்து இராமன் ஓர் வாளியை ஏவினான். அது அவன் தோளை ஊடுருவி மேலே போயது. குருதி வெள்ளம் ஒழுகவே கையில் பிடித்திருந்தவளை மெய் நழுவ விட்டான். கீழே விழுகின்ற அம் மெல்லியலை இராமன் மெல்லத் தாங்கி நிலத்தில் விடுத்தான். அவன் அடுத்து வந்து மரங்களையும் கல்லுகளையும் வாரி எறிந்தான். அவற்றை யெல்லாம் இவ்வீரன் கடுத்து மாற்றிக் கைக்கணைகளை அடுத்துத் தொடுத்தான். தம்பியும் வெம்பி வெகுண்டு அம்புகளை வீசினான்.

வீரக்கணைகள் பல மெய்யுருவி ஓடச் சோரி நீர் சிந்தினும் அவன் வீறு குன்றாமல் ஒரு பெரிய மராமரத்தை அடியோடு பிடுங்கி எடுத்து இவர் மேல் அடிக்க விரைந்து கடுத்து வந்தான்.

ஓமராமரை ஒருங்கும் உணர்வோர் உணர்வுறும்
நாம ராமவரை நல்லறம் நிறுத்த நணுகித்
தாமராவணை துறந்துதரை நின்றவரை ஓர்
மாமராமரம் இறுத்து அதுகொடு எற்ற வரலும்.

அறம் நிறுத்த அராவணை துறந்து தரை நின்றவரை ஒரு மரம் இறுத்து அரக்கன் எற்ற வரவே இவ் வெற்றி வீரர் அதனை அறவே துணித்து அவன் மேல் கணைகள் பல மாட்டினார். கூரிய பாணங்கள் உடல் முழுதும் ஊடுருவி ஓடியும் அவன் உறுதி குன்றாமல் குருதி சோரப் பொருதிறலோடு பொங்கி மூண்டான். கற்களைக் கண்டபடி அள்ளி வீசிக் கொன்று உயிர் குடிப்பேன் என்று பற்களைத் தின்று விற்களைப் பிடுங்க விரைந்து பாய்ந்தான். கிட்ட வந்த அவனுடைய தோள்களை வெட்டி வீழ்த்த நினைந்து இவ் வீரர் இருவரும் உடை வாள்களை உருவி நெடிதோங்கி நிற்கின்ற அவன் மீது கடிது பாய்ந்தார். ஒரு மலை மேல் தாவுகின்ற

சிங்கக்குட்டிகள் போல் அவன் தலைமேல் தாவி இரண்டு புயங்களிலும் இருவரும் முறையே கால் தோய்ந்து நின்றார்.

இவர் தோளில் ஏறிய வுடனே அவன் ஆகாயத்தில் விரைந்து ஏறி எங்கும் பறந்து சாரி திரிந்தான். சோரி சோரும் மெய்யோடு வீரர் இருவரையும் வாரிக் கொண்டு கடுவேகமாய் ஆகாய வழியில் அவன் முடுகிப் போனது பெரிய அதிசயமாய் மருவி நின்றது.

சூரிய சந்திரர்களை ஏந்திக் கொண்டு மேருமலை சாரிகை திரிந்தது போல் அவன் காரியம் இருந்தது எனக் கவி வருணனை செய்கிறார்.

முந்து வான்முக டுறக் கடிது முட்டி முடுகிச்
சிந்து சோரியொடு சாரிகை திரிந்தனனரோ
வந்து மேருவினை நாள்தொறும் வலம்செய்துழல்வோர்
இந்து சூரியரை ஒத்து இருவரும் பொலியவே.

வலத் தோளில் நிற்கும் இராமன் சூரியனையும், இடத் தோளில்உள்ள இலக்குவன் சந்திரனையும் முறையேஒத்திருந்தனர். கரிய பெரிய உருவம் முழுவதும் குருதி தோய்ந்திருந்தமையால் மேருகிரி என அவன் மேவி நின்றான்.

வாள்களை ஓங்கிய வீரர் தோள்களை வெட்டி வீழ்த்தாமல் அந்த ஆளனது கதி வேகத்தையும் அதிசய ஆற்றலையும் வியந்து நின்றார். மாயாவினோதமான ஒரு ஆகாய விமானத்தில் உலாப் போவது போலவே இராமன் உல்லாசமாய் உவந்து கொண்டான்.

கீழே நின்ற சீதை கதறியழுது மானவீரர் வானமீது போன வழி நோக்கிப் புலம்பித்துடித்துக் கலங்கி அலமந்தாள்.

மாதயாவுடைய தன்கணவன் வஞ்சன் வினையால்
போதலோடும் அலமந்தனள் புலர்ந்து பொடியில்
கோதையோடும் ஒசி கொம்பென விழுந்தனள்; குலச்
சீதை சேவல்பிடி யுண்ட சிறை அன்னம் அனையாள். (1)

பின்னை ஏதும் உதவும் துணைபெருள் உரைபெருள்
மின்னைஏய் இடை நுடங்கிட விரைந்து தொடர்வாள்
அன்னையே அனைய அன்பின் அறவோர்கள் தமைவிட்டு
என்னையே நுகர்தி என்றனள் எழுந்து விழுவாள். (2)

அழுது வாய்குழறி ஆருயிர் அழுங்கி அலையா
எழுது பாவை யனையாள்நிலை யுணர்ந்து இளையவன்
தொழுது தேவிதுயர்கூர விளையாடல தொழிலோ
பழுது வாழி யென, ஊழிமுதல்வன் பகர்வுறும். (3)

ஏகநின்ற நெறி எல்லைகடிதேறி இனிதில்
போகல் நன்றெனநினைந்தனன்; இவன் பொருவிலோய்!
சாகல் இன்று பொருளன்றென நகும் தகைமையோன்
வேக வெங்கழலின் உந்தலும் விராதன் விழவே. (4)

(விராதன் வதை, 39-42)

சீதையின் பரிதாப நிலையும், அவள் மறுகி அலமருவதை நோக்கி இளையவன் கருதித் துடித்து அண்ணனுக்கு உறுதி யுரைத்ததும், அதற்கு அவன் பதில் மொழி பகர்ந்து காரியம் செய்துள்ளதும் வீரிய நிலைகளை விளக்கி யுள்ளன.

"அன்னையே அனைய அன்பின் அறவோர்கள் தமைவிட்டு, என்னையே நுகர்தி" எனச் சானகி இன்னலுழந்து பதைத் துள்ளாள். தாய் அனைய தூய அன்பினர்; தரும மூர்த்திகள்; அந்தப் புண்ணிய சீலர்களை விட்டு என்னைத் தின்றுவிடு என விராதனை நோக்கி அலறி யிருக்கிறாள்.

மனிதரைத் தின்னும் கொடிய அரக்கன்; ஊன் உணவுக் காகவே இருவரையும் வாரி வானில் கொண்டு போகின்றான்; குடிகேடு வந்து நேர்ந்ததே! என்று குலை துடித்துள்ளமையால் அது பொழுது இக்குலமகள் கதறி மறுகியுள்ள நிலைமை புலனும்.

இவ்வாறு தரையில் நின்று தலையில் அடித்துப் பதறி அலமருகின்ற அத்தலைவியின் பருவரலை இளையவன் பார்த்துப் பரிதபித்து "அண்ணா! இது என்ன விளையாட்டு! கீழே கண்நோக்கி அருளுங்கள்; அண்ணியார் நாதியாதும் இன்றி நைந்து துடிக் கின்றார்; நீங்கள் ஒன்றும் சிந்தியாமல் உல்லாசமாய் நேரத்தைக் கழிக்கின்றீர்கள்; என்னே! இது?" என விரைந்து துடித்தான்.

தேவி துயர் கூர விளையாடல் தொழிலோ?

என்றதனால் இலக்குவன் மனக் கலக்க மின்றி மருவி யிருந்தமை புலனும். அரக்கன் ஆகாயத்தில் அள்ளிப்போகின்றான்; உயிருக்கே ஆபத்து என யாரும் அஞ்சி அலமருகின்ற நிலையில்

தம்பி அஞ்சாமல் இங்ஙனம் பேசியது அவனது நெஞ்சுறுதியை வெளி செய்து நின்றது.

இவன் இவ்வண்ணம் சொல்லவே அந்த அண்ணன் பதில் என்ன சொன்னான்? "நாம் போக வேண்டிய இடம் வெகு தூரம் உள்ளது; இவன் வேகமாய்க் கொண்டு போகின்றான்; வாகன வசதியில்லாத நமக்கு இடையே நல்ல ஊர்தி வாய்த்ததே என்று உல்லாசமாய் உவந்து செல்கின்றேனே யன்றி இவனைக் கொன்று தொலைப்பது ஒரு பொருள் அன்று" என அவ்வென்றி வீரன் விளம்பியது விசித்திரமாய் இருக்கின்றது.

இக் கோமகனுடைய அருந்திறலாண்மையும் பொருந்தகைமையும் தன்னம்பிக்கையும் உன்னி உன்னி உணர வுரியன.

பன்னி அயலே அலமரப், பின்னவன் பரிவுறத், தன்னிலை தளராது முன்னவன் இன்னவாறு கூறித் தனது காலால் விராதனை எற்றித் தள்ளினான்.

தள்ளவே அவன் தலைகீழாக வீழ்ந்தான். தரையில் விழு முன்னரே அவனுடைய தோள்கள் இரண்டையும் விரைவில் வெட்டி வீழ்த்தி வீரர் இருவரும் அயலே குதித்தார். அதி விரைதமாய் அந்தரத்தில் நின்று அவர் லகு பாய்ந்து குதித்தது விந்தையான ஓர் வீரக் காட்சியாய் விளங்கி நின்றது.

தோள் இரண்டும் துண்டம் ஆகியும் அவன் கோப வெறி மண்டி இவர் மீது கொதித்து ஓடிவந்தான். கொலை நோக்குடன் புலியாய் ஓடிவருகின்ற அப் பொல்லா அரக்கனை இராமன் அம்பு எய்து கொல்லாமல் அகலநின்று இகல்விளைவுகளை எதிர் நோக்கிப் புகல் புகுந்து போம்படி தகவுரை பகர்ந்தான். அவன் யாதும் அகலாமல் மிகவூக்கி மேலே வந்தான். கையிழந்து ஆயுதம் இன்றி வருகின்ற அவனை ஆயுதத்தால் மாய்க்கலாகாது என்று கருதி அங்கு ஓர்குழியில்வீழும்படி இவ்வீரன்காலால் உந்தினான்.

## விராதன் சாபம் நீங்கியது.

உந்தவே அவன் பாபம் நீங்கிச் சாப வடிவம் ஒழிந்து பழைய கந்தருவ நிலையில் சுந்தர வுருவனாய் வானில் நேரே துலங்கி நின்றான். அந் நிலைமையை நோக்கி இருவரும் வியந்தனர். மறுகி அலமந்த சீதையை அருகில் அணைத்து இராமன் ஆறுதல்

செய்தருளினன். ஆவி எய்தியது போல் நாயகனை அணுகி அத் தேவி மேவி நின்றாள்.

ஆகாயத்தில் திவ்விய தேகியாய் நிற்கின்ற அவன் இராமனை உழுவலன்புடன் உருகி நோக்கிக் கண்ணீர் ததும்பக் கைகுவித்துப் பண்ணீர்மையோடு பரிந்து போற்றினன். அவனது பிறவி நீக்கமும் உருவ ஆக்கமும் பெரு மகிழ்ச்சியை விளைத்தன. விளைக்கவே பரம சிந்தனையோடு அறிவுநிலை தெளிந்து வாவுநிலையுணர்ந்து உறவுரிமையுடன் புகழ்ந்து உவந்து பாடினன்.

## தும்புரு இராமனைத் துதித்தது.

தும்புரு என்பவன் தேவகணங்களுள் கந்தருவ மரபினன். நல்ல அழகன். குபேரனுக்கு உரிமையாளன். அவனது அரங்கில் ஆடும் அரம்பையை வரம்பு மீறிக் காதலித்துக் கொண்டு போய் அவளோடு காமபோகங்களை நுகர்ந்து இவன்களித்துக் கிடந்தான். கொண்ட மனைவி மறுகி யிருந்தாள். இவனது நிலைமையை அறிந்து குபேரன் சினந்தான். “உயர்ந்த தெய்வப் பிறவியை அடைந்தும் இழிந்த காமியாய்க் கழிந்து போயுள்ளாய் ஆதலால் இப்பதவியை இழந்து பொல்லாத இராட்சதனாய் ஒழிந்து போ” என்று அவன் உருத்துச் சபித்தான். அவ்வாறே இவன் இழிந்து பட்டான்; அங்ஙனம் ஈனநிலையை அடையுங்கால் “இச் சாபம் எப்பொழுது தீரும்?” என்று வெப்போடு கேட்டான். வானும் வையமும் உய்யத் திருமால் இராமனாய் அவதரித்துக் கானகம் வருவான்; அவ்வாறு வருங்கால் வழியிடையே அவன் காலால் நீ மிதிபடுவாய்; அந்தப் பாத பரிசத்தால் உன் தீது தீர்ந்து நீ மேல் ஓங்கி வருவாய் என்று விளம்பி விடுத்தான். விடவே [கிலிஞ்சன் என்னும் கொடிய அரக்கனுக்கு மகனாய்ப் பிறந்து விராதன் என்னும் பெயரோடு இவன் கோர வடிவடைந்து யாண்டும் கொலை பாதகங்களைச் செய்து வந்தான். விராதன் என்னும் பேர்க்குக் கோரமான கொடிய பாவச் செயல்களை விரதமாக வுடையவன் என்பது பொருளாம்.]

சாபத்தால் நேர்ந்த பாபம் எல்லாம் நீங்கவே தேவ கந்தருவனாய் அந்தரத்தில் நின்று இச் சுந்தரனைத் தொழுது வந்தனையுடன் மகிழ்ந்து ஞான மணம் கமழ நயந்து துதித்தான்.

அவனுடைய துதி மொழிகள் உணர்வு நலம் கனிந்தன; உள்ளன்பு நிறைந்தன; பொருளாழம் உடையன; ஆதி மூல நிலைகளை வெளியாக்கி வேத மந்திரங்களாய் ஒளி வீசி யுள்ளன.

வேதங்கள் அறைகின்ற உலகெங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவைஎன்னில் படிவங்கள் எப்படியோ?
ஓதங்கொள் கடலன்றி ஒன்றினேடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள் தொறும் உறைந்தால் அவை உன்னைப் பொறுக்குமோ?

கடுத்த கராம் கதுவ நிமிர் கைஎடுத்து மெய்கலங்கி
உடுத்ததிசை யனைத்தினும் சென்று ஒலிகொள்ள உறுதுயரால்
அடுத்தபெருந் தனிமூலத்து அரும்பரமே பரமே! என்று
எடுத்துஒரு வாரணம் அழைப்ப நீயோஅன்று ஏன்என்ருய்! (2)

புறங்காண அகங்காணப் பொதுமுகத்தின் அருள்நோக்கம்
இறங்காத தாமரைக்கண் எம்பெருமான் இயம்புதியால்
அறங்காத்தற்கு உனக்கொருவர் ஆரும்ஒரு துணையின்றிக்
கறங்காகும் எனத்திரிய நீயேயோ கடவாய்தான். (3)

துறப்பதே தொழிலாகத் தோன்றினேர் தோன்றியக்கால்
மறப்பரோ தம்மையது வன்ருகில் மற்றவர்போல்
பிறப்பரோ எவர்க்கும்தாம் பெறறபதம் பெறலரிதோ
இறப்பதே பிறப்பதே எனும் விளையாட் டினிதுகந்தாய்! (4)

பனிநின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் படிபற்றி
நனிநின்ற சமயத்தோர் எல்லாரும் நன்றென்னத்
தனி நின்ற தத்துவத்தின் தகை மூர்த்தி நீயாகில்
இனி நின்ற முதல்தேவர் என்கொண்டென் செய்வாரே? (5)

ஓயாத மலரயனே முதலாக உளராகி
மாயாத வானவர்க்கும் மற்றெழுந்த மன்னுயிர்க்கும்
நீயாகின் முதல்தாதை நெறிமுறையால் ஈன்றெடுத்த
தாயாவார் யாவரோ? தருமத்தின் தனிமூர்த்தி! (6)

நீ ஆதி பரம்பரமும் நின்னவே உலகங்கள்
ஆயாத சமயமும்நின் அடியவே; அயல் இல்லை;
தீயாரின் ஒளித்தியால், வெளிநின்ருல் தீங்கு உண்டோ?
வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ? (7)

தாய்தன்னை அறியாத கன்றில்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின் தாயாகின் ஐய
நீஅறிதி எப்பொருளும், அவை உன்னை நிலை அறியா;
மாயைஇது என்கொலோ? வாராதே வரவல்லாய்! (8)

பொருவரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்
இருவினையும் உடையார்போல் அருந்தவம் நின்றியற்றுவார் ;
திருவுறையும் மணிமார்ப ! நினக்கென்னை செயற்பால;
ஒருவினையும் இல்லார்போல் உறங்குதியால் உறங்காதாய் ! (9)

மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ? உனக்கென்ன குறையுண்டோ?
வையத்தார் வானத்தார் மழுவாளிக்கு அன்றளித்த
ஐயத்தால் சிறிதையம் தவிர்ந்தாரும் உளரையா. (10)

அன்னமாய் அருமறைகள் அறைந்தாய்நீ அவைஉன்னை
முன்னமார் ஓதுவித்தார்? எல்லாரும் முடிந்தாரோ ?
பின்னமாய் ஒன்றுதல் பிரிந்தேயோ பிரியாதோ ?
என்னமா மாயம்இவை? ஏனமாய் மண்ணிடந்தாய் ! (11)

ஒப்பிறையும் பெறலரிய ஒருவாமுன் உவந்துறையும்
அப்புறையுள் துறந்தடியேன் அருந்தவத்தால் அணுகுறலால
இப்பிறவிக் கடல்கடந்தேன் ; இனிப்பிறவேன் ; இருவினையும்
துப்புறமும் நீர்த்த சுடர்த் திருவடியால் துடைத்தாய் நீ ! (12)

இந்தத் தோத்திரப் பாடல்களைக் கருத்தூன்றிப் படித்துப் பொருட்குறிப்புக்களைக் கூர்ந்து ஓர்ந்து ஆர்ந்த உண்மைநெறிகளைத் தேர்ந்து கொள்ள வேண்டும். கதாநாயகனுடைய அரிய பரத்துவ நிலைகளைக் குறித்துக் காட்டி அவன் எளிய நீரனாய் அளிபுரிந்து வந்துள்ள கருணைக்காட்சியைக் கந்தருவ கானமாய்க் கவி இங்கே விளக்கி யிருக்கிறார்.

உல்லாச விநோதமான வினாக்களை வினவி விடை பெற விழைந்தவர் போல் சல்லாபங்கள் செய்து தத்துவ நலங்களை உய்த்துணரச் செய்திருக்கிறார்.

தெய்வீக நீர்மைகளும் சீர்மைகளும் மனித அறிவால் இனிது காண முடியாதபடி தனிநிலையில் பெருகி நிற்கின்றன.

வேதங்கள் துதிக்கின்ற பாதங்கள் எனத் திருவடியை முதலில் குறித்தது, ஒரு உதையினால் தனது பாவப் பிறவியை ஒழித்துப் புனிதப்படுத்தியிருக்கும் அத் தனிமகிமையை வியந்து. நன்றியறிவு தலையெடுத்து முந்துற வந்தது.

நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்னும் ஐவகைப்பூதங்களுள் நீரில் மாத்திரம் உறைந்துள்ளது போல் காட்டி நீ எங்கும் நிறைந்திருத்தலை உலகம் மறந்திருக்கச் செய்திருக்கிறாய்,

மடுவில் கிடந்த கொடிய முதலை நெடிய யானையின் காலைக் கவ்வி இழுக்க அம் மதயானை யாதொரு கதியுமின்றி வேதனை மிகுந்து ஆதிமூலமே! என்று அலறிய பொழுது நீயே விரைந்து ஓடிவந்து அதனைக் காத்து அருளினாய். அதனால் அநாதரட்சகன், ஆபத்து சகாயன், ஏழைபங்காளன், சிவதயாபரன் என யாவரும் போற்ற நீ மேவியுள்ளாய். உனது கருணைப் பண்பும், காப்பு நிலையும், கதியருள் வகையும் வருணனைக்கு எட்டா.

கராம் = ஆண்முதலை. வாரணம் = மதயானை.

## கசேந்திரன் கதை.

இந்திரத்துய்மன் என்னும் அரசன் பண்டு பாண்டி மண்டலத்தை ஆண்டு வந்தான். நல்ல மதிமான் ஆயினும் அகத்திய முனிவரை மதியாமல் செருக்குற்றிருந்தமையால் அம் மாதவர் கடுத்துச் சபித்தார். அதனால் மதயானை யாயினன். திரிகூட மலையில் யானைக் குழாங்களுக்குத் தலைமை எய்திக் கஜேந்திரன் எனத்திரிந்தது. ஊகூ என்னும் கந்தருவன் முற்கல முனிவரது சாபத்தால் முதலையாய்ப் பிறந்து ஆழமான ஓர் நீர் மடுவில் வாழலானான். அந்த நீர் நிலைக்கு ஒருநாள் இந்த யானை தண்ணீர் அருந்த வந்தது. இவ்வலிய மதகரியின் காலை அக் கொடிய கராம் கடிது கவ்வி மடுவினுள்ளே ஈர்த்தது. இது வெளியில் வர வேகித்து முயன்றது; யாதும் முடியவில்லை; முடிவில் துதிக்கையை மேலே தூக்கித் தெய்வமே! என வாய்விட்டலறியது. உடனே திருமால் அதி விரைவாய் அந்த மடுக்கரைக்கே வந்து சக்கரத்தை ஏவி முதலையைத் துண்டித்தார்; வேழம் விடுதலை அடைந்து கண்ணீர் ஒழுக நின்று கருதித் துதித்தது. சாப வயமான இரண்டு பிராணிகளும் பிறவி தீர்ந்து உயர் பதவியை அடைந்தன.

இந்தச் சரிதம் நம் காவியத்துள் பல இடங்களில் பலர் வாயிலாகக் குறிக்கப்பட்டுள்ளது. "வாரணம் காக்க வந்தான், அமரரைக் காக்க வந்தான்" என இராவணன் எதிரே இராமனை வியந்து அனுமார் உவந்து கூறியிருக்கிறார்.

இவ்வாரண சரிதம் ஆரண சாதமா நம் கவி ஆதரித்து வருகிறார்.

வாரணம் அரற்றல் ஓய்ந்து வானுறத் தடக்கை நீட்டிப்
பூரண உலக மெல்லாம் பூத்து அளித்து அழித்து நின்ற
காரண ! பரமானந்தக் கடலிடைக் குளிப்போர் நெஞ்சும்
ஆரண முடிவும் மேய அமலவோ ! என்று அரற்றும். (1)

கூப்பிடு குரல்கேட்டு ஓடிக் கொழுமணிச் சுடிகை நெற்றிப்
பாப்பணை அகற்றி வெய்ய படர்சிறைக் கலுழன் ஊர்ந்து
தீப் பொழிந்து இலங்கு கூர்வாய்த் திகிரிகைத் தாங்கி யாவும்
காப்பவன் பிறைவெண் கோட்டுக் களிற்றுமுன் எய்துற்ருனல்.

எறிசுடர் விரிக்கு நேமி எறிந்தனன் எறிதலோடும்
பிறைபுரை எயிற்றுப் பேழ்வாய் பிளந்து வெவ்விடங்கர் துஞ்சி
அறைதரு சாபம் தன்ஞல் அடைந்த அவ்வுருவு நீத்து
விறலுடை யூகூ என்னும் விஞ்சையன் ஆயிற்றன்றே. (3)

விழுமிய இசைநூல் தேர்ந்த விஞ்சையன் ஆய அன்னேன்
பழமறை முதலி பாதம் பழிச்சினன் பதியிற் போயான்
அழிவறு தவத்தின் மிக்க அகத்தியன் சாபம் தீர்ந்து
மழைமதக் களிறு மாயன் வரம்பில் வீடு உற்றதம்மா.

(பாகவதம், 8-2)

மீனமர் பொய்கை நாள்மலர் கொய்வான்
வேட்கையிளேடு சென்றிழிந்த
கானமர் வேழம் கையெடுத்தலறக்
கரா அதன் காலினைக் கதுவ
ஆனையின் துயரம் தீரப்புள் ஊர்ந்து
சென்று நின்று ஆழி தொட்டானை
தேனமர் சோலை மாடமா மயிலைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே.

(பெரிய திருமொழி, 2-3)

"ஆதித் தனிக்கோலம் ஆனுன்; அடியவற்காச்
சோதித் திருத்தோணில் தோன்றிஞன்—வேதத்தின்
முன்னின்ருன்; வேழம் முதலே என அழைப்ப
என் என்ருன் எங்கட்கு இறை." (நள வெண்பா)

வாரணம் அழைப்ப நாரணன் வந்து காத்த கருணைத் திறத்தை இன்னவாறு பல நூல்களும் விழைந்து கூறியுள்ளன.

அந்த அருளாளன் உருமாறி இதுபொழுது இங்கே வந்துள்ளான். இவனது வரவுநிலைகள் அரிய வினை நலங்களையுடையன.

யாவும் உன்னிடமிருந்து உதித்துள்ளமையால் அகில உலகங்களுக்கும் நீயே தாய்; சீவகோடிகள் உன்னுடைய பிள்ளைகள். இந்தப் பழமையும் உரிமையும் கிழமை தவழ்ந்துள்ளன. இருந்தும் இடையே ஒரு விசித்திரம் விநோதமாகக் கதித்திருக்கின்றது.

தாய் அறியாத கன்று இல்லை; கன்றும் தாயை நன்கு அறியும். என்றும் உலகின் தாயாகிய நீ எல்லாப் பொருள்களையும் நன்று அறிகின்றாய்; உன் சேய்களாகிய உயிரினங்கள் உன்னை நேரே அறியாமல் நிலை மாறியுள்ளன. அவை அறிய முடியாதபடி நீ பெரிய மாயையை விளைத்திருக்கிறாய்!

"மாயை இது என் கொலோ? வாராதே வரவல்லாய்!"

உன் சந்ததிகளான சீவ கோடிகள் யாவும் மாதாவாகிய உன்னை அறிந்து மகிழாமல் மறந்து உழலும்படி புரிந்திருக்கின்றாயே! இது உன் அருளுக்கு அழகா? நீ சிறிது கருணை புரிந்தால் எல்லா உயிர்களும் பிறவி தீர்ந்து பேரின்ப நிலையை அடையுமே! அங்ஙனம் அடையாவகை இடையே ஏதேதோ பல தடைகளை விரித்து உயிர்களை மயக்கி மாயைகளை வளர்த்து மாயா விநோதனாய் மருவி நிற்கின்றாயே? உனது அதிசய சாதுரியங்களை அளவிட வல்லார் யார்?

பரமபதத்தில் இருந்துகொண்டே உலகில்வந்து பிறந்தவனைப் போல் உருவும் பேரும் கொண்டு யாரும் கண்டு மகிழும்படி களியாடல் புரிகின்றாய்! வாராமலே வருகின்ற வல்லமை உனக்கே தனியுரிமையாய் இனிதமைந்திருக்கின்றது.

உனது இயலும் செயலும் உயர் நலமுடையன; ஆயினும் அயலறியாமல் மயலியல் புரிவன.

காப்புத் தெய்வமாகிய நீ வேண்டிய பொழுது உன் உடைமைகளை யாண்டும் காத்தருள வருகின்றாய்; அவ்வரவு ஊழியும் உதவி நிலையாய் ஒளி மிகுந்து மிளிர்கின்றது.

"அப்பு உறையுள் துறந்து" என்றது பாற்கடல் பள்ளியை விட்டு என்றவாறு. அப்பு = நீர். இங்கே கடலைக் குறித்தது.

பிறர் எண்ணியறியவும் முடியாத நீ நான் செய்த புண்ணியத்தால் என் கண் எதிரே தோன்றிக் கதி புரிந்தருளினாய்

"இப் பிறவிக் கடல் கடந்தேன்; இனிப் பிறவேன்."

இராமனது திருவடி தீண்டப் பெற்றமையால் தனக்குப் பிறவி ஒழிந்தது; இனி என்றும் பிறவாத முத்தி யின்பத்தையும் அடைந்தேன் என மனமிக மகிழ்ந்து பரவசமாய்ப் பேசியிருக்கிறான். "இருவினையும் திருவடியால் துடைத்தாய்" என்றது பரிபூரணமான விடுதலையை விளக்கி நின்றது. நல்வினையும் போயது என்றமையால் தெய்வப் பிறவியும் ஒழிந்து திவ்விய பதவியை அடைந்தமை தெளிவாயது.

தனக்கு வாய்த்த உய்தியை நினைந்து அத்தெய்வ கந்தருவன் இங்ஙனம் உள்ளங் களித்து உவந்து துதித்துள்ளான்.

அவனுடைய துதி வாசகங்கள் பரதேவதையின் அருளாடல்களையும் உயர் நீர்மைகளையும் இனிது விளக்கி அதி விநோதமான உவகைச் சுவைகளில் விளைந்திருக்கின்றன. பேரறிவோடு நேர்வாதம் ஆடுகின்றான்.

"மன் உயிர்க்கு நீ தாதை ஆகின் தாயாவார் யாவர்?"

இந்தக் கேள்வி விநயமானது. ஆசியம் கலந்து யோசனை செய்து வந்தது. ஒரு பிள்ளைப் பேற்றிற்குத் தாயும் தந்தையும் காரணராவர். இருவரது கலப்பே ஒரு உருவம் பிறப்பதற்கு ஒரு முகமாய் உரிமையாம். தாய் இன்றேல் பிள்ளை இல்லை. இந்த இயற்கை நியமம் நின்பால் விலக்காயுள்ளதே!

உலகு உயிர்க்கு நீ தந்தை என அலகில் வேதங்கள் சொல்லுகின்றன. ஆனால் தாய் எங்கே? நீ யாரோடு கலந்து இப் பேருலகம் ஈன்றாய்? ஈன்றவள் யாவள்? எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. தருமத்தின் தனி மூர்த்தி! இந்த மருமத்தைக் கொஞ்சம் கிருபை செய்து உரைத்தருள் என்று உல்லாசமாகச் சல்லாபம் செய்திருக்கின்றான்.

எல்லாப் பொருளும் எல்லா உயிரும் எவ்வுலகும் யாவும் நீயாகவே நிலைத்துள்ளாய்! இங்ஙனம் இருப்ப இதில் தாயாகவும் தந்தையாகவும் உன்னை வேறாகக் கூறுவது விந்தையாம் என்பது அவனது சிந்தையாம்.

''தீயினுள் தெறல் நீ; பூவினுள் நாற்றம் நீ;
கல்லினுள் மணியும் நீ; சொல்லினுள் வாய்மை நீ;
அறத்தினுள் அன்பு நீ; மறத்தினுள் மைந்து நீ;
வேதத்து மறை நீ; பூதத்து முதலும் நீ;
வெஞ்சுடர் ஒளியும் நீ; திங்களுள் அளியும் நீ;
அனைத்தும் நீ; அனைத்தினுட் பொருளும் நீ; ஆதலின்
உறைவும் உறைவதும் இலையே; உண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை;
முதல்முறை இடைமுறை கடைமுறை தொழிலின்
பிறவாப் பிறப்பிலை; பிறப்பித்தோர் இலையே;
பறவாப் பூவைப் பூவி னோயே!
அருள் குடையாக அறம் கோலாக
இருநிழல் படாமை மூவே முலகமும்
ஒரு நிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ'' (பரிபாடல், 3)

திருமாலைக் குறித்து வந்துள்ள இது ஈண்டு எண்ணத் தக்கது. கடுவன் இளவெயினனார் என்னும் சங்கப் புலவர் பாடியது. இப்பாட்டில் அவர் காட்டியிருக்கும் காட்சிகளும் மாலின் மாட்சிகளும் மதியூன்றிக் காணத் தக்கன. பெரிய அறிவுடையார் அரிய அரியை உரிமையோடு பாராட்டியிருக்கும் நெறி முறைகள் உணர்வு நலம் கனிந்து உவகை சுரந்து மிளிர்கின்றன.

எல்லாமாய் அல்லவுமாய் இருந்தருளும் பரமனைத் தந்தை எனத் தாய் என நாம் வந்தனை செய்து வருகின்றோம்.

இந்த வண்ணம் நம் சிந்தனை அளவே யன்றி ஆண் பெண் என அவன் எந்த வண்ணமும் இலனாய் எங்கும் நிறைந்திருக்கின்றான். அவனது நிலைமை உரை யிடலரியது.

ஆண் அல்லன்; பெண் அல்லன்; அல்லா அலியும் அல்லன்;
காணலும் ஆகான்; உளன் அல்லன்; இலன் அல்லன்;
பேணுங்கால் பேணும் உருவாகும்; அல்லனுமாம்;
கோணை பெரிதுடைத்து எம் பெம்மானைக் கூறுதலே.

(திருவாய்மொழி)

நம்மாழ்வார் இங்ஙனம் கூறியிருக்கிறார். கோணை=கோணல்.

திருமாலின் நிலைமையைச் சொல்லப் புகுந்தால் அது பெருமாலாகவே பெருகி வருகின்றது என்பதாம். உரையாடி உழலாமல்

உள்ளி உருகி அவனை அள்ளிப் பருகுக என அருளிய படியிது.

தேனமரும் சோலைத் திருவரங்கர் எப்பொருளும்
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலர்காண் அம்மானை;
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலரே யாமாகில்,
சானகியைக் கொள்வாரோ தாரமாய் அம்மானை ?
தாரமாய்க் கொண்டதும்ஓர் சாபத்தால் அம்மானை.

(திருவரங்கக்கலம்பகம்)

சாபம் இங்கே சிலேடையாய் நின்றது. மிதிலையில் ஒடித்த வில்லையும், பிருகுமுனிவரது சாபத்தையும் அது குறித்துள்ளது. திருமால் இராமனாய் வருதற்கு அம் முனிவர் வாய்மொழியும் ஒரு காரணமாயது. அதனை ஈண்டு உரைப்பின் விரியும்.

இம் மண்ணுலகம் மகிழ்வுறப் புண்ணிய உருவனாய் நண்ணியுள்ள இப் புனித மூர்த்தியைக் கண்எதிரே கண்டு தன்கடும்பிறவி தீர்ந்தமையால் முந்தைய நிலைகளையெல்லாம் வந்தனை செய்து அக் கந்தருவன் இங்ஙனம் சிந்தை களித்துப் போற்றினான்.

## இராமன் வியந்து வினவியது.

தத்துவ நலங்கள் தோய்ந்து வித்தக ஒலிகளாய் விளைந்து வருகின்ற அவனுடைய உரையாடல்களைக் கேட்டு இராமன் உவகை மீக்கூர்ந்தான். வான் எதிரே தொழுது துதித்து உழுவலன்புடன் உருகி நிற்கின்ற அவனை இவ் வீரமூர்த்தி விழைந்து நோக்கி, "நீ யாவன்? தீய வடிவனாய் இழிந்து இதுவரையும் ஏன் தீத்தொழில் புரிந்தாய்?" என்று ஆர்த்தியுடன் கேட்டான். அங்ஙனம் கேட்கவே, அவன் உற்றதை உரைத்தான்.

ஆடரம்பை நீடரங்கு, ஊடுநின்று பாடலால்
ஊடுவந்து கூடஇக், கூடுவந்து கூடினேன்; (1)
கரக்கவந்த காமநோய், துரக்கவந்த தோமினால்
இரக்கமின்றி ஏவினான், அரக்கன் மைந்தன் ஆயினேன்; (2)
அன்று மூலமாதியாய், இன்றுகாறும் ஏழையேன்
நன்றுதீது நாடலேன், தின்றுதீய தேடினேன் (3)
தூண்டநின்ற தொன்மைதான், வேண்டநின்ற வேதநூல
பூண்டநின் பொலங்கொள்தாள், தீண்டஇன்று தேறினேன். (4)
தெறுத்துவந்த தீதெல்லாம், அறுத்த உன்னை ஆதனேன்
ஒறுத்த தன்மை ஊழியாய், பொறுத்தி என்று போயினான். (5)

(விராதன் வதைப்படலம்)

சாபம் நீங்கிய கந்தருவன் தான் விராதனாக நேர்ந்த தனது பழைய வரலாற்றை இவ்வாறு கூறிவிட்டு இராமனை வணங்கி வாழ்த்தி வான்மேல் விரைந்து போயினான்.

தெய்வநிலையை அடைந்தாலும் செய்கை தீயதாயின் அதனால் வெய்யபிறவி விளையும் என்பதை இவன் சரிதம் இங்கே விளக்கி நிற்கின்றது. செயல் இழியுங்கால் உயர்வு அழிகின்றது.

நெறிகடந்த காமக்கேட்டால் இழிபிறப்பை அடைந்து பழி பாவங்கள் புரிந்து கொடிய பாவி யானான். அப்பாபக் கூட்ட மெல்லாம் இப் புண்ணிய மூர்த்தியின் பரிசத்தால் அடியோடு ஒழிந்தன; அவன் கண்ணியம மிகப்பெற்று விண்ணவன் ஆயினான். உண்மை தெளிந்து இவனது தன்மைகளை யெல்லாம் வியந்து போற்றி விசும்பில் சென்றான். அவனுடைய சாபம் இவனால் தீரும் என முன்னமேயே குபேரன் அறிவித்திருக்கிறான். நிதியின் கிழவன் உமாபதியின் தோழன் ஆதலால் இந்த அதிபதியின் அவதாரநிலையை அவன் அறிய நேர்ந்தான்.

காப்புத்தெய்வம் கால நிலைக்கு ஏற்பச் சில காரணங்களை முன்னிட்டு ஞாலம் காக்க வந்துள்ளது. அவ்வரவில் பலவகை யான கருமங்களும் தருமங்களும் கலந்து மிளிர்கின்றன. அவை காவிய விளைவில் சீவிய வளர்ச்சிகளாய்ச் செழித்து வருகின்றன.

தேவநாயகன் என அரிய சில ஞானவான்கள் கருதி நோக்கினும் தன்னை ஒரு மனிதனாகவே இப்புனிதன் யாண்டும் எண்ணி யிருக்கின்றான். மனித உருவில் மருவிப் பரமன் இனிது தொழில் புரிகின்றான்.

தும்புரு என்னும் கந்தருவன் விழைந்து துதித்து விண்ணில் செல்வதைக் கண்ணில் நோக்கிக் களித்து நின்ற தம்பியையும் மனைவியையும் அன்புடன் அழைத்துக் கொண்டு இந் நம்பி தென் பால் வந்தான்.

வரும்போதே "சீதா! நீ காட்டுக்கு உடன் வராதே; வரின் அல்லல் பல வரும் என முன்னமே சொன்னேன்; நீ யாதும் கேட்கவில்லை; இடையே எவ்வளவு பெரிய ஆபத்து நேர்ந்தது! பார்த்தாயா?" என்று தன் நாயகியை நோக்கி இந் நாயகன் கூறினான். அரிய பரிவுரை உரிமை யூறி வந்தது.

அப் பெண்ணரசி முன்னதாகச் சிறிது நாணினள்; பின்னே பேருவகையுடன் பேசினள்: "நாதா! உங்களுடன் வராமல் நான் வீட்டிலேயே இருந்தேனாகில் இன்று காட்டில் நடந்த அற்புத மகிமையை எப்படிக் காண்பேன்? கொடிய அரக்கனை இனிய கந்தருவனாக ஒரு நொடியில் மாற்றிய அடியின் இந்திர சாலத்தை நெடிது சிந்தித்து நெஞ்சம் திகைக்கின்றேன்; உங்கள் அருமையும் பெருமையும் அறிய அறிய அதிசய நிலையில் பெருகி உயர்கின்றன ; அருகில் நெருங்கவும் அஞ்சுகின்றேன்" என்று கொஞ்சி மொழிந்தாள்.

இராமன் கண்குளிரக் கனிந்து நோக்கி இளமுறுவல் செய்து "பெரிய கலைஞானியின் குலமகள் அல்லவா, ஆதலால் இவ்வாறு சாதுரிய வசனங்களை மாதுரியமாய்ப் பேசுகின்றாய்!" என ஆசை வார்த்தைகளாடி அருகணைத்து உவந்து சென்றான்.

இருகாத வழி நடந்தனர். இரவு அடைந்தது. ஒரு பொய்கை அருகே தங்கினர். மறுநாள் எழுந்து நடந்து வெகு தூரம் வந்தனர். உச்சிப்போதில் ஓரிடத்தில் அமர்ந்து நீராடிக் கனிகாய் கிழங்குகளை உண்டனர். களைப்பு ஆறி எழுந்தனர்.

## இந்திரன் கண்டது.

மாலையில் சிறிது தூரம் வரவே அங்கே ஓர் அழகிய சோலையைக் கண்டனர். அதன் அயலே எழில் ஒளி வீசிய ஒரு தெய்வ விமானம் தோன்றியது. அருகே உச்சைச் சிரவம் என்னும் பச்சைப் புரவியும் நின்றது.

அவை இந்திரனுடைய வாகனங்கள் ஆதலால் அவற்றை நோக்கி இச் சுந்தரன் சிறிது சிந்தனை செய்தான்.

அந்தக் குளிர்பொழிலிடையே சரபங்கர் என்னும் முனிவருடைய தவச்சாலை யுள்ளது. அவர் அரிய பெரிய தவசி. காமம் வெகுளி முதலிய தீமைகள் யாதும் இல்லாத தூய்மையாளர். மன்மதன் அவர் மேல் தனது பாணங்களை ஏவிப்பார்த்தும் யாதும் பலியாமல் வீணே அவமானம் அடைந்து போயிருக்கிறான். காம சரங்களைப் பங்கம் செய்துள்ளமையால் சரபங்கர் என்னும் நாமம் வந்தது. அந்த ஞானமுனிவரது அருந்தவத்தை வியந்து அவரைத் தன் உலகத்திற்கு அழைத்துவரும்படி பிரமன்

இந்திரனை அனுப்பியிருந்தான். அவ் வானவர்கோன் வந்து வேண்டினன். மாதவர் மறுத்தார். அயனுடைய வியன் மொழிகளை விழைந்து கூறியும் அவர் இசைந்திலர். "பிரமபதம் முதலிய எந்தப் பதவிகளும் எனக்கு வேண்டியதில்லை. ஒரு பொருளை எதிர்நோக்கியிருக்கின்றேன். அரிய எனது தவங்கள் பரிபூரணமுடையனவாயின் உரிய அதனை உவந்து காண்பேன். அந்த ஒன்றைக் காண்பதே இந்த உடல் எடுத்த பயனும். அதன்பின் அந்தமில் இன்பம் அடையினும், வேறு எந்த நிலையை எய்தினும் யான் யாதும் சிந்தனை செய்யேன்" என இந்தவாறு இந்திரனிடம் முனிவர் வந்தனையுடன் மொழிந்தார்.

இங்ஙனம் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது இராமன் மனைவியையும் இளவலையும் அயலே ஒரு தருநிழலில் அமர்த்திவிட்டுத் தனியே அந்தச் சோலையுள் நுழைந்தான்.

மானே அனையாளொடு மைந்தனையும்
பூநேர் பொழிலின் புறமே நிறுவா
ஆனேறென ஆளரி ஏறு இதுஎனத்
தானே அவ்வகன்பொழில் சாருதலும்; (1)

கண் தாமவை ஆயிரமும் கதுவக்
கண் தாமரை போல்கரு ஞாயிறுஎனக்
கண்டான் இமையோர் இறை காசினியின்
கண் தான் அருநான் மறையின் கனியை; (2)

காணும்மனம் நொந்து கவன் றனனால்
ஆண் நாதனை அந்தணர் நாயகனை
நாளும்ளும் வணங்கிய நன்முடியால்
தூணுகிய தோள்கொடு அவற் றெழுவான். (3)

(சரபங்கர் பிறப்பு நீங்குபடலம், 23-25)

துணைகளை அயல் நிறுத்திவிட்டு முனிவர் ஆச்சிரமத்துள் இராமன் தனியே வந்ததும், இந்திரன் எதிர்கண்டு பெருமகிழ்வு கொண்டு தொழுது வணங்கியதும் இங்கே விழுமிய காட்சிகளா விழிகளிப்ப நோக்கி வியந்து நிற்கின்றோம்.

ஆன் ஏறு அரி ஏறு என நடையழகை இடைதூக்கிக் காட்டி இம்மானவீரனது தனியான பெருமித நிலையை அறிவுறுத்தினர்.

இவன் சோலையுள் புகவே முனிவர்சாலை முன் நின்ற அமரர் கோன் ஆளை அறிந்து கொண்டான்; கொள்ளவே உள்ளம் கழி பேருவகை துள்ள எதிர் ஓடிவந்து முதிர்பேரன்புடன் இரு கைகளையும் குவித்து அருகடைந்து தொழுதான்.

ஆயிரம் கண்ணனை அவன் கருஞாயிறு போன்ற இவ் வண்ணனைக் கண்டு களித்த காட்சி கருதி உணர வுரியது.

கண் தாம் அவை ஆயிரம் என்றதில் அகரச்சுட்டு பண்டு அகலிகையால் நேர்ந்த செயலை நினைந்து கொள்ளவந்தது.

தான் எந்த மங்கையைக் கற்பழித்துக் கல்லாகச் செய்து பொல்லாக் கண்களோடு போந்தானோ, அந்த இழிந்த கல்லை உயர்ந்த பெண்ணுக்கு உரிய கணவனிடம் உதவி யருளிய அற்புத மூர்த்தியைத் தன் அவமான நிலைக்கு ஓர் உவமானமான கண் களால் இங்கே நவமாகக் கண்டு நயந்து நின்றான்.

சாபக் கல் ஆண்டு புனிதம் அடைந்தது; பாபக்கண்கள் ஈண்டு பாக்கியம் பெற்றன. அன்று பண்ணிய பாவத்தால் நண்ணிய விழிகள் இன்று புண்ணியக் கண்களாய்ப் பொலிந்து நுகர்ந்தன என்பார், "கண் ஆயிரமும் கதுவக் கண்டான்" என்றார். கதுவ = கவ்வி மகிழ. விழிகள் முழுவதும் அழுந்தி நோக்கியவிதம் அறிய வந்தது. இமையோர் இறை என்றது இமையா நாட்டமுடைய தேவர்களுக்குத் தலைவன் என்றவாறு.

தெய்வக் கண்ணால் கண்டுகளிக்கத் தக்க திவ்விய புருடன் என்பதாம். சீவராசிகளைக் காக்கவந்தவனைத் தேவராசன் நோக்கி மகிழ்ந்தான்.

காசினியின் கண் என்றது விண்ணுலக வேந்தன் மண்ணுலகில் வந்து கண்ட மாட்சி தெரிய வந்தது. காசினி = பூமி.

அருநான் மறையின் கனியை

இந்த இனிய தொடர் நிலையை நுணுக நினைக. அருமையான வேதங்கள் உரிமையோடு துதித்து யாண்டும் உவந்து சுகிக்கும் சுவை என ஈண்டு வியந்து குறித்தார்.

"வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை விழுமிய முனிவர் விழுங்கும் கோதில் இன் கனியை" எனத் திருமங்கையாழ்வார்

ஓதியுள்ளார். அன்பால் கருதுந்தோறும் உள்ளமும் உயிரும் இன்பம் மீதூர இனித்து வருதலால் இறைவனை இனிய கனி என அறிஞர் துதித்து வருகின்றார்.

புலன்களுக்குச் சுவைமயமான பொருள்களையெல்லாம் பரமனுக்கு உவமையாக்கிப் பாடி மகிழ்கின்றார்.

அச்சுதன் அமலன் என்கோ? அடியவர் வினைகெடுக்கும்
நச்சுமா மருந்தம் என்கோ? நலங்கடல் அமுதம் என்கோ?
அச்சுவைக் கட்டி என்கோ? அறுசுவை அடிசில் என்கோ?
நெய்ச்சுவைத் தேறல் என்கோ? கனி என்கோ? பால்என்கேனோ?
(திருவாய்மொழி 3-4)

நம்மாழ்வார் பரமனைச் சுகித்துக்களித்து அச் சுவை நிலையை இன்னது என்று துணிந்து சொல்லமுடியாமல் பலவும் பன்னி இங்ஙனம் அலமந்து அவசமாயிருக்கிறார். அவரது அன்பின்சுவை இன்பநிலையமானது; எண்ணுந்தோறும் எவர்க்கும் இனிமை சுரந்தருள்கின்றது. பத்திக் களிப்பில் அவர் பரவசராயுள்ளமை உரைகள் எங்கணும் உய்த்துணரவுள்ளது.

இறையின் கனியாய் எழுந்தருளியுள்ளமையால் இராமனை இங்கே மறையின் கனி என்றார். இனிமையின் தனிமை தெரிக.

இந்தக் கனியைக் கண்டவுடன் இந்திரன் முதலில் உவந்தானாயினும் உள்ளூற இரங்கி வருந்தினன்.

காணா மனம் நொந்து கவன்றனன்.

இங்கே அமரர்கோன் நொந்து கவன்றது ஏன்? அரிய பரமபதநாதன் நமர்களுக்கு நலம்புரிய ஒரு மனிதனாய்ப்பிறந்து காடும் மலையும் கடந்து நடந்து மேலும் படாதபாடுகள் படநேர்ந்தானே! என்று பரிந்து நின்றமையால் மனம் கவன்று நொந்தான்.

காணா = கண்டு. செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் பெய்தது அதிசயமாய்க்காண நேர்ந்த அக் காட்சி நிலை தெரிய. புறத்தே முகம் கண்டபோது அகத்தே மனம் கொண்டதை முனம் கண்டோம். இங்ஙனம் கண்டு வணங்கினவன் பின்பு கருதித் துதித்தான். அவன் உருகி உவந்து புகழ்ந்தன அரிய பொருள் நலங்கள் நிறைந்து அன்பு சுரந்து உள்ளன.

துவசமார் தொல்லமருள் துன்னுரைச் செற்றும்
சுருதிப் பெருங்கடலின் சொற்பொருள் கற்பித்தும்
திவசமார் நல்லறத்தின் செந்நெறியின் உய்த்தும்
திருவளித்தும் வீடளித்தும் சிங்காமைத் தங்கள்
கவசமாய் ஆருயிராய்த் தவமாய்க் கண்ணாய்க்
கடையிலா ஞானமாய்க் காப்பானைக் காணா
அவசமாய்ச் சிந்தை அழிந்து அயலே நின்றான்
அறியாதான்போல அறிந்த எலாம் சொல்வான்: (1)

தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற
சுடரே! தொடக் கறுத்தோர் சுற்றமே! பற்றி
நீந்த வரிய நெடுங்கருணைக்கு எல்லாம்
நிலயமே! வேத நெறிமுறையின் நேடி
ஆய்ந்த உணர்வின் உணர்வே! பகையால்
அலைப்புண்டு அடியேம் அடிபோற்ற அந்நாள்
ஈந்த வரம்உதவ எய்தினையே! எந்தாய்!
இருநிலத்த வோநின் இணையடித் தாமரைதாம்? (2)

மேவாதவர் இல்லை; மேவினரும் இல்லை;
வெளியோடு இருள்இல்லை; மேல்கீழும் இல்லை;
மூவாமை இல்லை; மூத்தமையும் இல்லை;
முதல்இடையோடு ஈறில்லை; முன்னொடுபின் இல்லை;
தேவா! இங்கிவ்வோ நீ சென்றநிலை என்றால்
சிலைஏந்தி வந்தெம்மைச் சேவடிகள் நோவக்
காவாது ஒழியின் பழிபெரிதோ? அன்றேல்
கருங்கடலில் கண்வளராய் கைம்மாறும் உண்டோ? (3)

நாழி நவைதீர் உலகெலாம் ஆக
நளினத்து நீதந்த நான்முகனார் தாமே
ஊழி பல பலவும் நின்றளந்தால் ஒன்றும்
உலவாப் பெருங்குணத்த உத்தமனே! மேனாள்
தாழி தரையாகத் தண்தயிர் நீராகத்
தடவரையே மத்தாகத் தாமரைக்கை நோவ
ஆழிகடைந்து அமுதம் எங்களுக்கே ஈந்தாய்!
அவுணர்கள்தாம் நின்னடிமை அல்லாமையுண்டோ? (4)

ஒன்றாகி மூலத்து உருவம் பலவாகி
உணர்வும் உயிரும் பிறிதாகி ஊழி

சென்று ஆசறுங் காலத்து அந்நிலைய தாகித்
திறத்துலகம் தாஞகிச் செஞ்செவே நின்ற
நன்ருய ஞானத் தனிக்கொழுந்தே! நங்கள்
நவைதீர்க்கும் நாயகமே! நல்வினையே நோக்கி
நின்ருரைக் காத்தி அயல்பேரைக் காய்தி
நிலையில்லாத் தீவினையும் நீதந்தது அன்றே ? (5)

(சரபங்கர் 26-30)

இந்திரன் துதிகளாய் வந்துள்ள இந்தப் பாசுரங்கள் திருமாலின் அருளாடல்களையும் பெருமேன்மைகளையும் விளக்கி அறிவொளி வீசியுள்ளன. அமரர்களை யாண்டும் தமர்கள் என அவன் கருதிக் காத்து வந்துள்ள உரிமை உதவிகளை முதலில் நினைந்து அமரர்கோன் உருகி யிருக்கிருன்.

“தங்கள் கவசமாய், ஆருயிராய், கண்ணுய், ஞானமாய்க், காப்பான்” என்றமையால் காப்புத் தெய்வத்தின் கருணைப் பண்புகள் காணலாகும். பழங்காப்புகளை யெல்லாம் உளம்காத்து உவந்து நிற்கின்றுன். இத்தகைய அருள்நலங்கனிந்த அந்த அருமைப்பொருள் உலகுக்கெலாம் இதமான ஒரு பெரிய காரியம் முடிக்க மானுட உருவம் தாங்கிக் கால்தரை தோய நேரே நிற்கின்றது ஆதலால் அந்நிலைமையை நினைந்து நெஞ்சம் கரைந்து நெடிதுநேரம் நிலைமறந்து நின்றுன்.

“அவசமாய்ச் சிந்தை அழிந்து அயலே நின்றுன்” இராமனை நோக்கியபோது இந்திரன் பரவசமாய் நின்ற நிலைமையை இங்கே பார்த்து நிற்கின்ரேம்.

இவ்வளவு அன்பும் ஆர்த்தியும் தேவர்கோன் எய்தியது, எய்திநிற்கும் பொருளின் செய்தி முழுவதும் அவன் தெளிவாகத் தெரிந்துள்ளமையான் என்க.

உண்மையை உணர்ந்தபோது உள்ளம் உருகுகின்றது. உணர்வு பெருகுகின்றது; உயிர் பரவசம் ஆகின்றது; உணராவழி அவை பிணமாய் அயர்ந்து பிறழ்ந்து கிடக்கின்றன.

இங்ஙனம் உருகி நின்றவன் உணர்வு தெளிந்து துதித்தான்: “சரம் அசரம் என உலகம் எங்கணும் பரவியுள்ள பொருள்கள் அனைத்தினும் தோய்ந்தும் யாதும் தோயாதுநிற்கின்ற சோதியே!

பற்று அற்றவராது சுற்றமே! வேதமுடியில் விளங்கும் நாதனே! பகையால் வருந்தி நொந்து அலைகடல் நடுவண் அன்று வந்து நாங்கள் முறையிட்ட குறைதீர அருளுற்றெழுந்த ஆதிமூலமே! தசரதன் மதலையாய் வருதும் என்று பண்டு நீ உரைசெய்தபடியே இன்று வில்லும் கையுமாய் விரைந்து வந்த வீரமூர்த்தியே! உனது பேரருள் நிலைதான் என்னே! அருமறையும் அறியாத அரிய திருவடிகள் இருநிலத்தில் புழுதிபட மருவியுள்ளனவே! வானத்தின் மானத்தைக் காக்க வையத்தில் வந்துள்ளாய் ஐயனே! உனக்கு யாரும் பகை இல்லை; எவரும் உறவு இல்லை; வெளி இல்லை; உள் இல்லை; ஒளி இல்லை; இருள் இல்லை; மேல் இல்லை; கீழ் இல்லை; இளமை இல்லை; முதுமை இல்லை; முதல் இல்லை; இடை இல்லை; கடை இல்லை; முன் இல்லை; பின் இல்லை; தேவ தேவனே ! என்னே உன் நிலை? யாவுமாய் எல்லாமாய் எங்கும் நிறைந்துள்ள நீ ஒன்றும் இல்லை என நின்று உல்லாச ஆடல்கள் புரிகின்றாய்! சேவடிகள் நோவ ஐயோ இங்ஙனம் மேவி நிற்கின்றாய்! வில்லேந்தி வந்து எங்களைக் காவாது கைவிடின் உனக்குப் பழிபெரிது ஆமோ? இருந்தபடி இருந்தே எல்லாம் செய்யவல்ல நீ கல்லிலும் முள்ளிலும் மிதித்துக் காட்டுவழி நடந்து அல்லும் பகலும் அலைந்து வருவது என்னே? உனது கலியாண குணகணங்களையும் அற்புத லீலைகளையும் யார் அளவிடவல்லார் ?

உலகத்தை நாழியாக்கொண்டு பிரமன் அளவுகாரனாய் நின்று ஊழி முழுவதும் அளந்தாலும் ஒரு சிறிதும் குறையாத பெரிய குணக்கடலே! எத்திறத்தும் உயர்வற உயர்ந்த உத்தமனே! முன்னம் பாற்கடலைக் கடைந்து அருமையாக எடுத்த இனிய அமுதத்தை அமரர்களாகிய எங்களுக்கு மட்டும் அள்ளிக் கொடுத்தாய்! அசுரர்களுக்கு யாதும் கொடாமல் தள்ளிவிட்டாய்! அவர்கள் உன் பிள்ளைகள் அல்லவா? ஏன் அப்படி ஓரம் செய்தாய்? உனக்கு உரிமையாய் உடைமை யாகாத பொருள் அகிலாண்ட கோடிகளில் எங்கேனும் உண்டா? யாண்டும் பரிபூரணனாய் எல்லாப்பொருள்களையும் உடைமைகளாக்கொண்டுஎன்றும் உடையவனாய் நிற்கின்ற நீ இடையே சிலவற்றை விலகவிட்டுக் கலகம் செய்ய வைக்கின்றாய்! அங்கே காக்கவும் வருகின்றாய்? ஆக்கமும் அருளி யாவும் புரிகின்றாய்! என்னே உன் நோக்கம் ?

நீ ஒருவனே மூவராய் நிலவித் தேவராய் உலவி உலகு உயிர்கள் யாவுமாய்ப் பரவிப் பின்பு ஊழி காலத்தில் மீளவும் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கித் தன்னந் தனியனாய்த் தழைத்து நிற்கின்றாய்! அன்றோ! என்னே உனது நிலை! உன் மாயாவல்லபங்கள் யாதும் அளவிடலரியன; யாராலும் அறிய முடியாதன; தூயனான நீ மாயன் என நின்று மயக்கி வருகின்றாய்! உலக இயக்கங்கள் பல வகைகளாய்ப் பல்கி நிலை மயங்கி நிலவுகின்றன. நல்வினையாளரை நயந்து காத்து உவந்து கொள்ளுகின்றாய்! தீவினையாளரை வெகுண்டு தொலைத்து வேரறுத்து ஒழிக்கின்றாய்! அத் தீயவினைகளும உன் படைப்புகளே; அவற்றை நீ ஏன் விளைத்தாய்? உனது மாய ஆடல்களை ஆய முடியவில்லையே! யாதொரு நிலையும் ஏதும் தெரியவில்லையே! என்று இங்ஙனம் அமரர் கோன் ஆனந்த பரவசனாய்த் துதித்து நின்றான்.

இத் துதி மொழிகளில் அரிய பல தத்துவ நிலைகள் உய்த்துணர வுள்ளன. விரிப்பின் ஈண்டு இடம் பெருகும்; கலைச்சுவைகளையே கருதி நுகர்கின்ற அறிவுக்கு அயலே வேறு செல்லின் சிறிது அயர்ச்சி தோன்றும்; ஆதலால் அம்முயற்சியை விடுத்தேன்.

"சேவடிகள் நோவச் சிலைஏந்தி வந்து எம்மைக்
காவாது ஒழியின் பழி பெரிதோ?"

தங்களைக் காக்க நேர்ந்துள்ள கருணையை வியந்து இமையவர் இறைவன் இங்ஙனம் இரங்கியுள்ளான். வில் ஏந்தி இராமன் இங்கே வந்துள்ளது தேவர்களைக் காத்தருள என்பது ஈண்டு வெளியாய் நின்றது. வானுக்கு வந்தது வையத்திற்கும் ஆயது.

தனித்த தலைவனான அவனை ஏவுவார் எவரும் இலர்; அவனாகவே அருள் புரிந்து ஆதரிக்க அவனியில் அவதரித்திருக்கிறான்.

பிள்ளைகளைப் பேணுவழிப் பெற்றோர்க்குப் பழியாதல் போல் உற்ற வுயிர்களைக் காவாது ஒழியின் உனக்குப் பழி வரும் என்று அஞ்சியோ வெஞ்சிலை எடுத்து அஞ்சன வண்ணனாய் இவ் வண்ணம் ஈங்கு வந்திருக்கின்றாய்! என நெஞ்சுஉருகியிருக்கிறான்.

நன்றாய ஞானத் தனிக் கொழுந்தே!

என்றது தத்துவ ஞானத்தால் நித்திய அநித்தியங்கள்

தெளிந்து உலகப்பற்று முற்றும் அற்று உள்ளம் புனிதமாய பொழுது உயிர் அனுபவிக்கும் உயர் பரம்பொருள் என்பதாம்.

''நன்றாய் ஞானம் கடந்து போய்
நல்லிந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ்
உலப்பிலதனை உணர்ந்து உணர்ந்து
சென்று ஆங்கு இன்ப துன்பங்கள்
செற்றுக்களைந்து பசை அற்றால்
அன்றே அப்போதே வீடு
அதுவே வீடு வீடாமே,'' (திருவாய்மொழி 8-8)

இந்தப் பாசுரத்தின் உள்ளே புதைந்து கிடக்கின்ற அரிய கருத்துக்களைக் கொஞ்சம் ஊன்றி உணர வேண்டும். இதன் சொல்லும் பொருளும் நம் கவியுள் புல்லிப் பொதிந்துள்ளன.

சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் அநாதியாய் அமைந்துள்ள உறவுரிமைகளும், இது அதனை அடையத்தக்க தகுதிப்பாடுகளும், அடைய முடியாவகை இடையே மிடைந்து கிடக்கின்ற தடையீடுகளும் தத்துவ நோக்கோடு தழுவி வித்தக விசித்திரங்களாய் விரவி நிற்கின்றன.

பத்திப் பரவசரான சித்த சுத்தியாளருக்கு அரியன யாவும் தாமாகவே எளிது தெளிவாய் இன்பம் தருகின்றன; அதனால் பரம தத்துவ நிலைகளை அவர் வாய் மொழிகள் வளமாய் வழங்கி விடுகின்றன. உணர்வு தெளிய உண்மைகள் வெளியாகின்றன.

கலை ஞானிகள் காணமுடியாதன ஆத்தும ஞானிகளின் கண்முன் மிளிர்கின்றன. அவருடைய வார்த்தைகளில் புதிய உயிர் ஒளிகள் பொங்கி உலகம் எங்கணும் உயர் சோதிகள் வீசுகின்றன. இந்த ஆன்ம சோதிகளை ஆழ்வார் மொழிகளிலும், நாயன்மார் உரைகளிலும் நன்கு காணலாம்.

''நல்வினையே நோக்கி நின்றாரைக் காத்தி, அயல்பேரைக்காய்தி!
நிலையில்லாத் தீவினையும் நீ தந்தது அன்றோ?''

எனத் தேவர் கோன் இங்ஙனம் வினவியிருக்கிறான்.

யாவும் உன்னால் இயங்குகின்றன; நீ எல்லாம் வல்லவன்; தீவினைகளை உலகில் இல்லாமல் செய்திருக்கலாம். அங்ஙனம் செய்யாமல் தீயவினைகளை எங்கும் பரப்பி வைக்க அவற்றை செய்

தவர்களைத் தீவினையாளர் என வெறுத்து வெகுண்டு தண்டித்து வருகிறாய்! இது நியாயமா? நேர்மையா? என விநோதமான கேள்விகள் இங்கே விளைந்திருக்கின்றன.

எல்லாம் தெய்வச்செயல் எனச் சொல்லித் தம் பொல்லாச் செயல்களையும் அவன்மேல் புகுத்தப் பார்க்கும் வல்வாயர் சொல்லைப்போல் இது தொனித்து வந்துள்ளது.

## கடவுள் நிலை.

கடவுள் பட்சபாதம் அற்றவர்; எல்லாவுயிரும் யாவும் அவர்க்குச் சமம்; யாரிடமும் ஒரே கருணை நோக்குடையவர். சீவர்களது பாவ புண்ணியங்களுக்குத் தக்கபடி அவை பலன்களை அனுபவிக்கின்றன. அப் பலபோகங்களுக்கு அவர் சாட்சியாய் நிற்கின்றார். காட்சி யளவே சிவ சாட்சி ஆகின்றார்.

சூரியன் ஒளியில் மனிதர் நல்லனவும் செய்கின்றார்; அல்லனவும் புரிகின்றார். யாரையும் எதையும் செய்யும்படி அவன் யாதும் தூண்டுவதில்லை. அதுபோல் பரஞ்சோதியான இறைவனும் இருக்கின்றான். புண்ணிய மூர்த்தி ஆதலால் பாவிகள் அவனது அருள் நிழலை அடைய முடியாமல் அயலே அகன்று பரிதபிக்கின்றனர். நல்வினையாளர் தாமாகவே அவன் கருணை நலனை மருவி உரிமையுடன் மகிழ்கின்றனர். ஆகவே கொடியவர்க்குக் கொடியவன் போலவும், இனியவர்க்கு உரியவனாகவும் அவன் எண்ணப்படுகின்றான். உண்மையில் எவரிடமும் அவனுக்குப் பகையும் உறவும் இல்லை. உயிர்களின் தன்மைக்குத் தக்கவாறே அவன் யாண்டும் தகவுற்று நிற்கின்றான்.

"கொடுமையும் செம்மையும் வெம்மையும் தண்மையும்
உள்வழி உடையை; இல்வழி இலையே;
போற்றார் உயிரினும், போற்றுநர் உயிரினும்,
மாற்று ஏமாற்றல் இலையே; நினக்கு
மாற்றோரும் இலர்; கேளிரும் இலர் எனும்
வேற்றுமை இன்று அது போற்றுநர்ப் பெறினே.

(பரிபாடல், 4)

திருமாலைக் குறித்து வந்திருக்கும் இந்த அருமைப்பாடல் ஈண்டு உரிமையோடு உணரற்பாலது. பொருள் நிலைகளை நுணுகி நோக்கி இறைநிலையை இனிது தெளிக.

பரத்தின் பரம சூக்குமங்கள் விசித்திர நிலையின. உணருந் தோறும் உணர்வு கடந்து உயர்கின்றன; உரை கடந்து பெயர் கின்றன. போதம் கடந்த நாதன் என வேதங்களும் விளம்பி அயர்ந்து விலகி நிற்கின்றன.

## இந்திரன் அகன்றது.

இவ்வாறு இராமநாதன் எதிரே தேவர் நாயகன் பரவசமாய்த் துதித்துப்போற்றி வந்த காரியம் முடித்தருளும்படி வணங்கி வேண்டி விமானம் ஊர்ந்து வானில் மறைந்து போனான்.

இப்பாராட்டு மொழிகளைக் கேட்டு நின்ற இராமன் ''யானை இவன் இப்படி ஆராதித்துப் போகின்றான்?'' என அயர்ந்து சிந்தித்து அயலே வந்து மனைவியையும் இளவலையும் உடனழைத் துக்கொண்டு முனிவர் குடிசையுள் புகுந்தான்.

## சரபங்கர் பிறவி நீங்கியது.

மனித உருவில் வந்த இந்தத் தெய்வத்தைக் கண்டதும் அந்தப் புனித மாதவர் மனம் மிக மகிழ்ந்து விரைந்து எழுந்து உவந்து உபசரித்தார். மூவரும் அவரை வணங்கி அன்று அங் குத் தங்கி இருந்தார்.

அருந்தவரது ஞானபோதனைகளைக் கேட்டு இம்மானவன் உள்ளம் களித்து நடுநிசி வரையும் உணர்வுரைகள் ஆடியிருந்தான்.

பொழுது விடிந்தது; முனிவர் உழுவலன்புடன் இராமனை அணுகி, '' ஞானநாதா! இன்று என் முடிவு நாள்; நான் பிறந்த பேற்றை நெருநல் இரவே அடைந்துகொண்டேன்; எடுத்த இவ் வுடலைத் தீயுள் விடுத்து அடுத்து நான் அகலவேண்டும்; அனு மதி தந்தருள் '' என இனிது மொழிந்தார்.

இராமன் திகைத்தான்: ''என்னே இது? நான் வந்தபொழுது இந்த வண்ணம் அந்தம் அடையத் துணிந்தது?'' எனச் சிந்தை

கவன்று அந்த மாதவரை வினவினன். அவர் ஆதரவுடன் பதில் உரைத்துப் போதல் புரிந்தார்.

ஏழையும் இளவலும் வருகென இனிதா
வாழிய அவரொடும் வந்தனன் மகிழ்வால்
ஊழியின் முதல்முனி உறையுளை அணுகா
ஆழியில் விழிதுயில் பவனென மகிழ்வான். (1)

அவ்வயின் அழகனும் வைகினன் அறிஞன்
செவ்விய அறவுரை செவிவயின் உதவ
நவ்வியின் விழியவ ளொடுநனி இருளைக்
கவ்விய நிசியொரு கடையுறும் அளவில். (2)

ஆயிடை அறிஞனும் அவன்எதிர் அழுவத்
தீயினை நுழைவதொர் தெளிவினை யுடையான்
நீவிடை தருகென நிறுவினன் நெறியால்
காயெரி வரன்முறை கடிதினின் இடுவான். (3)

வரிசிலை யுழவனும் மறையுழவனை நீ
புரிதொழில் ஏனை?யது புகலுதி எனலும்
திருமகள் தலைவ! செய்திருவினை யுறயான்
எரிபுக நினைகுவென் அருள்கென இறைவன், (4)

யான்வரும் அமைதியின் இதுசெயல் எவனோ
மான்வரு தனியுரி மார்பினை எனலும்
மீன்வரு கொடியவன் விறலடும் அறவோன்
ஊன்வரும் உவகையின் உரைநனி பகர்வான். (5)

ஆயிரம் முகமுள தவம் அயர்குவென் நான்
நீஇவண் வருதிகொல் எனும் நிலையுடையேன்
போயின இருவினை புகலுறு விதியால்
மேயினை இனிஒரு வினையிலை விறலோய்! (6)

இந்திரன் அருளினன் இறுதிசெய் பகலா
வந்தனன் மருவுதி மலரயன் உலகம்
தந்தனன்என அது சாரலென் உரவோய்!
அந்தமில் உயர்பதம் அடைதலை முயல்வேன். (7)

(சரபங்கர் பிறப்பு நீங்கு படலம் 34-41)

என இந்தவாறு இசைத்துவிட்டு முனிவர் தீயில் பாய்ந்து மாய்ந்து திவ்விய பதவியை அடைந்தார்.

சரபங்கர் சரிதம் இக் காவியத்தில் இங்ஙனம் அங்கம் பெற்றுள்ளது. இராமனது அவதார நிலைமையை ஞானக் காட்சியால் நன்கு அறிந்துள்ளமையால் இவன் கானகம் வருவதை எதிர்நோக்கி அவர் ஆவலோடு காத்திருந்துள்ளார். அவரது வார்த்தைகளால் ஆர்த்திமீதூர்ந்து அவர் இருந்துள்ள அமைதியும், தியான சமாதியின் தகைமையும் அறிந்துகொள்கின்றோம்.

"நீ இவண் வருதி எனும் நிலையுடையேன்" என்றமையால் இராம தெரிசனத்துக்காக அவர் உயிரை வைத்திருந்தமை உணரலாகும். இருவினை போயின என்றது இவனைப்பார்த்த மாத்திரத்திலே பிறவி மூலங்கள் யாவும் அடியோடு ஒழிந்துபோயின என்றவாறு. அடைந்த பேற்றை உவந்து போற்றினர்.

பிரம பதமும் வேண்டாம் என்று விலக்கி நின்ற முனிவர் இராமனைக் காண விழைந்து காத்திருந்தார் என்றால் இக் காட்சியின் மகிமை எத்துணையது என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம். பேரானந்தப் பேற்றை நேரே பெற்றிருக்கிறார்.

இங்ஙனம் அவர் கண்டு போகவே அவரது யோக சித்தியையும் பத்தியையும் வியந்து சித்தம் கரைந்து தன்பத்தினி தம்பிகளுடன் இவ் வுத்தமன் தண்டக வனத்தை அடைந்தான்.

அண்டமும் அகிலமும் அறிவரும் நெறியால்
உண்டவன் ஒரு பெயர் உணர்குநர் உறுபேறு
எண்தவ நெடிதெனின் இறுதியில் அவனைக்
கண்டவர் உறுபொருள் கருதுவது எளிதே?

சரபங்க முனிவர் இராமனைத் தெரிசித்துப் பரமபதம் எய்தியதைக் குறித்து நம் கவியரசர் இங்ஙனம் ஓர் விரிவுரை அருளியுள்ளார். தன் பெயரை வாயால் சொன்னவரும் பெரும் பேறு பெறுவர்; அத்தகைய பெருமானை நேரே கண்டவர் அடையும் கதியை உரை செய்யமுடியுமோ? என்று பரவசமாய் உரையாடியிருக்கிறார்.

தம் கதாநாயகனை எவ்வழியும் புகழ்ந்து போற்றி விழைந்து பாராட்டி வருகிறார். உரைகள் தோறும் பரவாசுதேவனே பார்

உய்ய வந்துள்ளான் என்பதை யாரும் மறந்து விடாதபடி யாண்டும் நினைவூட்டி யருள்கின்றார்.

விராதன், இந்திரன், சரபங்கர் என்னும் இம் மூவர் சந்திப்பில் இராமனது அற்புத வலிமைகளும், அவதார நிலைமைகளும், தத்துவ முறைகளும் வித்தக விநயங்களாய் வெளிப்பட்டுள்ளன.

கந்தருவன் சாபம் நீங்கித் துதித்தான்; தேவர் நாயகன் வியந்து போற்றினான்; மாதவர் பார்த்து மகிழ்ந்து வான்கதி ஏகினார்; இவை யாவும் கடவுட் காட்சியாய் இவண் கதித்து மிளிர்கின்றன. ஆயினும் மனிதனாகவே கருதி இராமன் யாண்டும் இனிது நடந்து வருகிறான்.

## தண்டக வனவாசிகள் கண்டு மகிழ்ந்தது.

மலைகள் நதிகள் பொழில்கள் காடுகள் அருவிச் சாரல்கள் யாவும் கடந்து தண்டக வனத்துள் இராமன் வந்து புகுந்தான். அங்கே தங்கியிருந்த ஞான யோகிகளும், மோன முனிவரும், அருந்தவர்களும் இந்த அஞ்சன வண்ணன் வந்ததை அறிந்ததும் நெஞ்சம் களிகூர்ந்து ஒருங்கு திரண்டு பெருந்திரளாக எதிர் வந்து கண்டு முதிர்பேரன்புடன் புகழ்ந்து போற்றினார்.

பண்டைய அயன்தரு பாலகில்லரும்
முண்டரும் மோனரும் முதலினோர்களத்
தண்டக வனத்துறை தவத்துளோர்கள் தாம்
கண்டனர் இராமனைக் களிக்கும் சிந்தையார். (1)

கனைவரு கடுஞ்சினத் தரக்கர் காயலா
வினைபிறி தின்மையின் வெதும்பு கின்றனர்
அனைவரும் கானகத் தமுதளாவிய
புனைவர உயிர்வரும் உலவைப் போல்கின்றார். (2)

ஆய்வரும் பெருவலி அரக்கர் நாமமே
வாய்வெரீஇ அலமரு மறுக்கம் நீங்கினார்;
தீவரு வனத்திடை இட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய கன்றின் தன்மையார் (3)

கரக்கருங் கடுந்தொழில் அரக்கர் காய்தலில்
பொரற்கிடம் இன்மையின் புழுங்கிச் சோருநர்
அரக்கரென் கடலிடை ஆழ்கின்றார் ஒரு
மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினார். (4)